# சூனியம்...!



## நபிமொழி நிராகரிப்பின் நவீனக் கொள்கைக் குழப்பம்

மவ்லவி அப்பாஸ் அலீ Misc

# சூனியம்...!

## நபிமொழி நிராகரிப்பின் நவீனக் கொள்கைக் குழப்பம்

ஆசிரியர்

மவ்லவீ எஸ். அப்பாஸ் அலீ MISC.,

**அஸ்ஸுன்னா பப்ளிகேஷன்ஸ்**

33. E, குப்புப்பிள்ளை தோப்பு, முதல் தெரு, தெற்கு வெளிவீதி,
மதுரை – 625001. இந்தியா. போன்: +91 9442309954

# SOONIYAM UNDU BOOK DETAILS


- Translated by:
  MOULAVI S.M. ABBAS ALI MISC.,
- Pages:
  328
- Price:
  IRS 150/-
- First Edition:
  Hijri 1436 (March 2015)
- Type setting and Design by:
  SAFA GRAPHICS - Madurai - 625 020.
  Mobile: 0452-2527421, 9364414441, 93440-96221.
  E-mail: safagrafix@gmail.com - akumari1970@gmail.com
- Published by:
  ASSUNNAH PUBLICATIONS
  33E. Kuppupillai Thoppu
  First Lane, Southveli Street,
  Madurai - 625001. S. India.
  Ph: +91 9442309954
  E-mail:

  Printed by:
  SAFA PRINTING AGENCIES
  MADURAI - 625020. 9344096221
  E-mail: safagrafix@gmail.com - akumari1970@gmail.com


**ஆரோக்கியமான விமர்சனங்கள் மற்றும் ஆலோசனைகள் வரவேற்கப்படுகின்றன.**


*ஆசிரியர்*

**மவ்லவீ. S. அப்பாஸ் அலீ** MISC

*இஸ்லாமிய ஆய்வாளர்*

بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

# பதிப்புரை

நாம் இறைவனைப் புகழ்கிறோம்; அவனைத் துதிக்கிறோம்; அவனே நம்மைப் படைத்தான்; பாதுகாத்தும் வருகிறான். அவன்தான் நமக்கு நேர்வழியும் காட்டவேண்டும்.

இறையருளால் எம்முடைய அஸ்ஸுன்னா பப்ளிகேஷன்ஸ் மூலமாக வெளியிடப்படும் முதல் நூல் இது. சகோதரர் மவ்லவீ எஸ். அப்பாஸ் அலீ MISC அவர்கள் ஆய்வு செய்து எழுதியுள்ள 'சூனியம் உண்டு' என்னும் இந்நூல் ஹதீஸ் மறுப்புக் கொள்கையாளர்களுக்கு சரியான அறிவுரை மற்றும் எச்சரிக்கையாக அமைந்துள்ளது. அல்ஹம்துலில்லாஹ்.

இஸ்லாமிய வரலாற்றில் புதிதுபுதிதாகத் தோன்றிய குழப்பவாதிகள் தற்போது நவீனப் பெயர் கொண்டு மீண்டும் எழுந்திருப்பதை நூலாசிரியர் மிகத் தெளிவாக தோலுரித்துக் காட்டியுள்ளார். நூலின் நோக்கம் சூனியம் உண்டு என்பது மட்டுமல்ல; ஆதாரப்பூர்வமான எந்த ஒரு ஹதீஸும் உறுதியாக குர்ஆனுடன் முரண்படாது என்பதைத் தெளிவுபடுத்துவதும்தான். உண்மையில் இது ஒரு சிறந்த ஆய்வாகவே அமைந்துள்ளது.

இந்நூலின் மூலம் ஹதீஸ் மறுப்புக் கொள்கையில் இருக்கும் தமிழ் பேசும் முஸ்லிம்கள் அதிலிருந்து விடுபடுவார்கள் என்ற நம்பிக்கை இருக்கிறது. அஹ்லுல் குர்ஆன் எனத் தங்களை அறிமுகம் செய்து கொண்டு ஹதீஸ்களை மறுப்போருக்கும் இந்நூல் தக்க பதிலாக அமைந்துள்ளது. இந்நூல் தொகுக்கப்பட்ட நோக்கத்தை முழுமையாக வல்ல அல்லாஹ் நிறைவேற்றி வைக்க வேண்டும்.

இந்நூலைத் தொகுத்துள்ள ஆசிரியருக்கும், நூலைச் சரிபார்த்து மதிப்புரை அளித்துள்ள மார்க்க அறிஞர்களுக்கும், அச்சுப்பணியை சிறப்பாகச் செய்து கொடுத்துள்ள மதுரை ஸஃபா கிராஃபிக்ஸ் நிறுவனத்திற்கும் எம்முடைய பதிப்பகத்தின் சார்பாக நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம். இந்நூலைப் படிக்கும் வாசக அன்பர்கள் இப்பணியில் ஈடுபட்டுள்ள அனைவரின் மறுமை வாழ்வு சிறக்க இறைவனைப் பிரார்த்திக்குமாறு வேண்டுகிறோம்.

அன்புடன்,

**நிறுவனர்**

அஸ்ஸுன்னா பப்ளிகேஷன்ஸ்

**بسم الله الرحمن الرحيم**

**الحمد لله رب العالمين ، والصلاة والسلام على أفضل الأنبياء والمرسلين نبينا محمد وعلى آله وأصحابه أجمعين ، وبعد**

**وفي الأونة الأخيرة في ولاية "تاملنادو" الهند نشأت فرقة جديدة بإسم التوحيد يعتمدون على عقولهم وينكرون الأحاديث النبوية الصحيحة بتخيلهم بأنها تخالف القرآن الكريم ، وأنكروا كثيرا من الأحاديث الصحيحة من صحيح البخاري ومن صحيح مسلم وغيرهما، ويدعون أن كل من لم يوافقهم في إنكار الحديث النبوي فهو مشرك ولا يجوز الصلاة خلفه، وكفروا أئمة الحرمين الشريفين وكفروا المشائخ والمحدثين ويجذبون قلوب الشباب الغافلين إلى هذه الفكرة الفاسدة،**

**ولكشف وجوه هذه الشرذمة الضالة أمام الناس قام الأخ / عباس علي ألذي كان معهم في هذه الفكرة فترة يسيرة ثم رجع عنها، فألف كتابا بإسم "حقيقة السحر والرد على منكري الأحاديث الصحيحة" في اللغة التاملية ، وأتى بالأحاديث التي أنكرها هؤلاء الفرقة المنحرفة ، وبين بيانا شافيا ، ووضح بأن الأحاديث النبوية الصحيحة لا تخالف للآيات القرآنية ، إنما الخلل في فهم هؤلاء وانحراف عقولهم ،**

**ويجب على الجميع أن يقرأوا هذا الكتاب ويوزعوه حسب الإستطاعة بين المسلمين الناطقين باللغة التاملية للقضاء على هذه الفتنة ، فتنة إنكار الحديث النبوي . والله ولي التوفيق .**

**كمال الدين شاه الحميد**

١٢/٣/٢٠١٥م

الداعي إلى الله

*சவூதி அரசாங்கத்தால் நியமிக்கப்பட்டு, 35 வருடங்களாக* ***UAE*** *ல் இஸ்லாமிய பணியாற்றிவந்த* ***அஷ்ஷைக் K. முஹம்மத் இக்பால் மதனீ*** *அவர்கள் மனமுவந்து இந்நூலுக்கு அளித்த*

# மதிப்புரை

புகழனைத்தும் மாண்பும் வலிமையும் மிக்க அல்லாஹ் ஒருவனுக்கே. அவனே நம்மைப் படைத்து பரிபாலித்துக் கொண்டு இருக்கிறான். அவன் தன் தூதர் முஹம்மத்(ஸல்) அவர்களை அனுப்பி தன் மார்க்கத்தை மேலோங்கச் செய்தான்.

அகிலத்தாருக்கு அருளாக அனுப்பப்பட்ட இறுதித்தூதர் முஹம்மத்(ஸல்) அவர்களிடம் நேரடியாக மார்க்கத்தை கற்று பண்பட்ட சங்கைமிகு நபித்தோழர்கள் நபி(ஸல்) அவர்களுக்குப் பின் இம்மார்க்கத்தில் கொள்கை குழப்பம் எதையும் ஏற்படுத்த வில்லை. மாறாக தீனை அவர்களும் கடைபிடித்து மற்றவர்களுக்கும் அப்படியே எடுத்துரைத்தார்கள். இவ்வாறு ஒவ்வொரு தலை முறையிலும் வந்த நல்லவர்கள் அடுத்த தலைமுறையினருக்கு இம்மார்க்கத்தை போதித்து மார்க்கம் இன்று அல்லாஹ்வினால் பாதுகாக்கப்பட்ட நிலையில் எந்த கூடுதல் குறையுமின்றி நம்மை வந்தடைந்துள்ளது.

ஆனால், அல்லாஹ்வும் அவன் தூதரும் கூறிய அடிப்படை யில் மார்க்கத்தை விளங்காமல் தன் அறிவிற்கு ஏற்றவாறு மார்க்கத்தை மாற்றி புதுக்குழப்பங்களை நபித்தோழர்களுக்கு பின் வந்த சிலர் ஏற்படுத்தினர். அவ்வாறே இன்றும் சிலர், குர்ஆனுக்கு விளக்கமாக அமைந்துள்ள ஆதாரப்பூர்வமான நபிமொழிகளை மறுத்தும், தன் சுய கருத்துக்களைக் குர்ஆனுக்கு விளக்கமாகக் கொடுத்தும், கொள்கையில் பெரும் குழப்பத்தை ஏற்படுத்தி வருகின்றனர்.

மவ்லவி அப்பாஸ் அலீ, இவர்களுடன் சேர்ந்திருந்து இஸ்லாமியப் பிரச்சாரப் பணிசெய்துவந்தார். இந்த நவீனக் கொள்கைக் குழப்பவாதிகள் நபிமொழிகளை மறுப்பது மட்டு மல்லாமல், ஹதீஸ்களின்படி வாழும் உலக முஸ்லிம்களை முஷ்ரிக்குகள் என்றும் கூறிவருகின்றனர். இவர்களின் இந்த வழிகேட்டின் ஆபத்தை இந்நூலாசிரியர் நன்றாகவே உணர்ந்து கொண்டார். தற்போது இவர்களைவிட்டு வெளியேறி சத்தியத்தின்

குரலில் இவர்களின் நவீனக் கொள்கைக் குழப்பங்களுக்கு தக்க பதிலை அளித்து வருகிறார். அல்லாஹ் இவருக்கு புரியவைத்த உண்மைகளை மக்களிடம் கொண்டு சேர்க்க வேண்டும் என்ற கொள்கைப் பிடிப்பில் இந்நூலைத் தொகுத்துள்ளார். இந்நூலுக்கு நான் மதிப்புரை வழங்க வேண்டும் என என்னிடம் கோரினார். நான் தற்போது கண் பார்வை இழந்துள்ளதால் இந்நூலை என்னிடம் முழுவதுமாக அவரே அமர்ந்து படித்துக்காட்டினார்.

குர்ஆனுடன் நபிமொழிகள் மோதுவதாக இவர்கள் சித்த ரிப்பது அறியாமையும் வழிகேடும் ஆகும். இஸ்லாமிய வரலாற்றில் இந்த வேலையை வழிகேடர்களே செய்து வந்தனர். இஸ்லாமிய அறிஞர்கள் அன்றும் இன்றும் இதை வன்மையாகக் கண்டித்து உள்ளனர். எனவே, ஆதாரப்பூர்வமான எந்த நபிமொழியும் குர்ஆனுடன் ஒருபோதும் முரண்படாது என்பதை குர்ஆன் ஹதீஸ் ஆதாரங்களுடன் சிறப்பான முறையில் இந்நூலில் விளக்கியுள்ளார்.

குர்ஆனுக்கு நபிமொழிகள் முரண்படுகின்றன என பொய்ப் பிரச்சாரம் செய்து இவர்கள் இன்று மறுக்கும் நபிமொழிகளை மார்க்கத்திற்கு எந்த வகையிலும் முரணில்லாமல் சரியாகப் புரிந்துகொள்ளும் வகையில் குர்ஆன் மற்றும் நபிமொழிகளை ஆதாரமாக வைத்தே விளக்கம் அளித்துள்ளார். ஹதீஸ் நிராகரிப் பாளர்கள் ஏற்படுத்தியுள்ள ஒவ்வொரு குழப்பத்திற்கும் சரியான பதிலடி கொடுத்துள்ளார்.

உண்மையை உணரும் நோக்கில் இந்நூலை படிப்பவர்கள் தனிமனித வழிபாட்டை விட்டுவிட்டு, நபிவழியின் பக்கம் நிச்சயம் திரும்புவார்கள். அல்லாஹ் தன் மார்க்கத்தை யார் மூலமாவது; எப்படியாவது நிச்சயம் பாதுகாப்பான். இன்று வரை அவ்வாறே பாதுகாத்தும் வருகிறான்.

இந்நூலாசிரியருக்கும், இப்பணியில் ஈடுபட்டிருக்கும் ஒவ்வொருவருக்கும் வல்ல அல்லாஹ் அருள் புரிவானாக! இப்பணி தொய்வில்லாமல் நடந்துகொண்டே இருக்க அவனே உதவி தேடப்படுபவன்; அவனே அதற்கு ஆற்றலுடையவன்.

| | |
|---|---|
| மணப்பாறை | அன்புடன், |
| 04.05.1436 ஹிஜ்ரி (22.02.2015) | **அஷ்ஷைக்** |
| ஞாயிற்றுக் கிழமை | ***K.* முஹம்மத் இக்பால் மதனீ** |

*******

*தமிழ் உலகின் இஸ்லாமிய மூத்த அழைப்பாளர் அல்ஜன்னத் மாத இதழ் ஆசிரியர்,* ***அஷ்ஷைக் S. கமாலுத்தீன் மதனீ*** *அவர்கள் மனமுவந்து இந்நூலுக்கு அளித்த*

# *மதிப்புரை*

*அல்லாஹ்வின் வேதமும், அதற்கு விளக்கமான இறைத் தூதரின் போதனையுமே இஸ்லாமின் மூல ஆதாரங்கள். நபி(ஸல்) அவர்களுக்கு அருளப்பட்ட திருக்குர்ஆன் நபித்தோழர்களால் பாதுகாக்கப்பட்டு நம் வரை வந்துள்ளதைப்போல் நபிகளாரின் வாழ்க்கை நெறியும் சத்திய ஸஹாபாக்கள் மூலமே நமக்குக் கிடைத்துள்ளது. நபிகளாரின் வாழ்க்கைத் தொகுப்பே ஹதீஸ்கள்.*

*நபிமொழிகளைத் தொகுத்து அளிப்பதற்கு நபித்தோழர்கள் மற்றும் தாபியீன்கள் உட்பட பல இலட்சம் அறிவிப்பாளர்களின் வரலாறுகளும் தொகுக்கப்பட்டன. இமாம்கள் பல்வேறு கஷ்டங்களுக் கிடையில் ஹதீஸ்களைத் தொகுத்து பல நூல்களாகச் சமூகத்திற்கு வழங்கியுள்ளார்கள். அவர்களின் பணி ஈடு இணையற்றது. இவ்வாறு பாதுகாக்கப்பட்ட ஹதீஸ்கள் பல நூறு வருடங்களாக உலக முஸ்லிம்களால் செயல்படுத்தப்பட்டு வருகின்றன.*

*இஸ்லாமின் மூல ஆதாரங்களை களங்கப்படுத்தி உலகில் குழப்பத்தை ஏற்படுத்தும் சதித் திட்டங்கள் நீண்டகாலமாகவே நேரடியாகவும், மறைமுகமாகவும் தீட்டப்பட்டு வருகின்றன. சரியான ஹதீஸாக இருந்தாலும் தங்களின் சிற்றறிவுக்கு ஒத்துப்போகவில்லை என்பதால் அது குர்ஆனுக்கு முரணானது; அதைத் தூக்கி எறிய வேண்டும்; அதை நம்பக்கூடாது என்ற முற்கால குழப்பவாதிகளின் சிந்தனையில் தற்போது தமிழகத்திலும் சிலர் சிக்கியுள்ளனர். அவர்கள் நாளுக்கு நாள் ஒவ்வொரு ஹதீஸாக நிராகரித்து வருகின்றனர். இவர்களின் இப்போக்கு முற்றிலுமாக நபிவழித் தொகுப்புகளை புறக்கணிக்கும் நிலைக்கு மக்களை இழுத்துச் செல்கிறது. அது மட்டுமல்லாது, அறிவுக்குப் பொருந்தாத விஷயங்கள் திருக்குர்ஆனிலும் உள்ளன என இவர்கள் வாதிடும் நிலை மிக விரைவில் உருவாகிவிடும்.*

*இவர்கள் நிராகரிக்கும் நபிமொழிகளை மற்றவர்களும் நிரகாரிக்க வேண்டும். இல்லையென்றால் அவர்கள் அனைவரும் இணைவைப்பாளர்கள். எனவே, அவர்களுக்குப் பின்னால் தொழுவது கூடாது என பகிரங்கமாக மக்களிடம் பிரச்சாரம் செய்தும் வருகின்றனர்.*

*இவர்களுடன் இச்சிந்தனையில் செயல்பட்டு, அதை மக்களிடம் பிரச்சாரமும் செய்து வந்த, சகோதரர் மவ்லவீ எஸ். அப்பாஸ் அலீ, தான் சென்ற தவறான பாதையை உணர்ந்து, தற்போது அதற்குப் பரிகாரமாக, 'சூனியம்...!' என்னும் இந்நூலைத் தொகுத்துள்ளார். தன் முந்தைய தலைவர் மற்றும் அவரைப் பின் பற்றுவோருக்கு மண்டையில் படும்படி ஹதீஸ்களைப் புரிந்து கொள்ளும் முறையை மிகத் தெளிவாக, தக்க சான்றுகளுடன் அழகிய முறையில் இந்நூலில் கொடுத்துள்ளார்.*

*இயக்க வேறுபாடின்றி முஸ்லிம் சகோதரர்கள் அனைவரும் காலத்தின் கட்டாயம் கருதி இந்நூலைப் படித்து சத்தியத்தை அறிந்து கொள்வது அவசியமாகிறது. மற்ற சகோதரர்களுக்கும் இந்நூலை அறிமுகப்படுத்துவது முக்கியப் பணியாகும். நூல் ஆசிரியரின் மகத்தான இப்பணிக்கு வல்ல அல்லாஹ் கிருபை செய்வானாக! ஹதீஸ் நிராகரிப்புக் கொள்கையில் இருப்போருக்கு நேர்வழியைக் காட்டுவானாக!!*

*நாகர்கோவில்*
*04.05.1436 ஹிஜ்ரி (22.02.2015)*
*ஞாயிற்றுக் கிழமை*

*அன்புடன்,*
**எஸ். கமாலுத்தீன் மதனீ**

*******

*உண்மை உதயம் மாதஇதழ் ஆசிரியர் மவ்லவீ* ***அஷ்ஷைஷ் S.H.M. இஸ்மாயீல்*** *ஸலஃபீ அவர்கள் மனமுவந்து அளித்த*

# *மதிப்புரை*

*எல்லாப் புகழும் துதியும் வல்லோன் அல்லாஹ் ஒருவனுக்கே! ஸலவாத்தும் ஸலாமும் இறுதித்தூதர் முஹம்மத்(ஸல்) மீதும் அவர்களின் குடும்பத்தார் மீதும் நிலவட்டும்.*

*அல்லாஹ்வின் பேரருளால் இலங்கையில் 1940 களில் ஏகத்துவப் பிரச்சாரம் ஆரம்பிக்கப்பட்டாலும், தமிழ் பேசும் உலகில் 1980 களில் தவ்ஹீத் எழுச்சி ஏற்பட்டது எனலாம். இதில் பல தனிப்பட்டவர்களுக்கும், அமைப்புகளுக்கும் பெரும் பங்கு உள்ளது. இருப்பினும் ஏகத்துவ எழுச்சியில் சகோதரர் பீ.ஜேவிற்கும் பெரும் பங்குள்ளது என்பதில் மாற்றுக் கருத்து இல்லை.*

*காலப்போக்கில் சகோதரரின் சிந்தனையிலும், மார்க்க விடயங்களை அனுகுவதிலும் மாற்றங்கள் ஏற்படத் தொடங்கின. ஆதாரப்பூர்வமான பல ஹதீஸ்களை தவறான கோணங்களில் அனுகி, அவற்றை மறுக்க ஆரம்பித்தார். நபித்தோழர்கள் குறித்து தவறான விமர்சனங்கள் செய்யத் தொடங்கினார். அல்லாஹ் நாடினால் சூனியத்தால் பாதிப்பு ஏற்படும் என்ற உண்மையான நிலைப்பாட்டில் இருப்பவர்களை முஷ்ரிக்குகள் என ஃபத்வா கொடுக்க ஆரம்பித்தார். அவரின் இத்தகைய கருத்துகளால் ஏகத்துவவாதிகளுக்கு இடையில் பிளவு உண்டானது. உள்நாட்டுக் குழப்பங்கள் உருவெடுத்தன. எதிரும் புதிருமான வாதப்பிரதி வாதங்கள் அரங்கேறின.*

*இந்நூலின் ஆசிரியர் அப்பாஸ் அலீ அவர்கள் சகோதரர் பீஜே அவர்களின் பயிற்சிப்பட்டறையில் வார்த்தெடுக்கப்பட்டவர். அவர்களின் முதல் தர ஆய்வாளர் பட்டியலில் இடம் பெற்றவர். குறிப்பாக பீஜேயின் ஹதீஸ் மறுப்புக் கொள்கையை அந்த அணியில் நின்று மிகத் தீவிரமாகப் பிரச்சாரம் செய்தவர். இவர் எழுதிய, 'ஹதீஸ்கள் குர்ஆனுக்கு முரண்படுமா?' என்ற நூல் டிஎன்டிஜே சகோதரர்களில் தஃலீம் தொகுப்பு போல் மாறியது என்றாலும் மிகையல்ல.*

*அல்லாஹ்வின் அருளால் அவர் இன்று ஹதீஸ் மறுப்புக் கொள்கையிலிருந்து விடுபட்டு, தான் ஏற்கனவே எழுதிய நூலுக்கும் சகோதரர் பீஜே அவர்களின் சூனியம் குறித்த நூலுக்கும் மறுப் பாகவும் உண்மையை விளக்கும் நோக்கத்துடனும் அருமையான ஒரு நூலைத் தொகுத்துள்ளார். இந்த நூல் தவ்ஹீத் வட்டாரத்தில் உறுதியாக ஓர் அதிர்வலையை ஏற்படுத்தும் என நான் நம்புகிறேன். நடு நிலையுடன் சத்தியத்தைத் தேடும் இலட்சியத்துடன் இந்நூலை*

*வாசிப்போர் நிச்சயமாக உண்மையை உணர்வார்கள் இன்ஷா அல்லாஹ்.*

*மார்க்கத்தை மறைத்தவர்கள் தவ்பா செய்வதாக இருந்தால் வெறுமனே அல்லாஹ்விடம் தவ்பா செய்தால் மட்டும் போதாது; அவர்கள் தங்களைச் சீர்திருத்திக் கொள்வதுடன் தான் மறைத்திருந்த பகுதியை மக்களுக்குத் தெளிவு படுத்த வேண்டும் என 2:159,160 ஆகிய வசனங்கள் குறிப்பிடுகின்றன. இந்த வகையில் சகோதரர் அப்பாஸ் அலீ அவர்கள் மார்க்க விடயத்தில் தான் முன்னர் விட்ட தவறை அவரே விளக்கி அதிலிருந்து பகிரங்கமாகவே விலகிக் கொண்டார். இது அல்லாஹ் அவருக்குச் செய்த பாக்கியம்.*

*சகோதரர் பீஜே இந்நூலை உறுதியாக வாசிப்பார் என நான் நம்புகிறேன். எனவே, இந்த மதிப்புரையின் வாயிலாக அவரிடம் அன்பான ஒரு வேண்டுகோளை முன் வைக்கிறேன்.*

*அல்லாஹ் உங்களுக்கு அறிவையும், ஆற்றலையும் கொடுத் தான். உங்கள் பேச்சுத் திறமையும் எழுத்தாற்றலும் மக்கள் எளிதாகப் புரிந்து கொள்ளும் வகையில் அமைந்துள்ளன. இது மார்க்கத்தின் வளர்ச்சிக்காக மட்டுமே பயன்பட வேண்டும். நீங்கள் உங்கள் மறுமை வெற்றியைக் கவனத்தில் கொண்டு உங்கள் கருத்துக்களை மீண்டும் ஒரு முறை மறுசீராய்வு செய்து பாருங்கள். உங்களின் தவறான கருத்துக்களிலிருந்து நீங்கள் விடுபட்டதாக ஓர் அறிக்கை விட்டால் அது தமிழ் உலகிற்கு நீங்கள் செய்யும் பேருதவியாக இருக்கும். இதற்கு அப்பாஸ் அவர்களின் இந்த அணுகுமுறை நல்லதொரு எடுத்துக்காட்டாக உள்ளது.*

*உங்கள் கொள்கையில் மாற்றம் ஏற்பட்டால் இலட்சக் கணக்கான மக்களின் துஆ மற்றும் அன்பை அல்லாஹ் உங்களுக்கு ஈட்டித் தருவான். எனவே, சகோதரர் பீஜே அவர்கள் தன் கருத்துக்கள் குறித்து மீளாய்வு செய்ய வேண்டும் என அன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.*

*சகோதரர் பீஜே அவர்களின் கருத்துகளால் கவரப்பட்டவர்கள் இந்நூலை நடுநிலையோடு வாசித்து உண்மையை உணர முன்வர வேண்டும். நம் சகோதரர்கள் இந்நூலை மாற்றுக் கருத்துடை யோருக்கு அன்பளிப்புச் செய்து அவர்களின் மறுமை வெற்றிக்கு துணை நிற்கவேண்டும்.*

*சகோதரர் அப்பாஸ் அலீ அவர்களின் மூலமாக சத்தியத்தை எடுத்துரைக்கும் இது போன்ற இன்னும் பல நூல்கள் வெளிவர வேண்டும் என்றும் இறைவனைப் பிரார்த்திக்கிறேன்.*

*இலங்கை* — *அன்புடன்,*
*14.05.1436 ஹிஜ்ரி (04.03.2015)* — ***S.H.M. இஸ்மாயீல் ஸலஃபீ***

بِسْمِ اللهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

# முன்னுரை

*புகழனைத்தும் வல்ல அல்லாஹ்வுக்கே! அவனே நம்மைப் படைத்தும், பாதுகாத்தும் வருகிறான். அகிலத்தின் அருட்கொடை முஹம்மத்(ஸல்) மீது இறைவனின் சாந்தியும் சமாதானமும் நிலவட்டும்!*

*குர்ஆன் - சுன்னா; இவை இரண்டும் முஸ்லிம்களின் இரண்டு கண்கள். இவற்றில் ஒன்றை இழந்தாலும் ஒற்றைக் கண் உடைய வனாகத்தான் ஒரு முஸ்லிம் வாழ நேரிடும். அப்போது அவன் முஸ்லிம் என்ற பண்பை இழக்கிறான்.*

*தமிழக முஸ்லிம்களிடம் தற்போது நவீனக் கொள்கைக் குழப்பங்கள் புகுத்தப்பட்டு வருகின்றன. மார்க்க அறிஞர்கள் என தங்களை அறிமுகம் செய்து கொண்ட சிலர் இந்த வேலையை மிகச்சாதுர்யமாகச் செய்து வருகின்றனர். ஆதாரப்பூர்வமான நபிமொழிகளும் குர்ஆனுக்கு முரண்படும் என்பதே அவர்களின் தற்போதைய பிரதான வாதம்.*

*இப்படி ஒரு தவறான சிந்தனையில் நானும் ஒரு காலத்தில் இருந்தேன். இது குறித்து அதிகமாக பேசியும், எழுதியும் இருக்கிறேன்.* **'ஹதீஸ்கள் குர்ஆனுக்கு முரண்படுமா?'** *என்ற தலைப்பில் 15/02/2008 ஆம் ஆண்டில் ஒரு நூலும் எழுதினேன். இது என் அறியாமைக் கால புரிதல் என்று கூட சொல்லலாம். ஆனால், இச்சிந்தனையில் நான் பயிற்றுவிக்கப் பட்டேனே தவிர, நானாகப் பயிலவில்லை. தற்போதுதான் இவ் விஷயத்தில் விழிக்கும் திறனை இறைவன் எனக்கு அளித்துள்ளான்.*

*பிறரின் தூண்டுதலால் ஆதாரப்பூர்வமான நபிமொழிகள் குர்ஆனோடு மோதும் என்ற ஆய்வில் இருந்த எனக்கு ஆதாரப் பூர்வமான நபிமொழிகள் ஒருபோதும் குர்ஆனுடன் மோதாது என்றே விடை கிடைத்தது. நான் பெற்ற தெளிவைப் பிறருக்கும் எடுத்துரைக்கும் நோக்கில் நீண்ட ஓர் ஆய்வை மேற் கொண்டேன். அதன் வெளிப்பாடுதான் தற்போது தங்கள் கைகளில் தவழும் சூனியம் உண்டு என்னும் இந்நூல்.*

பிரச்னைகள் நபிமொழிகளில் ஒருபோதும் இல்லை. மனிதனின் தவறான புரிதலில்தான் இருக்கிறது. இந்த நவீனக் குழப்பவாதிகளின் செயல் ஒரு கட்டத்தில் ஒட்டுமொத்த நபிமொழி களையும் நிராகரிப்பதற்கான ஆபத்தான வழியை வகுக்கும். இவர்களில் பலர் இந்த உண்மை நிலையை உணராமலேயே இச்செயலுக்குத் துணை நிற்கின்றனர்.

இவர்களின் மூர்க்கத்தனம் நபிமொழிகளை நம்பி வாழும் முஃமின்களை முஷ்ரிக்குகள் - இணைவைப்பாளர்கள்; இவர் களுக்குப் பின்னால் நின்று தொழக்கூடாது என்று ஃபத்வா கொடுக்கும் அளவிற்குச் சென்றுவிட்டது. நாளுக்கு நாள் புற்று நோய் போல் இவர்களின் நோய் அதிகரித்து வருகிறது.

உண்மையில் இந்த ஹதீஸ் மறுப்புக் கொள்கைக்குப் பின்னால் குர்ஆன் இல்லை; ஒரு தனி மனிதனின் சுய சிந்தனையே உள்ளது; இதை மனோ இச்சை என்றும் கூறலாம். இவர்களுடன் இணைந்து செயல் படுவர்கள் மெஸ்மரிஸம் செய்யப்பட்டவர்கள் போல் உள்ளார்கள் என்றாலும் மிகையாகாது. அல்லாஹ் நாடினால் மட்டுமே இவர் களை இக்கொள்கையிலிருந்து வெளிக் கொண்டு வர இயலும்.

அறிஞர்களிடம் தவறுகள் நிகழும் என்ற யதார்த்தத்தை அறிய வேண்டும். தவறு நிகழ்ந்துவிட்டால் அந்தத் தவறை மறைப்பதற்கு இன்னும் பல தவறுகள் செய்வது ஒரு முஃமினின் பண்பாகாது. செய்த தவறுக்குப் பரிகாரம் தேடுவதுதான் சிறந்த வழி.

இஸ்லாமிய பிரச்சாரப் பணியில் தங்களை அர்ப்பணித்து வந்த இஸ்லாமிய அறிஞர்கள் தங்களையும் அறியாமல் தவறுகள் நிகழ்ந்த போது இவ்வாறே நடந்து ஒரு முன்னுதாரணத்தை ஏற்படுத்தி உள்ளனர்.

எனவே இந்த அடிப்படையில், நபிமொழிகளை மறுத்து 'ஹதீஸ்கள் குர்ஆனுக்கு முரண்படுமா?' என்ற தலைப்பில் நான் முன்பு எழுதிய நூலுக்கும் எனக்கும் இனி எந்த சம்பந்தமும் இல்லை என்பதையும், அந்த நூல் இனி அச்சிடப்படாது என்பதையும் நான் பகிரங்கமாகத் தெரிவித்துக் கொள்கிறேன். மேலும் அதற்கு மாற்ற மாகத்தான் இந்த ஆய்வு நூலை நான் தொகுத்து அளிக்கிறேன். **வமா அலைனா இல்லல் பலாகுல் முபீன்** - தெளிவாக எடுத்து ரைப்பதே நம் கடமை என்ற அடிப்படையில் என் கடமையை நான்

நிறைவுசெய்துள்ளேன். இந்த நவீனக் கொள்கைக் குழப்பத்திலிருந்து மக்களை பாதுகாக்க அல்லாஹ்வே போதுமானவன் என உறுதியாக நம்புகிறேன்.

நான் இன்று பெற்றுள்ள இஸ்லாமிய கல்விக்கு சகோதரர் பீ. ஜைனுல் ஆபிதீன், ஷம்சுள்ளுஹா ரஹ்மானீ மற்றும் டிஎன்டிஜே அமைப்பின் சில அறிஞர்களையே அல்லாஹ் காரணமாக்கினான். இதற்காக நான் அவர்கள் அனைவருக்கும் என் நன்றியைத் தெரிவிப்பதுடன் அவர்களுக்காக இறைவனிடம் பிரார்த்தனையும் செய்கிறேன். அல்லாஹ் நம் அனைவரையும் நேர்வழியில் நடத்துவானாக.

இந்நூலைச் சரிபார்த்து இதற்கு மதிப்புரை அளித்த குர்ஆன் ஹதீஸ் மொழிபெயர்ப்பாளரும், UAE யில் அரசங்கத்தால் நீண்ட காலம் நியமிக்கப்பட்டிருந்த இஸ்லாமிய அழைப்பாளருமான **அஷ்ஷேக் கே. இக்பால் மதனீ** அவர்களுக்கும், அல்ஜன்னத் மாதஇதழ் ஆசிரியர் **அஷ்ஷேக் எஸ். கமாலுத்தீன் மதனீ** அவர்களுக்கும், இலங்கையைச் சார்ந்த **அஷ்ஷேக் இஸ்மாயீல் ஸலஃபீ** அவர்களுக்கும், இலங்கையைச் சார்ந்த **அஷ்ஷேக் எம்.ஐ. அன்ஸார் தப்லீக்கீ** அவர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்நூல் சீரமைப்புப் பணியைச் சிறப்பாகச் செய்து பல்வேறு ஆலோசனைகள் வழங்கிய திருக்குர்ஆன் மொழி பெயர்ப்பாளர் **மவ்லவீ எம்.எம். அப்துல் காதிர் உமரீ** அவர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்நூல் அஸ்ஸுன்னா பப்ளிகேஷன்ஸ் மூலம் வெளியிடப்படுகிறது.

என் மறுமை வாழ்விற்காக இறைவனைப் பிரார்த்திக்க வாசக அன்பர்களிடம் வேண்டுகிறேன்.

அன்புடன்,
மவ்லவீ S. **அப்பாஸ் அலீ** MISC

*******

# பெயர்க் காரணம்

“எனக்கு சூனியம் செய்து பாதிப்பு ஏற்படுத்தினால் ஐம்பது இலட்சம் தருகிறேன்!'' என சகோதரர் பீஜே அண்மைக்காலத்தில் சவால் விட்டு தமிழக மக்களிடையே பெரும் சலசலப்பை ஏற் படுத்தினார். இச்செயலால் சமுதாயத்திற்கு நன்மை ஏற்படும் என பலர் நினைக்கலாம். ஆனால், இதன் மூலம் இவர் இஸ்லாமிய சமுதாயத்தில் பெரும் குழப்பத்தையே ஏற்படுத்தியுள்ளார்.

அல்லாஹ் நாடினால் சூனியத்தால் பாதிப்பு ஏற்படும் என்று நம்புவது இணைவைப்பு எனக் கூறுகிறார். நமக்கு முன்னால் வந்த ஒட்டுமொத்த இஸ்லாமிய அறிஞர்களும் இந்த இணைவைப்பை அறியாமல் நம்பிவிட்டனர் என்றும் கூறுகிறார். தற்போது இவர் கூறும் விளக்கத்தை ஏற்காமல் இவர் நிராகரிக்கும் ஆதாரப்பூர்வமான ஹதீஸ்களை ஏற்று அல்லாஹ் நாடினால் சூனியத்தால் பாதிப்பு ஏற்படும் என யாராவது கூறினால், அவர் இணைவைப்பாளர். அவரைப் பின்பற்றித் தொழக்கூடாது என்றும் அவர்கள் முஷ்ரிக்கள் என்றும் ஃபத்வா கொடுத்து வருகிறார். இவரின் இந்த ஃபத்வாவை ஏற்று இவரைப் பின்பற்றுபவர்கள் முஸ்லிம்கள் பின்னால் தொழுவதை புறக்கணித்து வருகின்றனர்.

அல்லாஹ் நாடினால் மட்டுமே சூனியத்தால் பாதிப்பு ஏற்படும் எனக் குர்ஆனும் நபிமொழிகளும் தெளிவாகக் கூறுகின்றன. நபி(ஸல்) அவர்களின் காலம் முதல் இன்றுவரை உலக முஸ்லிம்கள் அனைவரும் சூனியம் குறித்து இவ்வாறே நம்பியுள்ளார்கள். மக்கா விலும் மதீனாவிலும் தொழவைக்கும் இமாம்கள் மற்றும் அரபு நாடுகளின் இஸ்லாமிய அறிஞர்கள் இவ்வாறே நம்புகின்றனர்.

இந்நிலையில் பீஜே விடக்கூடிய சவால் சூனியத்திற்கும் சூனியக்காரர்களுக்கும் எதிரான சவால் போன்று தெரிந்தாலும் உண்மையில் இது அல்லாஹ்விற்கும் அவனுடைய தூதருக்கும் ஒட்டுமொத்த முஸ்லிம்களுக்கும் எதிரானச் செயலாகும். நபி(ஸல்) அவர்களையும் உலக முஸ்லிம்களையும் முஷ்ரிக் எனக் கூறி சமுதாயத்தை பிளவுபடுத்தும் மாபாதகச் செயலாகும். இதுவே நவீனக் கொள்கைக் குழப்பமாகும். எனவேதான் இவரையும் இவரைப் பின்பற்றுபவர்களையும் தவிர ஒட்டுமொத்த இஸ்லாமிய சமுதாயமும் இச்செயலை வன்மையாகக் கண்டித்து வருகிறது.

*அல்லாஹ் ஒரு விஷயத்தை இணைவைப்பு என்று கூறினால் நாமும் இணைவைப்பு என்றே கூற வேண்டும். இதில் சமரசம் செய்பவன் சரியான இறைநம்பிக்கையாளனாக இருக்க முடியாது. ஆனால், அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் உண்மைப்படுத்திய ஒரு விஷயத்தை நம்புவதை யாராவது இணைவைப்பு எனக் கூறினால் அதை உண்மை முஸ்லிம் ஒருபோதும் ஏற்றுக்கொள்ளமாட்டான்.*

*இஸ்லாம் தடைசெய்துள்ள சூனியத்திற்கும் முஸ்லிம் களுக்கும் எந்த தொடர்பும் இல்லை. முஸ்லிம்கள் அல்லாஹ்வை மட்டுமே வணங்கிக்கொண்டிருக்கும் வேளையில் திடீரென சூனியம் தொடர்பான சர்ச்சையை கிளப்பி முஸ்லிம்களுக்கு முஷ்ரிக்குகள் என ஃபத்வா கொடுத்து பெரும் குழப்பத்தை ஏற்படுத்தி விட்டார். எனவேதான், இந்நாலுக்கு* ***'சூனியம் உண்டு! நபிமொழி நிராகரிப்பின் நவீனக் கொள்கைக் குழப்பம்'*** *எனப் பெயர் இடப் பட்டுள்ளது.*

***-பதிப்பாசிரியர்***

*******

# பொருளடக்கம்...

## மார்க்கத்தை அறியும் வழி

இறைத்தூதர்(ஸல்) மரணித்து 1436 ஆண்டுகள் கடந்த பிறகும் அன்று அவர்கள் கொண்டு வந்த மார்க்கத்தை இன்று வரை அப்படியே நாம் பின்பற்றி வருகிறோம். இம்மார்க்கம் நமக்கு யார் மூலம் எப்படி வந்தது என்பதை நன்றாகச் சிந்திப்போர் நம்பகமான வர்கள் அறிவிக்கும் எந்த ஒரு ஹதீஸையும் மறுக்கமாட்டார்கள்.

இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் நேரடியாக நாம் கேட்டு இஸ்லாமை அறிந்து கொள்ளவில்லை. நபித்தோழர்கள் இறைத் தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து இஸ்லாமைச் செவியுற்று அறிந்து கொண்டார்கள். நபித்தோழர்களிடமிருந்து தாபியீன்கள் செவி யுற்றுச் சேகரித்தார்கள். இவ்வாறு ஒவ்வொரு காலகட்டத்திலும் வாழ்ந்த நல்லோர்கள் தங்களுக்குப் பின் வரும் தலைமுறைக்கு மார்க்கத்தைப் போதித்து வந்தார்கள். இவ்வாறே இம்மார்க்கம் இன்று நம்மிடம் வந்து சேர்ந்துள்ளது. ஆதாரப்பூர்வமான ஹதீஸ்கள் இவ்வாறுதான் நம்மை வந்து அடைந்திருக்கிறது.

எனவே, “ஆதாரப்பூர்வமான ஹதீஸாக இருந்தாலும் நான் ஏற்கமாட்டேன்” எனக் கூறுபவர், “நான் இஸ்லாமை ஏற்கமாட்டேன்” என்பதை அறிந்தோ அறியாமலோ அவர் கூறுகிறார் என்றே பொருள். ஆதாரப்பூர்வமான நபிமொழிகளைக் குறை கூறுபவர், அறிந்தோ அறியாமலோ இஸ்லாமையும் இறைத்தூதர்(ஸல்) அவர்களையும் குறை கூறுகிறார். முதலில் நாம் இதை சரிவரப் புரிந்து கொள்ள வேண்டும்.

குர்ஆனை மட்டும் அடிப்படையாகக் கொண்டு நாம் இஸ்லாமை முழுமையாக அறிந்து கொள்ளவோ, பின்பற்றவோ முடியாது. தொழுகை, நோன்பு, ஸகாத், ஹஜ் இன்னும் இவை போன்ற பல விஷயங்களை ஹதீஸ்களின் துணை இல்லாமல் அறியவே முடியாது. வணக்க வழிபாடுகளையும், சட்டங்களையும் நம்பகமானவர்களின் அறிவிப்புகள் வாயிலாகவே அறிந்துள்ளோம்.

இறைத்தூதர்(ஸல்) அவர்களின் காலத்தில் குர்ஆன் முழுமை யாக தொகுக்கப்பட்டுவிட்டது. ஆனால், அது அனைத்து மக்களிடமும் இன்று நாம் கைகளில் வைத்திருப்பது போல முழுப்புத்தகமாக சென்றடையவில்லை. உஸ்மான்(ரலி) அவர்களின் காலத்தில்தான் குர்ஆன் பிரதிகள் எடுக்கப்பட்டு மக்களைச் சென்றடைந்தது. இதற்கு முன்பு வரை நபித்தோழர்கள்கூட நம்பகமானவர்களின் வழியாகவே குர்ஆனை அறிந்தார்கள்.

*ஹதீஸ்கள் இன்று எந்த அடிப்படையில் நம்மை வந்து அடைந்திருக்கிறதோ, அதே அடிப்படையில்தான் இறைத்தூதர் (ஸல்) அவர்களின் காலத்தில் பலருக்கு குர்ஆன் சென்றடைந்தது. இதை நம்மால் பின்வரும் வசனத்திலிருந்து அறியமுடிகிறது.*

وَمَا كَانَ الْمُؤْمِنُونَ لِيَنفِرُوا كَافَّةً فَلَوْلَا نَفَرَ مِنْ كُلِّ فِرْقَةٍ مِنْهُمْ طَائِفَةٌ لِيَتَفَقَّهُوا فِي الدِّينِ وَلِيُنذِرُوا قَوْمَهُمْ إِذَا رَجَعُوا إِلَيْهِمْ لَعَلَّهُمْ يَحْذَرُونَ

*இறைநம்பிக்கையாளர்கள் அனைவரும் புறப்பட முடியாது. எனவே, அவர்களில் ஒவ்வொரு பிரிவினரிலும் சிலர் மார்க்கத்தை கற்று தன் கூட்டத்தாரிடம் திரும்பிச் சென்று எச்சரிக்கை செய்வதற்காக புறப்பட வேண்டாமா?...* ***அல்குர்ஆன் 9:122***

*சில இறைநம்பிக்கையாளர்கள் மார்க்கத்தைக் கற்றுக் கொண்டு மற்றவர்களிடம் சென்று அதை போதிக்க வேண்டும். இவர்களின் போதனையை மற்றவர்கள் ஏற்க வேண்டும் என்பதையும், இந்த வழியில் தான் மார்க்கம் வரும் என்பதை மேற் கண்ட வசனத்தின் மூலம் அல்லாஹ் உணர்த்துகிறான்.*

*என்னிடமிருந்து ஒரு வசனமாக இருந்தாலும் அதை (எல்லோருக்கும்) எடுத்துரையுங்கள்.*

***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 3461***

*இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து குர்ஆன் வசனங்களை யும் செய்திகளையும் கேட்டவர்கள் மற்றவர்களுக்கு எடுத்துச் சொல்ல வேண்டும் என்பதையும், இதன் மூலமே இஸ்லாம் முழுமையாக மக்களிடம் சென்றடையும் என்பதையும் மேற்கண்ட நபிமொழி கூறுகிறது.*

*இறைத்தூதர்(ஸல்) அவர்களின் காலத்தில், அம்ர் இப்னு ஸலமா(ரலி) அதிகமாக குர்ஆனை மனனம் செய்தார். இவர் இறைத்தூதர்(ஸல்) அவர்களை நேரடியாகச் சந்தித்து குர்ஆனை அவர்களிடமிருந்து பெறவில்லை. மாறாக இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து குர்ஆனைக் கற்றிருந்த நபித்தோழர்கள் இவர் இருக்கும் பகுதியை கடந்துசெல்லும்போது அவர்களின் மூலமே குர்ஆனை அதிகமாக மனனம் செய்துகொண்டார்.*

*நாங்கள் மக்கள் கடந்து செல்லும் பாதையில் அமைந்திருந்த ஒரு நீர் நிலையின் அருகே இருந்தோம். வாகனத்தில் பயணிப்போர்*

*எங்களைக் கடந்து சென்று கொண்டிருந்தார்கள். நாங்கள் அவர்களிடம்,*

*“மக்களுக்கு என்ன? மக்களுக்கு என்ன? இந்த மனிதருக்கு (முஹம்மதுக்கு) என்ன?” எனக் கேட்டுக் கொண்டிருந்தோம்.*

*“தம்மை இறைத்தூதராக - அல்லாஹ் அனுப்பி இருப்பதாகவும், அல்லாஹ் அவரை இன்ன (குர்ஆன்) போதனைகளைக் கொடுத்து அனுப்பியிருப்பதாகவும் அவர் கூறுகிறார்'' என (குர்ஆனின் சில வசனங்களை ஓதிக் காண்பித்துக்) கூறுவார்கள்.*

*நான் அந்த வசனங்களை அவ்வப்போது மனப்பாடம் செய்து கொள்வேன். அது என் நெஞ்சில் பதிக்கப் பட்டது போல் ஆகிவிட்டது...*

*குர்ஆனை அதிகம் அறிந்தவர் யார் என மக்கள் தேடியபோது, பயணிகளிடமிருந்து நான் செவியுற்று அறிந்திருந்ததால் என்னை விட அதிகமாகக் குர்ஆனை அறிந்தவர் எவரும் (எங்களிடையே) இல்லை.*

*எனவே, (தொழுகை நடத்துவதற்காக) என்னை அவர்கள் முன்னால் நிறுத்தினார்கள். நான் அப்போது ஆறு அல்லது ஏழு வயதுச் சிறுவனாக இருந்தேன்.*

***அறிவித்தவர்: அம்ர் இப்னு ஸலமா(ரலி), நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 4302***

*ஹதீஸ்கள் நமக்கு இன்று எந்த வழியில் வந்து சேர்ந்துள்ளதோ அதே வழியில்தான் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் காலத்தில் பலருக்கு குர்ஆன் சென்றடைந்தது. எனவேதான், நல்லோர்கள் ஆதாரப்பூர்வமாகக் கூறும் தகவலை ஏற்க வேண்டும்.*

**يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا إِنْ جَاءَكُمْ فَاسِقٌ بِنَبَإٍ فَتَبَيَّنُوا أَنْ تُصِيبُوا قَوْمًا بِجَهَالَةٍ فَتُصْبِحُوا عَلَى مَا فَعَلْتُمْ نَادِمِينَ**

*இறைநம்பிக்கையாளர்களே! பாவி ஒருவன் உங்களிடம் செய்தி ஒன்றை கொண்டு வந்தால் (அதை) தெளிவுபடுத்திக் கொள்ளுங்கள். நீங்கள் அறியாமல் ஒரு கூட்டாத்தாரை தாக்கி விட்டு, நீங்கள் செய்ததற்காக கைசேதப்படும் நிலை வரக்கூடாது.*

***அல்குர்ஆன் 49:6***

*பாவி ஒருவன் ஒரு செய்தியை நம்மிடம் கொண்டு வந்தால் அதை உண்மையானதா? என ஆராய்ந்து, அது உண்மையாக*

*இருக்கும் பட்சத்தில் ஏற்கவேண்டும் என்றும், அது உண்மையாக இல்லாத பட்சத்தில் ஏற்கலாகாது என்றும் மேற்கண்ட வசனத்தில் அல்லாஹ் கூறுகிறான். இப்படி இருக்க, நல்லோர்கள் ஆதாரப் பூர்வமாகக் கொண்டுவரும் செய்தியை எப்படி மறுக்க முடியும்? அதை அப்படியே ஏற்றுத்தான் ஆகவேண்டும். நம் அறிவுக்குப் பொருந்தவில்லை. எனவே, நாங்கள் ஆய்வு செய்வோம் எனக் கூறி மறுப்பது இஸ்லாம் ஆகாது.*

**وَإِذَا جَاءَهُمْ أَمْرٌ مِنَ الْأَمْنِ أَوْ الْخَوْفِ أَذَاعُوا بِهِ وَلَوْ رَدُّوهُ إِلَى الرَّسُولِ وَإِلَى أُوْلِي الْأَمْرِ مِنْهُمْ لَعَلِمَهُ الَّذِينَ يَسْتَنْبِطُونَهُ مِنْهُمْ وَلَوْلَا فَضْلُ اللَّهِ عَلَيْكُمْ وَرَحْمَتُهُ لَاتَّبَعْتُمْ الشَّيْطَانَ إِلَّا قَلِيلًا(83)4**

*அவர்களிடம் பயம் அல்லது பாதுகாப்புக் குறித்த செய்தி வந்தால் அதை பரப்பிவிடுகிறார்கள். அச்செய்தியை இத்தூதரிடமும் அவர்களில் அதிகாரம் உள்ளவர்களிடமும் கொண்டு சென்றிருந் தால் அதை ஆய்வுசெய்பவர்கள் அறிந்திருப்பார்கள். உங்கள் மீது அல்லாஹ்வின் அருளும் கருணையும் இல்லாவிட்டால் குறைவான வர்களைத் தவிர (மற்றவர்கள்) ஷைத்தானை பின்பற்றியிருப்பீர்கள்.*
***அல்குர்ஆன் 4:83***

*ஒரு செய்தியைப் பரப்புவதற்கு முன்னால் ஆய்வு செய்யக் கூடியவர்களிடம் அதைக் கூறி, அதன் உண்மை நிலையை அறிந்து கொள்ள வேண்டும். ஆய்வாளர்கள் உறுதிபட தெரிவித்த பின்னரே அச்செய்தியை வெளியில் கூற வேண்டும் என அல்லாஹ் மேற்கண்ட வசனத்தில் கூறுகிறான்.*

*நல்லவர்கள் ஆய்வு செய்து கூறிய பிறகே ஒன்றை ஏற்க வேண்டும் என்ற அல்லாஹ்வின் கூற்று, நம்பகமானவர்களே தகவல்களுக்கு ஆதாரமாகவும் அஸ்திவாரமாகவும் இருக்கிறார்கள் என்பதைக் காட்டுகிறது.*

*கடன், மரண சாசனம், தலாக் போன்ற சட்டங்களில் நம்பக மானவர்களை சாட்சிகளாக ஆக்க வேண்டும் என அல்லாஹ் உத்தரவிட்டுள்ளான்.*

*உங்களில் ஆண்களில் இருவரை சாட்சிகளாக ஏற்படுத்திக் கொள்ளுங்கள். இரண்டு ஆண்கள் இல்லாவிட்டால் நீங்கள் திருப்தி கொள்ளும் சாட்சிகளாக ஓர் ஆணும், இரண்டு பெண்களும் (சாட்சிகளாக) இருக்கட்டும்.* ***அல்குர்ஆன் 2:282***

*இறைநம்பிக்கையாளர்களே! உங்களில் ஒருவருக்கு மரணம் நெருங்கி மரண சாசனம் செய்யும்போது, உங்களில் நம்பகமான இருவர் சாட்சிகளாக இருக்க வேண்டும்.* ***அல்குர்ஆன் 5:106***

*அப்பெண்கள் தங்களின் தவணையை அடைந்துவிட்டால் அவர்களை அழகிய முறையில் வைத்துக்கொள்ளுங்கள். அல்லது அழகிய முறையில் அவர்களை விட்டுப் பிரிந்துவிடுங்கள். உங்களில் நம்பகமானவர்கள் இருவரைச் சாட்சிகளாக ஆக்கிக்கொள்ளுங்கள்.*
***அல்குர்ஆன் 65:2***

*இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து நபிமொழிகள் நமக்கு வரும்போது அவற்றை புறக்கணிக்காமல் ஏற்கவேண்டும் என்ற உபதேசத்தை இறைத்தூதர்(ஸல்) அவர்களே நமக்கு கற்றுத்தருகிறார்கள்.*

*"உங்களில் ஒருவர் தன்னுடைய கட்டிலின் மீது சாய்ந்திருக்கும் நிலையில், நான் உத்தரவிட்டதாகவோ, தடைசெய்ததாகவோ ஒரு செய்தி அவரிடம் வந்தால், எனக்குத் தெரியாது; அல்லாஹ்வின் வேதத்தில் இருப்பதையே நாங்கள் பின்பற்றுவோம் எனக் கூற வேண்டாம்" என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*
***நூல்: திர்மிதீ 2587***

*ஆதாரப்பூர்வமான ஹதீஸ்களை "குர்ஆனோடு முரண் படுகிறது; பகுத்தறிவுக்கு ஏற்புடையதாக இல்லை; நடைமுறைக்குச் சாத்தியமில்லை" எனக் கூறி மறுப்பது, மேற்கண்ட வசனங்களில் அல்லாஹ் நமக்கு போதித்துள்ள அடிப்படைக்கே மாற்றமானது ஆகும். இதுவும் இறைமறுப்பின் ஒரு வகையாகும்.*

*ஆதாரப்பூர்வமான ஹதீஸ்கள், குர்ஆனுக்கோ, பகுத்தறிவுக்கோ ஒருபோதும் முரண்படாது. நடைமுறைக்கு உகந்ததாகவே இருக்கும். அவற்றில் ஏதேனும் சந்தேகம் வருவது நம் அறியாமையைத்தான் காட்டுகிறது. உண்மையில் இதற்கு சரியான விளக்கம் இருக்கிறது. நாம் அதை நோக்கித்தான் நகரவேண்டும். அதுதான் ஆரோக்கிய மானது; உண்மை முஸ்லிமின் பண்பு.*

## *பாதுகாக்கப்பட்ட ஹதீஸ்கள்*

*இஸ்லாமியப் போதனைகள் மற்றும் வழிகாட்டல் குர்ஆன் சுன்னா என்ற இரண்டு அடிப்படைகளுக்குள் அடங்கி உள்ளன. குர்ஆனும் நபிமொழிகளும் பாதுகாக்கப்பட்டிருப்பதே இஸ்லாம் பாதுகாக்கப்பட்டுள்ளது என்பதன் அஸ்திவாரம்.*

*குர்ஆன் மட்டுமே பாதுகாக்கப்பட்டிருக்கிறது. ஹதீஸ்கள் பாதுகாக்கப்படவில்லை என்றால், இஸ்லாமின் ஒரு பகுதி மட்டுமே பாதுகாக்கப்பட்டிருக்கிறது. இன்னொரு பகுதி பாதுகாக்கப் படவில்லை என்று பொருளாகிவிடும். இப்படிப்பட்ட நிலையை அல்லாஹ் இந்த மார்க்கத்திற்கு ஏற்படுத்தவில்லை.*

*அல்லாஹ் குர்ஆனை எவ்வாறு பாதுகாத்தானோ அவ்வாறே நபிமொழிகளையும் பாதுகாத்துள்ளான். இறைத்தூதர் முஹம்மத் (ஸல்) அவர்களின் சொல், செயல், அங்கீகாரம் பாதுகாக்கப் பட்டிருப்பது போல, உலகத்தில் வேறு யாருடைய சொல்லும் பாதுகாக்கப்படவில்லை. இஸ்லாமின் மூலம் மனித குலத்திற்கு அல்லாஹ் அருளிய மாபெரும் கிருபையே இதுதான்.*

**إِنَّا نَحْنُ نَزَّلْنَا الذِّكْرَ وَإِنَّا لَهُ لَحَافِظُونَ**

*நாமே இந்த உபதேசத்தை அருளினோம். இதை நாமே பாதுகாப்போம்.* ***அல்குர்ஆன் 15:9***

*இவ்வசனம் குர்ஆனின் பாதுகாப்புக் குறித்து மட்டும் பேசவில்லை. இஸ்லாமின் ஒட்டுமொத்த பாதுகாப்புக் குறித்தே பேசுகிறது. இரண்டாவது மூல ஆதாரமான ஹதீஸ்களைக் குறித்தும்தான் பேசுகிறது.*

*எனவேதான், நாமே குர்ஆனை அருளினோம். நாமே குர்ஆனை பாதுகாப்போம் எனக் கூறாமல் இந்த உபதேசத்தை நாமே அருளினோம். நாமே இதைப் பாதுகாப்போம் என அல்லாஹ் கூறுகிறான். குர்ஆனும் ஆதாரப்பூர்வமான ஹதீஸ்களும் உபதேச மாக இருப்பதில் எந்த முஃமின்களுக்கும் சந்தேகம் இருக்கக்கூடாது.*

*ஹதீஸ்கள் சரியாகப்பாதுகாக்கப்படவில்லை எனக் கூறினால் அல்லது ஹதீஸ்கள் பாதுகாக்கப்பட்டிருப்பதில் சந்தேகத்தை ஏற்படுத்தும் வகையில் பேசினால், இது வஹீயின் ஒரு வகை மட்டுமே பாதுகாக்கப்பட்டிருக்கிறது. இன்னொரு வகை பாதுகாக் கப்படவில்லை என்ற ஆபத்தான கருத்தையே விதைப்பதாகும்.*

*குர்ஆனுக்கு வெளியே மார்க்க அடிப்படையில் இறைத்தூதர் (ஸல்) பேசிய பேச்சுக்களும் வஹீ என்றே அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் கூறியுள்ளார்கள்.*

*இவர் மனோஇச்சைப்படி பேசமாட்டார். இது அறிவிக்கப் படும் இறைச்செய்தியே அன்றி வேறில்லை.* ***அல்குர்ஆன் 53:4***

*அப்துல்லாஹ் இப்னு அம்ர் இப்னில் ஆஸ்(ரலி) கூறுகிறார்கள்:*

*நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து செவியுறும் அனைத்து விஷயங்களையும் மனனம் செய்துகொள்வதற்காக எழுதிக்கொள்வேன். அப்போது,*

*"இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் நீ செவியுறும் அனைத்து விஷயங்களையும் எழுதிக்கொள்கிறாயா? இறைத்தூதர்(ஸல்) கோபத்திலும் சந்தோஷமான நேரத்திலும் (தவறுதலாக எதை யாவது) பேசிவிடும் மனிதர் தானே?" என குரைஷியர் கூறி (எழுதுவதை விட்டும்) என்னைத் தடுத்தார்கள்.*

*எனவே, நான் எழுதுவதை நிறுத்திவிட்டு இதை இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் தெரிவித்தேன். அவர்கள் தம் விரலால் தம் வாயை சுட்டிக்காட்டி "என் உயிரைத் தன் கைவசம் கொண்டவன் மீது ஆணையாக! இதிலிருந்து (என் வாயிலிருந்து) உண்மையைத் தவிர வேறு எதுவும் வெளிப்படாது. நீ (நான் கூறுவதைத் தயக்கமின்றி) எழுதிக்கொள் எனக் கூறினார்கள்.*

***அபூ தாவூத் 3161***

*நம்மிடமிருந்து ஒரு செய்தியை கேட்டு அதைக் கேட்டவாறு பிறருக்கு எடுத்துரைக்கும் மனிதருக்கு அல்லாஹ் அருள்புரிவானாக என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*

***அறிவித்தவர்: அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி), நூல்: திர்மிதீ 2581***

*ஹதீஸ்கள் பாதுகாக்கப்படவில்லை எனக் கூறுவதும் அல்லது அதற்குத் துணையாக இருப்பதும் அது பெரும் வழிகேடே. இது தொடர்பாக சந்தேகத்தை ஏற்படுத்தும் ஒவ்வொரு செயலும் வழிகேடே ஆகும்.*

*குர்ஆன் பாதுகாக்கப்பட்டதிலும், ஹதீஸ்கள் பாதுகாக்கப் பட்டிருப்பதிலும் வித்தியாசம் உள்ளதை நாம் மறுக்கவில்லை. வித்தியாசத்துடன்தான் இரண்டும் பாதுகாக்கப்பட்டுள்ளன; இதில் எந்த முஸ்லிமிற்கும் சந்தேகம் வரக்கூடாது. ஆனால், இந்த வித்தியாசங்களைக் காரணமாக்கி குர்ஆன் மட்டுமே பாதுகாக்கப் பட்டுள்ளது; ஹதீஸ்கள் சரியாகப் பாதுகாக்கப்பட வில்லை என சில சந்தேகங்களை மக்களிடம் சில மேதாவிகள் ஏற்படுத்தி வருகிறார்கள். தங்கள் சிந்தனைக்கு ஏற்றவாறே நபிமொழிகள் இருக்க வேண்டும்; இல்லை என்றால் அது ஹதீஸ்களே அல்ல என வெளிப்படையாகவே பேசிவருகிறார்கள்.*

*அஹ்லுல் குர்ஆன்(?) குர்ஆன் மட்டும்தான் வஹீ என வாதிடு கின்றனர். ஆனால், உண்மையில் அவர்கள் அஹ்லுல் குர்ஆன் அல்லர். இவர்கள் ஹதீஸ்களை மறுப்பதற்கு பல பொய்யான காரணங்களைக் கூறுகிறார்கள். அவர்களின் வாதத்தையே இப்போது இவர்களும் வைக்கிறார்கள்.*

*இவர்கள் இஸ்லாமில் ஏதோ ஆய்வு செய்து, மக்களுக்கு வழிகாட்டுவதாக நினைத்துக் கொள்கிறார்கள். ஆனால், இது ஹதீஸ்கள் மீது மக்கள் வைத்துள்ள நம்பிக்கையை உறுதியாகத் தகர்த்துவிடும்; இவர்கள் அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ளவேண்டும்.*

*ஹதீஸ்கள் குர்ஆனுக்கு முரண் எனக் கூறி, இவர்கள் தங்கள் இஷ்டத்திற்கு விளையாடுவதற்காக, ஹதீஸ் பாதுகாக்கப்பட்டிருக்கும் விதத்தில் தங்களால் முடிந்தளவு சந்தேகங்களை ஏற்படுத்தி வருகிறார்கள். இது மிகவும் ஆபத்தானது.*

*இவர்களின் ஹதீஸ் மறுப்புக்கொள்கையை ஆதரித்தால் ஒட்டுமொத்த ஹதீஸ்களையும் நிராகரிக்கும் நிலையே மக்களிடம் ஏற்படும். ஹதீஸ்கள் பாதுகாக்கப்படவில்லை என்பதே இதன் இறுதி முடிவாக அமையும். மட்டுமின்றி, "குர்ஆன் மட்டுமே ஆதாரம்; ஹதீஸ்கள் இல்லை" எனக் கூறுவதற்கான அத்தனை வாசல்களையும் திறந்துவிடுகிறார்கள்.*

*"குர்ஆனுக்கு முரண்" எனக் கூறி இவர்கள் ஒரு ஹதீஸை மறுக்கும்போது, "இது இட்டுக்கட்டப்பட்ட செய்தி; ஸஹாபியின் பெயரால் முனாஃபிக் எவனாவது இட்டுக்கட்டி இருக்கலாம். இட்டுக்கட்டியது யார் என்பதுதான் தெரியவில்லை. யாரோ என்னமோ செய்துவிட்டார்கள். இந்த அறிவிப்பில் எங்கோ தவறு ஏற்பட்டுள்ளது" என தங்களின் யூகத்தையே கூறிவருகின்றனர்.*

*ஹதீஸ்கள் யார் வழியாக வந்தது? அதை அறிவித்தவர்கள் யார் போன்ற விபரங்கள் தெரியாவிட்டால், இவ்வாறு யூகிப்பதற்கு இடமுண்டு. ஆனால், அறிவித்தவர்களின் பெயர்கள் தெளிவாக கூறப்பட்டு, அவர்கள் அனைவரும் நம்பகமானவர்களாக இருக்கும் நிலையில், இவ்வாறு யூகித்தால் நம்பகமான எந்த ஒரு செய்தியையும் நம்ப இயலாது.*

*இவர்களின் இந்த யூகம் இவர்கள் மறுக்கும் ஹதீஸ்களை மட்டும் பாதிக்காது. மாறாக ஆதாரப்பூர்வமாக அமைந்த அனைத்து ஹதீஸ்களிலும் சந்தேகத்தை ஏற்படுத்திவிடும்.*

ஒரு ஹதீஸ் பொய்யானது என்றால் இந்த ஹதீஸை இட்டுக் கட்டியவர் யார் என்பதைக் கூற வேண்டும். அப்போது தான் இந்த விமர்சனம் மற்ற ஹதீஸ்களில் சந்தேகத்தை ஏற்படுத்தாது. ஹதீஸ்கள் பாதுகாக்கப்பட்டிருக்கிறது என்ற அடிப்படையும் தகர்ந்துபோகாது. இதைச் செய்யாமல், ''யாரோ? எப்போதோ? தவறு செய்து விட்டார்கள்'' என கண்மூடித்தனமாக விமர்சிப்பது ஒட்டுமொத்த ஆதாரப்பூர்வமான ஹதீஸ்களிலும் சந்தேகத்தை ஏற்படுத்தி ஹதீஸ்களின் பாதுகாப்பையும் கேள்விக் குறியாக்குகிறது.

நபிமொழிகளின் மீது மக்களுக்கு சந்தேகம் வரக்கூடாது என்பதற்காகவே, இமாம்கள் குறிப்பிட்ட நிபந்தனைகளை இட்டுள்ளார்கள்; ஆதாரப்பூர்வமான ஹதீஸ்களை தரம்பிரித்துக் காண்பித்துள்ளார்கள். இதன் பிறகும், அந்த ஹதீஸ்களில் "யாரோ? எவரோ? தவறுசெய்துவிட்டார்" என அர்த்தமற்ற முறையில் விமர்சிப்பது இமாம்களின் தியாகத்தையும் அவர்களின் கடின உழைப்பையும் கேலி செய்வதாகும். அவர்களை விட நானே அறிந்தவன் என்ற ஆணவத்தைக் காட்டுவதாகவும். ஆணவம் யாருடைய குணம் என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும்.

நம்பகத்தன்மையில் முதலிடம் பெற்று ஆயிரக்கணக்கான ஹதீஸ்களை அறிவித்த மேதைகளின் வழியாக வந்த ஹதீஸ்களைக் கூட இவர்கள் விட்டுவைக்கவில்லை. குர்ஆனுக்கு முரண் எனக் கூறி இவற்றையும் நிராகரிக்கின்றனர்.

'முதவாதிர்' ஹதீஸ்களையும் இவர்கள் விட்டுவைக்கவில்லை. இவற்றையும் குர்ஆனுக்கு முரண் எனக் கூறி மறுத்துள்ளனர்.

தவறாகவோ பொய்யாகவோ இருக்க வாய்ப்பே இல்லாமலும் சந்தேகத்திற்கு அப்பாற்பட்டும் உள்ள ஹதீஸ்களை முதவாதிர் என்று ஹதீஸ் துறையினர் குறிப்பிடுவார்கள். இது சஹாபாக்கள் தாபியீன்கள் என ஒவ்வொரு படித்தரத்திலும் பலர் இடம்பெற்று அவர்கள் வழியாக வரும் ஹதீஸாகும்.

ஸஹீஹான ஓரிரு ஹதீஸ்கள் மட்டுமே குர்ஆனுக்கு மாற்றமாக உள்ளது என்றே ஆரம்பத்தில் கூறிய இவர்கள், இன்று மிகச் சரியாக உள்ள நூற்றுக்கணக்கான ஹதீஸ்களை மறுக்கும் அளவுக்கு இவர்களின் 'கொள்கை விரிவாக்கம்' சென்றுள்ளது.

நூற்றுக்கணக்கான ஹதீஸ்கள் நம்பகமானவர்களின் வழியாக வந்திருந்தாலும் அவை, குர்ஆனுக்கு முரண்படுவதால் பொய்யானவை

என்றால், நம்பகமான அதே நபர்கள் வழியாக வந்துள்ள மீதமுள்ள ஹதீஸ்கள் மட்டும் சரியானவை என எப்படிக் கூற முடியும்?

ஹதீஸை இட்டுக்கட்டக்கூடியவர்கள் குர்ஆனுக்கு முரணாகத் தான் இட்டுக்கட்டுவார்களா? குர்ஆனுக்கு ஆதரவாக இட்டுக் கட்டமாட்டார்களா? சூராக்களின் சிறப்புகள் குறித்து பொய்யர்கள் வழியாக இட்டுக்கட்டப்பட்ட செய்திகள் வரவில்லையா? குர்ஆனுக்கு முரணில்லாத ஆதாரப்பூர்வமான மற்ற ஹதீஸ்கள் இந்த வாதப்படி இட்டுக்கட்டப்பட்டதாக ஏன் இருக்கக்கூடாது? ஹதீஸ்களின் மீது மக்கள் வைத்துள்ள நம்பிக்கையை இந்த வாதம் தகர்த்துவிடுகிறதல்லவா?

“எவனாவது முனாஃபிக் சஹாபியின் பெயரை பயன்படுத்தி விட்டு அடித்திருக்கலாம். இஸ்லாமின் விரோதிகள் இட்டுக் கட்டியுள்ளர்கள்” எனக் கூறி ஹதீஸ்களின் அஸ்திவாரமாகவும் பாதுகாப்பு கேடயமாகவும் உள்ள அறிவிப்பாளர் தொடரை தன் இஷ்டத்திற்கு மாற்றி அமைப்பது ஒட்டுமொத்த ஹதீஸையும் மறுப்பதற்குரிய வழி என்பதே உண்மை.

நம்பகமானவர்கள் என இமாம்களால் நற்சான்று வழங்கப் பட்டவர்களை, இட்டுக்கட்டிய கயவர் இவராக இருக்கலாம்; அவராக இருக்கலாம் என யூகிப்பது வரம்பு மீறிய செயலாகும். தன் அறிவில் குறையை வைத்துக்கொண்டு, நம்பகமானவர்களை குற்றவாளியாக்குவதுதான் இஸ்லாமிய பண்பா?

குர்ஆனுக்கு முரண் எனக் கூறி ஹதீஸ்களை மறுப்பது வஹீயின் இன்னொரு வடிவமாக இறைவன் ஆக்கியுள்ள ஒட்டுமொத்த ஹதீஸ்களையும் மறுப்பதாகும். இது பெரும் வழிகேடு மட்டுமின்றி வழிகெடுப்பதாகவும் உள்ளது.

## வஹீயில் முரண்பாடு வராது

குர்ஆன் மட்டுமல்ல, ஆதாரப்பூர்வமான ஹதீஸ்களும் வஹீ - இறைச்செய்தியே. இதை நாம் முன்பே விளக்கிவிட்டோம். இறைச் செய்தியில் முரண்பாடு வராது என அல்லாஹ் கூறுகிறான்.

இந்தக் குர்ஆனை அவர்கள் சிந்திக்க வேண்டாமா? அல்லாஹ் அல்லாதவர்களிடமிருந்து வந்திருந்தால் அதில் அதிகமான முரண் பாடுகளை கண்டிருப்பார்கள். **அல்குர்ஆன் 4:82**

குர்ஆன் அல்லாஹ்விடமிருந்து வந்துள்ளது; ஆதாரப்பூர்வமான ஹதீஸ்களும் அல்லாஹ்விடமிருந்தே வந்துள்ளன. எனவே, இறைச்செய்திகளுக்கிடையில் முரண்பாடே இருக்காது என்ற உண்மையை மேற்கண்ட வசனத்திலிருந்து விளங்க முடிகிறது.

குர்ஆனில் சில வசனங்களை வெளிப்படையாக நாம் பார்க்கும் போது, அவற்றுக்கிடையே முரண்பாடு இருப்பது போன்று தெரியலாம். ஆனால், நாம் சரியான வழியில் சிந்தித்தால் எவ்வித முரண்பாட்டையும் காணவே முடியாது.

உதாரணமாக பின்வரும் வசனத்தைக் குறிப்பிடலாம்.

உங்களில் சிலர் தன் மனைவியை தாய் என்று கோபத்தில் கூறுகின்றனர். அவர்களின் மனைவிமார்கள் அவர்களுக்கு தாயார்களாக இல்லை. அவர்களைப் பெற்றெடுத்தவர்களே அவர்களின் தாயார்களாவர். அவர்கள் வெறுக்கத்தக்க சொல்லையும் பொய்யையும் கூறுகின்றனர். அல்லாஹ் அலட்சியம் செய்பவன். மன்னிப்பவன். ***அல்குர்ஆன் 58:2***

இந்த வசனத்தில் நம்மை பெற்றெடுத்தவர்களைத்தான் தாய் என நாம் கூற வேண்டும் என்று அல்லாஹ் கூறுகிறான்.

இந்த நபி இறைநம்பிக்கையாளர்களுக்கு அவர்களின் உயிர்களைவிட மேலானவர். அவரின் மனைவியர் இறைநம்பிக்கையாளர்களுக்கு அன்னையர் ஆவர். ***அல்குர்ஆன் 33:6***

இவ்வசனத்தில் நம்மை பெற்றெடுக்காத நபியின் மனைவியர் நம் அன்னையர் என அல்லாஹ் கூறுகிறான்.

பெற்றெடுத்தவர்களைத்தான் தாய் என கூற வேண்டும் என்பதும், பெற்றெடுக்காத நபியின் மனைவிமார்களை தாயார் எனக் கூற வேண்டும் என்பதும் ஒன்றுக்கொன்று முரண்படுவதைப் போன்று தெரிகிறது. யூதர்களும் கிறிஸ்தவர்களும் இவ்வசனத்தையும், இது போன்ற வசனத்தையும் கூறி குர்ஆனில் முரண்பாடு இருப்பதாக வாதிடுகின்றனர்.

இது அல்லாஹ்வின் வேதம்; இதில் முரண்பாடு இருக்காது என்ற நம்பிக்கையுடன் இவ்வசனங்களை நன்றாகக் கவனித்தால் இவ்விரண்டு வசனங்களுக்கும் இடையில் எந்த முரண்பாட்டையும் காணவே முடியாது.

பெற்றெடுத்தவர்களைத்தான் தாய் எனக் கூற வேண்டும்

என்பது நமக்கு அல்லாஹ் சொன்ன பொதுவிதியாகும். நம் இஷ்டத்திற்கு நம்மை பெற்றெடுக்காத யாரையும் தாய் என்று சொல்லக்கூடாது. ஆனால், அல்லாஹ் அவன் நினைத்தால் விதிவிலக்காக ஒரு சிலரை நமக்கு தாயாராக ஆக்குவான். இந்த அதிகாரம் அல்லாஹ்விற்கு உள்ளது. நமக்கு இல்லை. அல்லாஹ்வின் இந்த அதிகாரத்தின் அடிப்படையில் விதிவிலக்கலாக நபியின் மனைவியரை அல்லாஹ் நமக்கு அன்னையர்களாக ஆக்கியுள்ளான். எனவே, வசனத்தில் முரண்பாடில்லை என்ற உண்மையை புரியலாம்.

58:2 வது வசனத்தில், ஒருவர் தன் மனைவியைத் தாய் எனக் கூறவேண்டாம் என்பதன் பொருள், மனைவியைத் தாய்க்குச் சமம் என்று கூறி அவளுடன் பாலுறவு கொள்வதை தமக்குத் தாமே தடை போட்டுக் கொள்ள வேண்டாம் என்பதாகும்.

33:6 வது வசனத்தில் நபியின் மனைவியர் இறைநம்பிக்கை யாளர்களின் அன்னையர் என்பதன் பொருள், நபிக்குப் பின்பு அவர்களை யாரும் திருமணம் செய்யக்கூடாது என்பதாகும். அவர்கள் நமக்கு அன்னையர் தானே எனவே அவர்கள் இறை நம்பிக்கையுள்ள ஆண்களிடம் ஹிஜாப் இல்லாமல் வரலாம் என்பது இதன் பொருள் அல்ல.

குர்ஆனில் முரண்பாடு இருப்பதாகச் சந்தேகங்களை பிறர் நம்மிடம் ஏற்படுத்தும்போது, இவ்வாறு அழகிய முறையில் விளங்கினால் தெளிவு கிடைத்துவிடும்.

இவ்வாறே, குர்ஆனுக்கும் ஆதாரப்பூர்வமான நபிமொழி களுக்கும் இடையே முரண்பாடு இருப்பதாக யாரேனும் சந்தேகத்தை ஏற்படுத்தினால், அவற்றுக்கிடையே உள்ள தொடர்பு கள் மற்றும் நிகழ்வுகளைச் சரியாக ஆய்வு செய்து விளங்கிக் கொண்டு முரண்பாடு இல்லை என ஏற்பதுதான் ஈமானுக்கு உகந்த செயல்.

ஆனால், இன்றோ சிலர் குர்ஆன் மற்றும் ஹதீஸ்களின் விஷயத்தில் இந்த அழகிய நடைமுறையைக் கடைபிடிக்கத் தயங்குவது ஏனோ? ஆதாரப்பூர்வமான பல ஹதீஸ்களை இவர்கள் முறையாகச் சிந்தித்து விளங்காமல், ஆய்வு செய்கிறோம் என்ற பெயரில் பல ஹதீஸ்கள் குர்ஆனுக்கு முரண்படுகின்றன எனக் கூறி கொஞ்சமும் இறையச்சம் இல்லாமல் ஹதீஸ்களைத் தங்கள் இஷ்டத்திற்கு நிராகரித்துக் கொண்டிருக்கிறார்கள். அல்லாஹ்தான் இவர்களுக்கு

நல்ல சிந்தனையை வழங்க வேண்டும். இது குறித்து சில இஸ்லாமிய அறிஞர்கள் கூறியுள்ள கருத்துக்களை அறிந்துகொள்வோம்.

## இமாம் ஷாஃபியீ(ரஹ்)

**مفتاح الجنة (ص: 21)**

**وقال الشافعي وليس يخالف الحديث القرآن ولكن حديث رسول الله صلى الله عليه و سلم يبين معنى ما أراد خاصا وعاما وناسخا ومنسوخا ثم يلزم الناس ما سن بفرض الله فمن قبل عن رسول الله صلى الله عليه و سلم فعن الله قبل**

"ஆதாரப்பூர்வமான எந்த ஒரு ஹதீஸும் குர்ஆனுடன் முரண்படாது. மாறாக இறைத்தூதர்(ஸல்) அவர்களின் ஹதீஸ் அல்லாஹ் நாடிய அர்த்தத்தை, குறிப்பானது என்றோ, பொதுவானது என்றோ, மாற்றிய சட்டம் என்றோ, மாற்றப்பட்ட சட்டம் என்றோ தெளிவுபடுத்தும்.

இறைத்தூதர்(ஸல்) காட்டிய வழியை மக்கள் அவசியம் ஏற்க வேண்டும். அல்லாஹ் இதைக் கடமையாக ஆக்கியுள்ளான். இறைத்தூதர்(ஸல்) கூறியதை ஏற்பவர் அல்லாஹ் கூறியதையே ஏற்கிறார்" என இமாம் ஷாஃபியீ(ரஹ்) கூறினார்கள்.

**நூல்: மிஃப்தாஹுல் ஜன்னா பக்கம் 21**

இமாம் ஷாஃபியீ(ரஹ்) கூறிய இத்தகவலை இமாம் பைஹகீ அவர்களும், இமாம் சுயூத்தி அவர்களும் எடுத்துக் கூறியுள்ளனர்.

**المحصول – (ج 4 / ص 438)**

**المسألة الخامسة خبر الواحد إذا تكاملت شروط صحته هل يجب عرضه على الكتاب**

**قال الشافعي رضي الله عنه لا يجب لأنه لا تتكامل شروطه إلا وهو غير مخالف للكتاب**

"ஹதீஸ் ஆதாரப்பூர்வமானதாக அமைய ஐந்து நிபந்தனைகள் உள்ளன. ஒரு ஹதீஸில் இந்த நிபந்தனைகள் முழுமையாக இடம் பெற்றுவிட்டால், அதன் பிறகு அந்த ஹதீஸ் ஒருபோதும் குர்ஆனுக்கு முரண்படாது" என்றும் இமாம் ஷாஃபியீ(ரஹ்) கூறினார்கள்.

"ஒரு ஹதீஸ் ஆதாரப்பூர்வமாக இருப்பதற்கான நிபந்தனைகள் முழுமையாக இருந்தால் அதைக் குர்ஆனுடன் இணைத்துப் பார்ப்பது அவசியமா?" என இமாம் ஷாஃபியீ(ரஹ்) அவர்களிடம் கேட்கப்பட்டது.

*“அவசியமில்லை. ஏனென்றால், ஹதீஸின் நிபந்தனைகள் முழுமையடைந்துவிட்டால், அது குர்ஆனுக்கு முரண்படாது” என இமாம் ஷாஃபியீ(ரஹ்) கூறினார்கள்.*

***நூல்: மஹ்சூல் (பாகம் 4 பக்கம் 438)***

## *இமாம் இப்னு ஹஸ்ம்(ரஹ்)*

*“ஆதாரப்பூர்வமான எந்த ஹதீஸும் குர்ஆனுடன் முரண் படாது'' என இமாம் இப்னு ஹஸ்ம்(ரஹ்) அழுத்தமாகக் கூறினார்கள்.*

**الإحكام في أصول الأحكام لابن حزم (2/ 80)**

**أما من تعلق بحديث التقسيم فقال ما كان في القرآن أخذناه وما لم يكن في القرآن لا ما يوافقه ولا ما يخالفه أخذناه وما كان خلافا للقرآن تركناه فيقال لهم ليس في الحديث الذي صح شيء يخالف القرآن**

*“குர்ஆனில் உள்ள கருத்தையே ஹதீஸ்கள் சொன்னால், அதை நாங்கள் ஏற்றுக்கொள்வோம். ஹதீஸ் குர்ஆனுக்கு முரணில்லாமலும், இணைந்து போகாமலும் இருந்தால் அதையும் நாங்கள் ஏற்றுக்கொள்வோம். ஹதீஸ் குர்ஆனுக்கு முரணாக இருந்தால் அதை விட்டுவிடுவோம்' எனச் சிலர் கூறுகின்றனர். ஆதாரப்பூர்வமான ஹதீஸ்களில் குர்ஆனுடன் முரண்படக் கூடிய செய்தி எதுவுமே இல்லை என்பதே இவர்களுக்கான பதிலாகும்” என இமாம் இப்னு ஹஸ்ம்(ரஹ்) அழுத்தமாகக் கூறினார்கள்.*

***நூல்: அல் இஹ்காம் ஃபீ உசூலில் அஹ்காம் (பாகம் 2 பக்கம் 80)***

*முஹம்மத் இப்னு அப்தில்லாஹ் என்ற பெரும் வழிகேடன் ஒருவன் இருந்தான். “குர்ஆனுக்கு முரண்பட்டால் ஹதீஸ்களை மறுக்க வேண்டும்” என அவன் கூறினான். இமாம் இப்னு ஹஸ்ம் (ரஹ்) இவனுடைய கூற்றையும் பதிவு செய்து அதற்குச் சரியான பதிலையும் அளித்துள்ளார்கள்.*

**الإحكام في أصول الأحكام لابن حزم (2/ 81)**

**قال علي وقال محمد بن عبد الله بن مسرة الحديث ثلاثة أقسام فحديث موافق لما في القرآن فالأخذ به فرض وحديث زائد على ما في القرآن فهو مضاف إلى ما في القرآن والأخذ به فرض وحديث مخالف لما في القرآن فهو مطرح قال علي بن أحمد لا سبيل إلى وجود خبر**

**صحيح مخالف لما في القرآن أصلا وكل خبر شريعة فهو إمـــا مضـــاف إلى مـــا في القـــرآن ومعطوف عليه ومفسر لجملته وإما مستثنى منه لجملته ولا سبيل إلى وجه ثالث**

*“ஹதீஸ்கள் மூன்று வகையாக உள்ளன. குர்ஆனுடன் இணைந்து போகிற ஹதீஸ் ஒரு வகை. இதை ஏற்றுக்கொள்வது கடமையாகும். குர்ஆனில் இல்லாத கருத்தைத் தருகிற ஹதீஸ்கள் இன்னொரு வகையாகும். இந்த ஹதீஸ்களை குர்ஆனுடன் இணைத்து இவற்றையும் ஏற்பது கடமையாகும். குர்ஆனுக்கு முரணான ஹதீஸ்கள் மூன்றாவது வகையாகும். இவை எறியப்பட வேண்டியவை” என முஹம்மத் இப்னு அப்தில்லாஹ் கூறியுள்ளான்.*

*“ஆதாரப்பூர்வமான ஹதீஸ் குர்ஆனுக்கு முரணாக இருப்பதற்கு வாய்ப்பே இல்லை. மார்க்கத்தின் அனைத்து ஹதீஸ்களும், குர்ஆனை விளக்கக்கூடியதாகவோ, குர்ஆனுடன் இணையக் கூடியதாகவோதான் உள்ளன. அல்லது குர்ஆனின் பொதுவான அடிப்படையிலிருந்து விதிவிலக்கலானதாக இருக்கலாம். இதில் மூன்றாவது வகை ஹதீஸ்கள் வருவதற்கு வாய்ப்பே இல்லை” என இமாம் இப்னு ஹஸ்ம்(ரஹ்) கூறினார்கள்.*

***நூல்: அல் இஹ்காம் ஃபீ உசூலில் அஹ்காம் (பாகம் 2 பக்கம் 81)***

**الإحكام في أصول الأحكام لابن حزم (2/ 21)**

**فصل فيما ادعاه قوم من تعارض النصوص**

**قال علي إذا تعارض الحديثان أو الآيتان أو الآية والحديث فيما يظن من لا يعلم ففرض على كل مسلم استعمال كل ذلك لأنه ليس بعض ذلك أولى بالاستعمال من بعض ولا حـــديث بأوجب من حديث آخر مثله ولا آية أولى بالطاعة لها من آية أخرى مثلها وكل من عند الله عز وجل وكل سواء في باب وجوب الطاعة والاستعمال ولا فرق.**

*ஆதாரங்கள் ஒன்றுக் கொன்று முரண்படுவதாக ஒரு கூட்டம் வாதிடுகிறது; இது பற்றிய பாடம்.*

*“விபரமில்லாத ஒருவருக்கு இரண்டு ஹதீஸ்கள் அல்லது இரண்டு வசனங்கள் அல்லது ஒரு வசனமும் ஹதீஸும் முரண்படுவது போன்று தெரிந்தால் இந்த அனைத்து ஆதாரங்களையும் மறுத்துவிடாமல் ஏற்பது தான் ஒவ்வொரு முஸ்லிமின் மீது கடமையாகும். ஏனென்றால், ஏற்றுக்கொள்ளும் விஷயத்தில்*

*இந்த ஆதாரங்களில் ஒன்று மற்றொன்றை விட ஏற்றமானதில்லை. ஒரு ஹதீஸை புறக்கணித்து அது போன்ற இன்னொரு ஹதீஸை ஏற்க வேண்டும் என்ற நிலையில்லை. வசனங்களில் ஒரு வசனத்தைப் புறக்கணித்து இன்னொரு வசனத்திற்கு மட்டும் கட்டுப்படுவதும் சரியல்ல. அனைத்தும் அல்லாஹ்விடமிருந்து வந்ததாகும். கட்டுப் படுவதிலும் ஏற்பதிலும் இவை அனைத்தும் சமமானதாகும்; இவற்றுக்கு இடையில் எந்த வேறுபாடும் கிடையாது" என இமாம் இப்னு ஹஸ்ம்(ரஹ்) கூறினார்கள்.*

**நூல்: அல் இஹ்காம் ஃபீ உசூலில் அஹ்காம் (பாகம் 2 பக்கம் 21)**

*குர்ஆனுக்கு முரண் எனக் கூறி ஆதாரப்பூர்வமான ஹதீஸ்களை மறுக்கக் கூடாது என்று ஏராளமான இஸ்லாமிய அறிஞர்கள் கூறியுள்ளனர். எடுத்துக்காட்டாகவே இமாம் ஷாஃபியீ மற்றும் இமாம் இப்னு ஹஸ்ம்(ரஹ்) அவர்களின் கூற்றை மட்டும் இங்கே பதிவு செய்துள்ளோம்.*

# ஆதாரப்பூர்வமான ஹதீஸின் இலக்கணம்

1. *அறிவிப்பாளர்கள் நம்பகமானவர்களாக இருக்க வேண்டும்.*
2. *அறிவிப்பாளர்கள் சரியான நினைவாற்றல் உள்ளவர்களாக இருக்க வேண்டும்.*
3. *அறிவிப்பாளர் தொடரில் எந்த முறிவும் இல்லாமல் ஒருவர் மற்றவரை சந்தித்த அடிப்படையில் இறைத்தூதர்(ஸல்) வரை இணைப்பு இருக்க வேண்டும்.*
4. *நம்பகத்தன்மையில் தன்னை விட மேல்நிலையில் உள்ளவருக்கு மாற்றமாக அறிவிக்கக்கூடாது.*
5. *ஒரு செய்தியின் அனைத்து அறிவிப்பாளர் தொடர்களையும் நுணுக்கமாக கவனிக்கும்போது மட்டுமே புலப்படும் 'இல்லத்' என்ற நுட்பமான குறைகூட இருக்கக் கூடாது.*

*இறைத்தூதர்(ஸல்) கூறியதாக இடம் பெறும் ஒரு செய்தி, மேலுள்ள நிபந்தனைகளுக்கு உட்பட்டு இருந்தால், அதுவே ஆதாரப்பூர்வமான செய்தியாகும். இந்த நிபந்தனைகளுக்கு உட் படாதது பலவீனமான செய்தி என முடிவுசெய்யப்பட்டு நிராகரிக் கப்படும். இந்த அடிப்படையில் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் சொல், செயல் மற்றும் அங்கீகாரம் பாதுகாக்கப்பட்டுள்ளன.*

*இந்த விதியின் அடிப்படையில்தான் இமாம்கள் ஹதீஸ்களை*

*ஆதாரப்பூர்வமானது என்றும் பலவீனமானது என்றும் தரம் பிரித்துள்ளார்கள்.*

*ஆதாரப்பூர்வமான ஹதீஸிற்கு இந்த ஐந்து நிபந்தனைகளைத் தவிர வேறு எந்த நிபந்தனையும் இல்லை. இதை இமாம் ஷாஃபியீ(ரஹ்) பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்கள்.*

**اختلاف الحديث (ص: 505) الشافعي**

**وَيَعْلَمُ أَنَّ الْحَدِيثَ إِذَا رَوَاهُ الثِّقَاتُ عَنْ رَسُولِ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ فَذَلِكَ ثُبُوتُـــهُ**

*இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து நம்பகமானவர்கள் ஹதீஸ்களை அறிவிப்பதன் மூலமே அவை ஆதாரப்பூர்வமானவை என நிரூபணமாகிறது.* ***நூல்: இக்திலாஃபுல் ஹதீஸ் (பக்கம் 505)***

*குர்ஆனுக்கு முரணாக இருந்தால் மறுக்க வேண்டும் என்ற ஒரு விதியே ஹதீஸ் கலையில் இல்லை. விதி என்றால் அனைவருக்கும் பொதுவான அளவுகோலைக் கொண்டிருக்க வேண்டும். அதன் படி பலர் முடிவு எடுத்தாலும், பெரும்பாலும் அந்த முடிவு ஒரே மாதிரியாகத்தான் அமைய வேண்டும். ஒவ்வொருக்கும் ஒவ்வொரு முடிவு ஏற்படும் என்றால் அதை யாராலும் விதி என ஏற்க முடியாது.*

1. *ஒருவருக்கு முரணாகத் தெரியும் ஹதீஸ் பலருக்கு முரண் இல்லாமல் தெரிகிறது. இப்போது யாருடைய சிந்தனையை வைத்து ஹதீஸை மறுப்பது?*

2. *குர்ஆன் வசனத்தை தவறாகப் புரிந்துள்ளதால்கூட ஹதீஸ் குர்ஆனுடன் முரண்படுகிறது என்ற சிந்தனை வரலாம்.*

3. *ஹதீஸில் இடம் பெறும் கருத்தை சரியாக விளங்காததால்கூட அந்த ஹதீஸ் குர்ஆனுடன் மோதுவதாக நினைக்கலாம்.*

4. *முரண்படுவதாக அவர்கள் நினைக்கும் ஹதீஸ்களை சரியான அடிப்படையில் இணைத்து விளங்கும் திறன் இல்லாததால் கூட ஹதீஸில் பிரச்னை இருப்பதாக நினைக்கலாம்.*

5. *குர்ஆனையும் நபிமொழியையும் இணைத்து விளங்க வாய்ப்பு இருந்தும், பிடிவாதமாக தன் கருத்தை பதிவு செய்வதற்கு பொய்யர்கள் முனைகிறார்கள். இவர்கள்தான் முரண்பாடு இருப்பதாக ஹதீஸை மறுத்து வருகிறார்கள்.*

*ஹதீஸ் குர்ஆனுக்கு முரண்பட்டால் அதை மறுக்க வேண்டும் என்பதை யார் எப்படி முடிவு செய்வது? எனக்கு மட்டும் சில ஹதீஸ்கள் முரண்பாடாகத் தெரிகின்றன. சகோதரர் பீஜேவிற்கு முரண் பாடாகத் தெரியவில்லை என ஒரு வாதத்திற்கு வைத்துக் கொண் டாலும்,நான் அந்த ஹதீஸ்களை மறுக்கக் கூடாதா? பீஜேவிற்கு முரண் பாடாகத் தெரியும் ஹதீஸ்கள் எனக்கு முரண்பாடாகத் தெரிய வில்லை என்றால் நானும் அந்த ஹதீஸ்களை மறுக்க வேண்டுமா?*

*இவ்வாறு சமுதாயத்தில் ஒவ்வொருவருக்கும் தான் புரிந்துள்ள ஹதீஸ்கள் குர்ஆனுக்கு முரண்பாடாகத் தெரிகிறது என்றால், அந்த ஹதீஸ்களை அவரவர் இஷ்டத்திற்கு மறுத்து விடலாமா?*

*இப்படி மறுத்துவிட்டு ஹதீஸ்கள் பாதுகாக்கப்பட்டுள்ளன என்று வெட்கமில்லாமல் வெளியில் பேசலாமா?*

*ஆதாரப்பூர்வமான ஒரு ஹதீஸ் குர்ஆனுடன் மோதுவதாக ஒருவர் நினைத்தால் உடனே அதை மறுக்கலாகாது. குர்ஆனுக்கு மாற்றம் இல்லாத வகையில் அதை விளங்கவே முயற்சிக்க வேண்டும் என்ற உண்மையை சகோதரர் பீஜேவும் ஏற்றுக் கொள்கிறார். ஆனால், குர்ஆனுக்கு முரண்படுவதாக தான் மறுத்துள்ள ஹதீஸ்களுக்கு இதுவரை விளக்கம் தர தன்னாலேயே முடியவில்லை என வாதிடுகிறார்.*

*பீஜேவைத் தவிர்த்து உலகிலுள்ள மற்ற ஏராளமான இஸ்லாமிய அறிஞர்கள், இவர் மறுக்கும் ஹதீஸ்களை குர்ஆனுக்கு முரணில்லாமல் புரிந்து விளக்கம் அளித்துள்ளனர். இவர் புரிந்து கொண்டால் மட்டும்தான் அது மார்க்கமாகுமா? இவருக்குப் புரியாவிட்டால் அது மார்க்கமாகாதா? இப்போது சிந்தியுங்கள்; பிரச்னை யாரிடத்தில்?*

*தான் மறுக்கும் ஒரு ஹதீஸை உலகில் உள்ள இஸ்லாமிய அறிஞர்கள் உட்பட அனைவரும் மறுத்தாக வேண்டும் என சகோதரர் பீஜே எதிர்பார்க்கிறார். இவர் மறுக்கும் அந்த ஹதீஸை குர்ஆனுக்கு முரணில்லை எனத் தெளிவாகப் புரிந்துள்ள தற்கால இஸ்லாமிய அறிஞர்களை, வழிகேடர்கள் என்றும், முஷ்ரிக்குகள் என்றும் வரம்பு மீறி விமர்சித்து வருகிறார். அல்லாஹ் பாது காப்பானாக!*

*'ஹதீஸ்கள் குர்ஆனுக்கு முரண்' என்னும் வாதத்திற்கு பின்னால் மனித சிந்தனைதான் இருக்கிறது. தவறான மனிதச்*

*சிந்தனை ஒருபோதும் வஹீ - இறைச் செய்தியாகிவிடாது. மனிதச் சிந்தனையை வைத்து இறைச்செய்தியை மறுக்கக் கூடாது. இது இஸ்லாமிற்கு முற்றிலும் எதிரான செயல்.*

## 'ஷாத்' வகை ஹதீஸ்

*ஒரு ஹதீஸை ஓர் ஆசிரியரிடமிருந்து பலமாணவர்கள் அறிவிக்கும்போது அவர்கள் எல்லோருக்கும் மாற்றமாக ஒருவர் மட்டும் அறிவித்தால், அவர் நம்பகமானவராக இருந்தாலும் அவரின் அறிவிப்பு பலவீனமானது என்று முடிவு செய்யப்படும். இந்த வகையில் பலவீனப்படும் அறிவிப்பிற்கு ஷாத் என்று சொல்லப் படுகிறது. இதற்கு தனித்திருக்கக் கூடியது என்று பொருள்.*

*"ஒரு நம்பகமானவர், பல நம்பகமானவர்களுக்கு முரணாக அறிவிக்க வாய்ப்புள்ளது. அப்படி அறிவித்தால் அவர் நம்பகமான வராக இருந்தாலும் அவரின் அறிவிப்பை ஏற்கக்கூடாது" என நீங்கள் கூறுகிறீர்கள். "அப்படியானால், நம்பகமானவர் அறிவிக்கும் ஹதீஸ் குர்ஆனுக்கு முரண்படாது என்று எப்படிக் கூற முடியும்? நம்பக மானவர் அறிவிக்கும் செய்தியை நீங்கள் மட்டும் மறுக்கலாமா?" என அவர்கள் கேட்கின்றனர்.*

*சம்பந்தமில்லாத விஷயங்களை ஒன்றோடொன்று முடிச்சு போட்டு குழப்பம் செய்வதில் இவர்கள் வல்லவர்கள். நம்பகமானவர் தகவலை எடுத்துரைப்பதில் தவறிழைக்கமாட்டார் என்பது பொது விதி. சில நேரங்களில் தவறிழைக்க வாய்ப்புள்ளது. இது விதிவிலக்கு.*

*நம்பகமான அறிவிப்பாளர்கள் பொய்யுரைக்க மாட்டார்கள். இடதை வலது என்றோ வலதை இடது என்றோ குறிப்பிடுவது போன்ற சிறுதவறுகள் இடம் பெற வாய்ப்புள்ளது. கம்ப்யூட்டர் யுகத்தில் வாழ்ந்து கொண்டிருக்கும் நம்மிடமே இதைவிட பெரிய தவறுகள் அச்சுப்பணிகளில் நிகழும்போது, ஒன்றுமே இல்லாத அந்தக் காலத்தில் அவர்கள் பல்வேறு சிரமங்களுக்கிடையில் தொகுத்துள்ள ஹதீஸ்களில் இது போன்ற சிறுதவறுகள் நிகழ்வது தவிர்க்க இயலாத ஒன்றே.*

*மற்ற அறிவிப்புகளுடன் ஒப்பிட்டு இதுபோன்ற சிறு தவறு களும் கண்டுபிடிக்கப்பட்டுவிடும். இதுதான் ஷாத் வகையாகும்.*

*ஷாத் வகையான ஹதீஸில் நம்பகமானவர் தவறு இழைத் துள்ளார் என்பதை நம் சொந்த யூகத்தை கொண்டோ, சுய*

*சிந்தனையைக் கொண்டோ முடிவு செய்வதில்லை. மாறாக வேறு நம்பகமானவர்கள் அறிவிக்கும் அறிவிப்புகளே இவர் தவறு செய்துள்ளார் என்று தீர்மானிக்கிறது.*

*ஹதீஸில் ஷாத் என்ற வகையை காரணம் காட்டி யாரும் நபி மொழிகளை இஷ்டத்திற்கு மறுக்க முடியாது. ஓர் ஆசிரியரிட மிருந்து அறிவிக்கும் பலருடைய தகவல்களில் எதை ஏற்பது என்பதோடு இந்தப் பிரச்னை நின்றுவிடும். ஷாத் ஹதீஸின் இந்த சுருங்கிய வடிவத்தைத் தாண்டி வேறு ஹதீஸ்களில் குழப்பம் செய்யும் நிலை இதில் நிச்சயம் வராது. இதை ஏற்பதால் ஹதீஸின் பாதுகாப்பிற்கு எந்த பாதிப்பும் இல்லை.*

*ஷாத் வகையான ஹதீஸ்களில் இன்னார்தான் தவறு இழைத் தார் என்று தவறு செய்தவர் முடிவு செய்யப்படுகிறார். மேலும் அந்த நம்பகமானவரைப் பொய்யர் என யாரும் சொல்லவில்லை.*

*ஷாத்தான அறிவிப்பில் வரும் நம்பகமானவர் அடிக்கடி மற்றவர் களுக்கு முரணாகவே அறிவித்திருந்தால், அப்போதுதான் இவர் நினை வாற்றல் சரியில்லாத பலவீனமானவர் என்று முடிவுசெய்யப்பட்டு இவரின் ஹதீஸ்கள் ஏற்றுக் கொள்ளப்படாது. எனவே, ஷாத் தொடர்பான விதியில் ஹதீஸின் நம்பகத்தன்மைக்கு எந்த பாதிப்பும் இல்லை. மாறாக இதன் மூலம் ஹதீஸ்கள் இன்னும் தெளிவாகப் பாதுகாக்கப்பட்டுள்ளன என்ற உணர்வே மக்களுக்கு ஏற்படுகிறது.*

*ஆனால், “நம்பகமானவர் அறிவித்தாலும் குர்ஆனுக்கு எங்கள் பார்வையில் முரண்பட்டால் அதை எல்லோரும் மறுக்க வேண்டும்” என்பது தனி மனிதச் சிந்தனையாகவே உள்ளது. இதற்கு ஆதாரமோ அஸ்திவாரமோ இல்லை. குர்ஆனைக் காரணம் காட்டி தலைக்கனமே தாண்டவமாடுகிறது.*

*இவ்வாறுதான், காதியானிகள், முஃதஸிலாக்கள், கவாரிஜ்கள், அஹ்லுல் குர்ஆன் எனத் தங்களைக் கூறிக் கொள்வோர் இன்னும் இவர்களைப் போன்ற வழிகேடர்களும் ஹதீஸ்களை மறுப்பதற்கு குர்ஆனை தங்களின் ஆயுதமாகப் பயன்படுத்திக் கொண்டார்கள்.*

*இது இவர்களின் இன்றைய புதிய கண்டுபிடிப்பல்ல. துணியின் சாயத்தை மாற்றிக் கொடுப்பது போன்று நாம் மேற்குறிப்பிட்டவர் களின் கருத்துக்கு மாற்றமில்லாமல் பெயரை மட்டுமே மாற்றி உள்ளார்கள்.*

*இந்தக் கூற்றின் மூலம் எந்த நபிமொழியையும், எத்தனை நபி மொழியாக இருந்தாலும், எப்போது வேண்டுமானாலும் குர்ஆனுக்கு முரண் எனக் கூறி யார் வேண்டுமானாலும் மறுக்கலாம். நபிவழிக்கு மாற்றமான சுய விளக்கத்தை குர்ஆனுக்கு கொடுத்து மக்களை வழி கெடுக்கலாம்.*

*பல ஹதீஸ்களை குர்ஆனுக்கு முரண் எனக் கூறி மறுத்துள்ள இவர்கள், நம்பகமானவர்களில் இன்னார்தான் தவறு செய்தார் என இதுவரை தீர்க்கமாக எதையுமே கூறவில்லை. யாரோ? எங்கோ? தவறு செய்திருக்கலாம் என தங்கள் யூகத்தையே கூறுகிறார்கள். மேலும், இதைத் தவறு என்று சொல்லாமல் கயவர்கள் இட்டுக் கட்டிய பொய் என்றும் நபித்தோழரின் பெயரை பயன்படுத்தி முனாஃபிக் எவனாவது இட்டுக்கட்டியிருப்பான் என்றும் கூறுகின்றனர்.*

*பொய் சொன்னவர் யார் என்பதைத் தெளிவுபடுத்தாமல் இவர்கள் இப்படி யூகமாகக் கூறித்திரிவது, ஹதீஸ்கள் பாதுகாக்கப்பட வில்லையோ, அல்லது அறிஞர்கள் அறிவிப்பாளர்களை ஆராய்ந்து, நம்பகமானவர் யார்? நம்பத் தகாதவர் யார் என்பதைச் சரியாக முடிவு செய்யவில்லையோ என்ற தவறான எண்ணத்தையே மக்களிடம் ஏற்படுத்தும்.*

*இவர்கள் ஏற்படுத்திய இந்தச் சந்தேகம் ஒட்டு மொத்த நம்பகமானவர்களையும் அவர்கள் அறிவித்த ஹதீஸ்களையும் நிராகரிக்கத் தூண்டுகிறது.*

*எனவே, ஷாத் வகை ஹதீஸை காரணம் காட்டி குர்ஆனுக்கு முரண்பட்டால், ஆதாரப்பூர்வமான ஹதீஸை மறுக்கலாம் என வாதிடுதல் அறிவுடைமையல்ல.*

## தனிநபரின் சிந்தனைக் கோளாறு

*நம் தமிழகத்தைப் பொறுத்தவரை, ஆதாரப்பூர்வமான பல ஹதீஸ்கள் குர்ஆனுக்கு முரண்படுகின்றன என்பது ஒரு தனி நபரின் சிந்தனைக் கோளாறுதான்.*

*இவரைப் போல சிந்தனைத் தடுமாற்றத்தில் உள்ளவர்களுக்கு சரியான விளக்கங்களை நமக்கு முன்சென்ற இஸ்லாமிய அறிஞர் களும், தற்காலத்தில் வாழ்ந்து கொண்டிருக்கும் இஸ்லாமிய அறிஞர்களும் தெளிவாகக் கொடுத்துள்ளார்கள். ஆனால்,*

*இவரைத் தங்கள் இமாமாக ஏற்று இருப்பவர்களுக்கோ, இன்றைய உலகில் இவரைத் தவிர யாருமே அறிஞர் இல்லை.*

*தலைவர் மாறினாலே தொண்டர்கள் நாம் மாறுவோம் என்ற கொள்கையில் மனதை இறுக்கிக் கொண்டவர்கள் இந்த விளக்கங்களை ஏற்பதில்லை. நபிமொழிகளை மறுத்தே ஆக வேண்டும் என்ற பிடிவாதத்தில்தான் உள்ளார்கள். இந்தப் பிடி வாதத்திற்கு பேர் கொள்கைப் பிடிப்பாம்! ஹதீஸ் மறுப்புக் கொள்கையில் இவர்களுடன் இருந்துவிட்டு யாராவது உண்மை நிலை விளங்கி, தவ்பா செய்து, ஹதீஸ்களை ஏற்றால், அவர் கொள்கையிலிருந்து தடம் புரண்டவராம்?! என்ன அற்புதமான விளக்கம்!*

*இன்று குர்ஆனுக்கு முரணானது என்று சொல்லப்படும் ஹதீஸ்கள் அனைத்தையும் முதலில் மறுத்தவர் ஒரு தனி நபரே! இன்ன இன்ன ஹதீஸ்கள் குர்ஆனுக்கு முரணாக உள்ளது. எனவே, இவற்றை மறுக்க வேண்டும் எனக் கூறி இவர்தான் முதலில் துவங்கிவைத்தார். இதைத் தொடர்ந்து இவரைப் பின் பற்றும் மற்ற அறிஞர்களும் தொண்டர்களும் ஹதீஸ் மறுப்புக் கொள்கைக்கு கொடி பிடிக்கத் தொடங்கிவிட்டார்கள்.*

*தலைவர் எதை மறுத்தாலும் நாங்களும் அதை மறுப்போம்! தலைவர் மறுக்காவிட்டால் நாங்களும் மறுக்க மாட்டோம்! அது ஹதீஸாக இருந்தாலும் சரியே.*

*தலைவர் ஒன்றை மறுப்பதற்கு முன்பு மற்ற அறிஞர்கள் யாரிடமும் ஆலோசனை செய்யமாட்டார். ஹதீஸை மறுப்பதற்கு முன்பு மற்ற அறிஞர்களிடமும் ஆலோசனை செய்துகொள்ளுங்கள் எனக் கூறுவோரை சந்தேகக் கண் கொண்டே பார்க்கிறார்கள். எவ்வளவுதான் சொன்னாலும் எதையும் கண்டு கொள்ளாமல், தன்னிச்சையாக ஒரு தனிநபரால் ஹதீஸ்கள் மறுக்கப்பட்டு, பிறகு அது ஒட்டுமொத்த ஜமாத்தின் நிலைபாடாக மாறிக் கொண்டு இருக்கிறது.*

*தலைவர் ஹதீஸ்களை குர்ஆனுக்கு முரண் என்று கூறி மறுப்பதற்கு முன்பு வரை அனைத்து அழைப்பாளர்களும் தங்களின் பயான்களில் அந்த நபிமொழியை கூறி மக்களுக்கு நன்றாக உபதேசம் செய்து கொண்டிருப்பார்கள். இந்நிலையில்தான் திடீரென அந்த ஹதீஸ் குர்ஆனுக்கு எதிராய் இருப்பதாக இந்த அறிஞர்கள் ஆன்லைன் பீஜே இணையதளத்தைப் பார்த்து தெரிந்துகொள்வார்கள்.*

ஹதீஸ்கள் தொகுக்கப்பட்டு ஆயிரம் ஆண்டுகளுக்கு மேல் கடந்திருக்கும் நிலையில் இஸ்லாமிய வரலாற்றில் இது வரை யாரும் மறுத்திடாத சில ஆதாரப்பூர்வமான ஹதீஸ்களை பீஜே என்னும் தனி நபர் மட்டுமே மறுத்து வருகிறார்.

இவரை விட குர்ஆன் அறிவும் மார்க்க சேவையும் செய்த இஸ்லாமிய அறிஞர்கள் பலர் உலகில் வாழ்ந்து சென்றிருக்கிறார்கள். இன்று குர்ஆனுக்கு முரண் என்று கூறி மறுக்கப்படும் ஹதீஸ்களை இந்த அறிஞர்களும் அறிந்தே வைத்திருந்தனர். ஆனால், இவர்களில் யாரும் இந்த ஹதீஸ்களை மறுக்கவில்லை. ஆதாரப்பூர்வமானது என்றே ஏற்றிருந்தனர்.

சொல்லப்போனால் இன்று ஹதீஸ்களை மறுப்பதற்கு இவர்கள் சொல்லும் பொய்யான காரணங்களுக்கு அன்றைக்கே சரியான விளக்கத்தை இந்த அறிஞர்கள் தங்கள் நூல்களில் அளித்துள்ளார்கள். இது போன்ற சிந்தனையுள்ளவர்களை பித்அத்வாதிகள் என்றும், வழிகேடர்கள் என்றும், நாத்திக சிந்தனையுள்ளவர்கள் என்றும், நபிமொழிக்கு எதிரானவர்கள் என்றும் தீர்ப்பு வழங்கியுள்ளனர்.

பீஜே இன்று வரை நூற்றுக்கணக்கான ஹதீஸ்களை குர்ஆனுக்கு முரண் என்று கூறி மறுத்துள்ளார். ஹதீஸ் மறுப்புக் கொள்கை இத்துடன் முடிவடையப்போவதில்லை. நாளுக்கு நாள் இதன் எண்ணிக்கை அதிகரித்துக் கொண்டே செல்கிறது.

அந்த நபர் குர்ஆனுக்கு முரண் என்று கூறி இன்னும் பல ஹதீஸ்களை நிலுவையில் வைத்துள்ளார். அவை எப்போது ரிலீசாகும் என்பதுதான் தெரியவில்லை. அல்லாஹ் பாதுகாக்க வேண்டும்.

## அழிவின் ஆரம்பம்

இறைத்தூதர்(ஸல்) அவர்களின் சொல்லுக்கு எதிராக கேள்விகளை அடுக்கி அதைக் கேலி கிண்டல் செய்வதையும் தன் அறிவைக் கொண்டு அதனுடன் முரண்படுவதையும் நபி(ஸல்) வன்மையாகக் கண்டித்துள்ளார்கள்.

நான் உங்களை எந்நிலையில் விட்டுள்ளேனோ அதே நிலையில் என்னை நீங்கள் விட்டுவிடுங்கள். ஏனென்றால், உங்களுக்கு முன்னுள்ளவர்கள் தங்களின் நபிமார்களிடம் அதிகமாகக் கேள்வி

*கேட்டதாலும் நபிமார்களுடன் முரண்பட்டதாலுமே அழிந்து போனார்கள்.*

***அறிவித்தவர்: அபூ ஹுரைரா(ரலி), நூல்: முஸ்லிம் 2380***

*குர்ஆனும் நபிமொழியும் இறைச் செய்தியாகும். இவற்றில் ஒன்றை மற்றொன்றுடன் மோதவிட்டு ஒன்றை ஏற்று மற்றதை நிராகரிப்பது அழிவின் அடையாளமாகும்.*

*ஒரு கூட்டத்தார் தர்க்கம் செய்து கொண்டிருந்தனர். இறைத்தூதர்(ஸல்) இதைச் செவியுற்றபோது உங்களுக்கு முன்பு இருந்தவர்கள் இதனாலே அழிந்துபோனார்கள். அல்லாஹ்வின் வேதத்தில் சிலவற்றை சிலவற்றுடன் மோதவிட்டனர். அல்லாஹ்வின் வேதத்தில் ஒரு வசனம் மற்ற வசனங்களை உண்மைப்படுத்தும் வகையிலேயே இறங்கியுள்ளது. எனவே, அவற்றில் ஒன்றைக் கொண்டு மற்றொன்றை நீங்கள் மறுத்துவிட வேண்டாம். அல்லாஹ்வின் வேதத்தில் எதைப்பற்றிய அறிவு உங்களிடம் உள்ளதோ அதைப் பற்றி பேசுங்கள். உங்களுக்குத் தெரியாத விஷயத்தை அதை அறிந்தவரிடம் ஒப்படைத்துவிடுங்கள்.*

***அறிவித்தவர்: அப்துல்லாஹ் இப்னு அம்ர் இப்னி அல்ஆஸ்(ரலி) நூல்: அஹ்மத் 6453***

## வழிகேடர்களின் அணுகுமுறை

*குர்ஆன் மிக உயர்ந்த இலக்கியத் தரத்தில் அமைந்துள்ளது. அதன் ஒவ்வொரு சொல்லும் பல அர்த்தங்களை தரக்கூடிய வகையில் பொதுவாக அமைந்துள்ளது. ஒரு வசனத்தின் சரியான பொருளை விளங்குவதற்கு, அதன் முன் பின் வாசகங்கள், மையக் கருத்து, குர்ஆனின் பிற வசனங்களில் சொல்லப்பட்ட தகவல்கள் மற்றும் நபிமொழியில் கூறப்பட்ட விளக்கம் ஆகியவற்றை கவனத்தில் கொண்டால்தான் மிகச் சரியாக எளிதில் புரிய முடியும்.*

*ஆனால், வழிகேடர்கள் குர்ஆனின் இந்த நடையை தங்களுக்கு சாதகமாக பயன்படுத்திக்கொண்டு தங்களின் சுயக்கருத்திற்கு ஏற்றவாறு குர்ஆனுக்கு விளக்கம் தந்து வருகிறார்கள். குர்ஆனை மறுக்க முடியாது என்பதால் குர்ஆனுக்கு சுயவிளக்கம் கொடுத்து அதன் உண்மையான பொருளை மாற்றி மக்களிடம் கூறி வருகிறார்கள்.*

*நபிமொழிகளே குர்ஆனுக்கு விளக்கமாக உள்ளன. நபிமொழிகளைப் பொறுத்தவரை சுய விளக்கம் கொடுக்க முடியாத*

வகையில் பளிச்சென்று பொருள் தரக்கூடியவையாக உள்ளன. குர்ஆனில் செய்தது போல நபிமொழிகளிலும் சுயவிளக்கம் கொடுக்க முடியுமானால் அதற்கும் இவர்கள் முயல்வார்கள்.

நபிமொழிகள் சுயவிளக்கம் கொடுக்க முடியாத வகையில் இருக்கும் பட்சத்தில், குர்ஆனுக்கு முரண்படுகிறது எனக் கூறி நபி மொழியை வழிகேடர்கள் மறுப்பார்கள்.

இஸ்லாமிய வரலாற்றில் தோன்றிய அனைத்து வழிகெட்ட கூட்டங்களுக்கும் நபிமொழிகள் எதிராக இருந்தன. நபிமொழிகளை ஒழித்தாலே நாம் ஏற்படுத்திவரும் புதுக்குழப்பத்தை மக்களிடம் விதைக்க முடியும் என அவர்கள் நினைத்தார்கள். பொத்தாம் பொதுவாக நபிமொழிகளை ஏற்கக் கூடாது என்றால் மக்கள் அதை ஏற்கமாட்டார்கள். எனவே, குர்ஆனுக்கு முரண் எனக் கூறி மக்களை ஏமாற்றி தங்களின் சுய கருத்துக்களை இஸ்லாம் என்ற பெயரில் மக்களிடம் போதித்து வந்தார்கள். இதுவே வழிகெட்ட அனைத்து கூட்டத்தின் வழிமுறையாக இருந்துவந்தது.

எனவேதான், ஆதாரப்பூர்வமான நபிமொழிகளை மறுப்பவர்கள் விஷயத்தில் இஸ்லாமிய அறிஞர்கள் கடுமையான விமர்சனங்களை செய்துள்ளார்கள். ஒரு சில அறிஞர்களின் கூற்றுக்களை மட்டும் இங்கே பதிவு செய்கிறோம். இது குறித்து இமாம் அஹ்மது(ரஹ்) கூறியதைப் பாருங்கள்.

## இமாம் அஹ்மது இப்னு ஹம்பல்(ரஹ்)

**أصول السنة لأحمد بن حنبل (1 / 14):**

**وَالسّنة تفسر الْقُرْآن وَهِي دَلَائِل الْقُرْآن وَلَيْسَ فِي السّنة قِيَاس وَلَا تضرب لَهَا الْأَمْثَال وَلَا تدْرك بالعقول وَلَا الْأَهْوَاء إِنَّمَا هُوَ الإتباع وَترك الْهوى .....وَإِنَّمَا عَلَيْهِ الْإِيمَان بهَا وَأَن لَا يرد مِنْهَا حرفا وَاحِد وَغَيرهَا من الْأَحَادِيث المأثورات عَن الثِّقَات وَأَن لَا يُخَاصم أحدا وَلَا يناظره وَلَا يتَعَلَّم الْجِدَال فَإِن الْكَلَام فِي الْقدر والرؤية وَالْقُرْآن وَغَيرهَا من السّنَن مَكْرُوه ومنهي عَنهُ لَا يكون صَاحبه وَإِن أصَاب بِكَلَامِهِ السّنة من أهل السّنة حَتَّى يدع الْجِدَال ويؤمن بالآثار**

நபிமொழிகளே குர்ஆனைத் தெளிவுபடுத்தும். அவையே குர்ஆனின் ஆதாரங்கள். அறிவைக் கொண்டோ மனோஇச்சையைக் கொண்டோ நபிமொழியை அணுகக் கூடாது. மனோஇச்சையை

*தூக்கி எறிந்துவிட்டு ஹதீஸ்களைப் பின்பற்றுவதே சுன்னாவாகும்.*

*மேலும், நபிமொழிகளை அப்படியே நம்பவேண்டும். நம்பக மானவர்கள் வழியாக வந்த ஹதீஸ்களில் ஓர் எழுத்தைக்கூட மறுக்கக் கூடாது... ஹதீஸ்களில் தர்க்கம் செய்வதைத் தவிர்த்து ஹதீஸ்களை நம்பக்கூடியவரே அஹ்லுஸ் சுன்னாவைச் சார்ந்தவர் ஆவார்" என இமாம் அஹ்மது இப்னு ஹம்பல்(ரஹ்) கூறினார்கள்.*

***நூல்: உசூலுஸ் சுன்னா (பாகம் 1 பக்கம் 14)***

**شرح أصول اعتقاد أهل السنة والجماعة للالكائي – موافق (ص: 430)**

**733 – وأخبرنا أحمد أخبرنا عمر نا أحمد بن محمد بن إسماعيل قال ثنا الفضل بن زياد قال**

**سمعت أبا عبد الله أحمد بن حنبل يقول من رد حديث رسول الله فهو علي سفا هلكه**

*"இறைத்தூதர்(ஸல்) அவர்களின் ஹதீஸை மறுக்கிறவன் அழிவின் விழிம்பின் இருக்கிறான்" என அஹ்மது இப்னு ஹம்பல் (ரஹ்) கூறினார்கள்.*

***நூல்: ஷரஹு இஃதிகாதி அஹ்லிஸ் சுன்னா வல்ஜமாஆ பக்கம் 430***

## *இமாம் அபூ ஜஃபர் தஹாவீ(ரஹ்)*

**شرح العقيدة الطحاوية ـــ تح أحمد شاكر (ص: 228)**

**قوله:"وَجَمِيعُ مَا صَحَّ عَنْ رَسُولِ الله صلى الله عليه وَسَلَّمَ مِنَ الشَّرْعِ وَالْبَيَانِ كله حَقٌّ".**

**ـوَطَرِيقُ أَهْلِ السنة: أَنْ لَا يَعْدِلُوا عَنِ النَّصِّ الصَّحِيحِ، وَلَا يُعَارِضُوه بِمَعْقُولٍ، وَلَا قَوْلِ فُلَانٍ، كَمَا أَشَارَ إليه الشَّيْخُ رحمه الله.**

*"இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து ஆதாரப்பூர்வமான அடிப்படையில் வந்த அனைத்து விளக்கங்களும் சட்டங்களும் உண்மையாகும்.*

*ஆதாரப்பூர்வமான ஹதீஸை புறக்கணிக்காமல் இருப்பதும் அறிவைக் கொண்டோ இன்னாரின் சொல்லைக் கொண்டோ ஹதீசுடன் மோதாமல் இருப்பதும் அஹ்லுஸ் சுன்னாவினரின் வழி முறையாகும்" என இமாம் அபூ ஜஃபர் தஹாவீ(ரஹ்) கூறினார்கள்.*

***நூல்: ஷரஹுல் அகீதா தஹவியா (பக்கம் 228)***

## இமாம் ஷாஃபியீ(ரஹ்)

**مفتاح الجنة (ص: 5) السيوطي**

**فاعلموا رحمكم الله أن من أنكر كون حديث النبي صلى الله عليه و سلم قولا كان أو فعلا بشرطه المعروف في الأصول حجة كفر وخرج عن دائرة الإسلام وحشر مع اليهود والنصارى أو مع من شاء الله من فرق الكفرة روى الإمام الشافعي رضي الله عنه يوما حديثا وقال إنه صحيح فقال له قائل أتقول به بيا أبا عبد الله فاضطرب وقال يا هذا أريتني نصرانيا أرأيتني خارجا من كنيسة أرأيت في وسطي زنارا أروي حديثا عن رسول الله صلى الله عليه و سلم ولا أقول به**

*"ஆதாரப்பூர்வமான ஹதீஸ்களுக்குரிய நிபந்தனைகளுக்கு உட்பட்டு வரும் நபிமொழியை அது இறைத்தூதர்(ஸல்) அவர்களின் சொல்லாக இருந்தாலும், செயலாக இருந்தாலும் அவை ஆதாரம் இல்லை என மறுப்பவன் காஃபிராகிவிட்டான். அவன் இஸ்லாமிய வட்டத்தை விட்டு வெளியேறிவிட்டான். அவன் யூதர்களுடனும், கிறிஸ்தவர்களுடனும் அல்லது அல்லாஹ் நாடிய காஃபிரான கூட்டங்களுடன் எழுப்பப்படுவான் என்பதை அறிந்துகொள்ளுங்கள்" என இமாம் சுயூத்தி கூறினார்கள்.*

*ஒரு நாள் இமாம் ஷாஃபியீ(ரஹ்) ஒரு ஹதீஸை அறிவித்து, "இது ஆதாரப்பூர்வமானது" எனக் கூறினார்கள். அப்போது அவரிடம் ஒருவர், "அபூ அப்தில்லாஹ் அவர்களே இதையா கூறுகிறீர்கள்?" எனக் கேட்டார்.*

*இமாம் ஷாஃபியீ(ரஹ்) திடுக்கிட்டார்கள். "இன்னாரே! இறைத் தூதர்(ஸல்) கூறினார்கள் என நான் ஹதீஸை அறிவித்து, அதை ஏற்காமல் இருக்கும் கிறிஸ்தவன் என நீ என்னை நினைக்கிறாயா? நான் கிறித்துவ ஆலயத்திலிருந்து வெளியே வந்தவன் என நினைக்கிறாயா?" எனக் கேட்டார்கள்.* ***நூல்: மிஃப்தாஹுல் ஜன்னா (பாக்கம் 5)***

## இமாம் இப்னு தைமியா(ரஹ்)

*குர்ஆனுக்கு முரண் என்று கூறி ஆதாரப்பூர்வமான ஹதீஸ்களை மறுப்பது வழிகேடர்களின் வழிமுறை என்று இமாம் இப்னு தைமியா(ரஹ்) கூறினார்கள்.*

لمسودة في أصول الفقه ــ ط المدني (ص: 11)

واما منع الا كتفاء بها وحدها مع معارضة السنة والاجماع كما هو طريقة كثير مـــن أهـــل الكلام والرأي أنهم يدفعون السنة والاثر بمخالفة ظاهر القرآن ولهذا صنف رسالته المشهورة فى الرد على من اتبع الظاهر وان خالف السنة والاثر وهذا المعنى لا ريب أنـــه أراده فانـــه كثير فى كلامه وقد قصد اليه بوضع كتاب

*தர்க்கம் மற்றும் சுய சிந்தனை ரீதியில் மார்க்கத்தை அணுகுப வர்களே, நபிவழியையும், நபிமொழிகளையும் குர்ஆனுக்கு முரண்படுகிறது எனக் கூறி மறுப்பார்கள்" என இமாம் இப்னு தைமியா(ரஹ்) கூறினார்கள்.*

***நூல்: அல்முசவ்வதா (பக்கம் 11) (3/ 355)***

مجموع الفتاوى (3/ 355)

وَإِذَا عُرِفَ أَصْلُ الْبِدَعِ فَأَصْلُ قَوْلِ الْخَوَارِجِ أَنَّهُمْ يُكَفِّرُونَ بِالذَّنْبِ ، وَيَعْتَقِدُونَ ذَنْبًا مَا لَيْسَ بِذَنْبِ ، وَيَرَوْنَ اتِّبَاعَ الْكِتَابِ دُونَ السُّنَّةِ الَّتِي تُخَالِفُ ظَاهِرَ الْكِتَابِ – وَإِنْ كَانَتْ مُتَـــوَاتِرَةً – وَيُكَفِّرُونَ مَنْ خَالَفَهُمْ وَيَسْتَحِلُّونَ مِنْهُ لِارْتِدَادِهِ عِنْدَهُمْ مَا لَا يَسْتَحِلُّونَهُ مِنْ الْكَافِرِ الْأَصْلِيِّ كَمَا قَالَ النَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ فِيهِمْ { يَقْتُلُونَ أَهْلَ الْإِسْلَامِ وَيَدَعُونَ أَهْـــلَ الْأَوْثَـــانِ } وَلِهَذَا كَفَّرُوا عُثْمَانَ وَعَلِيًّا وَشِيعَتَهُمَا ؛ وَكَفَّرُوا أَهْلَ صفين – الطَّائِفَتَيْنِ – فِي نَحْوِ ذَلِكَ مِنْ الْمَقَالَاتِ الْخَبِيثَةِ .

*கவாரிஜ்கள் தவறுசெய்பவர்களை காஃபிர்கள் எனக் கூறு வார்கள். பாவமாக இல்லாத விஷயத்தை இவர்களாகப் பாவம் என எண்ணிக்கொள்வார்கள். மேலோட்டமாகக் குர்ஆனுக்கு முரண்படுவது போன்று தெரியும் நபிமொழியை புறக்கணித்து குர்ஆனை பின்பற்றுவதாகக் கருதிக் கொள்வார்கள். இவர்கள் மறுக்கும் அந்த நபிமொழி முதவாதிர் என்ற (உயர்ந்த) நிலையில் இருந் தாலும் சரியே. இதுவே கவாரிஜ்கள் செய்த பித்அத்தின் அடிப் படையாகும்" என இமாம் இப்னு தைமியா(ரஹ்) கூறினார்கள்.*

***நூல்: மஜ்மூஉல் ஃபதாவா பாகம்: 3 பக்கம்: 355***

## *இமாம் அல்பானீ(ரஹ்)*

*நபிமொழிகளைப் புறக்கணிப்பது வழிகேடர்களின் வழிமுறை என இமாம் அல்பானீ(ரஹ்) கூறியுள்ளார்கள்.*

موسوعة الألباني في العقيدة (١ / ٣٠١):

"أهل البدع أجمع أضربوا عن السنن ،وتأولوا الكتاب على غير ما بينت السنة ، فضلوا وأضلوا .نعوذ بالله من الخذلان ،ونسأله التوفيق والعصمة."

*பித்அத்வாதிகள் அனைவரும் நபிமொழிகளை புறக்கணிப் பார்கள். நபிமொழி கூறும் விளக்கத்திற்கு எதிராகக் குர்ஆனுக்கு விளக்கம் கொடுப்பார்கள். இதனால் அவர்களும் வழிகெட்டு மற்றவர்களையும் வழிகெடுப்பார்கள். இந்த மோசடியிலிருந்து அல்லாஹ்விடம் நாம் பாதுகாப்புத் தேடுகிறோம்.*

***நூல்: மவ்சூஅதுல் அல்பானீ ஃபில் அகீதா (பாகம் 1 பக்கம் 301)***

## *இமாம் அபூ பக்ர் கல்லால்(ரஹ்)*

*ஹிஜ்ரீ இரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த இமாம் அபூ பக்ர் கல்லால்(ரஹ்) அவர்களும் இந்த விஷயத்தை சுட்டிக்காட்டி உள்ளார்கள்.*

كتاب السنة للخلال كاملا موافقا للمطبوع (4/ 23)

, مَعَ آيٍ كَثِيرٍ يَطُولُ بِهِ الْكِتَابُ , وَإِنَّمَا اسْتَعْمَلَتِ الأُمَّةُ السُّنَّةَ مِنَ النَّبِيِّ عَلَيْهِ السَّلاَمُ وَمِنْ أَصْحَابِهِ , إِلاَّ مَنْ دَفَعَ ذَلِكَ مِنْ أَهْلِ الْبِدَعِ وَالْخَوَارِجِ وَمَا يُشْبِهُهُمْ , فَقَدْ رَأَيْتَ إِلَى مَا قَدْ خَرَجُوا.

*“இஸ்லாமிய சமுதாயம் நபிமொழியை இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்தும், அவர்களின் தோழர்களிடமிருந்தும் பெற்று செயல்பட்டுக் கொண்டிருக்கிறது. ஆனால், கவாரிஜ்கள் இன்னும் இவர்களைப் போன்ற பித்அத்வாதிகளே இதை மறுத்தனர். இதனால் இவர்கள் எத்திசையில் சென்றுவிட்டார்கள் என்பதை நீர் பார்க்கிறாய்” என இமாம் அபூ பக்ர் கல்லால்(ரஹ்) கூறினார்கள்.*

***நூல்: அஸ்ஸுன்னா (பாகம் 4 பக்கம் 23)***

## *அறிஞர் பர்பஹாரீ(ரஹ்)*

*குர்ஆனையும் சுன்னாவையும் தம் வாழ்வில் அடிப்படை யாகக் கொண்டு வாழ்ந்த சிறந்த அறிஞர் இமாம் பர்பஹாரீ(ரஹ்) கூறு வதைப் பாருங்கள். இவர் ஹிஜ்ரீ 329 வருடத்தில் மரணித்தார்.*

شرح السنة – البربهاري (ص: 51)

**105** – وإذا سمعت الرجل يطعن على الآثار أو يرد الآثار أو يريد غير الآثار فاتهمه على الإسلام ولا تشك أنه صاحب هوى مبتدع

*"ஒருவன் ஹதீஸ்களில் குறைகூறுவதையோ, ஹதீஸ்களை மறுத்துவிட்டு வேறு வழியைத் தேடுவதையோ நீ கண்டால் அவன் இஸ்லாமிற்கு எதிரானவன் என்பதைப் புரிந்துகொள். அவன் மனோஇச்சையுள்ள பித்அத்வாதி என்பதில் நீ சந்தேகப்படாதே" என அறிஞர் பர்பஹாரீ(ரஹ்) கூறினார்கள்.*

***நூல்: ஷரஹுஸ் சுன்னா (பக்கம் 51)***

شرح السنة – البربهاري (ص: 35)

**49** – وإذا سمعت الرجل يطعن على الآثار ولا يقبلها أو ينكر شيئا من أخبار رسول الله صلى الله عليه و سلم فاتهمه على الإسلام فإنه رجل رديء المذهب والقول ولا يطعن على رسول الله صلى الله عليه و سلم ولا على أصحابه لأنا إنما عرفنا الله وعرفنا رسوله وعرفنا القرآن وعرفنا الخير والشر والدنيا والآخرة بالآثار فإن القرآن أحوج إلى السنة من السنة إلى القرآن

*ஒருவன் ஹதீஸ்களில் குறைசொல்லி அதைக் ஏற்றுக் கொள்ளாமல் இருந்தாலோ, இறைத்தூதர்(ஸல்) அவர்களின் ஹதீஸ்களில் சிலவற்றை அவன் மறுத்தாலோ அவன் இஸ்லாமிற்கு எதிரானவன் என்பதைத் தீர்மானித்துக்கொள்; அவன் மட்டமான கருத்து மற்றும் கொள்கையும் உடையவன். அவன் அல்லாஹ்வின் தூதரையும் அவனுடைய தோழர்களையுமே குறைகூறுகிறான். ஏனென்றால், நாம் அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும், குர்ஆனையும், நன்மை, தீமை, இவ்வுலகம், மறுமை முதலிய அனைத்தையும் ஹதீஸ்களின் துணை கொண்டே அறிந்து கொண் டோம். நபிமொழிகள் குர்ஆனின் பால் தேவையுடையதாக இருப்பதை விட குர்ஆனே நபிமொழிகளின் பால் அதிக தேவை உடையதாக இருக்கிறது" என அறிஞர் பர்பஹாரீ(ரஹ்) கூறினார்கள்.*

***நூல்: ஷரஹுஸ் சுன்னா: பக்கம் 35***

## *அறிஞர் இப்னு ஷாக்லா(ரஹ்)*

*ஹிஜ்ரீ 4-ம் நூற்றாண்டில் வாழ்ந்து பல இமாம்களை உரு வாக்கிய அறிஞர் இப்னு ஷாக்லா(ரஹ்) கூறுவதைப் பாருங்கள்.*

**مناظرة ابن شاقلا الحنبلي (ص: 22)**

**ثم قلت له : ومن خالف الأخبار التي نقلها العدل عن العدل، موصولة بلا قطع في سندها، ولا جرح في ناقليها، وتجرأ على ردها فقد تهجم على رد الإسلام، لأن الإسلام وأحكامه منقولة إلينا بمثل ما ذكرت**

*“அறிவிப்பாளர் தொடரில் எந்த முறிவுமின்றி, அறிவிப் பாளர்களிலும் எந்த குறையுமின்றி ஒரு நம்பகமானவர் மற்ற நம்பக மானவரிடமிருந்து பெற்ற ஹதீஸ்களை மறுப்பதற்கு ஒருவன் துணிந்தால் அவன் இஸ்லாமை மறுப்பதற்கே துணிந்துள்ளான். ஏனென்றால், இஸ்லாமும் அதன் சட்டங்களும் நான் முன்பு சொன்ன அடிப்படையில்தான் நமக்கு கிடைத்துள்ளது” என அறிஞர் இப்னு ஷாக்லா(ரஹ்) கூறினார்கள்.*

**நூல்: முனாளரது இப்னி ஷாக்லா, பாகம் 22**

*காதியானிகள் ஒட்டுமொத்தமாக ஹதீஸ்களை மறுக்க மாட்டார்கள். அவர்களின் வழிகேட்டிற்கு எதிராக வரும் ஹதீஸ்களை மட்டும் அவை அறிவிப்பாளர் தொடர் சரியாக இருந்தாலும் மறுக்க வேண்டும் என்பதில் உறுதியாக இருப்பார்கள்.*

*ஈஸா(அலை) இன்னும் மரணிக்கவில்லை என்ற கருத்து குர்ஆனில் கூறப்பட்டாலும் காதியானிகள் அதன் பொருளை மாற்றி வியாக்கியானம் கொடுத்து ஈஸா(அலை) மரணித்து விட்டார்கள் என குர்ஆன் கூறுவதாகத் திரித்துக்கூறுவார்கள்.*

*ஈஸா(அலை) மரணிக்கவில்லை. யுக முடிவு நாள் நெருக்கத்தில் இந்த உலகத்திற்கு வருகை தருவார்கள் என ஆதாரப்பூர்வமான ஹதீஸ்கள் கூறுகின்றன. இந்த நபிமொழிகளில் இவர்களின் தில்லுமுல்லு செல்லுபடியாகாது என்பதால் இந்த ஹதீஸ்கள் அனைத்தும் குர்ஆனுக்கு எதிராக உள்ளது. எனவே, இவற்றை ஏற்கக் கூடாது எனக் கூறுவார்கள். வெறும் குர்ஆன் வசனங்களை மட்டும் வைத்து நம்முடன் தர்க்கம் செய்துகொண்டே இருப்பார்கள்.*

*முஹம்மத்(ஸல்) அவர்களுக்குப் பிறகு யாரும் நபியாகவோ தூதராகவோ வர முடியாது என்ற கருத்து குர்ஆனில் கூறப் பட்டாலும் காதியானிகள் வசனங்களுக்கு சுய விளக்கங்களைக் கொடுத்து இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்குப் பிறகு வேறொரு நபி வரமுடியும் என குர்ஆன் கூறுவதாக வாதிடுவார்கள்.*

ஆனால், ஹதீஸ்களில் முஹம்மத்(ஸல்) அவர்களுக்குப் பிறகு எந்த நபியும் எந்தத் தூதரும் வர முடியாது எனத் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. ஆனால், இந்த ஹதீஸ்கள் அனைத்தும் குர்ஆனுடன் முரண்படுகிறது; எனவே, இவற்றை ஏற்கக்கூடாது எனக் கூறி குர்ஆனை வைத்து தங்களின் குஃப்ரான கொள்கையை நிலைநாட்டவே காதியானிகள் முயற்சிக்கிறார்கள்.

ஏன் குர்ஆனை மட்டுமே கடைபிடிக்க வேண்டும் எனக் கூறும் அஹ்லுல் குர்ஆன்(?) கூட்டத்தார் ஹதீஸ்களை ஏற்றுக் கொள்வது குர்ஆனுக்கு முரணானது என்றே கூறுகின்றனர். இவர்களும் தங்களின் வழிகேட்டிற்கு குர்ஆன் வசனங்களைத்தான் ஆதாரம் காட்டுகின்றனர்.

அல்லாஹ் அனைவருக்கும் ஒரே மாதிரியான சிந்திக்கும் ஆற்றலை வழங்கவில்லை. ஒவ்வொருவரின் சிந்தனைப் போக்கும் வெவ்வேறாக உள்ளது. வழிகேடர்கள் குர்ஆனை தவறாக சிந்தித்துவிட்டு குர்ஆனுக்கு விளக்கமாக வரும் நபிமொழிகளை குர்ஆனுக்கு முரண் எனக் கூறி நிராகரிக்கிறார்கள். நபிமொழிகள் தங்களுக்கு எதிராக வரும்போது வழிகேடர்கள் கையில் எடுக்கும் ஆயுதமே குர்ஆனுக்கு முரண் என்னும் போலித்தனமான வாதம்.

இஸ்லாமிய வரலாற்றில், கவாரிஜ்கள், ஜஹ்மியாக்கள், முஃதஸிலாக்கள் போன்ற வழிகேடர்கள் முஸ்லிம்களுடன் முரண்பட்டே வழிகெட்ட கூட்டமாக பிரிந்து சென்றனர். இவர்கள் அனைவரின் துவக்கமும் முரண்பட்டதில்தான் தொடங்கியது.

இவர்கள் தங்களின் வழிகேட்டிற்கு குர்ஆனையே ஆதாரமாக காட்டினார்கள். அனைத்து ஹதீஸ்களையும் மறுக்க வேண்டும் என்பது இவர்களில் அநேகரின் கொள்கை இல்லை. ஆனால், இவர்களுக்கு எதிராக நபிமொழி இடம் பெறும்போது மட்டுமே குர்ஆனுக்கு முரண்படுகிறது எனக் கூறி நபிமொழிகளை மறுத்து வந்தனர்.

## கவாரிஜ்களின் சிந்தனை

இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்குப் பிறகு தோன்றிய வழி கெட்ட ஒரு கூட்டம்தான் கவாரிஜ்கள் ஆவார். இவர்கள் குர்ஆன் வசனத்தைக் காட்டி தவறான ஒரு சட்டத்தைக் கூறுவார்கள். அதை ஏற்றுக்கொள்ளாத முஸ்லிம்களை காஃபிர்கள் எனத் தீர்ப்பும்

*அளிப்பார்கள். அலீ(ரலி) இவர்களின் சிந்தனைக்கு உடன்படாத காரணத்தால் அலீ(ரலி) அவர்களையும் காஃபிர் எனக் கூறினார்கள்.*

*குர்ஆனுக்கு முரண்படுகிறது எனக் கூறி ஹதீஸ்களை மறுப்பதும், ஒட்டுமொத்தமாக நபிமொழிகளை புறக்கணிப்பதும் கவாரிஜ்களிடம் நிறையவே இருந்தது. இதை பின்வரும் சம்பவத்தின் மூலம் அறியலாம்.*

*யஸீத் அல் ஃபகீர்(ரஹ்) கூறினார்.*

*காரிஜிய்யாக்களின் கொள்கைகளில் ஒன்று என் உள்ளத்தில் உறுத்திக் கொண்டே இருந்தது. இந்நிலையில் பெரும் எண்ணிக்கை கொண்ட ஒரு குழுவாக நாங்கள் ஹஜ் செய்துவிட்டுப் பிறகு (காரிஜிய்யாக்களின் அக்கொள்கை குறித்து விவாதிக்க) மக்களிடம் புறப்பட்டுச் செல்லத் தீர்மானித்தோம். அப்(பயணத்தின்)போது நாங்கள் மதீனாவைக் கடந்துசென்றோம். அங்கு ஒரு தூண் அருகில் ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அமர்ந்துகொண்டு மக்களுக்கு இறைத்தூதர்(ஸல்) கூறிய செய்திகளைச் சொல்லிக் கொண்டிருந்தார்கள். அப்போது, "நரகத்திலிருந்து விடுதலை பெறுவோர்' பற்றியும் அவர்கள் குறிப்பிட்டார்கள்.*

*"நபித்தோழரே! நீங்கள் இவ்வாறு கூறுகிறீர்கள்? அல்லாஹ்வோ, "நீ எவரை நரக நெருப்பில் புகுத்துகிறாயோ அவரை நிச்சயமாக நீ இழிவாக்கிவிட்டாய்" (3:192) என்றும், "அவர்கள் அ(ந்த நரகத்)திலிருந்து வெளியேற நாடும் போதெல்லாம், அதிலேயே மீண்டும் தள்ளப்படுவார்கள்" (32:20) என்றும் கூறுகிறானே? ஆனால், நீங்களோ வேறுவிதமாகச் சொல்லிக் கொண்டிருக்கிறீர்களே?" எனக் கேட்டேன்.*

*"நீங்கள் குர்ஆனை ஓதிவருபவர்தாமே?" என ஜாபிர்(ரலி) கேட்டார்.*

*"ஆம்' என நான் கூறினேன்.*

*"அவ்வாறாயின், நீங்கள் முஹம்மத்(ஸல்) அவர்களின் உயர் தகுதியைப் பற்றி -அதாவது நபியவர்களை அல்லாஹ் ("மகாமு மஹ்மூத்' எனும் உயர் இடத்திற்கு) அனுப்புவானே அதைப் பற்றி- கேள்விப்பட்டிருக்கிறீர்களா?" என அவர்கள் கேட்டார்கள்.*

*"ஆம்' என நான் கூறினேன்.*

*"அந்த "மகாமு மஹ்மூத்' எனும் உயர் இடத்தில் இருந்து கொண்டுதான் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் மூலம் அல்லாஹ்*

*சிலரை (நரகத்திலிருந்து) வெளியேற்றுவான்'' என அவர்கள் கூறினார்கள்.*

*பின்னர் “ஸிராத்' எனும் பாலம் அமைக்கப்படுவது பற்றியும் அதைக் கடந்து மக்கள் செல்வது பற்றியும் விவரித்தார்கள். மேலும், “இதை நான் நினைவில் கொள்ளாதவனாக ஆகிவிடுவேனோ என அஞ்சுகிறேன்” என்றும் குறிப்பிட்டார்கள்.*

*மேலும், “ஆயினும், சிலர் நரகத்திலிருந்த பின் அங்கிருந்து வெளியேறுவார்கள்- அதாவது எள்ளுச் செடியின் குச்சிகளைப் போன்று (கரிய நிறத்தில் கருகி) வெளியேறுவார்கள். பிறகு சொர்க்க நதிகளில் ஒன்றில் நீராடுவார்கள். அதையடுத்து வெள்ளைத் தாள்களைப் போன்று (புதுப் பொலிவுடன்) வெளியேறுவார்கள்” எனக் கூறினார்கள்.*

*“(காரிஜிய்யாக்களே!) உங்களுக்கு நாசம் உண்டாகட்டும். இந்த மூதறிஞர் இறைத்தூதர்(ஸல்) மீது பொய்யுரைக்கிறார் என்றா நீங்கள் கருதுகிறீர்கள்?'' என நாங்கள் சொல்லிக் கொண்டே (அங்கிருந்து) திரும்பினோம்.*

*அல்லாஹ்வின் மீது ஆணையாக! (பரிந்துரையும் நரக விடுதலையும் உண்டு எனும் சரியான கொள்கையில் இருந்து) விலகிவிடாத நிலையில் நாங்கள் திரும்பினோம்; எங்களில் ஒரேயொரு மனிதரைத் தவிர.* ***நூல்: முஸ்லிம் 320***

*மறுமையில் நரகவாசிகளுக்கு இறைத்தூதர்(ஸல்) பரிந்துரை செய்வார்கள். சில இறைநம்பிக்கையாளர்கள் தாங்கள் செய்த பாவத்திற்கு நரகத்தில் தண்டனையை அனுபவித்த பிறகு நரகத்திலிருந்து விடுவிக்கப்பட்டு சொர்க்கத்தில் புகுத்தப் படுவார்கள் என பல ஹதீஸ்கள் கூறுகின்றன.*

*ஆனால், காவாரிஜ்கள் சம்பந்தமில்லாத குர்ஆன் வசனத்தைக் காட்டி இந்தக் கருத்து குர்ஆனுடன் மோதுகிறது என்று கூறி ஹதீஸ்களை மறுத்து வந்தனர். இந்த வழிகெட்ட சிந்தனை நபித்தோழர்கள் வாழ்ந்த காலத்திலேயே ஆரம்பித்துவிட்டது என்பதை இந்த சம்பவம் உணர்த்துகிறது.*

## ***ஜஹ்மியாக்களின் சிந்தனை***

*ஜஹ்ம் இப்னு ஸஃப்வான் என்பவன் ஜஹ்மிய்யா கொள் கையை உருவாக்கியவன். இவன் புத்திக் கூர்மை உள்ளவனாகவும்*

தர்க்கக்கலையில் பெரும் ஆற்றல் உள்ளவனாகவும் இருந்தான். ஆனால், இவனுடைய அறிவும் தர்க்க ஆற்றலும் இவனை நேர் வழிக்கு கொண்டுவரவில்லை.

குர்ஆன் சுன்னாவில் உள்ளதை அப்படியே நம்ப வேண்டும் என்ற சரியான கொள்கையை விட்டு இவன் தடமாறியதால் தேவை யற்ற விஷயங்களைச் சிந்தித்து, தர்க்கம் செய்து வழிகேட்டின் அடித்தளத்திற்கே போய்விட்டான். இவனைப் பற்றி இமாம் தஹபீ(ரஹ்) கூறுவதைப் பாருங்கள்.

سير أعلام النبلاء (6/ 26

جَهْمُ بنُ صَفْوَانَ أَبُو مُحْرِزٍ الرَّاسِبِيُّ مَوْلاَهُم * السَّمَرْقَنْدِيُّ، الكَاتِبُ، المُتَكَلِّمُ، أُسُّ الضَّلاَلَةِ، وَرَأْسُ الجَهْمِيَّةِ. كَانَ صَاحِبَ ذَكَاءٍ وَجِدَالٍ

இவன் தர்க்க வாதங்களை வைத்தவன். வழிகேட்டின் அஸ்திவாரம். ஜஹ்மிய்யாக்களின் தலைவன். புத்திசாலியாகவும் விவாதத்திறமையுள்ளவராகவும் இருந்தான். அல்லாஹ்வின் ஸிஃபத்துகளை மறுத்தான்.

**நூல்: சியறு அஃலாமின் நுபலா பாகம் 6 பக்கம் 26**

அல்லாஹ் பார்ப்பான். கேட்கிறான். வருவான். பேசுவான் என அல்லாஹ்விற்கு ஏராளமான தன்மைகள் இருக்கின்றன என குர்ஆன் கூறுகிறது. ஆனால், “அல்லாஹ்விற்கு இப்படிப்பட்ட தன்மைகள் இருப்பதாக நாம் நம்பக் கூடாது. நம்பினால் நாம் முஷ்ரிக் - இணைவைத்தவர்களாக ஆகிவிடுவோம். ஏனென்றால், அல்லாஹ்வைப் போன்று எதுவுமில்லை என குர்ஆன் கூறுகிறது. இந்தத் தன்மைகள் அல்லாஹ்வின் படைப்பினங்களிடம் உள்ளன. இதே தன்மைகள் அல்லாஹ்விற்கும் உள்ளன என நாம் கூறினால் அல்லாஹ்வை நாம் படைப்பினங்களுக்கு ஒப்பாக்கிவிடுவோம்.

எனவே, மனிதர்களுக்கு இருக்கிற எந்தத் தன்மையும் அல்லாஹ் விற்கு இல்லை. அல்லாஹ் பார்க்கமாட்டான். பேசமாட்டான். கேட்கமாட்டான்” என ஜஹ்ம் கூறினான்.

இவனும் தன் வழிகேட்டிற்கு குர்ஆன் வசனங்களையே ஆதாரமாகக் காட்டினான். அல்லாஹ் சொன்னதை நேரடியாக நம்பினால் குர்ஆனுக்கு முரணாகிவிடும் என வாதிட்டான்.

*சமீபத்தில் பீஜேவிற்கும் ஷேக் அப்துல்லாஹ் ஜமாலிக்கும் சென்னையில் அல்லாஹ்விற்கு உருவம் உண்டா? என்ற தலைப்பில் விவாதம் நடந்தது. இதில் வழிகெட்ட கொள்கையுடைய ஜமாலி அல்லாஹ்விற்கு கண் இல்லை. கை இல்லை. கால் இல்லை. அல்லாஹ் அர்ஷின் மீது அமரவில்லை எனக் கூறி, இது தொடர்பாக வரும் அனைத்து வசனங்களுக்கும் ஹதீஸ்களுக்கும் சுய விளக்கம் கொடுத்தார். இவரின் இந்த வழிகேட்டிற்கு இவர் மிகப்பெரிய ஆயுதமாக அல்லாஹ்வைப் போன்று எதுவுமில்லை என்ற குர்ஆன் வசனத்தைத்தான் எடுத்தார். அல்லாஹ் சொல்வது போல் நேரடியாக விளங்கினால் குர்ஆனுக்கு முரணாகிவிடும் என்றே இவரும் வாதிட்டார்.*

*எனவே, வழிகேடர்கள் ஒவ்வொருவரும் குர்ஆனுக்கு முரண் என்ற வாதத்தையே கையில் எடுத்தனர்.*

## முஃதஸிலாக்களே முன்மாதிரி

*முஃதஸிலாக்களின் துவக்கம் வாஸில் இப்னு அதாஃ என்பவன் தான். இவன்தான் முஃதஸிலாக்களின் தலைவன். இவனைப் பற்றி இமாம் தஹபீ(ரஹ்) கூறியதை அறிந்து கொள்ளுங்கள்.*

**سير أعلام النبلاء (5/ 464)**

**وَاصِلُ بنُ عَطَاءٍ أَبُو حُذَيْفَةَ المَخْزُوْمِيُّ مَوْلاَهُم**

**البَلِيْغُ، الأَفْوَهُ، أَبُو حُذَيْفَةَ المَخْزُوْمِيُّ مَوْلاَهُم، البَصْرِيُّ، الغَزَّالُ .وَقِيْلَ: وَلاَؤُهُ لِبَنِي ضَبَّةَ. مَوْلِدُه: سَنَةَ ثَمَانِيْنَ، بِالمَدِيْنَةِ .وَهُوَ وَعَمْرُو بنُ عُبَيْدٍ رَأْسَا الاعْتِزَالِ، طَرَدَهُ الحَسَنُ عَنْ مَجْلِسِهِ لَمَّا قَالَ: الفَاسِقُ لاَ مُؤْمِنٌ وَلاَ كَافِرٌ .فَانضَمَّ إِلَيْهِ عَمْرٌو، وَاعْتَزَلاَ حَلْقَةَ الحَسَنِ، فَسُمُّوا المُعْتَزِلَةَ**

*இவன் சொல்லாற்றலும், பேச்சாற்றலும் மிகுந்தவன். ஹிஜ்ரீ 80 ஆம் ஆண்டில் மதீனாவில் பிறந்தான். இவனும் அம்ர் இப்னு உபைத் என்பவனுமே முஃதஸிலா கொள்கையின் தலைவர்கள். இவன் இமாம் ஹஸனுல் பஸரீ(ரஹ்) அவர்களின் சபையில் இருந்தபோது பெரும்பாவம் செய்தவன் முஃமினாகவும் இருக்க மாட்டான். காஃபிராகவும் இருக்கமாட்டான் எனக் கூறியபோது ஹஸன் இவனைத் தன்னுடைய சபையிலிருந்து வெளியேற்றினார். இதன் பிறகு இவனுடன் அம்ரு என்பவனும் இணைந்துகொண்டான்.*

*இவ்விருவரும் ஹஸன்(ரஹ்) அவர்களின் சபையை புறக்கணித்தார்கள். எனவே, இவர்களுக்கு முஃதஸிலாக்கள் (விலகியவர்கள்) என்று பெயர் வந்தது.*

***நூல்: சியரு அஃலாமின் நுபலா பாகம் 5 பக்கம் 464***

*ஆதாரப்பூர்வமான நபிமொழிகளை குர்ஆனுக்கு முரண் அறிவுக்கு முரண் எனக் கூறி அதிகமாக மறுத்த வழிகேடர்கள் முஃதஸிலாக்கள் ஆவார்கள். தங்களின் சுயசிந்தனையை இந்த மார்க்கத்தில் நுழைத்து மார்க்கத்தையே சின்னா பின்னமாக்க முயலும் மோசமானவர்கள் இவர்களே.*

*இன்று குர்ஆனுக்கு முரண் எனக் கூறி, ஹதீஸ்களை மறுப்பவர்கள் முஃதஸிலாக்களை வழிகேடர்கள் என ஏற்றுள்ளனர். எனவே, இனிமேல் முஃதஸிலாக்களும் நேர்வழிபெற்றவர்களே என வாதிட முடியாது. மறு ஆய்வு என்ற பெயரில் வேண்டுமானால் இக்கருத்தை அவர்கள் மாற்றிக் கொள்ளும் வாய்ப்பு உள்ளது. முஃதஸிலாக்களுக்கும் இவர்களுக்கும் இடையே சில வித்தியாசங்கள் இருந்தாலும் பல ஒற்றுமை உள்ளன. அந்த ஒற்றுமைகளை கீழே காணலாம்.*

1. *இஸ்லாமிய வரலாற்றில் முஃதஸிலாக்கள் மட்டுமே சூனியம் தொடர்பான நபிமொழிகளை மறுத்தனர். தற்போது பீஜேவும் மறுக்கிறார்.*

2. *சூனியத்தின் மூலம் அல்லாஹ் நாடினாலே பாதிப்பு ஏற்படும் என நம்பும் முஸ்லிம்களை முஷ்ரிக்குகள் என முஃதஸிலாக்களே கூறினார்கள். அதே போல தற்போது பீஜேவும் கூறுகிறார்.*

3. *குர்ஆனுக்கு முரண் எனக் கூறி, இன்று பீஜே மறுக்கும் பல ஹதீஸ்களை இதற்கு முன் முஃதஸிலாக்களே மறுத்தனர். கண்ணேறு தொடர்பான ஹதீஸ்களை இதற்கு உதாரணமாக கூறலாம்.*

*முஃதஸிலாக்கள் பின்வரும் ஐந்து விதிகளை தங்களுடைய கொள்கையாகக் கொண்டுள்ளார்கள்.*

## *1. தவ்ஹீத்*

*அல்லாஹ் தனக்கு இருப்பதாக சொன்ன தன்மைகளை அல்லாஹ்விற்கு இல்லை என மறுக்க வேண்டும். அல்லாஹ் கேட்பான். பார்ப்பான். வருவான் எனக் கூறினால் அல்லாஹ் படைப்பினங்களுக்கு*

*ஒப்பாகிவிடுவான். எனவே, இவ்வாறு கூறுவது இணைவைப்பாகும். இதை மறுப்பது தான் தவ்ஹீதாகும். அல்லாஹ்விற்கு இந்தத் தன்மைகள் இருப்பதாக கூறும் வசனங்களுக்கு மாற்று விளக்கம் கொடுக்க வேண்டும் என்று கூறினர்.*

## *2. நேர்மை*

*அல்லாஹ் நேர்மையானவன். எனவே, அடியார்களில் யாராவது வழிகெட்டுப்போனால் அவர்கள் வழிகெட்டதற்கும் அல்லாஹ்வின் நாட்டத்திற்கும் இடையில் எந்த சம்பந்தமும் இல்லை. இந்த விஷயம் விதிப்படி நடப்பதில்லை. மனிதர்களில் அவரவரின் முயற்சிக்கேற்பவே நன்மை தீமைகள் ஏற்படுகின்றன. மொத்தத்தில் விதியை மறுக்க வேண்டும் என்கின்றனர்.*

## *3. இரண்டு நிலைகளுக்கிடையில் ஒரு நிலை*

*பெரும்பாவம் செய்தவனை முஃமின் என்றும் சொல்லக் கூடாது. காஃபிர் என்றும் சொல்லக் கூடாது. இந்த இரண்டு நிலைகளுக்கு இடையில் ஒரு நிலையில் அவன் இருக்கிறான் என்றே கூற வேண்டும் என்றனர்.*

## *4. வாக்குறுதி மற்றும் எச்சரிக்கை நிறைவேற்றுதல்*

*பெரும்பாவம் செய்தவன் மரணித்து விட்டால் அவனுக்கு மன்னிப்பு என்பதே கிடையாது. அவன் நரகத்தில் நிரந்தரமாக கிடப்பான். அல்லாஹ் பெரும்பாவம் செய்தவர்களுக்கு என்ன தண்டனையைக் கூறி எச்சரிக்கிறானோ அதை கண்டிப்பாக நிறைவேற்றுவான். மன்னிக்கமாட்டான் எனக் கூறினர்.*

## *5. நன்மையை ஏவி தீமையைத் தடுத்தல்*

*ஆட்சியாளர்கள் முஸ்லிம்களாக இருந்தாலும் அவர்கள் அநியாயம் செய்துவிட்டால் அதை பொறுத்துக் கொண்டு இருக்கக் கூடாது. மாறாக அவர்களுக்கு எதிராக கிளர்ச்சி செய்து ஆட்சியை கவிழ்க்க வேண்டும்.*

*நபிமொழிகள் இவர்களின் இந்த ஐந்து அடிப்படைகளையும் நிராகரிக்கின்றன. பின்வரும் கருத்தே நபிமொழிகளில் கூறப்பட்டுள்ளது.*

1. அல்லாஹ் தனக்கு இருப்பதாக சொன்ன தன்மைகளை நாம் மறுத்து அதற்கு வேறு ஒரு விளக்கம் தரக்கூடாது. அந்தத் தன்மைகள் அல்லாஹ்விற்கு மனிதனைப் போன்றில்லாமல் அவனுடைய தகுதிக்கு ஏற்ப உள்ளது என்றே நம்ப வேண்டும்.

2. அனைத்தும் விதியின் படியே நடக்கின்றன.

3. பெரும்பாவம் செய்தவன் பாவி என்றாலும் அவன் இஸ்லாமை விட்டு வெளியேற மாட்டான்.

4. அல்லாஹ் ஒரு பெரும்பாவத்திற்கு ஒரு தண்டனையை கூறி எச்சரித்தால், அந்த தண்டனையை அவன் கட்டாயம் நிறை வேற்றி ஆகவேண்டும் என்ற கட்டாயம் அல்லாஹ்விற்கு இல்லை. அவன் கருணையாளன்; அவன் நினைத்தால் மன்னிப்பான். அவன் நினைத்தால் தண்டிப்பான்.

5. ஆட்சியாளர்கள் முஸ்லிம்களாக இருக்கும் வரை அவர்களிடம் அநியாயங்கள் வெளிப்பட்டாலும், நாம் பொறுமையாகவே இருக்க வேண்டும். அவர்களுக்கு எதிராக கிளர்ச்சி செய்யக் கூடாது. கட்டுப்பட்டே நடக்க வேண்டும். அவர்களிடம் வெளிப் படையாக இணைவைப்போ, இறைமறுப்போ காணப்பட்டால் மட்டுமே எதிர் நடவடிக்கைகளில் ஈடுபடலாம்.

முஃதஸிலாக்கள் ஏற்படுத்தியுள்ள ஐந்து அடிப்படைகளுக்கும் நேர் எதிராக ஏராளமான ஹதீஸ்கள் உள்ளன. இந்த ஹதீஸ்கள் அனைத்தையும் குர்ஆனுக்கு முரண் என மறுத்துவிட்டு, இந்த ஹதீஸ் மறுப்புக்கொள்கையின் மீதுதான், நாம் முன்னர் குறிப்பிட்ட ஐந்து அடிப்படைகளை இவர்கள் நிறுவியுள்ளனர்.

குர்ஆனுக்கு முரண் எனக் கூறி, ஹதீஸ்களை மறுக்கும் கொள்கைக்கு முஃதஸிலாக்களின் இந்த ஐந்து அடிப்படைகளே அஸ்திவாரமாக உள்ளன. இவர்கள் இந்த அடிப்படைகளை உருவாக்காமல் நபிமொழிகளை அவற்றின் வழியிலேயே ஏற்றிருந் தால், இந்த ஐந்து அடிப்படைகளையும் இவர்கள் கூறியிருக்கவே மாட்டார்கள்.

இந்த சூழ்நிலையில்தான் முஃதஸிலாக்கள் பித்அத்வாதிகள் ஜமாஅத்தை விட்டும் விலகிச் சென்றவர்கள் என அழைக்கப் பட்டனர். நபிமொழிகளை ஏற்றுக்கொண்டு அதனடிப்படையில் தங்கள் கொள்கையை அமைத்துக் கொண்டவர்கள் அஹ்லுஸ் ஸுன்ன வல் ஜமாஅத் எனவும், ஸலஃபுகள் எனவும் அறியப்பட்டனர்.

# அஹ்லுஸ் சுன்னத் வல்ஜமாஅத்

*இஸ்லாமிய வரலாற்றில் தோன்றிய கவாரிஜ்கள், ஷியாக்கள், முஃதஸிலாக்கள், ஜஹ்மிய்யாக்கள் முதலிய வழிகெட்ட பிரிவினர்கள் அனைவரும் தங்களின் வழிகேட்டிற்கு குர்ஆனையே ஆதாரமாகக் கூறினர். வழிகேடர்கள் குர்ஆனை தவறாகவே பயன்படுத்துவார்கள் என்ற உண்மையை அல்லாஹ்வும் அவன் தூதரும் கூறியுள்ளார்கள்.*

*அவனே உமக்கு இவ்வேதத்தை வழங்கினான். இதில் உறுதி செய்யப்பட்ட வசனங்களும் உள்ளன. வெவ்வேறு பொருளில் புரிந்து கொள்ளப்படும் சில வசனங்களும் உள்ளன. உள்ளங்களில் நோயுள்ளவர்கள் குழப்பத்தை நாடியும் இதற்கு சுய விளக்கம் கொடுப்பதை நாடியும் வெவ்வேறு பொருளில் புரிந்து கொள்ளப் படும் வசனங்களை தேடித்திரிகின்றனர். அல்லாஹ்வையும் கல்வியில் தேர்ந்தவர்களையும் தவிர (மற்றவர்கள்) இதன் விளக்கத்தை அறியமாட்டார்கள். "இதை நாங்கள் நம்பிக்கை கொண்டோம். அனைத்தும் எங்கள் இறைவனிடமிருந்து வந்தவையே'' என அவர்கள் கூறுவார்கள். அறிவாளிகளே உணர்வார்கள்.* ***அல்குர்அன் 3:7***

*மேற்கண்ட வசனத்தை இறைத்தூதர்(ஸல்) ஒதிவிட்டு, ''ஆயிஷா! வெவ்வேறு பொருளில் புரிந்து கொள்ளப்படும் வசனங்களை தேடித்திரிபவர்களை நீ கண்டால், இவர்களைப் பற்றியே அல்லாஹ் குறிப்பிட்டுள்ளான். எனவே, அவர்களிடம் எச்சரிக்கையாக இருங்கள்" எனக் கூறினார்கள்.*

***அறிவித்தவர்: ஆயிஷா(ரலி) நூல்: புகாரி- 4547***

*இவர்களின் கொள்கைக்கு எதிராக இருக்கும் நபிமொழியை குர்ஆனுக்கு முரண் என்ற பொய்யான காரணத்தைக் கூறி மறுத்தனர். நபிமொழிகளை மறுத்துவிட்டால், சில குர்ஆன் வசனங்களை எடுத்துக்கொண்டு யார் வேண்டுமானாலும் எப்படிப் பட்ட குழப்பத்தையும் ஏற்படுத்த முடியும். இந்த அடிப்படையில் தான் வழிகெட்ட பிரிவினர் அனைவரும் நபிமொழிகளை மறுத்து, ஒட்டுமொத்த இஸ்லாமிய சமூகத்துடன் முரண்பட்டு புதுக்கொள்கை குழப்பங்களை ஏற்படுத்தினர்.*

*எனவேதான், சத்தியத்தில் இருந்த மக்கள் அசத்தியவாதிகளை விட்டும் தங்களை வேறுபடுத்திக்காட்டுவதற்கு 'அஹ்லுல் குர்ஆன் - குர்ஆன் உடையவர்கள்' என தங்களை கூறிக்கொள்ளவில்லை.*

மாறாக அசத்தியவாதிகளை விட்டும் தங்களை முழுமையாக வேறு படுத்திக்காட்டும் வகையில் 'அஹ்லுஸ் சுன்னா வல்ஜமாஅத்' என்றே தங்களை அழைத்தனர்.

பித்அத்வாதிகள் சுன்னாவையும் ஜமாஅத்தையும் புறக் கணித்தனர். நேர்வழியில் இருந்தவர்கள் இந்த இரண்டையும் பற்றிப் பிடித்துக் கொண்டனர். மார்க்கத்தின் பெயரால் குழப்பங்கள் தோன்றும்போது, இந்த இரண்டு அடையாளங்களைக் கொண்டு நேர்வழியையும் வழிகேட்டையும் பிரித்தரிய வேண்டும் என இறைத்தூதர்(ஸல்) அவர்கள் நமக்கு வழிகாட்டினார்கள்.

எனக்குப் பின் உங்களில் வாழ்பவர் அதிகமான முரண் பாடுகளைக் காண்பார். அப்போது நீங்கள் **என் சுன்னத்தையும்** (வழியையும்) நேர்வழிபெற்று நேர்வழிகாட்டும் ஆட்சியாளர்களின் வழியையும் பற்றிப் பிடித்துக்கொள்ளுங்கள். அதனை கடவாய் பற்களால் பலமாகப் பிடித்துக்கொள்ளுங்கள். புதுமையான விஷங்களை விட்டும் உங்களை எச்சரிக்கிறேன். ஒவ்வொரு புதுமையும் பித்அத்தாகும். ஒவ்வொரு பித்அத்தும் வழிகேடாகும்.

***அபூ தாவூத் 3991***

"உங்களுக்கு முன் வேதம் வழங்கப்பட்டவர்கள் எழுபத்து இரண்டு கூட்டங்களாக பிரிந்தனர். என் சமூகத்தார் எழுபத்து மூன்று கூட்டங்களாக பிரிவார்கள். எழுபத்து இரண்டு கூட்டங்கள் நரகத்திற்குச் செல்லும். ஒன்று மட்டுமே சொர்க்கம் செல்லும். ***அது தான் ஜமாஅத் ஆகும்.*** என் சமூகத்தில் சில கூட்டங்கள் தோன்றுவர். நாய்க்கடிபட்டவருக்கு அந்நோய் மூட்டு நரம்பெல்லாம் நுழைந்து அவருடைய உடலில் ஓடுவது போல் மனோஇச்சைகள் அவர்களிடம் ஒட்டிக்கொண்டே இருக்கும்" என இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

***அறிவித்தவர்: முஆவியா பின் அபீ ஸுஃப்யான்(ரலி) நூல்: அபூ தாவூத் 3981***

இன்று சகோதரர் பீஜே தன் அறிவுக்கு ஒத்துவரவில்லை என்பதால், சூனியம் மற்றும் கண்ணேறு தொடர்பான நபிமொழிகள் உட்பட பல ஆதாரப்பூர்வமான ஹதீஸ்களை மறுத்து வருவதுடன், நபிமொழிகளை நம்பக்கூடியவர்களை இணைவைப்பாளர்கள் என்றும் கூறுகிறார். இவருக்கு முன் வாழ்ந்த இஸ்லாமிய அறிஞர்களும், முஸ்லிம்களும் கூறாத கொள்கை குழப்பத்தை இன்று இவர் புதிதாக ஏற்படுத்தி வருகிறார்.

எனவே, இவர் இவ்விசயத்தில் சுன்னாவை விட்டு விலகிய துடன் ஜமாஅத்தை விட்டும் விலகிவிட்டார். அஹ்லுஸ் சுன்னா வல்ஜமாஅத்தினருக்கு எதிராக செயல்பட்ட முஃதஸிலாக்களின் நிலைபாடும் சகோதரர் பீஜேவின் நிலைபாடும் ஒன்றாக அமைந் துள்ளது. அல்லாஹ் பாதுகாக்க வேண்டும்.

## நல்லறங்களைக் கண்டு ஏமாறாதீர்கள்!

வணக்க வழிபாடுகளிலும் சமுதாயப் பணிகளை செய்வதிலும் நபிமொழி நிராகரிப்பாளர்கள் மற்றவர்களைவிட சிறப்பாக செயலாற்றக் கூடியவர்களாகவே இருந்தனர். இஸ்லாமை பரப்ப வேண்டும் என்ற நல்லெண்ணம் கொண்டவர்களாகவும், அதில் மற்றவர்களை விடத் தீவிரமாக செயல்படக் கூடியவராகவும் இருந்தனர்.

கவாரிஜ்கள், ஜஹ்மியாக்கள் மற்றும் முஃதஸிலாக்களின் நிலை இவ்வாறே இருந்தது. இவர்கள் அனைவரும் தீய எண்ணத்தில் கொள்கைக் குழப்பங்களை ஏற்படுத்தவில்லை. மாறாக சில நபிமொழிகளை நம்பினால் நாம் இணைவைத்தவர்களாக ஆகி விடுவோம் எனக் கூறியே ஃபித்னாக்களை ஏற்படுத்தினர்.

இணைவைப்புகளும், பித்அத்களும், குழப்பங்களும் நல்ல வர்களின் பெயராலும் நல்லெண்ணத்தைக் காரணமாகக் கூறியே உருவாயின. நபிமொழி நிராகரிப்பாளர்கள் செய்யும் நல்லறங்களைக் கண்டு அவர்கள் என்னசொன்னாலும் சரியாகத்தான் இருக்கும் என்ற நிலைக்கு பொதுமக்கள் வந்துவிடுகின்றனர். இதுதான் தக்லீத் ஆகும்.

பித்அத்வாதிகளின் நல்லறங்களைக் கண்டு நாம் ஏமாந்து விடக் கூடாது என்பதை இறைத்தூதர்(ஸல்) பின்வரும் நபி மொழியில் குறிப்பிட்டுள்ளார்கள்.

உங்களிடையே ஒரு கூட்டத்தார் கிளம்புவார்கள். அவர்களின் தொழுகையுடன் உங்களின் தொழுகையையும், அவர்களின் நோன்புடன் உங்களின் நோன்பையும், அவர்களின் நற்செயல்களுடன் உங்களின் நற்செயல்களையும் ஒப்பிட்டுப் பார்த்து, உங்களின் தொழுகை, நோன்பு மற்றும் நற்செயல்களை அற்பமானவையாகக் கருதுவீர்கள்.(அந்த அளவிற்கு அவர்களின் வழிபாடு சிறப்பாக இருக்கும்.)

மேலும், அவர்கள் குர்ஆனை ஓதுவார்கள். ஆனால், அது அவர்களின் தொண்டைக் குழியைத் தாண்டிச் செல்லாது.

*வேட்டைப் பிராணியை விட்டு (அதன் உடலைத் துளைக்கிற) அம்பு (உடலின் மறுபுறம்) வெளிப்பட்டு சென்றுவிடுவதைப் போல மார்க்கத்திலிருந்து அவர்கள் வெயேறிவிடுவார்கள் என இறைத் தூதர்(ஸல்) கூறினார்கள்.*

***அறிவித்தவர்: அபூ சயீத் அல்குத்ரீ(ரலி) நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 5058***

*தெளிவான நபிமொழி இருந்தால் அதன்மீது நம் நம்பிக்கையை வைக்கவேண்டுமே தவிர ஒரு தனிமனிதன் மீது நம்பிக்கை வைத்து ஆதாரப்பூர்வமான நபிமொழிகளை மறுக்கக் கூடாது. அது மட்டுமின்றி, தனி மனிதனை நம்புவதற்கு இஸ்லாமில் எந்த முகாந்திரமும் இல்லை.*

# குர்ஆனுக்கு முரண் என்ற வாதத்திற்கு பின்னால் இருப்பது என்ன?

*அல்லாஹ் மனிதனை குறைமதிகொண்டவனாகவே படைத் துள்ளான். குறைவான கல்வியே உங்களுக்கு கொடுக்கப்பட்டுள்ளது.*

***அல்குர்ஆன் (17:85)***

*ஒரு விஷயத்தைப் பற்றிய போதிய விபரம் தெரியாதபோது அதை மனிதன் எதிர்க்க ஆரம்பித்துவிடுவான். "**மனிதன், தான் அறியாத விஷயத்திற்கு எதிரியாகவே இருப்பான்**" என அரபுலகில் ஒரு பழமொழி உள்ளது.*

*குர்ஆனுக்கு முரண்படுவதாகக் கூறி ஆதாரப்பூர்வமான ஹதீஸ்களை மறுப்பதில் இந்த அறியாமையே எஞ்சியுள்ளது. நபிமொழிகளை சரியாகப் புரிந்துகொள்வதற்குரிய அறிவு இல்லாத தால், அந்த நபிமொழிகளை எதிர்க்கும் நிலைக்கு இவர்கள் ஆளாகிவிட்டனர்.*

*அறிவுக்குறைபாட்டின் காரணமாக முரண்பாடு தோன்றும் என்பதை பின்வரும் ஆதாரங்களிலிருந்து அறியலாம்.*

*என் இறைவா! என் மகன் என் குடும்பத்தைச் சார்ந்தவன். உன் வாக்குறுதி உண்மையானது. நீயே தீர்ப்பளிப்போரில் சிறப்பாக தீர்ப்பளிக்கக்கூடியவன் என்று நூஹ் அழைத்தார். நூஹே! இவன் உன் குடும்பத்தைச் சார்ந்தவன் அல்ல; நிச்சயமாக இது நல்ல செயலும் அல்ல. உனக்கு அறிவில்லாத விஷயத்தைப் பற்றி என்னிடம் கேட்காதே. நீ அறிவீனராக ஆகிவிட வேண்டாம் என உனக்கு உபதேசிக்கிறேன் என அல்லாஹ் கூறினான்.* ***அல்குர்ஆன் 11:45***

*நூஹ்(அலை) அவர்களின் குடும்பத்தைப் பாதுகாப்பதாக அல்லாஹ் வாக்குறுதி அளித்தான். ஈமான் கொண்டவர்களையே நுஹ்(அலை) அவர்களின் குடும்பம் என அல்லாஹ் கூறினான்.*

*ஆனால், இதை அறியாத நூஹ்(அலை) அல்லாஹ் நம் குடும்பத்தில் ஒருவனான நம் மகனை அழித்துவிட்டானே என்று அல்லாஹ்விடம் அவன் அளித்த வாக்குறுதியை நினைவூட்டி கேள்வி கேட்கிறார்.*

*நூஹ்(அலை) இவ்வாறு கேட்டதை அல்லாஹ் வன்மையாக கண்டிக்கிறான். இவ்வாறு சிந்திப்பது அறிவீனர்களின் வழிமுறை என்றும் எச்சரிக்கிறான்.*

*நூஹ்(அலை) அல்லாஹ்விடம் நீ முன்பு சொன்னதற்கு நீயே முரணாக நடந்துவிட்டாய். நீயெல்லாம் இறைவனே இல்லை என அல்லாஹ்வைக் கடிந்து கொள்ளவில்லை. மாறாக தன் தவறை உணர்ந்து அல்லாஹ்விடம் மன்னிப்பு கேட்டார்கள்.*

*"என் இறைவா எனக்கு அறிவில்லாத விஷயத்தைப் பற்றி உன்னிடம் நான் கேட்பதை விட்டும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன். நீ என்னை மன்னித்து எனக்கு கருணை காட்டா விட்டால் நான் நஷ்டவாளியாகிவிடுவேன்" எனக் கூறினார்.*

***அல்குர்ஆன் 11:47***

*நான் மனித சமுதாயத்தைப் படைக்கப்போகிறேன் என அல்லாஹ் கூறியபோது, அதற்கு வானவர்கள் அல்லாஹ்விடம் விளக்கம் கேட்டார்கள். வானவர்களின் அறிவுக்குறைபாடே இதற்கு காரணமாகும்.* ***அல்குர்ஆன் 2:30***

*பின்வரும் நபிமொழியை சிந்தித்துப்பாருங்கள். இறைத்தூதர் (ஸல்) கூறிய ஒரு சொல் வெளிப்படையில் பார்த்தால் குர்ஆனுக்கு முரணாக இருப்பதுபோல் தெரிகிறது. ஆனால், அதற்குரிய சரியான விளக்கம் தரப்படும்போது முரண்பாடு இல்லாமல் புரிய முடிகிறது.*

*இறைத்தூதர்(ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா(ரலி) தமக்குப் புரியாத ஒரு செய்தியைக் கேட்டால் அதனை அவர்கள் நன்கு புரிந்துகொள்ளும் வரை (அதையொட்டி) மீண்டும் மீண்டும் கேள்வி கேட்டுத் தெரிந்து கொள்வார்கள்.*

*"விசாரிக்கப்படுபவர் வேதனை செய்யப்படுவார்" என (ஒருமுறை) இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*

*"அல்லாஹ் (குர்ஆனில்) "வலக்கரத்தில் தம்முடைய வினைப் பதிவுச் சீட்டு வழங்கப்பட்டவரிடம் எளிய முறையில் கணக்கு வாங்கப்படும்' (84:8) என்றல்லவா கூறுகிறான்?" என ஆயிஷா(ரலி) கேட்டார்.*

*"இது (துருவித் துருவி விசாரிப்பது அன்று: மாறாக, மனிதர் களின் நன்மை தீமைகளின் பட்டியலை அவர்களுக்கு முன்) எடுத்துக் காட்டப்படுவதுதான். துருவித் துருவி விசாரிக்கப் படுபவர் அழிந்தே போய்விடுவார்" என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*
***அறிவித்தவர்: இப்னு அபீ முலைக்கா, நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 103***

*விசாரிக்கப்படுபவர் தண்டிக்கப்படுவார் என இறைத்தூதர்(ஸல்) கூறுகிறார்கள். ஆனால், அல்லாஹ் நல்லவர்கள் இலகுவான முறையில் விசாரிக்கப்படுவார்கள் என்று கூறுகிறான். அன்னை ஆயிஷா(ரலி) நீங்கள் குர்ஆனுக்கு முரணாக பேசுகிறீர்கள். எனவே, நீங்கள் இறைத்தூதர் இல்லை என்று சொல்லவில்லை. மாறாக நபியவர்கள் கூறிய கூற்றுக்குரிய விளக்கத்தை எதிர்பார்த்தார்கள். விளக்கம் தரப்பட்டவுடன் ஏற்றுக்கொண்டார்கள்.*

*எனவே, குர்ஆனுக்கு முரண் என்ற சிந்தனைக்குப் பின்னால் அறியாமைதான் உள்ளது என்பதை இது போன்று உணர்த்தும் சான்றுகள் நிறைய உள்ளன.*

## சிந்தனைக் கோளாறு முரண்பாட்டை தோற்றுவிக்கும்

*முரண்பாடு இருப்பதாக ஒருவர் சொன்னாலே அதை நம்பித் தான் ஆகவேண்டுமா? அப்படியானால் குர்ஆனில் முரண்பாடுகள் இருப்பதாக எடுத்து வைக்கப்படும் வாதங்களையும் ஏற்க வேண்டிய நிலை ஏற்பட்டுவிடும்.*

*யூதர்களும் கிறிஸ்தவர்களும் குர்ஆனில் முரண்பாடுகள் உள்ளன என்ற எண்ணத்துடன் குர்ஆனை படிக்கின்றனர். பல வசனங்களைச் சுட்டிக்காட்டி இந்த வசனம் இதற்கு முரணாக உள்ளது என்றும் கூறுகின்றனர். ஆனால், முஸ்லிம்களாகிய நாம், குர்ஆன் வசனங்களுக்கிடையே எந்த முரண்பாடும் இல்லை என உறுதியாக நம்புகிறோம். உண்மையில் குர்ஆனில் எந்த முரண்பாடும் இல்லை.*

*குர்ஆனில் முரண்பாடு உள்ளதா? அல்லது குர்ஆனை குறை கூறுபவர்களின் சிந்தனையில் கோளாறு உள்ளதா என்பதை நாம்*

ஆராய்ந்து பார்த்தால், இப்படிப்பட்ட வாதங்களுக்குப் பின்னால் அறியாமை தான் இருக்கும் என்ற உண்மையைத் தெளிவாக அறியலாம்.

## அறியாமையை அம்பலப்படுத்திய வசனம்

இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு சூனியம் செய்யப்பட்டதாக வரும் நபிமொழியை சகோதரர் பீஜே மறுத்துள்ளார். அவருடைய குர்ஆன் தர்ஜுமாவின் பழைய பதிப்பில் இந்த ஹதீஸ் பின்வரும் வசனத்திற்கு முரணாக உள்ளது எனக் கூறி, இந்த ஹதீஸை ஏற்றுக் கொள்ளக் கூடாது என வாதிட்டார்.

(நபியே) மனிதர்களிடமிருந்து அல்லாஹ் உன்னை காப் பாற்றுவான். ***அல்குர்ஆன் 5:67***

இதன் பிறகு மார்க்க அறிஞர்கள் இந்த வசனத்தை பீஜே புரிந்துகொண்டவிதம் தவறானது என்பதை உணர்த்தினார்கள். உஹதுப் போரில் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் பல்லும் தலையும் உடைந்து காயமுற்றார்கள். எனவே, அல்லாஹ் மனிதர் களிடமிருந்து பாதுகாப்பான் என்றால் மக்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களை கொல்ல முடியாது என்பதே இதன் பொருள். மக்களிட மிருந்து எந்தத் தீங்கும் ஏற்படாது என்று இதை புரிந்துகொள்ளக் கூடாது என சரியான விளக்கத்தை அளித்தனர்.

இந்த விளக்கத்திற்குப் பிறகு சகோதரர் பீஜே தன்னுடைய அடுத்தடுத்த தர்ஜுமாக்களில் இந்த ஹதீஸை மறுப்பதற்கு இந்த வசனத்தை சுட்டிக்காட்டுவதை தவிர்த்துக்கொண்டார். தற்போது இந்த ஹதீஸை மறுத்துப் பேசும் பேச்சாளர்கள் இந்த வசனத்தை சுட்டிக்காட்டி இதற்கு இந்த ஹதீஸ் முரணாக உள்ளது எனக் கூறுவதில்லை.

ஏனென்று யாராவது கேட்டால் இந்த வசனத்திற்கும் இந்த ஹதீஸிற்கும் இடையில் முரண்பாடு இருப்பதாக எங்களுக்கு முன்பு தெரிந்தது. ஆனால், தற்போது முரண்பாடு இல்லை என்றே தெரிகிறது. எனவே, இதை நாங்கள் குறிப்பிடவில்லை எனக் கூறு வார்கள். முரண்பாடு என இவர்கள் முன்பு கூறியது அறியாமையில் தான் என்ற உண்மையை இங்கே இவர்கள் ஒப்புக்கொள்கிறார்கள்.

முரண்பாடு உள்ளதாக இவர்கள் சித்தரிக்கும் அனைத்து விஷயங்களிலும் இது போன்று அறியாமையில்தான் இருக்கின்றனர்.

*ஆனால், இன்னும் இதனை உணராமல் பிடிவாதமாகவே இருக்கின்றனர்.*

## அறியாமையை அம்பலப்படுத்திய ஹதீஸ்

*சகோதரர் பீஜே குர்ஆனுக்கு முரணாக உள்ளது எனக்கூறி பல ஆதாரப்பூர்வமான ஹதீஸ்களை முதலில் மறுத்தார். அன்று பீஜே மறுத்த ஹதீஸ்களில் பின்வரும் ஹதீஸும் ஒன்றாகும்.*

*அல்லாஹ் தொழுகையை கடமையாக்கியபோது ஊரிலிருந் தாலும் பயணத்திலிருந்தாலும் இரண்டு இரண்டு ரக்அத்களாகவே கடமையாக்கினான். பயணத் தொழுகை அவ்வாறே (இரண்டு இரண்டு ரக்அத்களாகவே) நீடித்தது; சொந்த ஊரில் தொழும் தொழுகையில் இரண்டு ரக்அத்கள் கூடுதலாக்கப்பட்டது.*

***அறிவித்தவர்: இறைநம்பிக்கையாளர்களின் அன்னை ஆயிஷா(ரலி), நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 350***

*இந்த நபிமொழி குர்ஆனுக்கு முரண் எனக் கூறி சகோதரர் பீஜே மறுத்தார். அந்த நேரத்தில் நான் இந்த நபிமொழிக்கும் குர்ஆனுக்கும் முரணில்லை என்று கூறி முரணில்லாமல் புரிவதற்குரிய விளக்கத்தை எழுதி அவருக்கு அனுப்பினேன்.*

*அந்த விளக்கத்தை படித்துவிட்டு இந்த ஹதீஸை மறுக்க வேண்டியதில்லை. முரணில்லாமல் புரிய வாய்ப்புள்ளது எனக் கூறி, முன்பு மறுத்த இந்த ஹதீஸை பின்பு ஆதாரப்பூர்வமானது என ஏற்றுக்கொண்டார். குர்ஆனுடன் முரண்படாத ஓர் ஆதாரப் பூர்வமான ஹதீஸை, தான் தவறாகப் புரிந்து மறுத்துவிட்டதை ஒப்புக் கொண்டார். பொதுவாக இவர் எதிர்ப்பிலேயே வாழ்பவர். இந்த ஹதீஸ் விஷயத்தில் பலமாக யாரும் எதிர்க்கவில்லை; எனவேதான் ஒப்புக் கொண்டார். எதிர்ப்பு வலுப்பெற்றிருந்தால் பிடிவாதமாக மறுத்தே இருப்பார்.*

*அன்று நடந்த இந்நிகழ்விலிருந்து நாம் புரிய வேண்டிய விஷயம் என்னவென்றால், இன்று ஆதாரப்பூர்வமான செய்தியை குர்ஆனுக்கு முரண் என்று மறுக்கும்போது அந்த அறிவிப்பில் எங்கோ யாரோ தவறுசெய்துள்ளார்கள் என்று புரிய வேண்டும் எனக் கூறும் பீஜே தன் சிந்தனையில் எங்கோ தவறுவந்து ,ருக்கலாம் என்பதை ஏன் யோசிப்பதில்லை?*

*தான் தவறாக சிந்தித்து ஹதீஸை மறுத்ததை ஏற்றுக் கொண்ட நிலையில் அனைத்தையும் அறிந்தவரைப் போல் தன் சிந்தனையில் கோளாறே வராது என்பது போல் வாய்க்கு வந்தபடி ஆதாரப்பூர்வமான ஹதீஸ்களை கேலி கிண்டல் செய்து நாளுக்கு நாள் மறுத்துக் கொண்டே செல்வதும், அந்த ஹதீஸ்களை நம்பக் கூடியவர்களை முஷ்ரிக் என நாக்கூசாமல் ஃபத்வா கொடுப்பதும் குற்றம் தானே?*

## *நபித்தோழர்கள் ஹதீஸ்களை மறுத்தார்களா?*

*குர்ஆனுக்கு முரண் எனக் கூறி உமர்(ரலி) ஹதீஸ்களை மறுத்தார்கள் என்பதற்கு பின்வரும் செய்தியை ஆதாரமாக கூறுகின்றனர்.*

*அபூ இஸ்ஹாக் அம்ர் இப்னு அப்தில்லாஹ் இப்னி உபைத்(ரஹ்) அறிவித்தார்:*

*நான் அஸ்வத் இப்னு யஸீத் (ரஹ்) அவர்களுடன் (கூஃபாவின்) பெரிய பள்ளிவாசலில் அமர்ந்திருந்தேன். எங்களுடன் ஷஅபீ (ரஹ்) அவர்களும் இருந்தார்கள். அப்போது ஃபாத்திமா பின்த் கைஸ் (ரலி) தொடர்பான ஹதீஸை ஷஅபீ(ரஹ்) எங்களுக்கு அறிவித்தார்: "இறைத்தூதர்(ஸல்), ஃபாத்திமா பின்த் கைஸ்(ரலி) அவர்களுக்கு உறைவிடமும் இல்லை; ஜீவனாம்சமும் இல்லை" என அறிவித்தார் (என்பதுதான் அந்த ஹதீஸ்). (அங்கிருந்த) அஸ்வத்(ரஹ்) ஒரு கையளவு சிறு கற்களை அள்ளி அவர் மீது எறிந்துவிட்டுப் பின் வருமாறு கூறினார்: "உமக்குக் கேடுதான்! இது போன்ற செய்திகளை அறிவிக்கிறீரே?*

*"ஒரு பெண்ணின் சொல்லுக்காக நாம் அல்லாஹ்வின் வேதத்தையும் நம் நபியின் வழிமுறையையும் கைவிடமாட்டோம். ஃபாத்திமா பின்த் கைஸ் (உண்மையிலேயே) நினைவில் வைத் துள்ளாரா, அல்லது மறந்து விட்டாரா என்பது நமக்குத் தெரிய வில்லை. மூன்று தலாக்(கும்) சொல்லப்பட்ட பெண்ணுக்கு உறைவிடமும் ஜீவனாம்சமும் உண்டு. வலிவும் மாண்பும் உடைய அல்லாஹ், "பகிரங்கமான வெட்கக்கேடான செயலை அப் பெண்கள் செய்தாலே தவிர, அவர்களை அவர்களின் வீடுகளில் இருந்து வெளியேற்றாதீர்கள்' (65:1) எனக் கூறியுள்ளான்" என உமர்(ரலி) கூறினார்கள்.* ***நூல்: முஸ்லிம் 2963***

*கணவன் மனைவியை தலாக் விட்டால், மனைவியை வீட்டை விட்டு விரட்டிவிடாமல், அவளுடைய இத்தா காலம் முடியும் வரை அவளை தன்னுடைய வீட்டிலேயே வைத்துக்கொள்ள வேண்டும் என அல்லாஹ் கூறுகிறான்.*

*குர்ஆன் வசனத்தை மட்டும் வைத்துப் பார்த்தால் முதல் தலாக், இரண்டாம் தலாக், மூன்றாம் தலாக் ஆகிய மூன்று சந்தர்ப்பத்திலும் இந்த ஒழுங்குமுறையை கடைபிடிக்க வேண்டும் என்ற கருத்து வருகிறது.*

*ஆனால், மேற்கண்ட வசனத்துடன் நபிமொழியை சேர்த்து கவனிக்கும்போது தலாக்விடப்பட்டவளுக்கு தங்கும் வசதியை ஏற்படுத்தித் தரவேண்டும் என்று குர்ஆன் கூறும் சட்டம் முதல் தலாக் மற்றும் இரண்டாவது தலாக் விடப்பட்ட பெண்களுக்கே பொருந்தும்.*

*கணவன் மனைவியை மூன்றாவது தலாக் விட்டுவிட்டால் இனி இருவரும் சேர முடியாது. முழுவதுமாக பிரிந்துவிடுவார்கள். எனவே, இந்த சந்தர்ப்பத்தில் கணவன் மனைவிக்கு தங்கும் வசதியை ஏற்படுத்தித்தர வேண்டியதில்லை என்ற சட்டத்தை இறைத் தூதர்(ஸல்) ஃபாத்திமா பின்த் கைஸ்(ரலி) அவர்களின் விஷயத்தில் அமுல்படுத்துகிறார்கள். எனவே, குர்ஆன் வசனத்திற்கும் ஃபாத்திமா பின்த் கைஸ்(ரலி) அறிவிக்கும் ஹதீஸிற்கும் இடையில் எந்த முரண்பாடும் இல்லை.*

*பிறகு ஏன் உமர்(ரலி) குர்ஆன் வசனத்தைக் காட்டி ஃபாத்திமா (ரலி) அறிவித்த ஹதீஸை மறுக்க வேண்டும்? என்ற கேள்விக்கு வருவோம்.*

*உமர்(ரலி) குர்ஆனுக்கு முரண் எனக் கூறி, ஃபாத்திமா(ரலி) அறிவித்த ஹதீஸை மறுக்கவில்லை. ஹதீஸை ஏற்றுக்கொள்வதற்கு தகுந்த சாட்சிகள் இல்லை என்ற காரணத்தினாலே இந்த ஹதீஸை அவர்கள் ஏற்க மறுத்தார்கள்.*

*உமர்(ரலி) அவர்களுக்கு சந்தேகம் ஏற்படும்போது, ஹதீஸை ஏற்பதற்கு இரண்டு சாட்சிகளை எதிர்பார்ப்பார்கள். இதனை பின்வரும் சம்பவத்திலிருந்து அறியலாம்.*

*உபைத் இப்னு உமைர் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்:*

*உமர்(ரலி) கலீஃபாவாக இருந்தபோது, அபூ மூஸா(ரலி)*

*கலீஃபாவைச் சந்திக்க வந்து, உள்ளே வர அனுமதி கோரினார் உமர்(ரலி) அலுவலில் ஈடுபட்டிருந்ததால் அவர்களுக்கு அனுமதி அளிக்கவில்லை; அபூ மூஸா(ரலி) திரும்பிவிட்டார்கள். உமர்(ரலி) தம் அலுவலை முடித்தபின்,*

*"அபூ மூஸாவின் குரலை நான் கேட்டேனே! அவருக்கு அனுமதி அளியுங்கள்! என்றார்கள். அவர் திரும்பிச் சென்றுவிட்டார்! எனக் கூறப்பட்டது.*

*உடனே உமர்(ரலி) அபூ மூஸா(ரலி) அவர்களை அழைத்து வரச் செய்து, "ஏன் திரும்பிச் சென்றுவிட்டீர்? என உமர்(ரலி) கேட்டார்.*

*"இவ்வாறே நாங்கள் கட்டளையிடப்பட்டிருந்தோம்! என அபூ மூஸா(ரலி) கூறினார்.*

*"இதற்குரிய சான்றை நீர் என்னிடம் கொண்டுவாரும்!" என உமர்(ரலி) கேட்டார்.*

*உடனே, அபூ மூஸா(ரலி) அன்ஸாரிகளின் அவைக்குச் சென்று அவர்களிடம் கேட்டார்.*

*"நம்மில் இளையவரான அபூ சயீத் அல்குத்ரீயைத் தவிர வேறு யாரும் இந்த விஷயத்தில் உமக்கு சாட்சியம் சொல்ல மாட்டார்கள்!" என அவர்கள் கூறினர்.*

*அபூ சயீத் அல்குத்ரீ(ரலி) அவர்களை உமர்(ரலி) அவர்களிடம் அபூ மூஸா(ரலி) அழைத்துச் சென்றார். (அபூ சயீத்(ரலி) அபூ மூஸா(ரலி) கூறியதை உறுதிப்படுத்தியதும்) இறைத்தூதர்(ஸல்) அவர்களின் இந்தக் கட்டளை எனக்குத் தெரியாமல் போய்விட்டதா? இறைத்தூதர்(ஸல்) அவர்களின் காலத்தில் (வெளியே சென்று) கடை வீதிகளில் நான் வியாபாரம் செய்துகொண்டிருந்தது என் கவனத்தை திசைதிருப்பிவிட்டது போலும்!" என உமர்(ரலி) கூறினார்.*

***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 2062***

*சில சந்தர்ப்பங்களில் இரண்டு சாட்சிகள் இருந்தால் மட்டுமே ஹதீஸ்களை ஏற்க வேண்டும் என்ற சிந்தனையில் உமர்(ரலி) இருந்தார்கள்.*

*ஒரு பெண்ணின் சொல்லுக்காக அல்லாஹ்வின் வேதத்தை விட முடியாது என உமர்(ரலி) கூறுகிறார்கள். ஆணின் சாட்சியத்தைவிட பெண்ணின் சாட்சியம் பலவீனமானது. ஒரு பெண் அல்லாமல்*

*ஆண்கள் இச்செய்தியை அறிவித்தால் ஏற்றுக்கொள்வேன் என்ற கருத்தையே உமர்(ரலி) கூறுகிறார்கள்.*

*பின்வரும் அறிவிப்பில் இதை உமர்(ரலி) அவர்களே தெளிவாகக் கூறியுள்ளார்கள்.*

*''ஃபாத்திமாவே!* ***இத்தகவலை இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து கேட்டதாக சாட்சிக் கூறும் இரண்டு சாட்சிகளை நீ கொண்டுவா! இல்லையென்றால் ஒரு பெண்ணின் சொல்லுக்காக அல்லாஹ்வின் வேதத்தை நாம் விடமாட்டோம்****'' என உமர்(ரலி) கூறினார்கள்.*

***நூல்: ஸுனன் நஸாயீ 3493***

*எனவே, உமர்(ரலி) குர்ஆனுக்கு முரண் என்ற அடிப்படையில் ஃபாத்திமா(ரலி) அவர்களின் அறிவிப்பை மறுக்கவில்லை. மாறாக இரண்டு சாட்சி இல்லை என்பதே அவர்கள் ஏற்க மறுத்ததற்குரிய காரணமாகும். இரண்டு சாட்சிகளைக் கொண்டு வந்திருந்தால் ஃபாத்திமா(ரலி) அறிவித்த ஹதீஸை உமர்(ரலி) ஏற்றிருப்பார்கள்.*

*"அல்லாஹ்வின் வேதத்தை விட்டுவிடமாட்டோம்" என உமர்(ரலி) கூறியதன் சரியான விளக்கத்தை அறிந்துகொள்ள வேண்டும். ஒரு சட்டம் அனைவருக்கும் உரியது என குர்ஆன் கூறும்போது, அதிலிருந்து சிலருக்கு விதிவிலக்கு அளிக்க வேண்டும் என்றால், விதிவிலக்கு அளிப்பதற்கு நம்மிடம் ஆதாரம் இருக்க வேண்டும். இதற்கு ஆதாரம் இல்லாவிட்டால், குர்ஆன் கூறும் பொதுவான சட்டத்தையே நாம் எடுத்துக்கொள்வோம். இந்த விதியின் அடிப்படையில்தான் "அல்லாஹ்வின் வேதத்தை நாம் விட்டுவிட முடியாது" என உமர்(ரலி) கூறினார்.*

*மூன்றாவது தலாக் விடப்பட்டவர்களுக்கு தங்கும் வசதியை ஏற்படுத்தித்தர வேண்டியதில்லை என்ற நபிமொழி உமர்(ரலி) அவர்களிடம் ஆதாரப்பூர்வமானதாக அமையவில்லை. எனவே, பொதுவாக தலாக் விடப்பட்டவர் யாராக இருந்தாலும் அவர்களுக்கு தங்கும் வசதியை ஏற்படுத்தித்தர வேண்டும் என்ற வசனத்தின் பொதுவான கருத்தை உமர்(ரலி) எடுத்துக்கொண்டார்கள்.*

*ஹதீஸ் உறுதியாகிவிட்டால் அப்போது வசனத்தில் கூறப் படும் சட்டம் மூன்றவாது தலாக் சொல்லப்பட்ட பெண்ணுக்கு உரியது அல்ல என உமர்(ரலி) ஏற்றுக்கொள்வார். ஆனால், ஃபாத்திமா(ரலி) அறிவித்த ஹதீஸ் உமர்(ரலி) அவர்களிடம்*

உறுதியாகவில்லை என்பதால் இதை அவர் ஏற்றுக்கொள்ளாமல் வசனத்தின் பொதுவான சட்டத்தை ஏற்றுக் கொண்டார்.

எனவே, இந்தப் பிரச்னை குர்ஆனுக்கு முரண்படுவது பற்றியது அல்ல. மாறாக பொதுவான சட்டத்திலிருந்து விதிவிலக்கு அளிப்பதற்கு ஆதாரம் இருக்கிறதா? இல்லையா? என்பது பற்றியதாகும்.

குர்ஆனுக்கு முரண் என்ற அடிப்படையில்தான் உமர்(ரலி) ஹதீஸை மறுத்தார் என ஒரு வாதத்திற்காக ஏற்றுக் கொண்டாலும் இந்த சம்பவம் இவர்களுக்கு எதிராகவே உள்ளது. ஏனென்றால், ஃபாத்திமா(ரலி) அறிவித்த ஹதீஸிற்கும் குர்ஆனுக்கும் இடையே எந்த முரண்பாடும் இல்லை.

உமர்(ரலி) முரண்பாடாக விளங்கினார் என்றால், இங்கே மனித சிந்தனை தவறு செய்கிறது; குர்ஆனுக்கு முரண் என்ற வாதத்திற்கு பின்னால் அறியாமைதான் இருக்கும்; உண்மை ஒருபோதும் இருக்காது என்பதையே அல்லாஹ் இந்நிகழ்வின் மூலம் நமக்கு வெளிப்படுத்திவிட்டான்.

எனவே, ஹதீஸ் குர்ஆனுக்கு முரண்படுவது போன்று தெரியும் போது, அதை மறுத்தால் நாம் உண்மையை மறுக்க வேண்டிய நிலைதான் ஏற்படும். அதற்குரிய விளக்கத்தை தேடினால், உண்மையை ஏற்று நபிவழியில் செல்ல முடியும். இதையே மேற்கண்ட நிகழ்வு தெளிவுபடுத்துகிறது.

## ஆயிஷா(ரலி)

குர்ஆனுக்கு முரண் எனக் கூறி அன்னை ஆயிஷா(ரலி) அவர்களும் ஹதீஸ்களை மறுத்துள்ளார்கள் என ஆயிஷா(ரலி) அவர்களையும் வம்புக்கு இழுத்து, இதற்கு பின்வரும் சம்பவத்தை ஆதாரமாக பதிவு செய்ய முனைகிறார்கள்.

அப்துல்லாஹ் இப்னு உபைதில்லாஹ் இப்னி அபீ முலைக்கா(ரஹ்) அறிவித்தார்:

நான் (மக்காவில்) இப்னு உமர்(ரலி) அவர்களுக்குப் பக்கத்தில் அமர்ந்திருந்தேன். அப்போது நாங்கள் உஸ்மான்(ரலி) அவர்களின் புதல்வியார் உம்மு அஃபான் அவர்களின் ஜனாஸாவை எதிர் பார்த்துக் காத்திருந்தோம். இப்னு உமர்(ரலி) அவர்களுக்கு அருகில் உஸ்மான்(ரலி) அவர்களின் புதல்வர் அம்ரும் இருந்தார்.

*அப்போது இப்னு அப்பாஸ்(ரலி) வந்தார். அவர்களை ஒருவர் கைத்தாங்கலாக அழைத்துவந்து இப்னு உமர்(ரலி) அமர்ந்திருந்த இடத்தைக் காட்டினார். உடனே அவர் வந்து எனக்குப் பக்கத்தில் அமர்ந்தார். நான் அவர்கள் இருவருக்குமிடையே இருந்தேன். அப்போது வீட்டிலிருந்து அழுகுரல் கேட்டது. உடனே,*

*"நீங்கள் எழுந்து சென்று, அழுவதை விட்டும் அவர்களைத் தடுங்கள்" என இப்னு உமர்(ரலி) அம்ரிடம் சைகை செய்துவிட்டு,* **"குடும்பத்தார் அழுவதன் காரணமாக இறந்தவர் வேதனை செய்யப்படுகிறார்** *என இறைத்தூதர்(ஸல்) கூறியதை நான் செவியுற்றுள்ளேன்" எனக் கூறினார்.*

*அப்போது இப்னு உமர்(ரலி) ("இறந்தவர் இறைமறுப்பாளராக இருந்தால்' எனக் குறிப்பிட்டுச் சொல்லாமல்) பொதுப்படையாக ("இறந்தவர் வேதனை செய்யப்படுகிறார்' என்று)தான் கூறினார்.*

*உடனே இப்னு அப்பாஸ்(ரலி) (பின்வருமாறு) கூறினார்கள்:*

*நாங்கள் (ஒரு பயணத்தில்) இறைநம்பிக்கையார்களின் தலைவர் உமர் இப்னு அல் கத்தாப்(ரலி) அவர்களுடன் இருந்தோம். நாங்கள் (மக்காவிற்கும் மதீனாவிற்கும் இடையிலுள்ள) "பைதாஃ' எனும் இடத்தில் இருந்தபோது, அங்கு ஒரு மரத்திற்குக் கீழே யாரோ ஒருவர் தங்கியிருந்தார்.*

*"நீங்கள் சென்று அவர் யார் எனப் பார்த்து வந்து என்னிடம் கூறுங்கள்" என உமர்(ரலி) என்னிடம் கூறினார். நான் சென்று பார்த்தபோது அங்கு ஸுஹைப்(ரலி) இருந்தார்கள். நான் உமர்(ரலி) அவர்களிடம் திரும்பிவந்து,*

*"நீங்கள் பார்த்துவிட்டு வந்து தெரிவிக்கச் சொன்ன அந்த மனிதர் ஸுஹைப்(ரலி)" என்றேன்.*

*"அவரை நம்முடன் சேர்ந்து கொள்ளச் சொல்லுங்கள்!" என உமர்(ரலி) கூறினார்.*

*"அவருடன் அவருடைய குடும்பத்தாரும் உள்ளார்கள்" என நான் கூறினேன்.*

*"அவருடன் அவருடைய குடும்பத்தார் இருந்தாலும் சரியே! (அவரை நம்முடன் வந்து சேர்ந்துகொள்ளச் சொல்லுங்கள்)" என உமர்(ரலி) கூறினார்.*

*நாங்கள் (அனைவரும் மதீனாவுக்கு) வந்து சேர்ந்து அதிக நாள்கள் ஆகவில்லை. அதற்குள் இறைநம்பிக்கையாளர்களின் தலைவர் உமர்(ரலி-கத்தியால் குத்தப்பட்டு) காயமுற்றார். அப்போது,*

*“சகோதரரே! நண்பரே!” என ஸுஹைப்(ரலி) கூறியபடியே (அழுதுகொண்டு) வந்தார்.*

*அப்போது உமர்(ரலி), “குடும்பத்தாரின் அழுகைகளில் சிலவற்றால் இறந்தவர் வேதனை செய்யப்படுகிறார் என இறைத் தூதர்(ஸல்) கூறியதை “நீர் அறியவில்லையா?” அல்லது “நீர் செவியுற வில்லையா?”) எனக் கேட்டார். (“நீர் அறியவும் கேள்விப்படவும் இல்லையா?*

*இப்னு உமர்(ரலி - குறிப்பிட்டுக் கூறாமல்) பொதுவாகச் சொன்னார். உமர்(ரலி) அவர்களோ “குடும்பத்தாரின் சிலரின் அழுகையால்’ என (குறிப்பிட்டு) கூறினார்கள்.*

*(அறிவிப்பாளர் அப்துல்லாஹ் இப்னு உபைதில்லாஹ் இப்னி அபீ முலைக்கா தொடர்கிறார்)*

*உடனே, நான் எழுந்து ஆயிஷா(ரலி) அவர்களிடம் சென்றேன்; இப்னு உமர்(ரலி) சொன்ன ஹதீஸை அவர்களிடம் தெரிவித்தேன்.*

*“இல்லை; அல்லாஹ்வின் மீதாணையாக! “எவரோ ஒருவர் அழுவதன் காரணமாக இறந்துவிட்ட (இறைநம்பிக்கையாளரான) மனிதர் வேதனை செய்யப்படுகிறார்’ என இறைத்தூதர்(ஸல்) ஒருபோதும் கூறவில்லை. மாறாக ‘‘குடும்பத்தார் அழுவதன் காரணமாக இறைமறுப்பாளனுக்கு அல்லாஹ் இன்னும் வேதனையை அதிகப்படுத்துகிறான்’ என்றே கூறினார்கள். அல்லாஹ்வே சிரிக்கவும் வைக்கிறான்; அழவும் வைக்கிறான் (53:43). ஓர் ஆத்மாவின் (பாவச்) சுமையை மற்றோர் ஆத்மா சுமக்காது (35:18)” என ஆயிஷா(ரலி) கூறினார்.*

**நூல்: முஸ்லிம் 1693**

*குடும்பத்தார் அழுவதால் இறந்தவர் வேதனைசெய்யப்படுகிறார் என்ற நபிமொழியை ஆயிஷா(ரலி) ஒருவரின் பாவத்தை இன் னொருவர் சுமக்கமாட்டார் என்ற வசனத்தையும் அல்லாஹ்வே சிரிக்கவும் வைக்கிறான். அழவும் வைக்கிறான் என்ற வசனத்தையும் கூறி மறுத்துள்ளார்கள். எனவே, குர்ஆனுக்கு முரண் எனக் கூறி ஹதீஸ்களை மறுக்கும் வழிமுறை ஆயிஷா(ரலி) அவர்களிடமே இருந்தது என வாதிடுகிறார்கள்.*

*நபித்தோழர்கள் தவறிழைப்பார்கள். அவர்களும் மனிதர்களே. அவர்களை பின்பற்றுவது வழிகேடு எனப் பகிரங்கமாக பிரச்சாரம் செய்பவர்கள் தங்களின் ஹதீஸ் மறுப்புக்கொள்கையை பலப்படுத்த நபித்தோழர்களின் செயலை எடுத்துக்காட்டுவது ஆச்சரியமாகவே உள்ளது.*

*மேற்கண்ட சம்பவத்தை நன்கு கவனித்தால் குடும்பத்தார்கள் அழுவதால் இறந்தவர் தண்டிக்கப்படுவார் என்ற ஹதீஸை ஆயிஷா(ரலி) மறுக்கவில்லை. மாறாக அந்த ஹதீஸிற்கு குர்ஆனுக்கு முரணில்லாமல் விளக்கமே கொடுக்கிறார். உமர்(ரலி) அவர்களும் இப்னு உமர்(ரலி) அவர்களும் பொய் கூறமாட்டார்கள். ஆனால், தவறாக விளங்க வாய்ப்புள்ளது எனக் கூறி, இந்த நபிமொழிக்கு ஆயிஷா(ரலி) விளக்கமே கொடுக்கிறார்.*

*உமர்(ரலி) மற்றும் இப்னு உமர்(ரலி) ஆகியோரின் கூற்று ஆயிஷா(ரலி) அவர்களுக்கு எட்டியபோது, "பொய்யர்களோ பொய்ப்பிக்கப் பட்டவர்களோ அல்லாத இருவர் சொன்ன ஹதீஸை என்னிடம் நீங்கள் கூறுகிறீர்கள். ஆயினும், செவி தவறாகவும் விளங்கிவிடுகிறது" எனக் கூறினார்.*

***நூல்: முஸ்லிம் 1693***

*ஆனால், இந்தச் சம்பவத்தை சுட்டிக்காட்டும் ஹதீஸ் மறுப் பாளர்கள், ஆயிஷா(ரலி) செய்தது போன்று ஆதாரப்பூர்வமான ஹதீஸ்களுக்கு குர்ஆனுக்கு முரணில்லாமல் விளக்கம் கொடுப்ப தில்லை; மாறாக இவற்றை இஸ்லாமின் எதிரிகள் இட்டுக்கட்டி விட்டார்கள் எனக் கூறி ஒட்டுமொத்தமாக மறுக்கின்றனர். இது முதலில் கவனிக்க வேண்டிய ஒன்று.*

## குடும்பத்தார் அழுவதால் இறந்தவர் தண்டிக்கப்படுவார்

*ஆயிஷா(ரலி) குர்ஆனுக்கு முரண் எனக் கூறி நபிமொழியை மறுத்தார் என இவர்கள் கூறுவதை ஒரு வாதத்திற்காக நாம் ஏற்றுக் கொண்டாலும் இந்நிகழ்வு இவர்களுக்கு எதிரான கருத்தையே கூறுகிறது. ஏனென்றால், குர்ஆனுக்கு முரண் என ஆயிஷா(ரலி) மறுத்த ஹதீஸ் ஆதாரப்பூர்வமானது. அந்த ஹதீஸ் குர்ஆனுடன் முரண்படவில்லை. ஆயிஷா(ரலி) புரிந்துகொண்டதில்தான் தவறு ஏற்பட்டுள்ளது.*

*குடும்பத்தார் அழுவதால் இறந்தவர் வேதனை செய்யப்படுவார் என்ற நபிமொழியை ஒரு நபித்தோழர் மட்டும் அறிவிக்கவில்லை. இறைத்தூதர்(ஸல்) இவ்வாறு கூறினார்கள் என பல நபித்தோழர்கள் அறிவித்துள்ளார்கள்.*

*உமர்(ரலி), இப்னு உமர்(ரலி), இப்னு அப்பாஸ்(ரலி), அபூ மூஸா(ரலி), முஃகீரா(ரலி) மற்றும் அனஸ்(ரலி) ஆகிய நபித்தோழர்கள் இறைத்தூதர்(ஸல்) இவ்வாறு கூறினார்கள் என அறிவித்துள்ளார்கள். எனவே, இவர்கள் அனைவரும் இந்த நபிமொழியைத் தவறாக அறிவிக்க வாய்ப்பில்லை.*

## ஒப்பாரி வைத்து அழுவதற்கே தடை

*சப்தமிடாமல் அழுதால் அது மார்க்கத்தில் தவறில்லை. இதை இறைத்தூதர்(ஸல்) அனுமதித்துள்ளார்கள். குடும்பத்தினர் அழுவதால் என இந்த நபிமொழியில் கூறப்படும் அழுகை என்பது ஒப்பாரி வைத்து அழுவதையே குறிக்கும். இதை பின்வரும் ஹதீஸ்கள் தெளிவு படுத்துகிறது.*

*"ஒப்பாரி வைக்கப்படுவதன் காரணமாக இறந்தவர் வேதனை செய்யப்படுகிறார்" என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்*

***அறிவித்தவர்: முஃகீரா(ரலி), நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 1291***

*"ஒப்பாரி வைக்கப்படுவதால் அடக்கக்குழி (கப்று)க்குள் இருக்கும் இறந்தவர் வேதனை செய்யப்படுகிறார்" என இறைத் தூதர்(ஸல்) கூறினார்கள்.*

***அறிவித்தவர்: உமர்(ரலி), நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 1292***

*உமர் இப்னு அல்கத்தாப்(ரலி - கத்தியால்) குத்தப்பட்டபோது, அவர்களுக்காக (அவர்களின் புதல்வி) ஹஃப்ஸா(ரலி) சப்தமிட்டு அழுதார்.*

*"ஹஃப்ஸா! "சப்தமிட்டு எவருக்காக அழப்படுகிறதோ அவர் வேதனை செய்யப்படுகிறார்' என இறைத்தூதர்(ஸல்) கூறியதை நீர் அறியவில்லையா?" என உமர்(ரலி) கேட்டார்.*

*ஸுஹைப்(ரலி) சப்தமிட்டு அழுதபோதும், "ஸுஹைப்! "சப்தமிட்டு எவருக்கு அழப்படுகிறதோ அவர் வேதனை செய்யப் படுவார்' என இறைத்தூதர்(ஸல்) கூறியதை நீர் அறியவில்லையா?" எனக் கேட்டார்.* ***அறிவித்தவர்: அனஸ்(ரலி), நூல்: முஸ்லிம் 1692***

*அபூ மூஸா அல்அஷ்அரீ(ரலி) கூறினார்:*

*உமர்(ரலி - கத்தியால் குத்தப்பட்டு) காயமுற்றிருந்தபோது, "சகோதரரே' எனக் கூறியவராக ஸுஹைப்(ரலி) சப்தமிட்டு அழத் தொடங்கினார்.*

*"உயிரோடு இருப்பவர்கள் அழுவதன் காரணமாக இறந்தவர் வேதனை செய்யப்படுகிறார்' என இறைத்தூதர்(ஸல்) கூறியதை நீர் அறியவில்லையா?" என உமர்(ரலி) கேட்டார்.*

***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 1290***

*"(மக்களே!) நீங்கள் (செவிசாய்த்துக்) கேட்க மாட்டீர்களா? நிச்சயமாகக் கண்கள் அழுவதாலும் உள்ளம் கவலை கொள்வதாலும் அல்லாஹ் தண்டிப்பதில்லை; பின்பு, தம் நாவின் பால் சைகை செய்து, எனினும் இதன் காரணமாகத்தான் தண்டனையோ அருளோ வழங்குகிறான். நிச்சயமாகக் குடும்பத்தார் (ஒப்பாரி வைத்து) அழுவதால் இறந்தவர் வேதனை செய்யப்படுகிறார்" என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*

***அறிவித்தவர்: இப்னு உமர்(ரலி), நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 1304***

*நபித்தோழர்கள் பலர் அறிவிக்கும் இந்த ஹதீஸ்கள் அனைத்தும் ஒப்பாரி வைத்து அழுவதைக் குறித்தே பேசுகிறது. இந்த விளக்கம் ஆயிஷா(ரலி) அவர்களுக்கு கிடைக்காத காரணத்தால், அழுவதே தவறு என்று இந்த ஹதீஸ் கூறுவதாக தவறாக விளங்கிக் கொண்டார்கள். இதனால் அல்லாஹ்வே சிரிக்க வைக்கிறான். அவனே அழ வைக்கிறான் என்ற வசனத்தை சுட்டிக்காட்டி அழுவது தவறில்லை எனக் கூறியுள்ளார்.*

*எனவே, குர்ஆனுக்கு முரண் என்ற வாதத்திற்கு பின்னால் அறியாமைதான் இருக்கும். உண்மை ஒருபோதும் இருக்காது என்ற பேருண்மையைத்தான் ஆயிஷா(ரலி) அவர்களின் இந்த செயல் நமக்கு தெளிவுபடுத்துகிறது.*

## ஒருவரின் பாவத்தை மற்றவர் சுமக்க முடியாது

*குடும்பத்தார் அழுவதால் இறந்தவர் தண்டிக்கப்படுவார் என்ற கருத்து, ஒருவரின் பாவத்தை மற்றவர் சுமக்க முடியாது என்று கூறும் குர்ஆன் வசனத்திற்கு முரணாக இருக்கிறது என்ற வாதத்திற்கான பதிலை அறிந்துகொள்வோம்.*

இந்த ஹதீஸில் பொத்தாம் பொதுவாக உயிருடன் உள்ள யார் அழுதாலும் இறந்தவர் தண்டிக்கப்படுவார் என்று சொல்லப் படவில்லை. சில அறிவிப்புகளில் இவ்வாறு பொதுவாக வந்தாலும் இது அனைவரையும் குறிக்காது. இறந்தவரின் குடும்பத்தாரை மட்டுமே குறிக்கும். இது தெளிவாக மேலுள்ள பல அறிவிப்புகளில் விளக்கப்பட்டுள்ளது.

ஒருவர் சரியான அடிப்படையில் இஸ்லாமைத் தன் குடும்பத் தாருக்கு போதித்தால், அவர் மரணிக்கும்போது குடும்பத்தார்கள் ஒப்பாரி வைக்கமாட்டார்கள். தன் குடும்பத்தாருக்கு இஸ்லாமிய நெறிமுறையை போதிக்காமல் விட்டிருந்தாலே ஒப்பாரி வைப் பார்கள். தான் மரணிக்கப்போகிறோம் என்பதற்குரிய அறிகுறிகள் வந்துவிட்டால், தன் குடும்பத்தாரிடம் எனக்காக யாரும் ஒப்பாரி வைக்காதீர்கள் என்பதைத் தெளிவாகச் சொல்ல வேண்டும். இதைச் செய்யாவிட்டால் குடும்பத்தார் ஒப்பாரி வைப்பார்கள். இதன் காரணத்தால் இறந்தவர் வேதனை செய்யப்படுகிறார்.

தந்தை தன் பிள்ளையை திருத்தாமல் விட்டுவிட்டால், அவன் செய்யும் பாவத்தில் தந்தைக்கும் ஒரு பங்குண்டு என்பதை யாரும் மறுக்க முடியாது. இது போன்றுதான் ஒப்பாரி வைப்பது குறித்து குடும்பத்தாருக்கு எச்சரிக்கை செய்யாத காரணத்தாலே இறந்தவர் தண்டிக்கப்படுகிறார்.

இங்கே இறந்தவர் தண்டிக்கப்படுவதற்கு அவர் செய்ய வேண்டிய கடமையை செய்யத் தவறியதே காரணமாகும். அவர் செய்த தவறுக்காகவே தண்டிக்கப்படுகிறார். எனவே, இந்த ஹதீஸிற்கும் ஒருவரின் பாவத்தை இன்னொருவர் சுமக்க முடியாது என்ற வசனத்திற்கும் எந்த சம்பந்தமும் இல்லை. இவ்விரண்டிற்கும் இடையே எந்த முரண்பாடும் இல்லை.

இறந்தவர் தான் மரணிப்பதற்கு முன்பு இது குறித்து தன் குடும்பத்தாருக்கு எச்சரிக்கை செய்த பிறகும் குடும்பத்தார் ஒப்பாரி வைப்பார்களேயானால், இந்த சந்தர்ப்பத்தில் இறந்த வரை அல்லாஹ் தண்டிக்கமாட்டான். ஒருவரின் பாவத்தை இன்னொருவர் சுமக்க மாட்டார் என்ற அடிப்படை இந்த சூழ்நிலையில் பொருந்தும் என்பதில் மாற்றுக் கருத்து இல்லை.

இறந்தவர் மீதுள்ள அன்பினாலே குடும்பத்தார் ஒப்பாரி வைக்கின்றனர். ஒப்பாரி வைப்பதால் இறந்துபோன நம் உறவினருக்கு வேதனை ஏற்பட வாய்ப்புள்ளது என்பதை இவர்கள் உணர்ந்து

*விட்டால் இந்தத் தவறை செய்யமாட்டார்கள். மக்களை ஒப்பாரி வைப்பதிலிருந்து தடுப்பதற்காகவே இறைத்தூதர்(ஸல்) இவ்வாறு கூறியுள்ளார்கள். இறந்தவர்கள் விஷயத்தில் ஒவ்வொருவரின் நீதிக்கு ஏற்றவாறு அல்லாஹ் நியாயமாக தீர்ப்பளிப்பவன். அதைப் பற்றி நாம் கவலைப்படத் தேவையில்லை.*

# இமாம் புகாரீ அவர்களின் விளக்கம்

*இமாம் புகாரீ(ரஹ்) கூறிய விளக்கத்தையே நாம் கூறியுள்ளோம். இமாம் புகாரீ(ரஹ்) இந்த நபிமொழிக்கு பின்வருமாறு விளக்கம் கூறினார்கள்.*

**بَاب قَوْلِ النَّبِيِّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ يُعَذَّبُ الْمَيِّتُ بِبَعْضِ بُكَاءِ أَهْلِهِ عَلَيْهِ إِذَا كَانَ النَّوْحُ مِنْ سُنَّتِهِ لِقَوْلِ اللَّهِ تَعَالَى قُوا أَنْفُسَكُمْ وَأَهْلِيكُمْ نَارًا وَقَالَ النَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ كُلُّكُمْ رَاعٍ وَمَسْئُولٌ عَنْ رَعِيَّتِهِ فَإِذَا لَمْ يَكُنْ مِنْ سُنَّتِهِ فَهُوَ كَمَا قَالَتْ عَائِشَةُ رَضِيَ اللَّهُ عَنْهَا لَا تَزِرُ وَازِرَةٌ وِزْرَ أُخْرَى وَهُوَ كَقَوْلِهِ وَإِنْ تَدْعُ مُثْقَلَةٌ ذُنُوبًا إِلَى حِمْلِهَا لَا يُحْمَلْ مِنْهُ شَيْءٌ وَمَا يُرَخَّصُ مِنْ الْبُكَاءِ فِي غَيْرِ نَوْحٍ وَقَالَ النَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ لَا تُقْتَلُ نَفْسٌ ظُلْمًا إِلَّا كَانَ عَلَى ابْنِ آدَمَ الْأَوَّلِ كِفْلٌ مِنْ دَمِهَا وَذَلِكَ لِأَنَّهُ أَوَّلُ مَنْ سَنَّ الْقَتْلَ البخاري**

*“குடும்பத்தார் அழுவதால் இறந்தவர் வேதனை செய்யப் படுகிறார்’ எனும் நபிமொழி ஒப்பாரி வைப்பதை வழக்கமாகக் கொண்ட ஒருவன் இறக்கும்போது அவனுக்கு ஏற்படும் நிலையையே குறிக்கும். ஏனெனில், அல்லாஹ் கூறுகிறான்:*

*உங்களையும் உங்கள் குடும்பத்தாரையும் நரகத்திலிருந்து பாதுகாத்துக் கொள்ளுங்கள்.* ***அல்குர்ஆன் 66:1***

*“உங்களில் ஒவ்வொருவரும் பொறுப்பாளர்; அவர் தம் பொறுப்பு குறித்து விசாரிக்கப்படுவார்!...” என இறைத்தூதர்(ஸல்) கூறுகிறார்கள்.*

***அறிவித்தவர்: இப்னு உமர்(ரலி), நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 893***

*ஒப்பாரி வைக்கும் வழக்கமில்லாத ஒருவன் இறந்துவிட்டால் இந்த நிலை இல்லை. ஏனெனில், அவனுடைய நிலை “ஒருவர் சுமையை மற்றவர் சுமக்க மாட்டார்” என்ற (6:164) இறைவசனத்தை மேற்கோள் காட்டி ஆயிஷா(ரலி) கூறியுள்ளதைப் போன்றதாகும்.*

*அல்லாஹ் கூறுகிறான்: பளுவான(பாவச்) சுமையைச் சுமப்பவன், அதில் (சிறிதேனும்) சுமந்துகொள்ளும்படி (பிறரை) அழைத்தாலும், அதில் சிறிதளவுகூட அவ்வாறு சுமந்துகொள்ள முடியாது (35:18) மேலும், ஒப்பாரி இன்றி அழ அனுமதியுண்டு" என இமாம் புகாரீ(ரஹ்) கூறினார்கள்.*

***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 1204 ஹதீஸிற்கு முன்***

*எனவே, குர்ஆனுக்கு ஹதீஸ் முரண்படுகிறது என்ற வாதத் திற்கு பின்னால் குர்ஆன் ஒருபோதும் இருக்காது. அறியாமை தான் இருக்கும் என்ற உண்மையை அல்லாஹ் இந்த நிகழ்வில் இருந்து நமக்கு புரியவைக்கிறான்.*

*ஆயிஷா(ரலி) அறியாமல் செய்த தவறை ஆதாரமாகக் கொண்டு இறைத்தூதர்(ஸல்) அவர்களின் வார்த்தைகளை நாம் மறுக்கக்கூடாது. நாம் நபிமொழியின் பக்கமே நிற்க வேண்டும்.*

# இறந்தவர்கள் செவியுற மாட்டார்கள்

*ஆயிஷா(ரலி) கூறினார்:*

*"பத்ருப் போரில் கொல்லப்பட்ட இணைவைப்பவர்கள் அங்கு ஒரு கிணற்றில் தூக்கி எறியப்பட்டார்கள். அதன் அருகில் இறைத் தூதர்(ஸல்) நின்று கொண்டு அவர்களைப் பார்த்து, ஏதோ பேசினார்கள்.*

*''உயிரற்ற சடலங்களிடமா பேசுகிறீர்கள்?' என இறைத் தூதர்(ஸல்) அவர்களிடம் உமர்(ரலி) கேட்டார்.*

***''நான் (இப்போது) கூறுவதை அவர்கள் செவியுறு கிறார்கள்"*** *என இறைத்தூதர்(ஸல்) பதிலளித்ததை இப்னு உமர்(ரலி) அறிவித்தது போன்றதுதான் இதுவும்.*

*ஆனால், "நான் அவர்களுக்குச் சொல்லி வந்ததெல்லாம் உண்மை என இப்போது அறிகிறார்கள்" என்றுதான் இறைத் தூதர்(ஸல்) கூறினார்கள். (இப்போது நான் கூறுவதை அவர்கள் செவியுறுகிறார்கள்" என நபியவர்கள் சொல்லவில்லை.)*

*பிறகு, (இறந்தவர்கள் நாம் பேசுவதைச் செவியேற்பதில்லை என்ற தம் கருத்திற்குச் சான்றாக) ஆயிஷா(ரலி) (பின்வரும் வசனங்களை) ஓதினார்கள்:*

*இறந்தவர்களை உங்களால் செவியுறச் செய்ய முடியாது.(27:80)*

*மண்ணறைகளில் இருப்பவர்களை உங்களால் செவியுறச் செய்ய முடியாது. (35:22)*

**நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 3979**

ஆயிஷா(ரலி) குர்ஆனுக்கு முரண் எனக் கூறி ஹதீஸை மறுத்தார்கள் என்பதற்கு இதையும் ஆதாரமாக குறிப்பிடுகின்றனர். ஆனால், மேலுள்ள சம்பவத்தை நன்கு கவனித்தால், இப்னு உமர்(ரலி) அறிவித்த ஹதீஸை ஆயிஷா(ரலி) மறுக்கவில்லை. மாறாக, அந்த சம்பவத்தில் இடம்பெற்ற ஒரு வாசகத்திற்குத்தான் விளக்கம் தருகிறார்கள்.

ஹதீஸ்களை இவர்கள் மறுப்பதற்காக எடுத்து வைக்கும் வாதத்திற்கும், ஹதீஸில் இடம்பெற்ற ஒரு வார்த்தைக்கு ஆயிஷா(ரலி) விளக்கம் சொன்னதற்கும் எந்த சம்பந்தமும் இல்லை. இவர்கள் செய்கிற செயலும் ஆயிஷா(ரலி) செய்த செயலும் வெவ்வேறாக இருக்கும் நிலையில் அதையே ஆதாரமாக வைப்பது, கன்று குட்டிக்கும் கழுதை வாலுக்கும் முடிச்சுபோடும் செயலாகும்.

# விதிக்கும் விதிவிலக்கிற்கும் இடையே முரண்பாடு இல்லை

பத்ரு போரில் கொல்லப்பட்ட எதிரிகள் கிணற்றில் போடப்பட்டபோது, இறைத்தூதர்(ஸல்) பேசிய பேச்சை இறந்துபோன அந்த எதிரிகள் செவியுற்றார்கள் என்று கூறும் நபிமொழிக்கும் இறந்தவர்கள் செவியுறச் செய்ய முடியாது என்ற வசனத்திற்கும் இடையே எந்த முரண்பாடும் இல்லை. பொதுவான விதிகளில் விதி விலக்கும் இருக்கும். விதி வேறு விதிவிலக்கு வேறு எனப் புரிந்து கொள்ள வேண்டுமே தவிர, விதியைக் கொண்டு விதிவிலக்கை மறுக்கக் கூடாது.

உதாரணமாக மனிதர்கள் தாய் தந்தை மூலமே பிறக்க முடியும் என்பது பொது விதி. ஆனால், இந்த விதியில் ஆதம்(அலை) அவர்களும் ஈசா(அலை) அவர்களும் வரமாட்டார்கள். இவ்விருவரும் விதிவிலக்கலானவர்கள். இது போன்றே பத்ரு போரில் கொல்லப்பட்ட எதிரிகள் செவியுற்றதையும் விதிவிலக்கு எனப் புரிந்து கொள்ள வேண்டும்.

உம்மால் செவியுறச் செய்ய முடியாது என்றுதான் குர்ஆன் வசனம் இருக்கிறது. என்னாலும் செவியுறச் செய்யமுடியாது

என அல்லாஹ் கூறவில்லை. பத்ருப் போரில் அல்லாஹ்தான் அவர்களைச் செவியுறச் செய்தான்; நபி(ஸல்) செவியுறச் செய்ய வில்லை.

இறந்தவர்களை உம்மால் செவியுறச் செய்ய முடியாது என்ற வசனம் இறந்தவர்கள் செவியுறமாட்டார்கள் என்ற பொதுவிதி குறித்துப் பேசுகிறது. இறந்தவர்கள் அனைவரும் செவியுறுவார்கள் எனக் கூறுவதுதான் குர்ஆனுக்கு முரண்.

இவ்வாறு கூறாமல் இறந்தவர்களில் குறிப்பிட்டவர்களை இறைவன் செவியுறச் செய்துள்ளான் என இறைத்தூதர்(ஸல்) கூறினால், அது பொதுவிதியிலிருந்து விதிவிலக்காக அமைந்துள்ளது என்பதைப் புரிந்துகொள்ள வேண்டும்.

எதிரிகளை இழிவுபடுத்துவதற்காகவே இறைத்தூதர்(ஸல்) பேசியதை அவர்களைச் செவியுறும்படி அல்லாஹ் செய்தான். அல்லாஹ்விற்கு இந்த ஆற்றலும் அதிகாரமும் உள்ளது. இதில் சந்தேகப்படுவது அல்லாஹ்வின் அதிகாரத்தை குறைத்து மதிப்பிடுவதாகும்.

இதன் காரணமாகவே "நான் கூறுவதை இப்போது அவர்கள் செவியுறுகிறார்கள்" என்ற நபியின் கூற்றுக்கு நான் கூறியதை உண்மை என அவர்கள் இப்போது அறிகிறார்கள் என ஆயிஷா(ரலி) கூறிய விளக்கத்தை இஸ்லாமிய அறிஞர்கள் ஏற்கவில்லை. உண்மையில் அது எப்போதும் ஏற்புடையதாகவும் இல்லை.

எனவே, குர்ஆனுக்கு முரண்படுகிறது என்ற இவர்களின் வாதத்திற்கு பின்னால் குர்ஆன் இல்லை. இவர்களின் அறியாமைதான் உள்ளது. ஆனால், அன்னை ஆயிஷா(ரலி) அவர்களிடம் இந்த அறியாமை இல்லை. காரணம், இன்று இவர்களுக்குக் கிடைத் துள்ளது போல அன்னை ஆயிஷா(ரலி) அவர்களுக்கு ஒட்டு மொத்த ஹதீஸ்களோ அவற்றிற்கான விளங்கங்களோ கிடைக்க வில்லை; கிடைத்திருந்தால் அவர்களிடம் இந்த தடுமாற்றம் வந்து இருக்காது. அவர்கள் பிடிவாதக் குணம் கொண்டவர்களும் அல்ல.

## சகுனம் கிடையாது

இரண்டு மனிதர்கள் ஆயிஷா(ரலி) அவர்களிடம் வந்து, "சகுனம் என்பது பெண், கால்நடை, வீடு ஆகியவற்றில் மட்டும்தான் இருக்கிறது' என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள் என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்துள்ளாரே?" என கேட்டார்கள்.

*உடனே அவர்கள் மேலும் கீழும் பார்த்து விட்டு, "அபுல் காசிமிற்கு (இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு) இந்தக் குர்ஆனை அருளியவன் மீது சத்தியமாக! இப்படி இறைத்தூதர்(ஸல்) சொல்ல வில்லை. மாறாக "அறியாமைக் கால மக்கள் சகுனம் என்பது பெண், கால்நடை, வீடு ஆகியவற்றில் உண்டு எனக் கூறி வந்தார்கள்" என்றே இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள் எனக் கூறிவிட்டு "இந்தப் பூமியிலோ, உங்களிடமோ எந்தத் துன்பம் நிகழ்ந்தாலும் அதை நாம் உருவாக்கு வதற்கு முன்பே பதிவேட்டில் இல்லாமல் இருக்காது. இது அல்லாஹ்வுக்கு எளிதானது" (57:22) என்ற வசனத்தை ஓதினார்கள்.*

***அறிவிப்பவர்: அபூ ஹஸ்ஸான்(ரஹ்) நூல்: அஹ்மத் 24894***

*குர்ஆனுக்கு முரண்பட்டால், ஹதீஸை மறுக்க வேண்டும் என்பதற்கு இதையும் ஆதாரமாக குறிப்பிடுகின்றனர். ஆதாரப் பூர்வமான செய்தி குர்ஆனுக்கு முரண்படாது என்பதுதான் நம் கொள்கையாகும். ஆதாரமற்ற பலவீனமான செய்தி குர்ஆனுக்கு முரண்படாது என்று நாம் கூறவில்லை.*

*பெண், கால்நடை, வீடு ஆகிய மூன்று விஷயங்களில் சகுனம் பார்க்கலாம் என இறைத்தூதர்(ஸல்) கூறியதாக வரும் அறிவிப்பு பலவீனமானது. இது பலவீனம் என்பதை குர்ஆனுக்கு முரண் என்ற அடிப்படையில் நாம் முடிவு செய்யவில்லை. மாறாக ஹதீஸ் ஆதாரப்பூர்வமாக அமைய ஹதீஸ் கலையில் சொல்லப்பட்ட விதிகளின் அடிப்படையில் ஆராயும்போது, அந்த நிபந்தனைகளுக்கு உட்பட்டதாக இந்த அறிவிப்பு இல்லை. எனவே, இதை பலவீனம் என்கிறோம். பலவீனமாக உள்ள ஹதீஸ் குர்ஆனுக்கு முரண் படலாம்; முரண் படாமலும் போகலாம். இங்கு விஷயம் இது அல்ல.*

*மேற்கண்ட சம்பவத்தில் பெண், கால்நடை, வீடு ஆகிய மூன்று விஷயங்களில் சகுனம் இருப்பதாக இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள் என அபூ ஹுரைரா(ரலி) கூறியதாக இருவர் ஆயிஷா(ரலி) அவர்களிடம் தெரிவித்துள்ளார்கள். அந்த இருவரும் யார்? அவர்களின் நம்பகத்தன்மை எப்படிப்பட்டது? அவர்கள் இச் செய்தியை அபூ ஹுரைரா(ரலி) அவர்களிடம் சரியாக நேரடியாக கேட்டார்களா? இந்த விஷயங்கள் எதுவும் தெளிவுபடுத்தப்பட வில்லை. இதன் காரணத்தால் அந்த இருவரின் அறிவிப்பும் பலவீன மானதாகும்.*

*எனவே, அன்னை ஆயிஷா(ரலி) ஆதாரப்பூர்வமான ஹதீஸை குர்ஆனுக்கு முரண் என்று மறுத்தார்கள் என வாதிடுவதற்கு*

*இதில் எந்த முகாந்தரமும் இல்லை. இறைத்தூதர்(ஸல்) அவர்களின் பெயரால் ஆதாரமற்ற அடிப்படையில் வரும் செய்தி விஷயத்திலேயே ஆயிஷா(ரலி) இத்தகைய விமர்சனத்தை செய்துள்ளார்.*

*இந்த மூன்று விஷயங்களிலும் சகுனம் உண்டு என்று ஸஹீஹ் அல் புகாரீயில் உள்ள பின்வரும் செய்தி கூறுகிறது. இது ஆதாரப்பூர்வமான ஹதீஸ் என்றும் இது குர்ஆனுக்கு முரண்படுகிறது. எனவே, ஸஹீஹான ஹதீஸ் குர்ஆனுடன் முரண்படும் என்றும் வாதிடுகின்றனர்.*

*“தொற்றுநோய், பறவை சகுனம் கிடையாது. அப சகுணம் (உண்டு என்றால்) மனைவி, வீடு, வாகனம் ஆகிய மூன்றில்தான் இருக்கும்” என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*

***அறிவித்தவர்: இப்னு உமர்(ரலி), நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 5753***

*இச்செய்தி ஸஹீஹ் அல் புகாரீயில் இருந்தாலும் ஹதீஸ் கலை விதியின் அடிப்படையில் இது ஷாத் என்ற வகையைச் சார்ந்த பலவீனமான அறிவிப்பாகும்.*

*ஹதீஸ் ஆதாரப்பூர்வமானதாக அமைய அதன் அறிவிப் பாளர்கள் நம்பகமானவர்களாக இருப்பது மட்டும் நிபந்தனை அல்ல. நம்பகமான ஒருவர் மட்டும் தனித்திருந்து தன்னை விட பலமானவர்களுக்கு மாற்றமாக அறிவிக்கக் கூடாது என்ற நிபந்தனை யும் உள்ளது. ஒரு நம்பகமானவர் பலருக்கு மாற்றமாக அறிவிப்பதே ஷாத் என்ற பலவீனமான வகையைச் சார்ந்ததாகும்.*

*இப்னு உமர்(ரலி) வழியாக இமாம் ஸுஹ்ரீ(ரஹ்) அறிவிக்கும் அறிவிப்பில் மட்டுமே சகுனம் உண்டு என்ற கருத்து கூறப் பட்டுள்ளது. ஆனால், இப்னு உமர்(ரலி) அவர்களிடமிருந்து மற்றவர்கள் அறிவிக்கையில் சகுனம் என்பது இந்த மூன்று உட்பட எதிலும் கிடையாது என்றே கூறியுள்ளனர்.*

*மேலும் ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி), ஸஅத் இப்னு மாலிக்(ரலி), ஜாபிர்(ரலி) ஆகிய நபித்தோழர்களும் பெண், குதிரை, வீடு ஆகிய விஷயங்களில் சகுனம் இல்லை என்று இறைத்தூதர்(ஸல்) கூறி யதாகவே அறிவித்துள்ளனர். இந்த விமர்சனத்தை இமாம் அல்பானீ தம்முடைய சில்சிலத்துஸ் ஸஹீஹா என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார்.*

# அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி)

*இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு அருகில் மக்கள் சகுனம் குறித்துப் பேசியபோது, "சகுனம் எதிலேனும் இருக்குமானால், வீட்டிலும், பெண்ணிலும், குதிரையிலும் இருக்க வேண்டும்" என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*

***அறிவித்தவர்: இப்னு உமர்(ரலி), நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 5094***

இந்த நபிமொழி கூறும் கருத்தை சரியாக புரிந்துகொள்ள வேண்டும். பெண்ணிலும், குதிரையிலும், வீட்டிலும் சகுனம் உள்ளது என்று இந்த நபிமொழி கூறவில்லை. மாறாக சகுனம் எதிலாவது இருக்குமானால், இந்த மூன்றில் இருக்க வேண்டும் என்றே கூறுகிறது. இந்த வாசகம் இந்த மூன்று உட்பட எதிலும் சகுனம் இல்லை என்ற கருத்தையே கூறுகிறது.

ஒருவர் மற்றவருக்கு ஸஜ்தா செய்வதை நான் அனுமதிப்பதாக இருந்தால், மனைவி தன் கணவனுக்கு ஸஜ்தா செய்யுமாறு நான் உத்தரவிட்டிருப்பேன் என இறைத்தூதர்(ஸல்) கூறிய ஹதீஸ் திர்மிதீயில் உள்ளது.

விதியை முந்தக்கூடியது ஒன்று இருக்குமானால் கண்ணேறு விதியை முந்தி இருக்கும் என இறைத்தூதர்(ஸல்) கூறிய ஹதீஸ் முஸ்லிமில் உள்ளது. கணவன் மனைவி உட்பட யாரும் யாருக்கும் சிரம்பணியக் கூடாது. கண்ணேறு உட்பட எதுவும் விதியை முந்தாது என்பதே இந்த ஹதீஸ்களின் கருத்தாகும்.

அல்லாஹ்விற்கு மகன் இருந்தால் நானே முதலில் அவரை வணங்குவேன் என நபியே கூறுங்கள் என குர்ஆன் வசனம் கூறுகிறது.

*அளவற்ற அருளாளனுக்கு மகன் இருந்தால் நானே முதலில் வணங்கக்கூடியவராக இருப்பேன் எனக் கூறுங்கள்.*

***அல்குர்ஆன் 43:81***

அல்லாஹ்விற்கு மகன் உண்டு. அவரை நாம் வணங்க வேண்டும் என்று இதை புரிய மாட்டோம். மாறாக அல்லாஹ்விற்கு மகன் இல்லை. எனவே, அல்லாஹ்வைத் தவிர யாரையுமே வணங்கக் கூடாது என்றே புரிந்து கொள்வோம்.

இது போன்றே சகுனம் எதிலாவது இருக்குமானால் பெண்ணிலும், குதிரையிலும், வீட்டிலும் தான் இருக்கும் என்ற

நபிமொழியை புரிந்துகொள்ள வேண்டும். மனைவி, வீடு, வாகனம் இந்த மூன்றும் ஒவ்வொரு மனிதனுக்கும் அத்தியாவசியம். மனிதனோடு ஒன்றியிருக்கிற இவற்றிலேயே சகுனம் இல்லை எனும்போது மற்ற எதிலும் சகுனம் பார்ப்பது எந்த வகையிலும் கூடாது என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.

## ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி)

''சகுனம் எதிலாவது இருக்குமானால் பெண்ணிலும், குதிரையிலும், வீட்டிலும் தான் இருக்க வேண்டும்'' என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.

**அறிவித்தவர்: ஸஹ்ல் இப்னு ஸஅத் அஸ் ஸாயிதீ(ரலி),**
**நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 2859**

## ஜாபிர்(ரலி)

''சகுனம் எதிலேனும் இருக்குமானால், வீட்டிலும் பணியாளரிலும் குதிரையிலும்தான் இருக்க வேண்டும்'' என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.

**அறிவித்தவர்: ஜாபிர்(ரலி), நூல்: முஸ்லிம் 4483**

## ஸஅத் இப்னு மாலிக்(ரலி)

''ஆந்தை சகுனம் கிடையாது. தொற்று நோய் கிடையாது. பறவை சகுனம் கிடையாது. எதிலாவது சகுனம் இருக்குமேயானால் குதிரை, பெண், வீடு ஆகியவற்றில் இருக்க வேண்டும்'' என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.

**அறிவித்தவர்: ஸஅத் இப்னு மாலிக்(ரலி), திர்மிதீ 3420**

எனவே, பெண், வீடு, குதிரை இம்மூன்றிலும் சகுனம் உண்டு என்று கூறும் அறிவிப்பு ஷாத் என்ற பலவீனமான அறிவிப்பாகும். பலவீனமான அறிவிப்பு குர்ஆனுக்கு முரண்படாது என்று நாம் சொல்லவில்லை. ஆதாரப்பூவர்மான ஹதீஸ் குர்ஆனுடன் முரண்படாது என்றே நாம் கூறுகிறோம்.

குர்ஆனுக்கு முரண் என ஆயிஷா(ரலி) கூறி, ஹதீஸ்களை மறுத்து குழப்பத்தை ஏற்படுத்தவில்லை. இன்று குர்ஆனுக்கு முரண்படுகிறது எனக் கூறி ஹதீஸ்களை மறுப்பவர்கள், தாங்கள் வழிகெட்டுப்போய்விட்டு, முஸ்லிம்களை முஷ்ரிக்குகள் எனக்

கூறி, கொள்கையில் பெரும் குழப்பத்தை ஏற்படுத்தி வருகிறார்கள். இஸ்லாமிய வரலாற்றில் வழிகெட்ட பிரிவினர் செய்த வேலையைத் தானே இவர்களும் செய்து கொண்டிருக்கிறார்கள்.

## அறிஞர்கள் செய்த தவறு ஆதாரமாகுமா?

''ஆதாரப்பூர்வமான ஹதீஸ்களை குர்ஆனுக்கு முரண் எனக் கூறி, நாங்கள் மட்டும் மறுக்கவில்லை. எங்களுக்கு முன்பு அறிஞர்கள் என அறியப்பட்ட சிலரும் இந்த அடிப்படையில் ஹதீஸ்களை மறுத்துள்ளார்கள்" எனக் கூறி, தங்களின் வழிகேட்டை நியாயப்படுத்த வலு சேர்க்கிறார்கள்.

குர்ஆனுக்கு முரண் என இன்று இவர்கள் கூறி மறுக்கும் ஹதீஸ்களை இவர்கள் சுட்டிக்காட்டும் அந்த அறிஞர்கள் யாரும் மறுக்கவில்லை. மாறாக இந்த ஹதீஸ்களை அந்த அறிஞர்கள் ஏற்றுத்தான் வாழ்ந்தார்கள்.

இதற்கு முற்றிலும் நேர்மாறாக இவர்கள் சுட்டிக்காட்டும் அறிஞர்கள் மறுத்துள்ள ஹதீஸ்களை இன்று இவர்கள் மறுக்காமல், அவற்றை ஆதாரப்பூர்வமானவை எனக் கூறிவருகிறார்கள்.

"நீங்கள் குறிப்பிட்டுள்ள அறிஞர்கள் மறுத்த ஹதீஸ்களை நீங்களும் மறுக்கிறீர்களா?'' என இவர்களிடம் கேட்டால், அவர்கள் தவறாக புரிந்துகொண்டு மறுத்துவிட்டார்கள்; நாங்கள் இவற்றை மறுக்கமாட்டோம் எனக் கூறுகிறார்கள்.

முன் சென்ற சிலர் ஆதாரப்பூர்வமான ஹதீஸ்கள் குர்ஆனுக்கு முரண்படுகிறது எனக் கூறி அவற்றை மறுத்துள்ளனர். அவர்கள் மறுத்ததை நாங்கள் மறுக்காவிட்டாலும், அவர்களின் வழியில், எங்களுக்கு முரணாகத் தோன்றுகிற ஹதீஸ்களை நாங்கள் மறுப்போம் எனக் கூறுகின்றனர்.

ஹதீஸ்களை அவர்கள் மறுத்தது தவறுதான் என்பதை இவர்கள் ஒப்புக்கொண்டும் கூட, தவறு செய்தவர்களிடமிருந்து ஆதாரம் காட்ட முற்படுகிறார்கள். இதுதான் தவறுக்கு மேல் தவறு!

ஆதாரப்பூர்வமான ஹதீஸ்களை மறுப்பதில் சில அறிஞர்கள் தவறு செய்துவிட்டார்கள் என்றால், இது அவர்களின் அறியாமையைத்தான் சுட்டுகிறது; ஆதாரமான ஹதீஸ்களில் பிரச்னை ஏதும் இல்லை.

*எனவே, நாம் இன்று குர்ஆனுக்கு முரண் என்பது நம் அறிவின் மையால் தானே தவிர ஆதாரமான ஹதீஸ்களில் எந்தப் பிரச்னையும் இல்லை என இதன் மூலம் படிப்பினை பெறவேண்டும்.*

*ஆதாரப்பூர்வமான நபிமொழியை யார் மறுத்தாலும் அது வழிகேடுதான். இறைத்தூதர்(ஸல்) அவர்களின் சொல்லை விட வேறு யாருடைய சொல்லும் பெரிதல்ல என்றே ஒவ்வொரு முஃமினும் நம்ப வேண்டும்.*

## ஹதீஸ்களை மறுப்பதற்கு நபி(ஸல்) அனுமதி கொடுத்தார்களா?

*ஆதாரப்பூர்வமான ஹதீஸ்களை மறுப்பதற்கு இறைத் தூதர்(ஸல்) அவர்களே அனுமதிகொடுத்துள்ளார் என்றும் கூறுகின்றனர். இதற்கு இவர்கள் பின்வரும் செய்தியை ஆதாரமாகக் காட்டுகின்றனர்.*

*இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்: என்னைப் பற்றி (ஏதேனும் ஒரு) செய்தியை நீங்கள் கேள்விப்படும்போது அச்செய்தியை உங்கள் உள்ளங்கள் ஒப்புக் கொள்ளுமானால், இன்னும் உங்கள் தோல்களும் முடிகளும் (அதாவது உங்கள் உணர்வுகள்) அதற்குப் பணியுமானால், இன்னும் அச்செய்தி உங்களு(டைய வாழ்க் கைக்கு)க்கு நெருக்கமாக இருப்பதாக நீங்கள் கருதினால், அ(தைக் கூறுவ)தில் நானே உங்களில் மிகத் தகுதி வாய்ந்தவன். என்னைப் பற்றி (ஏதேனும் ஒரு) செய்தியை நீங்கள் கேள்விப்படும்போது, அச்செய்தியை உங்கள் உள்ளங்கள் வெறுக்குமானால், இன்னும் உங்கள் தோல்களும் முடிகளும் (அதற்குக் கட்டுப்படாமல் அதை விட்டு) விரண்டு ஓடுமானால், இன்னும் அச்செய்தி உங்களு(டைய வாழ்க்கை)க்கு (சாத்தியப்படுவதை விட்டும்) தூரமாக இருப்பதாக நீங்கள் கருதினால், உங்களில் நானே அதை விட்டும் மிகத் தூரமானவன்.*

***அறிவித்தவர்: அபூ உஸைத்(ரலி), நூல்: அஹ்மத் 15478***

*ஆதாரப்பூர்வமான நபிமொழிகளை குர்ஆனுக்கு முரண் படுகிறது என்று கூறி மறுக்கலாம் எனக் கூறும் இவர்கள், இச் செய்தியைத்தான் தங்களின் பலமான ஆதாரமாக வைக்கிறார்கள். நம் உள்ளத்திற்கும் உணர்விற்கும் பொருந்தி வரும் செய்திகளே இறைத்தூதர்(ஸல்) கூறியவை; உள்ளத்திற்கும் உணர்விற்கும்*

பொருந்தாத செய்திகள் இறைத்தூதர்(ஸல்) கூறாதவை. ஸஹீஹ் அல் புகாரீ, முஸ்லிம் போன்ற ஹதீஸ் நூல்களில் உள்ள பல ஸஹீஹான ஹதீஸ்களை எங்கள் உள்ளங்களும் உணர்வுகளும் ஏற்க மறுக்கின்றன. எனவே, அவை மறுக்கப்பட வேண்டும் என இவர்கள் வாதிடுகின்றனர்.

இது வரை இஸ்லாமிய வரலாற்றில் குறை சொல்லப்படாத ஆதாரப்பூர்வமான வலுவான ஹதீஸ்களை பொய் எனத் தூக்கி எறிவதற்கு இச்செய்தியைத்தான் ஆதாரமாக்குகிறார்கள். அப்படியானால் இந்த ஹதீஸ் மிக வலுவான செய்தியாக இருக்க வேண்டும்.

ஆனால், இவர்கள் ஆதாரமாக முன் வைக்கும் இச்செய்தியின் உண்மை நிலை என்னவென்றால், இது ஹதீஸ்கள் தொகுக்கப் பட்ட காலம் முதல் இன்று வரை பல சிறந்த அறிஞர்களால் விமர்சிக்கப்பட்ட செய்தியாகும். அதிகமான மக்கள் இந்த உண்மையை அறியாமல் இருக்கும் நிலையில், ஹதீஸ் கலை அறிஞர்கள் அனைவராலும் அங்கீகரிக்கப்பட்ட ஆதாரப்பூர்வமான செய்தி என தவறாக இன்று இவர்கள் சித்தரித்து வருகிறார்கள்.

இதன் அறிவிப்பாளர் தொடரிலும் எந்த விமர்சனமும் இல்லை என்று இவர்கள் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். எனவே, இதன் உண்மை நிலையை அவசியம் அறிந்து கொள்ளுங்கள்.

## சிந்திக்க வேண்டிய அம்சங்கள்

1. இச்செய்தியில் இறைத்தூதர்(ஸல்) அவர்களைப் பற்றி வரும் செய்தி குர்ஆனுக்கு முரணாக இருந்தால், அதனை மறுக்க வேண்டும் என்ற அளவுகோல் சொல்லப்படவில்லை. மாறாக உள்ளத்திற்கும் உணர்வுக்கும் மாற்றமாக இருப்பதைப் பற்றியே பேசுகிறது. அப்படியானால் நம் சுய சிந்தனையையும் சுய உணர்வையும் காரணம் காட்டி ஸஹீஹான ஹதீஸ்களை மறுக்கலாமா?

2. குர்ஆனுக்கு முரண் என்ற பெயரில் ஹதீஸ்கள் கணக்கு வழக்கின்றி நாளுக்கு நாள் மறுக்கப்பட்டுக்கொண்டிருக்கும் நிலையில், இனி உள்ளத்திற்கும் உணர்விற்கும் மாற்றமாக இருப்பதை வைத்து ஹதீஸ்களை மறுத்தால் நபிமொழிகளின் நிலை என்னவாகும்?

3. *சுய உணர்வும் சுய சிந்தனையும் தான் ஹதீஸ்களை சரியானது. பலவீனமானது என்று தீர்மானிக்கும் அளவுகோல் என்றால் அறிவிப்பாளர் நம்பகமானவரா? நினைவாற்றல் உள்ளவரா? மற்றவரை சந்தித்துள்ளாரா? என்று பார்க்க வேண்டிய அவசியமில்லையே! மொத்தத்தில் ஹதீஸ் கலையையும் அதனுடன் தொடர்புள்ள அனைத்து இஸ்லாமிய நூல்களையும் நாம் புறக்கணித்துவிடலாமா?*

4. *இந்த ஹதீஸை வைத்து ஸஹீஹான ஹதீஸ் நம் உணர்வுக்கு மாற்றமாக இருந்தால் அதை ஏற்றுக்கொள்ளக் கூடாது எனக் கூறினால், பலவீனமான ஒரு ஹதீஸின் பொருள் நம் உணர்வுக்கு சரியாகத் தெரிந்தால், அதை இறைத்தூதர்(ஸல்) சொன்னதாக நாம் ஏற்றுக்கொள்ளலாமா?*

5. *இச்செய்தி சகோதரர் பீஜேவை பார்த்து மட்டும் பேசவில்லை. ஒட்டுமொத்த உலக முஸ்லிம்களையும் நோக்கிப் பேசுகிறது. அப்படியானால் மக்களில் யார் வேண்டுமானாலும் என் உணர்வுக்கும் உள்ளத்திற்கும் இந்த ஹதீஸ் எதிராக உள்ளது எனக் கூறி, பலவீனமானது என முடிவு செய்யலாமா? முடிவு செய்யக் கூடாது என்றால், பீஜேவின் உள்ளத்தையும் உணர் வையும் மட்டும் வைத்து ஹதீஸ்களை பலவீனமாக்க வேண்டுமா?*

## நபியின் கூற்றல்ல இது

*இச்செய்தியின் அறிவிப்பாளர் தொடரை மேலோட்டமாகப் பார்த்தால் இது சரியான செய்தியைப் போல் தெரியும்.ஆனால், இதைச் சற்று ஆழமாக ஆய்வு செய்தால் மட்டுமே இதில் உள்ள மறைமுகமான குறைகள் தெரியவரும். வெளிப்படையாகத் தெரியாமல் நுட்பமாக உள்ள குறைக்கே இல்லத் என ஹதீஸ் கலையில் சொல்வார்கள். இந்த நுட்பமான குறையை அறியாத காரணத்தால் சில இஸ்லாமிய அறிஞர்கள் இதைச் சரியானது என்று கூறியுள்ளனர். ஆனால், இறைத்தூதர்(ஸல்) அவர்களின் கூற்றாக வரும் இந்த அறிப்பு தவறானது.இது உபை இப்னு கஅப்(ரலி) யின் கூற்று என்பதே சரி என ஹதீஸ் கலையில் கரைகண்ட இமாம் புகாரீ(ரஹ்) கூறியுள்ளார்கள்.*

# இமாம் புகாரீ

التاريخ الكبير (5/ 415)

عن بكير عن عبد الملك بن سعيد حدثه عن عباس بن سهل عن ابى رضى الله عنــه إذا بلغكم عن النبي صلى الله عليه وسلم ما يعرف ويلين الجلد فقد يقول الــنبي صــلى الله عليه وسلم الخير (3) ولا يقول (3) الا الخير، وهذا اشبه.

*"இறைத்தூதர்(ஸல்) அவர்களைப் பற்றி உணர்வும் உள்ளமும் ஏற்றுக்கொள்ளும் செய்தி உங்களுக்கு கிடைத்தால் இறைத்தூதர் (ஸல்) நன்மையைத்தான் சொல்வார்கள். நன்மையைத் தவிர வேறு எதையும் சொல்லமாட்டார்கள் என்று உபை(ரலி) அவர்களின் கூற்றாக வரும் அறிவிப்பே சரியானது" என இமாம் புகாரீ(ரஹ்) கூறினார்கள்.*

***நூல்: தாரீகுல் கபீர் (பாகம்: 5 பக்கம்: 415)***

*இந்த ஹதீஸை அப்துல் மலிக் என்பாரிடமிருந்து ரபீஆ இப்னு அபீ அப்திர் ரஹ்மான் என்பவரும் புகைர் இப்னு அஷஜ் என்பவரும் அறிவிக்கின்றனர். ரபீஆவை விட புகைர் நம்பகத் தன்மையில் மிக வலுவானவர். ரபீஆ மட்டுமே இதை இறைத்தூதர் (ஸல்) அவர்களின் கூற்றாக அறிவிக்கிறார். ஆனால், இவரை விட நம்பகமானவரான புகைர் இதை உபை இப்னு கஅப்(ரலி) அவர்களின் கூற்றாக அறிவித்துள்ளார். இந்த அடிப்படையில் நபியின் கூற்றாக அறிவிக்கும் ரபீஆவின் அறிவிப்பு மஃலூல் (குறை உள்ளது) என பல அறிஞர்கள் கூறியுள்ளனர்.*

# இமாம் அபூ ஜஃபர் தஹாவீ(ரஹ்)

*ஹிஜ்ரீ இரண்டாம் நுற்றாண்டில் பிறந்த இமாம் அபூ ஜஃபர் தஹாவீ(ரஹ்) பல ஆதாரப்பூர்வமான நபிமொழிகளை குறைசொன்னவர்களுக்கு பதிலளிக்கும் வகையில், ஷரஹு முஷ்கிலில் ஆஸார் (சிக்கல் உள்ளதாக கருதப்படும் ஹதீஸ்களுக்கு விளக்கம்) என்ற நூலைத் தொகுத்தார். அந்த நூலில் அவர்கள் இந்த ஹதீஸை பதிவு செய்துவிட்டு இந்த ஹதீஸின் அறிவிப்புகளுக் கிடையில் உள்ள இந்த முரண்பாட்டை சுட்டிக்காட்டியுள்ளார்.*

شرح مشكل الآثار (15/ 344)

هَكَذَا رَوَى رَبِيعَةُ هَذَا الْحَدِيثَ عَنْ عَبْدِ الْمَلِكِ بْنِ سَعِيدٍ، وَقَدْ رَوَاهُ بُكَيْرُ بْنُ عَبْدِ اللهِ بْنِ

الْأَشَجِّ، عَنْ عَبْدِ الْمَلِكِ بْنِ سَعِيدٍ هَذَا، فَخَالَفَهُ فِي إِسْنَادِهِ وَمَتْنِهِ

*“இந்த ஹதீஸை ரபீஆ என்பவர் அப்துல் மலிகிடமிருந்து இவ்வாறே அறிவித்துள்ளார். ஆனால், புகைர் இப்னு அப்தில்லாஹ் இப்னி அஷஜ் என்பவர் இதே அப்துல் மலிகிடமிருந்து அறிவிக்கையில் இதற்கு மாற்றமான அறிவிப்பாளர் தொடரையும் தகவலையும் கூறியுள்ளார்” என இமாம் அபூ ஜஃபர் தஹாவீ(ரஹ்) கூறினார்கள்.*

***நூல்: ஷரஹு முஷ்கிலில் ஆஸார் (பாகம் 15 பக்கம் 344)***

## *இமாம் பைஹகீ(ரஹ்)*

*ஹிஜ்ரீ ஐந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த இமாம் பைஹகீ(ரஹ்) அவர்களும் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் கூற்றாக வரும் இந்த அறிவிப்பு பலவீனமானது என்று கூறியுள்ளார்கள்.*

مفتاح الجنة (ص: **26**)

**الله صلى الله عليه و سلم ما يعرف وتلين له الجلود فقد يقول النبي صلى الله عليه و سلم الخير ولا يقول إلا الخير قال البيهقي قال البخاري وهذا أصح يعني أصح من رواية من رواه عن أبي حميد أو أبي أسيد وقد رواه ابن لهيعة عن بكير بن الأشج عن عبد الملك بن سعيد عن القاسم بن سهيل عن أبي بن كعب قال ذلك بمعناه فصار الحديث المسند معلولا وعلى الأحوال كلها حديث رسول الله صلى الله عليه و سلم الثابت عنه قريب من العقول موافق للأصول لا ينكره عقل من عقل عن الله الموضع الذي وضع به رسول الله صلى الله عليه و سلم من دينه وما افترض على الناس من طاعته ولا ينفر منه قلب من اعتقد تصديقه فيما قال وإتباعه فيما حكم به وكما هو جميل حسن من حيث الشرع جميل في الأخلاق حسن عند أولي الألباب هذا هو المراد بما عسى يصح من ألفاظ هذه الأخبار**

*“நபியின் கூற்றாக வரும் அறிவிப்பை விட உபை(ரலி) அவர்களின் கூற்றாக வரும் அறிவிப்பே சரியானது என இமாம் புகாரீ(ரஹ்) கூறியுள்ளார்.*

*எனவே, நபியின் கூற்றாக வரும் செய்தி மஃலூல் (பலவீன மானது) ஆகும். எப்படியானாலும் இறைத்தூதர்(ஸல்) கூறியதாக வந்த ஆதாரப்பூர்வமான செய்திகள் அனைத்தும் அறிவுக்கு நெருக்க*

*மானதாகவும் அடிப்படைகளுடன் உடன்படக் கூடியதாகவுமே உள்ளது.*

*அல்லாஹ் தன் மார்க்கத்தில் தன் தூதருக்கு எத்தகைய அந்தஸ்த்தை வழங்கினான் என்பதையும் அவருக்கு கட்டுப்பட்டு நடக்குமாறு மக்களுக்கு அல்லாஹ் கடமையாக்கியதையும் அறிந்த எவரின் அறிவும் இந்த ஹதீஸ்களை மறுக்காது.*

*இறைத்தூதர்(ஸல்) என்ன சொன்னாலும் அது உண்மை என்றும், அவர்கள் எப்படி தீர்ப்பளித்தாலும் அவர்களுக்கு கட்டுப் பட வேண்டும் என்றும் நம்பக் கூடியவர்களின் உள்ளம் இந்த ஹதீஸ்களை விட்டும் வெருண்டு ஓடாது.*

*மார்க்க விஷயங்களில் இறைத்தூதர்(ஸல்) சிறந்தவராகவும் அழகானவராகவும் இருப்பது போல் அறிவாளிகளிடம் குணா திசியங்களிலும் இறைத்தூதர்(ஸல்) சிறந்தவரும் அழகானவரும் ஆவார்கள். எனவே, இந்த ஹதீஸ் சரியாக இருக்குமேயானால், இது தான் இவற்றின் சரியான விளக்கமாகும்" என இமாம் பைஹகீ(ரஹ்) கூறினார்கள்.* ***நூல்: மிஃப்தாஹுல் ஜன்னா (பக்கம் 26)***

*இமாம் சுயூத்தி(ரஹ்) ஹதீஸ் கலை தொடர்பாக அவர்கள் எழுதிய இந்த நூலில் இமாம் பைஹகீ அவர்களின் இக்கூற்றை எடுத்துக்கூறியுள்ளார். இன்று இவர்கள் குர்ஆனுக்கு முரண் என்று மறுக்கும் ஹதீஸ்களை இஸ்லாமிய அறிஞர்கள் ஏற்றுக் கொண்டுள்ளனர். அவர்களில் யாருடைய அறிவுக்கும் உணர்வுக்கும் இந்த ஹதீஸ்கள் தவறாகத் தெரியவில்லை. நமக்கும் தவறாகத் தெரியவில்லை. ஆதாரப்பூர்வமான ஹதீஸ்களில் ஒன்றுகூட சரியான சிந்தனைக்கும் உணர்வுக்கும் முரணாக இருக்காது. ஒருவருக்கு முரணாகத் தெரிகிறதென்றால், அவரின் சிந்தனையும் உணர்வும் சரியில்லை என்பதைப் புரிந்துகொள்ள வேண்டும்.*

## *இமாம் இப்னு ரஜப்(ரஹ்)*

*ஹிஜ்ரீ ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த சிறந்த அறிஞரான அபுல் ஃபர்ஜ் இப்னு ரஜப் அவர்களும் இச்செய்தியை நாம் மேலே சொன்ன காரணத்தால் மஃலூல் (பலவீனமானது) என்று கூறியுள்ளார்கள்.*

**جامع العلوم والحكم محقق (29/ 17)**

**لكن هذا الحديث معلول(3) ، فإنَّه رواه بُكير بن الأشج ، عن عبد الملك بن سعيد ، عن عباس بن سهل ، عن أبيِّ بن كعب من قوله(4) ، قال البخاري : وهو أصحُّ**

*இந்த ஹதீஸ் பலவீனமானது. ஏனென்றால், புகைர் இப்னு அஷஜ், அப்துல் மலிக்கிடமிருந்து இதை உபை இப்னு கஅப்(ரலி) அவர்களின் கூற்றாகவே அறிவித்துள்ளார். இந்த அறிவிப்புத்தான் சரியானது என இமாம் புகாரீ(ரஹ்) கூறியுள்ளார்கள்.*

***நூல்: ஜாமிஉல் உலூம் வல்ஹிகம் (பாகம் 17 பக்கம் 29)***

# *இமாம் ஷவ்கானி(ரஹ்)*

*சகோதரர் பீஜே இமாம் ஷவ்கானீ அவர்களின் கூற்றை அடிக்கடி எடுத்துக்காட்டுவார். சிஹ்ர் விஷயத்திலும் இந்த அறிஞரின் கூற்றை பீஜே சுட்டிக்காட்டியுள்ளார். அப்படிப்பட்ட இந்த அறிஞர் இந்த ஹதீஸை பல கோணங்களில் பலவீனமானது எனக் கூறியுள்ளார். இந்த ஹதீஸில் அவர் கூறிய விமர்சனங்களைப் பார்ப்போம்.*

**الفوائد المجموعة في الأحاديث الموضوعة 2 (ص: 129)**

**وهذا : وإن كان يشهد لذلك الحديث لكني أقول : أنكره قلبي ، وشعري ، وبشري ، وظننت أنه بعيد من رسول الله صلى الله عليه وآلـــه وسلم .**

*“இச்செய்தியை என் உள்ளமும் என் தோலும் உணர்வும் வெறுக்கிறது. இறைத்தூதர்(ஸல்) அவர்களை விட்டும் தூரமான செய்தியாக இதை எண்ணுகிறேன்” என இமாம் ஷவ்கானி(ரஹ்) கூறினார்கள்.*

***நூல்: அல் ஃபாயிதுல் மஜ்மூஆ (பாகம் 2 பக்கம் 129)***

*இச்செய்தியில் ஹதீஸை நிராகரிப்பதற்கு என்ன அளவுகோல் சொல்லப்பட்டுள்ளதோ, அந்த அளவுகோலின் படி பார்த்தால் இச்செய்தி மறுக்கப்படவேண்டிய செய்தியாகிவிடும். இது ஒட்டுமொத்த பாதுகாக்கப்பட்ட நபிமொழிகளிலும் சந்தேகத்தை ஏற்படுத்துவது போல் இருப்பதால், இமாம் ஷவ்கானீ(ரஹ்) இச்செய்தி கூறும் அளவுகோலையே இச்செய்திக்கு பொருத்தி இது மறுக்கப்பட வேண்டியது எனக் கூறியுள்ளார்கள்.*

*இதன் பின் இந்த ஹதீஸை மறுப்பதற்கு ஹதீஸ் கலை ரீதியான காரணங்களை தெளிவுபடுத்துகிறார்.*

# அப்துல் மலிக்கின் நம்பகத்தன்மை நிரூபிக்கப்படவில்லை.

இச்செய்தியில் இடம் பெறும் அப்துல் மலிக் என்பவர் அறிஞர்களால் மிகவும் சிறப்பித்து சொல்லப்பட்டவர் இல்லை. அறிவிப்பாளர்களை நம்பகமானவர் என்று முடிவு செய்வதில் அலட்சியப்போக்கு உடையவர் என்ற குற்றச்சாட்டிற்கு ஆளான இப்னு ஹிப்பான் மற்றும் இஜ்லீ ஆகிய இருவர் மட்டுமே இவரை நம்பகமானவர் எனக் கூறியுள்ளனர்.

இமாம் நஸாயீ(ரஹ்) இவர் சுமாரானவர் (லைஸ பிஹி பஃஅஸ்) எனக் கூறி இவரிடத்தில் பெரிய அளவில் நம்பகத்தன்மையோ நினைவாற்றலோ இல்லை என்று சுட்டிக்காட்டியுள்ளார். இமாம் முஸ்லிம்(ரஹ்) இவரிடமிருந்து ஒரே ஒரு செய்தியை பதிவு செய்துள்ளார்கள். அந்த செய்தி அமல்களின் சிறப்பு தொடர்பாக துணைச் சான்றுகளுடன் உள்ளவை என்பதால் இதை வைத்தும் இவரை உறுதியானவர் எனக் கூற முடியாது.

அப்துல் மலிக் விஷயத்தில் உறுதியாக இவர் மிகச் சரியான நினைவாற்றல் உள்ளவர் எனக் கூறமுடியாது. எனவேதான், இமாம் இப்னு அபீ ஹாதிம், இமாம் அப்துல் ஹக் என்ற இப்னுல் கர்ராத், இமாம் ஷவ்கானீ ஆகியோர் அப்துல் மலிக்கை ஏற்றுக் கொள்ளவில்லை. அப்துல் மலிக் விஷயத்தில் நாம் சொன்ன இந்த விமர்சனத்தை இமாம் ஷவ்கானீ(ரஹ்) அவர்களும் கூறியுள்ளார்கள்.

**الفوائد المجموعة في الأحاديث الموضوعة 2 (ص: 350)**

**وقد يخدش في الخبر من أربعة أوجه . الأول : الإنكار . الثاني : ما أشار إليه الأمام أحمد من الشك . الثالث : الشك في لقي ربيعة لعبد الملك ، أما إخراج مسلم لذلك الحديث الواحد ، فقد يكون تسهل لأنه في فضائل الأعمال ، وله شواهد في الجملة ، وأما ابن حبان فقاعدته معروفة ، والعجلي مثله ، أو أشد تسهلاً في توثيق التابعي ن، كما يعلم بالإسقراء ، وأما النسائي ، فقد أخرج لعبد الملك خبراً آخر في القبلة للصائم ، ثم قال ( هذا منكر ) وليس في السند من يشك فيه غير عبد الملك ، ولهذا ذكره الذهبي في الميزان بذلك ،**

“நான்கு அம்சங்கள் இச்செய்தியை பாதிக்கிறது.

1. கருத்துப் பிழை.

2. இச்செய்தியை அறிவிக்கும் அறிவிப்பாளர்களிடம் ஏற்பட்டுள்ள சந்தேகம்.

3. ரபீஆ என்பவர் அப்துல் மலிகை சந்தித்தாரா? என்ற சந்தேகம்.

4. அப்துல் மலிக் நம்பகமானவர் என்பதற்கு போதிய ஆதாரம் இல்லை" என இமாம் ஷவ்கானீ(ரஹ்) கூறினார்கள்.

**நூல்: அல்ஃபவாயிதுல் மஜ்மூஆ (பாகம் 2 பக்கம் 350)**

ஹிஜ்ரீ இரண்டாம் நூற்றாண்டில் பிறந்த இமாம் இப்னு அபீ ஹாதிம்(ரஹ்) 'அல்ஜரஹ் வத்தஃதீல்' என்ற தன்னுடைய நூலில் அப்துல் மலிகை குறிப்பிடுகிறார். ஆனால், இவரை நம்பகமானவர் என நற்சான்று அளிக்கவில்லை. இமாம் இப்னு அபீ ஹாதிம்(ரஹ்) ஒருவரை தன்னுடைய நூலில் குறிப்பிட்டு அவரைப் பற்றி நிறையோ குறையோ எதுவும் சொல்லாமல் விட்டு விட்டால் அந்த அறிவிப்பாளர் மஜ்ஹூலானவர் (நம்பகத்தன்மை அறியப்படாதவர்) என்றே பொருள்.

இமாம் இப்னு அபீ ஹாதிம்(ரஹ்) அப்துல்மலிக் குறித்து நிறையோ குறையோ எதுவும் கூறவில்லை. இதன் மூலம் அப்துல் மலிக் மஜ்ஹூலானவர் (நம்பகத்தன்மை உறுதிசெய்யப் படாதவர்) என்பதையே அவர் சுட்டிக்காட்டியுள்ளார்.

இந்த விளக்கத்தை நான் சுயமாக கூறவில்லை. ஹிஜ்ரீ ஐந்தாம் நூற்றாண்டில் ஹதீஸ் கலையிலும் அறிவிப்பாளர்களை அலசி ஆராய்வதிலும் கரைகண்ட மாபெரும் அறிஞராகத் திகழ்ந்த இமாம் அப்துல் ஹக் இஷ்பீலி என்ற இப்னுல் கர்ராத், அப்துல் மலிக் விஷயத்தில் இந்த விமர்சனம் செய்துள்ளார்.

بيان الوهم والإيهام في كتاب الأحكام (5/ 309)

**عبد الْملك بن سعيد ذكره أَبُو مُحَمَّد بن أبي حَاتِم وَلم يذكر أحدا رَوَاهُ عَنهُ إِلَّا ربيعَة بن أبي عبد الرَّحْمَن ، وَلم يذكر فِيهِ شَيْئا ، هَذَا نَص مَا ذكر من غير مزِيد [وَهُوَ كَمَا ذكر ، لم يرو عَنهُ غير] ربيعَة . وَقد أهمل من ذكر [التجريح وَالتَّعْدِيل فِيهِ وللقاعدة أَن من لم يذكر فيهم ابْن أبي] حَاتِم الْجرْح وَالتَّعْدِيل فهم عِنْده مجهولو الْأَحْوَال ، بَين ذَلِك عَن نَفسه فِي أول كِتَابه ، وَسَوَاء كَانَ من لم يذكر فِيهِ الْجرْح وَالتَّعْدِيل مِمَّن لم يرو عَنهُ إِلَّا وَاحِد أَو مِمَّن قد روى عَنهُ جمَاعَة ، وَرَأى أَبُو مُحَمَّد أَن من روى عَنهُ جمَاعَة يقبل ، وعَلى ذَلِك بنى نظره ،**

وَبِه عمل فِي كِتَابه .... وَقد تقدم بَيَان هَذَا كُله ، فَهُوَ إِذن قد اعْتقد فِي عبد الْملك بن سعيد هَذَا أَنه مَجْهُول الْحَال ، وَأول مَا اعتراه فِيهِ سوء النَّقْل ، وَذَلِكَ بقلة التثبيت ، فَإِنَّهُ لَو نظر ، رأى فِي كتاب ابْن أبي حَاتِم خلاف مَا ذكر .

*"இப்னு அபீ ஹாதிம்(ரஹ்) அப்துல் மலிக்கை குறிப்பிடுகிறார். இவரிடமிருந்து அறிவிக்கும் அறிவிப்பாளராக ரபீஆவைத் தவிர வேறு யாரையும் அவர் கூறவில்லை. மேலும், அப்துல் மலிக் விஷயத்தில் எதையும் அவர் கூறவில்லை. இப்னு அபீ ஹாதிம்(ரஹ்) எவர் விஷயத்தில் குறையோ நிறையோ கூறவில்லையோ, அவர் இப்னு அபீ ஹாதிம் அவர்களிடம் மஜ்ஹூலுல் ஹால் (நம்பகத் தன்மை அறியப்படாதவர்) ஆவார். இது பற்றி அவர்களே தன்னுடைய நூலின் ஆரம்பத்தில் தெளிவு படுத்தியுள்ளார்கள். எனவே, இந்த அப்துல் மலிக் இப்னு சயீத் விஷயத்தில் இவர் மஜ்ஹூலுல் ஹால் (நம்பகத்தன்மை அறியப்படாதவர்) என்றே இப்னு அபீ ஹாதிம்(ரஹ்) முடிவெடுத்துள்ளார்கள்" என இப்னு அல் கர்ராத் கூறினார்.*

***நூல்: பயானுல் வஹ்மி வல்ஈஹாம் (பாகம் 5 பக்கம் 309)***

*இந்த ஹதீஸை அறிவிக்கும் அறிவிப்பாளர்களுக்கிடையே ஏற்பட்டுள்ள சந்தேகத்தையும் சுட்டிக்காட்டி இமாம் ஷவ்கானீ(ரஹ்) குறைகூறியுள்ளார். இமாம் அஹ்மது(ரஹ்) இந்த ஹதீஸை பதிவு செய்துவிட்டு, இதன் அறிவிப்பாளர்களிடையே ஏற்பட்டுள்ள சந்தேகங்களைக் குறிப்பிடுகிறார்கள்.*

## *அறிவிப்பாளர்களின் சந்தேகம்*

*"இந்த ஹதீஸை அபூ ஹுமைத் அல்லது அபூ உசைத் அறிவித்துள்ளார் என உபைத் இப்னு அபீ குர்ரா சந்தேகப் பட்டுள்ளார். அபூ சயீத் என்பவர் இவ்விருவரில் ஒருவரை குறிப் பிட்டு அறிவிக்கையில் என்னிடமிருந்து நீங்கள் ஹதீஸை கேட்டால் என்ற வார்த்தையில் சந்தேகப்பட்டுள்ளார்" என இமாம் அஹ்மது (ரஹ்) கூறினார்கள்.* ***நூல்: அஹ்மது 24005***

*செய்தியை அறிவித்தவர் அபூ ஹுமைதா? அல்லது அபூ உஸைதா? என்ற சந்தேகத்தால் செய்திக்கு பாதிப்பு வராது. ஏனென்றால், இருவரும் நபித்தோழர்களாவர். ஆனால், அறிவிப் பாளர் அபூ சயீத் என்னிடமிருந்து ஹதீஸை நீங்கள் கேட்டால் என்ற வார்த்தையில் சந்தேகப்பட்டுள்ளார். இந்த சொல் நபியின்*

*கூற்றா? உபை(ரலி) அவர்களின் கூற்றா? என்ற பிரச்னை முன் சென்றது. இப்போது அபூ சயீத் அவர்களுக்கும் இந்த வார்த்தையில் சந்தேகம் வருகிறது என்றால், இச்செய்தியில் குழப்பம் இருப்பது மேலும் உறுதியாகிறது. எனவேதான், இதை இமாம் ஷவ்கானீ(ரஹ்) சுட்டிக்காட்டியுள்ளார்.*

*மேலும், இச்செய்தியை அப்துல் மலிகிடமிருந்து ரபீஆ என்பவர் அறிவித்துள்ளார். ரபீஆவைப் பொறுத்தவரை அவர் நம்பகமானவர் சிறந்தவர் என்பதில் நமக்கு மாற்றுக்கருத்தில்லை. இவர் நம்பகமானவர் எனப் பலர் நற்சான்று அளித்துள்ளனர். எனவே, பொதுவாக அவர் அறிவிக்கும் ஹதீஸ்களை ஏற்கத்தான் வேண்டும். ஆனால், இவர் அறிவிக்கும் குறிப்பிட்ட இச்செய்தியை நாம் ஏற்றுக்கொள்ள மறுப்பதற்கு ஒரு காரணம் உள்ளது. இவர் மார்க்கத்தை தன் சுயசிந்தனை அடிப்படையில் அணுகுபவர் (சாஹிபு ரஃயி) எனக் குற்றச்சாட்டு இவர் மீது வலுவாக வைக்கப்பட்டுள்ளது.*

**تهذيب الكمال**

**ربيعة بن أَبي عبد الرحمن (2) ، واسمه فروخ ، القرشي التَّيْمِيّ أبـــو عثمان ، ويُقال : أبو عبد الرحمن المدني المعروف بربيعة الرأي ، مولى آل المنكدر. وَقَـــال محمد بن سعد (3) : توفي سنة ست وثلاثين ومئة بالمدينة فيما أخبرني به الواقدي ، وكان ثقة ، كثير الحديث ، وكانوا يتقونه لموضع الرأي.**

**و قال أبو داود : قال أحمد : و أيش عند ربيعة من العلم .**

*மக்கள் இவரின் பெயரில் ரஃயி (சுய சிந்தனை) என்ற வார்த்தையை இணைத்து இவரை ரபீஅதுர் ரஃயி என அழைக்கும் அளவுக்கு இந்த நோய் இவரிடம் அதிகமாக இருந்தது. இதனால் இவரை பலர் புறக்கணிக்கும் நிலையே இருந்தது.*

*இவர் சுயக்கருத்துக்களை கூறியதால், இவர் கூறியவை கல்வியே இல்லை என்ற கருத்தில் இமாம் அஹ்மத்(ரஹ்) ரபீஆ விடம் என்ன கல்வி உள்ளது? என்று விமர்சனம் செய்துள்ளார்கள்.*

***நூல்: தஹ்தீபுல் கமால் (பாகம் 9 பக்கம் 123)***

*ஓர் அறிவிப்பாளர் நம்பகமானவராக இருந்தாலும் அவர் ஒரு பித்அத்தை செய்து கொண்டிருக்கும்போது, அவர் தாம் செய்யும் பித்அத்திற்கு ஆதரவாக ஹதீஸ்களை அறிவித்தால்,*

*அந்த ஹதீஸ்கள் மட்டும் ஏற்றுக்கொள்ளப்படாது. இப்படி ஒரு விதி ஹதீஸ் கலையில் உள்ளது. ஹதீஸ் கலையை கற்ற யாரும் இதை மறுக்கமாட்டார்கள்.*

*இந்த விதி ரபீஆ விஷயத்தில் இந்த ஹதீஸில் மிகச் சரியாகப் பொருந்துகிறது. சுயகருத்தை மார்க்கத்தில் புகுத்தும் கோளாறு ரபீஆவிடம் இருக்கிறது. இவர் அறிவிக்கும் இச்செய்தி சுயசிந்தனையைக் கொண்டு நபிமொழிகளை நிராகரிக்கலாம் என்ற கருத்தை கூறுவது போன்று உள்ளது. இந்நிலையில் ரபீஆ இந்த ஹதீஸை அப்துல் மலிகிடமிருந்து, தான் நேரடியாக கேட்டதாகவும் கூறவில்லை. இதுவும் இந்த ஹதீஸின் நம்பகத்தன்மையில் பாதிப்பை ஏற்படுத்துகிறது. இமாம் ஷவ்கானீ(ரஹ்) இதைச் சுட்டிக்காட்டியதை முன்பு அறிந்தோம். இந்த ஹதீஸ் தொடர்பாக உள்ள விமர்சனங்கள் அனைத்தையும் ஒன்றிணைத்துப் பார்த்தால் இது சந்தேகங்களுக்கு அப்பாற்பட்ட உறுதியான ஆதாரப்பூர்வமான ஹதீஸ் எனக் கூற முடியாது.*

## *குர்ஆனுக்கு முரணாக சிந்திக்கலாமா?*

*இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்: என்னைப் பற்றி (ஏதேனும் ஒரு) செய்தியை நீங்கள் கேள்விப்படும்போது அச்செய்தியை உங்கள் உள்ளங்கள் ஒப்புக் கொள்ளுமானால், இன்னும் உங்கள் தோல்களும் முடிகளும் (அதாவது உங்கள் உணர்வுகள்) அதற்குப் பணியுமானால், இன்னும் அச்செய்தி உங்களு(டைய வாழ்க்கைக்கு)க்கு நெருக்கமாக இருப்பதாக நீங்கள் கருதினால் அ(தைக் கூறுவ)தில் நானே உங்களில் மிகத் தகுதி வாய்ந்தவன். என்னைப் பற்றி (ஏதேனும் ஒரு) செய்தியை நீங்கள் கேள்விப்படும்போது அச்செய்தியை உங்களது உள்ளங்கள் வெறுக்குமானால், இன்னும் உங்கள் தோல்களும் முடிகளும் (அதற்குக் கட்டுப்படாமல் அதை விட்டு) விரண்டு ஓடுமானால், இன்னும் அச்செய்தி உங்களு(டைய வாழ்க்கை)க்கு (சாத்தியப்படுவதை விட்டும்) தூரமாக இருப்பதாக நீங்கள் கருதினால் உங்களில் நானே அதை விட்டும் மிகத் தூரமானவன்.*

***அறிவித்தவர்: அபூ உஸைத்(ரலி), நூல்: அஹ்மத் 15478***

*இறைத்தூதர்(ஸல்) அவர்களைப் பற்றி நம்பகமானவர்கள் அறிவிக்கும் ஹதீஸ்களில் பொய்யானவை வர வாய்ப்புள்ளது என்பதற்கு இச்செய்தியை ஆதாரமாக கூறுகிறார்கள். ஆனால், இச்செய்தி கூற வரும் சரியான கருத்து இதுவல்ல. இதை பின்னர்*

விளக்குவோம். இவர்கள் கூறுவது தான் இந்த ஹதீஸின் அர்த்தம் என்றால், குர்ஆனுக்கு முரண்பட்டால் ஹதீஸை மறுக்க வேண்டும் என்ற இவர்களின் அளவுகோலின் படி இச்செய்தியைத்தான் முதலில் மறுக்க வேண்டும். ஏனென்றால், மார்க்கம் நம்பகமானவர்கள் வழியாகவே வரும். அவர்கள் கூறும் தகவல்களை நம்பி இஸ்லாமை நாம் கடைபிடிக்க வேண்டும் என்று அல்லாஹ் குர்ஆனில் பல இடங்களில் கூறுகிறான். இதை முன்னரே விரிவாக விளக்கி விட்டோம்.

மேலும் மனித உள்ளம் இயல்பாகத் தீமையை ஏவக்கூடியது என குர்ஆன் கூறுகிறது. இப்படிப்பட்ட உள்ளத்தையும் உணர்வையும் அடிப்படையாகக் கொண்டு நபிமொழிகளை நிராகரிப்பது குர்ஆனுக்கு எதிரான செயல்.

"என் உள்ளத்தைப் பாவத்தை விட்டும் நானாகத் தூய்மைப்படுத்த வில்லை; என் இரட்சகன் அருள்புரிந்தால் தவிர. உள்ளம் தீமையைத் தூண்டக் கூடியதாகவே இருக்கிறது..." **திருக்குர்ஆன் 12:53**

எனவே, நல்லோர்கள் அறிவிக்கும் ஹதீஸ்களில் குர்ஆனுக்கு முரணானவை வரும் என்ற வாதம் குர்ஆனுக்கு எதிரானதாகும். இந்த பொருளைத்தான் இந்த ஹதீஸ் கூறுகிறது என்றால், குர்ஆனுக்கு முரண் என்ற அடிப்படையில் இந்த ஹதீஸைத்தான் மறுக்க வேண்டும்.

இச்செய்தி இறைத்தூதரின் சொல்லாக இருக்குமேயானால், கண்டிப்பாக இவர்கள் கூறவரும் கருத்தை நிச்சயம் தராது. மாறாக இதுவல்லாத வேறு ஒரு விஷயத்தைப் பற்றியே இந்த ஹதீஸ் பேசுகிறது. இதன் உண்மையான கருத்தை அறிந்துகொள்வோம்.

## சரியான விளக்கத்தை அறிந்துகொள்ளுங்கள்!

இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து நம்பகமானவர்கள் ஹதீஸ்களை அறிவித்தாலும், அவை உணர்வுக்கு ஏற்ப வருகிறதா எனப் பார்க்க வேண்டும் என்று இந்த ஹதீஸில் சொல்லப்பட வில்லை. நல்லோர்கள் அறிவிக்கும் ஹதீஸ்கள் குறித்து இச்செய்தி பேசவில்லை. என்னிடமிருந்து ஒரு செய்தியைக் கேள்விபட்டால் என பொதுவாகவே கூறப்படுகிறது.

*ஹதீஸ் என்ற அரபுச் சொல்லுக்கு செய்தி என்று பொருள். இறைத்தூதர்(ஸல்) காலத்தில் ஹதீஸ் என்று சொன்னால் அது இறைத்தூதர்(ஸல்) சொன்ன அனைத்து செய்திகளையும் குறிக்கும். இறைத்தூதர்(ஸல்) சொன்ன செய்திகளில் குர்ஆனும் அடங்கும். அல்லாஹ் குர்ஆனில் பல இடங்களில் ஒட்டுமொத்த குர்ஆனையும் ஹதீஸ் (செய்தி) என்று குறிப்பிடுகிறான்.*

**اللَّهُ نَزَّلَ أَحْسَنَ الْحَدِيثِ كِتَابًا مُتَشَابِهًا (23)39**

*அல்லாஹ் அழகான ஹதீஸை (செய்தியை) ஒன்றையொன்ற ஒத்து இருக்கிற வேதமாக அருளியிருக்கிறான்.* ***அல்குர்ஆன் 39:23***

**فَلَعَلَّكَ بَاخِعٌ نَفْسَكَ عَلَى آثَارِهِمْ إِنْ لَمْ يُؤْمِنُوا بِهَذَا الْحَدِيثِ أَسَفًا(6)18**

*இந்த ஹதீஸை (செய்தியை) அவர்கள் நம்பாவிட்டால் அவர் களுக்காக கவலைப்பட்டு உம்மை நீரே அழித்துக்கொள்வீர் போலும்.* ***அல்குர்ஆன் 18:6***

**فَلْيَأْتُوا بِحَدِيثٍ مِثْلِهِ إِنْ كَانُوا صَادِقِينَ(34)52**

*அவர்கள் உண்மையாளர்களாக இருந்தால் இது போன்ற ஒரு ஹதீஸை (செய்தியை) அவர்கள் கொண்டுவரட்டும்.*

**أَفَمِنْ هَذَا الْحَدِيثِ تَعْجَبُونَ(59)53**

*இந்த ஹதீஸிலா (செய்தியிலா) நீங்கள் ஆச்சரியமடைகிறீர்கள்?* ***அல்குர்ஆன் 53:59***

**فَذَرْنِي وَمَنْ يُكَذِّبُ بِهَذَا الْحَدِيثِ سَنَسْتَدْرِجُهُمْ مِنْ حَيْثُ لَا يَعْلَمُونَ(44)68**

*இந்த ஹதீஸ் (செய்தியை) பொய் எனக் கூறுபவனை என்னிடம் விட்டுவிடு. அவர்கள் அறியாத விதத்தில் அவர்களை விட்டுப் பிடிப்போம்.* ***அல்குர்ஆன் 68:44***

**فَبِأَيِّ حَدِيثٍ بَعْدَهُ يُؤْمِنُونَ(50)77**

*இதற்குப் பின் இவர்கள் வேறு எந்த ஹதீஸை (செய்தியை) நம்புவார்கள்?* ***அல்குர்ஆன் 77:50***

*மேற்கண்ட வசனங்களில் அல்லாஹ் ஹதீஸ் என்று குர்ஆனை குறிப்பிடுகிறான். எனவே, என்னிடமிருந்து நீங்கள் ஹதீஸை கேட்டால் அது உங்கள் உணர்விற்கும் உள்ளத்திற்கும் ஒத்துவந்தால் அதற்கு நான் தகுதியானவன் என்ற செய்தியில் கூறப்படும் ஹதீஸ்*

*என்பது நம்பகமானவர்கள் அறிவித்த ஆதாரப்பூர்வமான செய்திகளை குறிக்கும் என்றால், குர்ஆனையும் குறிக்கும். சரியான விளக்கம் தெரியாத காரணத்தால் குர்ஆன் வசனங்களிலும் பலருக்கு நெருடல் ஏற்படலாம். இது குறித்து மக்கள் அறிஞர்களிடம் விளக்கம் கேட்டு கேள்வி எழுப்புவதிலிருந்து இதை அறியலாம்.*

*எனவே, குர்ஆனில் எந்த வசனங்களை நம் உள்ளமும் உணர்வும் ஏற்றுக்கொள்ளுமோ, அதை நாம் ஏற்றுக்கொள்ள வேண்டும். குர்ஆனில் எந்த வசனத்தை நம் உள்ளமும் உணர்வும் ஏற்றுக்கொள்ள மறுக்கிறதோ, அந்த வசனங்களை நாம் இது அல்லாஹ் சொன்னது இல்லை யாரோ எங்கோ எப்போதோ ஏதோ செய்துவிட்டார்கள் என்று கூறி மறுக்கலாமா?*

*குர்ஆன் பாதுகாக்கப்பட்ட வஹீ என்பதால் இச்செய்தி குர்ஆனைக் குறிக்காது என்றால், நம்பகமானவர்கள் அறிவிக்கும் ஆதாரப்பூர்வமான ஹதீஸ்களும் பாதுகாக்கப்பட்ட வஹீ தான்.*

*எனவே, அவற்றையும் இச்செய்தி குறிக்காது. இன்று குர்ஆனுக்கு முரண் எனக் கூறி இவர்கள் மறுக்கும் ஆதாரப் பூர்வமான ஹதீஸ்கள் ஒருவரின் உணர்விற்கும் உள்ளத்திற்கும் மட்டுமே ஒத்துவரவில்லை. மாறாக இமாம் புகாரீ இமாம் முஸ்லிம்(ரஹ்) போன்ற பெரும் பெரும் அறிஞர்களின் உள்ளம் இவற்றை ஏற்கிறது. உலக முஸ்லிம்களின் உள்ளமும் இவற்றை ஏற்கிறது. அப்படியானால் இச்செய்தியில் சொல்லப்படும் ஹதீஸ் என்பது எதைக் குறிக்கும்? என்ற கேள்வி வருகிறது.*

*இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள் என்று தீர்மானிக்க முடியாத நிலையில் உள்ள வதந்திகள் குறித்தே இச்செய்தி பேசுகிறது. இறைத்தூதர்(ஸல்) காலத்தில் இறைத்தூதர்(ஸல்) அவர்களைப் பற்றி முனாஃபிக்குகள் பல வதந்திகளைப் பரப்பினார்கள். நபியின் பெயரில் தவறானத் தகவலை பரப்பி இறைத்தூதர்(ஸல்) மீது மக்களுக்கு கெட்ட எண்ணத்தை ஏற்படுத்த முயன்றார்கள். உறுதியற்ற தகவல்களை நம்பி இறைத்தூதர்(ஸல்) அவர்களைப் பற்றி மக்கள் தவறாக நினைத்துவிடக் கூடாது. எனவேதான்,*

*இறைத்தூதர்(ஸல்) உங்கள் உள்ளமும் உணர்வும் ஏற்றுக் கொண்டால், அதை நான் கூறியிருக்க வாய்ப்புள்ளது. இல்லை என்றால் நான் அதை விட்டும் விலகியவன் என்று கூறுகிறார்கள்.*

*உதாரணமாக இன்று இறைத்தூதர்(ஸல்) கூறியதாக ஏராளமான பலவீனமான ஹதீஸ்கள் உள்ளன. இவை பலவீனமாக*

*இருப்பதால் இவற்றை நாம் ஆதாரமாக ஏற்றுக் கொள்ள மாட்டோம். இந்த பலவீனமான செய்திகள் நபியின் கூற்றாக இருக்கவும் வாய்ப்புள்ளது. நபியின் கூற்றாக இல்லாமல் போகவும் வாய்ப்புள்ளது. இச்சந்தேகம் வருவதால்தான், இவற்றை ஹதீஸ் கலையில் ஏற்றுக் கொள்வதில்லை. ஆனால், இவற்றின் கருத்தை கவனித்துப் பார்த்து ஒரு யூகம் செய்ய நமக்கு அனுமதியுள்ளது. இச்செய்திகள் நல்ல கருத்தை தருமேயானால், இதை நபி கூறியிருக்க வாய்ப்புள்ளது என யூகிக்கலாம். ஆனால், அதில் முடிவெடுத்துவிடக் கூடாது. இச் செய்திகள் கூறும் கருத்து மோசமாக இருந்தால், அப்போது இதை இறைத்தூதர்(ஸல்) கூறியிருக்கவே மாட்டார்கள் என்று முடிவு செய்யலாம். இதனால் தான் பலவீனமான ஹதீஸ்களின் கருத்து மோசமாக இருக்கும் பட்சத்தில் அறிஞர்கள் அவற்றை இட்டுக் கட்டப்பட்ட செய்தியின் நிலைக்கு தாழ்த்திவிடுகிறார்கள்.*

*இவ்வாறு நாம் புரிந்துகொள்ளும்போது, வதந்திகளை நம்பி நபியைப் பற்றி நாம் தவறாக எண்ணிவிடமாட்டோம். இது குறித்தே இந்த ஹதீஸ் கூறுகிறது. இந்த விளக்கத்தை இமாம் ஷவ்கானீ(ரஹ்) தன்னுடைய நூலில் மிகத் தெளிவாக சுட்டிக் காட்டியுள்ளார்கள்.*

**الفوائد المجموعة في الأحاديث الموضوعة 2 (ص: 350)**

**وأن هناك أحاديث كثيرة ، تقبلها قلوب ، وتنكرها قلوب . وبهذا يعلم أن اما يعرض للسامع من قبول واستبشار، أو نفور واستنكار . قد يكون حيث ينبغي ، وقد يكون حيث لا ينبغي ، وإنما هذا ــ والله أعلم ــ إرشاد إلى ما يستقبل به الخبر عند سماعه ، وقد يكون منشأ ذلك : أن المنافقين كانوا يرجفون بالمدينة ويشيعون الباطل ، فقد يشيعون ما إذا سمعه المسلمون ، وظنوا صدقه ارتابوا في الدين ، أو ظنوا السوء برسول الله صلى الله عليه وسلم ، فأرشدوا إلى ما يدفع عنهم بادرة الارتياب ، وظن السوء ، مع العلم بأن بادئ الظن ليس بحجة شرعية ، فعليهم النظر والتدبر، والأخذ بالحجج المعروفة ، والله الموفق .**

*“இங்கே ஏராளமான ஹதீஸ்கள் உள்ளன. அவற்றை சில உள்ளங்கள் ஏற்றுக்கொள்ளும். சில உள்ளங்கள் அவற்றை மறுக்கும். எனவே, கேட்பவரின் உள்ளம் ஒரு சமயத்தில் சரியாக ஏற்றுக் கொள் ளவும் சரியாக மறுக்கவும் வாய்ப்புள்ளது. வேறொரு சமயத்தில் தவறாக ஏற்றுக்கொள்ளவும் தவறாக மறுக்கவும் வாய்ப்புள்ளது.*

*நயவஞ்சகர்கள் மதீனாவில் பொய்களைப் பரப்பினார்கள். முஸ்லிம்கள் எதைக் கேட்டு உண்மை என்று நம்பினால் இந்த மார்க்கத்தில் அவர்களுக்கு சந்தேகம் வந்துவிடுமோ அல்லது இறைத்தூதர்(ஸல்) அவர்களைப் பற்றி தவறாக நினைப்பார்களோ அது போன்ற செய்திகளையும் நயவஞ்சகர்கள் பரப்பினார்கள். இது போன்ற சந்தேகமும், கெட்ட யூகமும் முஸ்லிம்களுக்கு வந்துவிடக்கூடாது என்பதற்காகவே செய்தியைக் கேட்டவுடன் எவ்வாறு எண்ணுவது என்ற வழி அவர்களுக்குக் காட்டப்பட்டது. அதே நேரத்தில் யூகத்தை அடிப்படையாகக் கொள்வது மார்க்க ஆதாரமாகாது.*

*எனவே, முஸ்லிம்கள் ஆராய்ந்து பார்த்து தெளிவான ஆதாரங்களை எடுப்பது அவர்களின் கடமை என்பதையும் அறிந்துகொள்ள வேண்டும்'' என இமாம் ஷவ்கானீ(ரஹ்) கூறினார்கள்.*

***நூல்: அல் ஃபவாயிதுல் மஜ்மூஆ (பாகம் 2 பக்கம் 350)***

*எனவே, இவர்கள் சுட்டிக்காட்டிய செய்தி ஆதாரப்பூர்வமான ஹதீஸ்களைக் குறித்துப் பேசவில்லை. ஆதாரமற்ற முறையில் நாம் கேள்விப்படும் வதந்திகள் குறித்தே பேசுகிறது.*

## ஈமானை பாதிக்கும் நாத்திகச் சிந்தனை

*ஆதாரப்பூர்வமான நபிமொழிகளில் சந்தேகப்படுவது, சந்தேகத்தை ஏற்படுத்துவது மற்றும் மறுப்பது இஸ்லாமிற்கு எதிரானது என்பதை அறிந்து கொண்டோம். இன்னும் சில அடிப் படைகளை அறிந்துகொண்டு சூனியம் குறித்துப் பார்ப்போம்.*

*அல்லாஹ்வும் அவன் தூதரும் ஒரு விஷயத்தை நம்புமாறு நமக்கு கூறினால், அதை அப்படியே ஏற்பதே முஃமினின் கடமை. அல்லாஹ் கூறியதிலும், அவன் தூதர் கூறியதிலும் ஏதேனும் சந்தேகம் வந்தால், அதற்குரிய விளக்கத்தை அறிந்துகொள்ள முயற்சிக்க வேண்டுமே தவிர, மார்க்கத்தை மறுத்துவிடக்கூடாது.*

*(நபியே) உம் இறைவன் மீது ஆணையாக. தங்களுக்கிடையே ஏற்பட்ட பிரச்னையில் உன்னை தீர்ப்பளிப்பவராக அவர்கள் ஏற்று, நீ வழங்கிய தீர்ப்பில் தங்களின் உள்ளங்களில் எந்த நெருடலையும் உணராமல் முழுமையாகக் கட்டுப்படாதவரை இவர்கள் இறைநம்பிக்கையாளர்களாக முடியாது.*

***அல்குர்ஆன் 4:65***

*இறைநம்பிக்கையாளர்கள் அவர்களுக்கிடையே தீர்ப்பு அளிப்பதற்காக அல்லாஹ்வின் பக்கமும் அவனுடைய தூதரின் பக்கமும் அழைக்கப்பட்டால், நாங்கள் செவியேற்றோம். கட்டுப் பட்டோம் என்பதுதான் அவர்களின் சொல்லாக இருக்கும். அவர்களே வெற்றியாளர்கள். அல்லாஹ்விற்கும் அவன் தூதருக்கும் கட்டுப்பட்டு அல்லாஹ்வை அஞ்சி அவனை பயந்து நடப்பவர்களே வெற்றியாளர்கள்.* ***அல்குர்ஆன் 24:52***

*இறைத்தூதரின் சொல்லுக்கு எதிராக பல கேள்விகளை அடுக்குவதும், லாஜிக் பேசி தர்க்கம் செய்வதும், தன் அறிவுக்கு சரியாகத் தெரியவில்லை எனக் கூறி மறுப்பதும் காஃபிர்களின் வழிமுறையாகும். முதன்முதலில் ஷைத்தான் அல்லாஹ்வின் கட்டளைக்கு எதிராக லாஜிக் பேசினான். அல்லாஹ் கூறியது அவனுடைய அறிவுக்கும் அவனுடைய லாஜிகிற்கும் சரியாகத் தெரியவில்லை. எனவே, அல்லாஹ்வின் கட்டளையை மறுத்து காஃபிரானான்.*

*இப்லீஸே! என் இரண்டு கைகளால் நான் படைத்ததற்கு ஏன் நீ பணியவில்லை? நீ பெருமையடிக்கிறாயா? அல்லது உயர்ந்தவனாகிவிட்டாயா? என்று அல்லாஹ் கேட்டான்.*

*"நான் அவரை (ஆதமை) விடச் சிறந்தவன். நீ என்னை நெருப்பினால் படைத்தாய். அவரை மண்ணால் படைத்தாய்" என இப்லீஸ் கூறினான்.*

*"நீ இங்கிருந்து வெளியேறு. நீ விரட்டப்பட்டவன். தீர்ப்பு நாள் வரை உன்மீது என் சாபம் உள்ளது" என அல்லாஹ் கூறினான்.* ***அல்குர்ஆன் 38:78***

*இறைத்தூதர்(ஸல்) மார்க்கத்தை மக்களுக்கு போதித்தபோது காஃபிர்கள் அதிலிருந்து என்ன படிப்பினை பெற வேண்டுமோ அந்தப் படிப்பினையை பெறாமல் இது அறிவுக்கு ஒத்துவருகிறதா? இது நடைமுறைக்குச் சாத்தியமா? என்றெல்லாம் தேவையில்லாமல் சிந்தித்து குர்ஆனை ஏற்க மறுத்தனர். இதை அல்லாஹ் பின்வரும் வசனத்தில் குறிப்பிடுகிறான்.*

*இதை (முஹம்மத்) இட்டுக்கட்டினார் எனக் கூறுகிறார்களா? நீங்கள் உண்மையாளராக இருந்தால் அல்லாஹ்வைத் தவிர்த்து உங்களுக்கு இயன்றவர்களை அழைத்துக் கொள்ளுங்கள். இது போன்று ஓர் அத்தியாயத்தை கொண்டுவாருங்கள் என (நபியே)*

கூறுங்கள். மாறாக **இவர்களுக்கு முழுமையான அறிவில்லாமலும் இன்னும் விளக்கம் இவர்களுக்கு கிடைக்காத நிலையிலும் மறுத்துவிட்டனர்.** இதற்கு முன்னிருந்தவர்களும் இவ்வாறே மறுத்தனர். (நபியே) அநியாயக்காரர்களின் முடிவு எப்படி இருந்தது என்பதை சிந்தித்துப்பார். **அல்குர்ஆன் 10:39**

அறிவில்லாதபோதும் சரியான விளக்கம் தெரியாதபோதும் மறுப்புத் தன்மை வெளிப்படும் என்று அல்லாஹ் கூறுகிறான். இன்று சூனியம் தொடர்பாக வரும் ஆதாரப்பூர்வமான நபிமொழியை சிலர் மறுப்பதற்கும் குர்ஆன் வசனங்களை வளைப்பதற்கும் இந்த அறிவின்மையே காரணமாகும்.

சூனியத்திற்கு தாக்கம் உண்டா? இல்லையா என்பதை குர்ஆன், சுன்னா ஆகிய இரண்டை வைத்து முடிவு செய்ய வேண்டும். இஸ்லாமிய சிந்தனையாளர்கள் இப்பிரச்னைக்கு இப்படியே தீர்வு காண்பார்கள். நாத்திகச் சிந்தனை உள்ளவர்கள் மட்டுமே இது அறிவுக்கு ஒத்துவருகிறதா? நடைமுறையில் இதை செய்துகாட்ட முடியுமா என்றெல்லாம் குழப்புவார்கள். இறைத்தூதர்(ஸல்) காலத்தில் இவ்வாறு சிந்தித்தவர்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களை ஏற்காமல் காஃபிரானார்கள் என்பதே வரலாறு.

இறைத்தூதர்(ஸல்) ஓர் இரவில் பைத்துல் முகத்தஸிற்கு சென்று, அங்கிருந்து விண்ணுலகத்திற்கு பயணம் செய்துவிட்டு, மக்காவிற்கு வந்தார்கள். இது நடைமுறைக்கு சாத்தியமில்லை என்பதால், குரைஷிகள் இதை மறுத்தனர். இஸ்லாமை அரை குறையாக ஏற்றவர்களும் இச்சம்பவத்தை ஒட்டி நபியை உண்மைப் படுத்தாமல் இஸ்லாமை விட்டு வெளியேறினர். ஆனால், நபியின் மீது ஆழமான ஈமான் கொண்டிருந்த அபூ பக்ர் சித்தீக்(ரலி) போன்றவர்கள் இது தன் அறிவுக்கும், நடைமுறைக்கும் சாத்திய மானதாக தெரியாவிட்டாலும், நபி கூறுவதால் இது உண்மை என்றே நம்பினார்கள்.

(நபியே) உம் இறைவன் மக்களை முழுமையாக அறிந் துள்ளான் என உன்னிடம் நாம் கூறியதை நினைப்பீராக. நாம் உமக்கு காட்டிய காட்சியையும் குர்ஆனில் சபிக்கப்பட்ட மரத்தையும் மக்களுக்கு சோதனையாகவே ஆக்கியுள்ளோம். (இதன் மூலம்) அவர்களை நாம் அச்சுறுத்துகிறோம். ஆனால், இது அவர்களுக்கு பெரிய நிராகரிப்பையே அதிகப்படுத்துகிறது.
**அல்குர்ஆன் 17:60**

*இந்த வசனம் நபி(ஸல்) அவர்களின் மிஃராஜ் பயணம் குறித்துப் பேசுகிறது.*

*''என்னை (மிஃராஜ் விஷயத்தில்) குறைஷிகள் நம்ப மறுத்தபோது, நான் கஅபாவின் 'ஹிஜ்ர்' என்னும் பகுதியில் நின்றிருந்தேன். அல்லாஹ் எனக்கு பைத்துல் மக்திஸைக் காட்சி அளிக்கச் செய்தான். அப்போது நான் அதைப் பார்த்தபடியே அவர்களுக்கு அதன் அடையாளங்களை விவரித்தேன்'' என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*

***அறிவித்தவர்: ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி),***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 3886***

*நாம் வாழும் உலகில் ஷைத்தானும், ஜின்களும், மலக்குகளும் இருப்பதாக குர்ஆனும் நபிமொழிகளும் கூறுகின்றன. ஒரு நாத்திகன் பார்வையில் இவற்றை நம்புவது மூடநம்பிக்கையாகும். இவற்றைக் கண்ணால் காண முடியாது. அறிவால் அறிந்து கொள்ளவும் முடியாது. எனவே, நாத்திகன் மறுப்பது போல் இறைநம்பிக்கையாளர்களும் இவற்றை மறுக்க முடியுமா?*

*சொர்க்கம் நரகம், விதி, வேதங்கள், தூதர்கள் என இஸ்லாமில் இன்னும் ஏராளமான விஷயங்கள் நம் அறிவுக்கு எட்டாவிட்டாலும், கண்ணால் காணாமுடியாவிட்டாலும் அல்லாஹ்வும் அவன் தூதரும் சொன்னார்கள் என்பதால், முஸ்லிம்கள் நம்பியாக வேண்டும்; அப்படித்தான் நாம் நம்பிக்கை கொண்டுள்ளோம்.*

*இந்த அடிப்படையை இங்கு நாம் விளக்குவதற்கு முக்கியக் காரணம் உள்ளது. பொது மக்களைப் பொறுத்தவரை அதிகமானவர்களுக்கு குர்ஆனைப் பற்றியோ, நபிமொழிகளைப் பற்றியோ ஆழமான ஞானம் இல்லை. நாத்திக வாதங்களை வைத்து சூனியத்திற்கு எந்த தாக்கமும் இல்லை என யாராவது பேசினால், அதை அவர்கள் அப்படியே நம்பிவிடும் நிலையே உள்ளது. சூனியத்தால் பாதிப்பு ஏற்படுமா? ஏற்படாதா என்ற பிரச்னை குர்ஆன் மற்றும் நபிமொழிகளுடன் தொடர்புடையது என்பதால், இங்கே நாத்திகச் சிந்தனையையும், சுய அறிவையும் ஒதுக்கிவைத்து விட்டு, அல்லாஹ்வும் அவன் தூதரும் என்ன சொன்னார்கள் என்பதை மட்டும் புரிந்து வாழ்க்கையில் எடுத்துக் கொள்ள வேண்டும்.*

# குறைமதி உள்ளவனே மனிதன்

*அல்லாஹ் மனிதனுக்கு குறைவான அறிவையே வழங்கி உள்ளான். இந்த உலகத்தில் மனிதன் அறிந்த விஷயங்களை விட அறியாத விஷயங்கள் ஏராளம். காலம் கடந்து புதிது புதிதாக மனிதன் அறிந்து வருவதிலிருந்து இதை உணரலாம். இன்னும் அவன் உலகத்தைப் பற்றி அறியாத விஷயங்கள் கடலளவு உள்ளன.*

*குறைமதி உள்ளவனே மனிதன்; தன் அறிவுக்குத் ஏதுவாக குர்ஆன் வசனங்களை வளைப்பதும், தன் அறிவுக்கு ஒத்துவராத நபிமொழிகளை மறுப்பதும் பெரும் வழிகேடாகும். மனித அறிவு குறித்து அல்குர்ஆன் கூறுவதைப் பாருங்கள்.*

*(நபியே) உயிரைப் பற்றி உன்னிடம் கேட்கின்றனர். உயிர் என்பது என் இறைவனின் கட்டளையில் உள்ளது. உங்களுக்கு குறைவான அறிவுதான் வழங்கப்பட்டுள்ளது எனக் கூறுவீராக.* ***அல்குர்ஆன் 17:85***

*மனிதன் அநியாயக்காரனாகவும், அறியாதவனாகவும் இருக்கிறான்.* ***அல்குர்ஆன் 33:72***

*உங்களுக்கு நன்மையாக உள்ள ஒரு காரியத்தை நீங்கள் வெறுக்கலாம். உங்களுக்குத் தீமையளிக்கும் விஷயத்தை நீங்கள் விரும்பலாம். அல்லாஹ்வே அறிந்தவன். நீங்கள் அறியமாட்டீர்கள்.* ***அல்குர்ஆன் 2:216***

*அல்லாஹ்வின் அறிவில் அவன் நாடியதைத் தவிர வேறு எதையும் இவர்களால் அறிய முடியாது.* ***அல்குர்ஆன் 2:255***

*அறிந்தவன் ஒவ்வொருவனுக்கும் மேல் அறிந்தவன் ஒருவன் இருக்கிறான்.* ***அல்குர்ஆன் 12:76***

*நீங்கள் உங்களுக்கு அறிவில்லாத விஷயத்தில் தர்க்கம் செய்கிறீர்கள். உங்களுக்கு அறிவில்லாத விஷயத்தில் ஏன் தர்க்கம் செய்கிறீர்கள்? அல்லாஹ்வே அறிந்தவன்; நீங்கள் அறியமாட்டீர்கள்.* ***அல்குர்ஆன் 3:66***

*அவர்கள் (நரகத்திற்கு) வந்தவுடன், "நீங்கள் என் வசனங்களை அதைப் பற்றிய முழுமையான அறிவில்லாமல் மறுத்தீர்களா? அல்லது நீங்கள் என்ன செய்தீர்கள்?" என்று கேட்பான்.* ***அல்குர்ஆன் 27:84***

*எனவே, அல்லாஹ்வின் சொல்லையும், இறைத்தூதரின் சொல்லையும் படிக்கும்போது, அவர்கள் சொல்லும் ஒருசில விஷயங்களை நம் அறிவால் புரிந்துகொள்ள முடியவில்லை என்றால், நமக்கு இது பற்றிய ஞானம் இல்லை என்ற முடிவுக்கே வர வேண்டும். மாறாக இறைத்தூதரின் சொல்லை நாம் மறுக்கக் கூடாது.*

*நான் அனைத்தையும் அறிந்தவன். அனைத்து விஷயத்தையும் என் அறிவால் தீர்மானித்துவிடுவேன் என்ற தலைக்கணம் யாருக்கு இருக்குமோ அவர்கள் தான் ஆதாரப்பூர்வமான நபிமொழிகளை துணிந்து மறுப்பார்கள். விளக்கம் வந்த பிறகும் ஹதீஸ் மறுப்பில் பிடிவாதமாக இருப்பார்கள்.*

*அல்லாஹ்வும் அவன் தூதரும் கூறிய பல விஷயங்களை இன்று விஞ்ஞானம் மெய்ப்பித்து வருகிறது. இந்த விஞ்ஞான அறிவு வருவதற்கு முன்னால், அந்த விஷயங்கள் குறித்து மக்களுக்கு எந்தத் தெளிவும் இருந்ததில்லை. முஃமின்கள் இவை இறைத் தூதரின் சொல். எனவே, இது உண்மையாகவே இருக்கும் என்ற அடிப்படையில்தான் அவற்றை நம்புகிறார்கள். அறிவுக்குப் படாத ஹதீஸ்களை மறுப்பதாக இருந்தால், இந்த விஞ்ஞான அறிவு வருவதற்கு முன்பே முஃமின்கள் இந்த ஹதீஸ்களை மறுத்திருப்பார்கள். உதாரணமாக சில ஹதீஸ்களைக் கூறலாம்.*

*“உங்கள் பாத்திரத்தில் ஈ விழுந்துவிட்டால், அதை முழுவது மாக மூழ்கடித்து எடுங்கள்; பிறகு அதை எறிந்துவிடுங்கள். ஏனெனில், அதன் இரண்டு இறக்கைகளில் ஒன்றில் நோய் இருக்கிறது; இன்னொன்றில் நிவாரணம் இருக்கிறது'' என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*

***அறிவித்தவர்: அபூ ஹுரைரா(ரலி), நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 5782***

*வெறுமனே நம் சுய அறிவை மட்டும் கொண்டு இந்த ஹதீஸை பார்த்தால் இது நம் அறிவுக்குப் பொருந்தாமல் இருப்பதுடன் நாம் யாரும் விரும்பாத அருவருப்பான காரியத்தைச் செய்யச் சொல்வது போல் தோன்றும். எனவே, யாரோ, எங்கோ, ஏதோ தவறு செய்துவிட்டார்கள் என தங்களின் யூகத்திற்கு முன்னுரிமை அளித்து, இதை இறைத்தூதர்(ஸல்) கூறவில்லை என முடிவு எடுக்கலாமா?*

*மருத்துவ விஞ்ஞானம் இன்று இச்செய்தியை கண்டு அதிர்ந்துள்ளது. பீஜேவின் பாணியில் மறுக்க முற்பட்டால், இந்த*

*ஹதீஸையும் மறுக்க வேண்டும். ஆனால், இச்செய்தி முஹம்மத்(ஸல்) இறைத்தூதரே என்பதற்கு மிகப்பெரிய சான்றாக இருக்கிறது.*

*“உக்ல்’ அல்லது “உரைனா’ குலத்தாரில் சிலர் (மதீனாவிற்கு) வந்தனர். அவர்களுக்கு மதீனாவின் தட்ப வெப்பநிலை ஒத்துப் போகவில்லை. எனவே, பால் தரும் ஒட்டகங்களைச் சென்றடைந்து, அவற்றின் சிறு நீரையும், பாலையும் பருகிக் கொள்ளுமாறு அவர்களை இறைத்தூதர்(ஸல்) பணித்தார்கள். அவ்வாறே அவர்களும் சென்று அவற்றின் சிறுநீரையும் பாலையும் பருகியதால் அவர்களின் உடல் நிலை சரியானது.*

***அறிவித்தவர்: அனஸ்(ரலி), நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 233***

*இச்செய்தியில் இறைத்தூதர்(ஸல்) உடல் நோய்க்கு ஒட்டகத்தின் பாலையும், சிறுநீரையும் மருந்தாக பயன்படுத்த ஆலோசனை வழங்கினார்கள். இந்த ஹதீஸை கேட்டவுடன் இது எப்படி மருந்தாகும்? ஒட்டகத்தின் சிறுநீரை குடிக்க வேண்டுமா? கேட்கவே அருவருப்பாக உள்ளது என நம் அறிவு சொல்கிறது.*

*ஒரு முறை நான் சகோதரர் பீஜே அவர்களுடன் இருந்தபோது அவர் இந்த ஹதீஸை இந்த அடிப்படையில் குறைகண்டதும் எனக்கு நன்றாகவே தெரியும். ஆனால், இதுவரை அவர் இந்த ஹதீஸை வெளிப்படையாக மறுக்கவில்லை. மருத்துவ விஞ்ஞானம் இன்று ஒட்டகத்தின் சிறுநீரில் நோய்க்கான நிவாரணம் இருப்பதைக் கண்டறிந்துள்ளது.*

*ஒரு மருத்துவர் மருந்திற்காக தவளையை பயன்படுத்துவது குறித்து இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் கேட்டதற்கு, தவளையை கொல்ல வேண்டாம் என இறைத்தூதர்(ஸல்) தடைசெய்தார்கள்.*

***அறிவித்தவர்: அப்துர் ரஹ்மான் இப்னு உஸ்மான்(ரலி), நூல்: நஸாயீ 4280***

*மருந்திற்காகக் கூட தவளையை கொல்லக் கூடாது என்ற இறைத்தூதர்(ஸல்) அவர்களின் கூற்றை நம் சிற்றறிவைக் கொண்டு சிந்தித்தால், இது தேவையில்லாத சட்டம் போல் தெரியலாம். எனவே, இச்செய்தியில் யாரோ, எங்கோ, ஏதோ தவறு செய்து விட்டார்கள் எனக் கூறி மறுக்கலாமா?*

*நம் நாட்டில் தற்போது கொசுக்கள் அதிகரித்து வருகின்றன. இதற்கு என்ன காரணம் என ஆராயப்பட்டது. முன்பெல்லாம் தவளைகள் அதிகமாக இருந்தன; அவற்றின் குஞ்சுகள் அதாவது*

அரைத் தவளைகள் நல்ல தண்ணீரில் இருக்கும் கொசுக்களின் முட்டைகளை சாப்பிட்டு வந்தன. இதனால் அன்று கொசுக்கள் அதிகமாக இல்லை. இன்றோ, பல்வேறு வகையான மருந்துகளை நீரில் தெளித்து வருவதால், அந்த அரைத்தவளைகள் அழிந்து தவளை இனமே குறைந்துவிட்டன. எனவேதான் கொடிய நோய்களைப் பரப்பும் கொசுக்கள் இன்று அதிகரித்துவிட்டன. எனவே, தவளைகளை பாதுகாக்க வேண்டும் என சுற்றுச் சூழல் பாதுகாப்புத் துறை வலியுறுத்தி வருகிறது.

இது மாதிரியான ஹதீஸ்கள் நிறைய உள்ளன. நாம் இங்கே சிந்திக்க வேண்டிய விஷயம் என்னவென்றால், நம் அறிவுக்குப் எட்டாவிட்டாலும் இறைத்தூதரின் சொல்லே அறிவார்ந்தது என்று நாம் உறுதியாக நம்ப வேண்டும். நம் அறிவை காரணம் காட்டி இறைத்தூதர்(ஸல்) அவர்களின் சொல்லை, இது நபியின் சொல் இல்லை என மறுத்துவிடக் கூடாது.

## கொசுவை விரட்ட கோட்டையைக் கொளுத்துவதா?

சூனியத்தால் பாதிப்பு ஏற்படலாம் என்று குர்ஆன், சுன்னாவின் கூற்றை நாம் சொல்லும்போது, இதை நம்புவதால் என்ன நன்மை உள்ளது? இன்று சூனியத்தின் பெயரால் ஏராளமான மோசடிகளும் மூடநம்பிக்கைகளும் பரவியுள்ளது. இந்நிலையில் சூனியத்தால் பாதிப்பு ஏற்படும் என்று கூறினால், இந்த அநாச்சாரங்களை ஊக்குவித்தது போல் ஆகிவிடுமே என சிலர் கூறுகின்றனர். சூனியம் விஷயத்தில் குர்ஆன் வசனத்தை வளைத்து, நபிமொழிகளை மறுப்பதற்கு இது மாதிரியான கேள்விகளே முக்கிய காரணமாக உள்ளன.

நபி(ஸல்) அவர்ளிடம் தேவையற்ற பல கேள்விகளை தோழர்கள் கேட்டதும், இதை நபி(ஸல்) கடிந்ததும் குறித்து பல ஹதீஸ்கள் உள்ளன. பனூ இஸ்ரவேலர்கள் தேவையற்ற பல கேள்விகள் கேட்டதால்தான் பல்வேறு சிரமங்களுக்கு உள்ளாகினர்.

மூடநம்பிக்கையையும் மோசடித்தனத்தையும் ஒருபோதும் இஸ்லாம் அனுமதிக்காது. இஸ்லாம் உண்மைப்படுத்தியுள்ள ஒரு விஷயத்தை தன் மோசடிக்கும், இணைவைப்பிற்கும் சாதகமாக்கிக் கொள்பவர்களைத்தான் நாம் கண்டிக்க வேண்டுமே தவிர இஸ்லாம் கூறியுள்ள உண்மையை நாம் மறுத்துவிடக் கூடாது.

*இன்று ஜின்களின் பெயரால் மக்களிடம் நிறைய மூட நம்பிக்கை உள்ளது. எனவே, இந்த மூடநம்பிக்கையை ஒழிப்பதற்காக ஜின்கள் என்று ஒரு படைப்பினமே இல்லை எனக் கூற முடியுமா? இவ்வாறு நாம் கூறினால், அல்லாஹ்வையும் அவன் தூதரையும் மறுத்தவர்களாக ஆகிவிடுவோம்.*

*உடல் நிலை சரியில்லாதபோது, குர்ஆன் வசனங்களை ஓதி ஊதிக் கொள்வதற்கு இறைத்தூதர்(ஸல்) அனுமதி வழங்கினார்கள். இன்று நம் சமுதாயத்தில் பலர் இதைப் பணம் சம்பாதிக்க தொழிலாகவும் இத்துடன் பல ஷிர்க்கான காரியங்களையும் செய்கின்றனர். இந்த மூடநம்பிக்கையை ஒழிப்பதற்காக நபிகளார் அனுமதித்த குர்ஆன் வசனங்களை ஓதி வைத்தியம் செய்யும் முறையை மறுக்க முடியுமா?*

*மறுமையில் அல்லாஹ்வின் அனுமதியுடன் நல்லடியார்கள் பரிந்துரை செய்வார்கள் என குர்ஆன் பல இடங்களில் கூறுகிறது. இந்த வசனங்களை ஆதாரமாகக் கொண்டு இன்று பலர் இந்த அவ்லியாக்கள்? மறுமையில் நமக்கு பரிந்துரை செய்வார்கள் எனக் கூறி தர்ஹா, மவ்லிது போன்ற அநாச்சாரங்களை செய்கின்றனர். இவர்களின் மூடநம்பிக்கையை ஒழிப்பதற்காக மறுமையில் பரிந்துரை என்பதே இல்லை என நாம் குர்ஆனுக்கு மாற்றமான கருத்தைக் கூற முடியுமா?*

*நபிமார்கள் அல்லாஹ்வின் அனுமதியுடன் அற்புதம் செய்தார்கள் என குர்ஆன் பல இடங்களில் கூறுகிறது. இதை சிலர் ஆதரமாக எடுத்துக் கொண்டு இறந்துபோன அவ்லியாக்கள்? அற்புதம் செய்வார்கள் என்ற ஷிர்க்கான கருத்தைப் பரப்புகின்றனர். இவர்களின் மூடநம்பிக்கையை ஒழிப்பதற்காக நபிமார்கள் யாரும் அற்புதம் செய்யவில்லை. அல்லாஹ் தன் ஆற்றலை யாருக்கும் தரமாட்டான்; இவ்வாறு நம்புவது ஷிர்க் என குர்ஆனுக்கு எதிராக நாம் பேச முடியுமா?*

*நம் நாட்டில் கடவுளின் பெயரால் ஏராளமான மூடநம்பிக்கை களும், மோசடிச் செயல்களும் நடந்து வருகின்றன. இதனால் வெறுப்படைந்து சிலர், கடவுளே இல்லை என்ற முடிவுக்குச் சென்று நாத்திகர்களாகிவிட்டனர். இந்த நாத்திகர்களின் முடிவைத்தான் நாமும் ஏற்க வேண்டுமா? இப்படி நாம் சிந்தித்தால், கொசுவை விரட்டுவதற்குக் கோட்டையைக் கொளுத்தும் செயலாகும். அறிவாளி இவ்வாறு செய்யமாட்டான்.*

குர்ஆன், சுன்னாவை மறுத்துவிட்டோ, அதில் சந்தேகப் பட்டோ, மூடநம்பிக்கையை ஒழிக்க முயல்வதால், இம்மையிலோ மறுமையிலோ அல்லாஹ்விடம் எந்தப் பலனும் கிடைக்காது.

மார்க்கத்தை மறுத்து அதில் பித்அத் என்னும் வழிகேட்டை ஏற்படுத்திய குற்றவாளியாகவே அல்லாஹ்விடம் நிற்க வேண்டிய நிலை ஏற்படும். அல்லாஹ்வின் மார்க்கத்தில் அதிகாரத்தை நம் கையில் எடுக்காமல் அல்லாஹ் அனுமதித்த வழியில் மட்டுமே தீமைகளை தடுக்க முயற்சிக்க வேண்டும்.

இதே அடிப்படையில்தான் சூனியத்தின் பெயரால் இன்று சமுதாயத்தில் நடக்கும் மூடநம்பிக்கைகளையும், பாவமான காரியங்களையும் தடுப்பதற்கு ஒரு முஸ்லிம் முன்வர வேண்டும்.

மூடநம்பிக்கை அதிகரித்து வருவதைக் காரணம் காட்டி நபிமொழிகளை மறுப்பது ஒரு முஸ்லிமின் பண்பாகாது; இது ஷைத்தான் விரித்துள்ள மாயவலையில் சிக்குவதாகும்.

சூனியம் குறித்து குர்ஆன் ஹதீஸில் சொல்லப்பட்டுள்ள செய்தி ஒவ்வொன்றும், இன்று நிலவுகிற அனைத்து மூடநம்பிக்கை களையும் தகர்க்கக் கூடியதாகவே உள்ளன. இதை பின்னர் விளக்கமாக எடுத்து வைக்கிறோம். நாம் இது வரை மேலே குறிப்பிட்டுள்ள ஆதாரங்களை மனதிற் கொண்டு சூனியம் தொடர்பான கருத்துக் களைப் பாருங்கள்.

## கொள்கைப் பிரச்னை

சிஹ்ர் என்ற அரபுச் சொல்லை தமிழ் மொழியில் சூனியம் என்று குறிப்பிடும் வழக்கம் மக்களிடம் உள்ளது. சூனியக்காரன் சூனியத்தின் மூலம், தான் நினைப்பதை எல்லாம் செய்துவிட முடியாது. மாறாக அல்லாஹ் சூனியத்தின் மூலம் யாருக்கு எப் போது என்ன பாதிப்பு ஏற்பட வேண்டும் என முடிவு செய்கிறானோ அந்த பாதிப்பு மட்டுமே ஏற்படும்; இவ்வாறே குர்ஆன் மற்றும் ஆதாரப்பூர்வமான நபிமொழிகளில் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது.

இறைத்தூதர்(ஸல்) அவர்களின் காலம் முதல் இன்று வரை குர்ஆன் மற்றும் ஆதாரப்பூர்வமான நபிமொழிகளின் அடிப் படையில் மார்க்கத்தைப் போதித்த இமாம்கள் அனைவரும் இஸ்லாமிய அறிஞர்களும் சூனியம் குறித்து இவ்வாறே நம்பினார்கள்; இதையே மக்களிடம் கூறினார்கள்.

ஆனால், பகுத்தறிவு லாஜிக் மனோஇச்சையை மார்க்கமாக கொண்ட முஃதஸிலா என்ற வழிகேடர்கள் இடைப்பட்ட காலத்தில் புதிதாகத் தோன்றி சூனியம் என்று எதுவுமில்லை; அதன் மூலம் எந்த பாதிப்பும் ஏற்படாது. சூனியத்தின் மூலம் பாதிப்பு ஏற்படும் என்று யாராவது நம்பினால் அவன் இணை வைப்பாளனாக மாறி இஸ்லாமை விட்டே வெளியே சென்று விடுவான் என்ற கருத்துக்களைக் கூறினார்கள். முற்றிலும் சம்பந்தம் இல்லாத வகையில் குர்ஆன் வசனங்களையும் இதற்கு ஆதாரமாக காட்டினர்.

இந்த வழிகேடு ஆரம்பித்த உடன் அரபுலக அறிஞர்கள் இவர்களின் வழிகேட்டை மக்களுக்கு புரியவைத்து குர்ஆன் சுன்னாவிற்கு முரணான இவர்களின் பித்அத்தை வேறோடு பிடிங்கி அழித்துவிட்டனர். ஆனால், சூனியம் விஷயத்தில் அன்று முஃதஸிலாக்களிடம் ஏற்பட்ட நோய் தற்போது தமிழ்நாட்டில் உள்ள சிலரிடமும் தொற்றிக்கொண்டது.

குர்ஆன் மற்றும் ஆதாரப்பூர்வமான நபிமொழிகளை ஏற்க வேண்டும் என்ற சரியான நிலைபாட்டில் இவர்கள் ஆரம்பத்தில் இருந்தபோது சூனியத்தின் மூலம் அல்லாஹ் நாடினால் பாதிப்பு ஏற்படும் என்றே மக்களிடம் பிரச்சாரம் செய்துவந்தார்கள். பின்னர் நாளுக்கு நாள் இவர்களின் ஆய்வு முற்றி, நபிமொழிகளை தங்கள் இஷ்டத்திற்கு மறுக்கும் நோய் இவர்களிடம் அதிகரித்து விட்டது. இதன் ஒரு பகுதியாக, சூனியம் உண்டு எனக் கூறும் நபிமொழிகளையும் மறுத்துவிட்டனர்.

தற்போது இவர்கள் கூறிவரும் கருத்துக்கள் தமிழ் உலகத்திற்கு வேண்டுமானால் புதிதாகத் தெரியலாம். ஆனால், இஸ்லாமிய வரலாற்றில் இப்பிரச்னைகள் ஏற்கனவே தெளிவாக அலசி ஆராயப்பட்டு முற்றுப்புள்ளி இடப்பட்டுள்ளன.

அல்லாஹ்வும், அல்லாஹ்வின் தூதரும் சூனியம் குறித்து கூறியுள்ள செய்திகளை ஷிர்க் என்றும், மூடநம்பிக்கை என்றும், குர்ஆனுக்கு முரணானது என்றும் கூறி மக்களை கடுமையாகக் குழப்பி வருகின்றனர்.

தொழுகையில் அத்தஹிய்யாத்தில் விரலை அசைக்கலாமா? தொழுகையில் நெஞ்சில்தான் கையைக் கட்ட வேண்டுமா என்பது போன்ற மார்க்கச் சட்டங்களில் கருத்து வேறுபாடுகள் இருக்கலாம். இது போன்ற சிறு சிறு மஸாயில் பிரச்னைகளில் அறிஞர்களுக்

கிடையே கருத்துவேறுபாடுகள் எல்லா காலத்திலும் இருந்தது. இந்த கருத்துவேறுபாடுகளால் முஸ்லிம்களுக்கிடையே பிளவு ஏற்படாது. இரண்டில் எதை ஏற்றாலும் ஏற்காவிட்டாலும் அனைவரும் முஸ்லிம்களே. இதனால் யாரும் காஃபிராகிவிட மாட்டார்கள்.

ஆனால், நாங்கள் சொல்வதை ஏற்பவர்களே முஸ்லிமாக இருக்க முடியும். ஏற்காதவர்கள் முஸ்லிமாக இருக்க முடியாது எனக் கூறினால், அது கொள்கைப் பிரச்னை. சூனியத்தில் இவர்கள் கூறும் கருத்தை ஏற்றுக் கொள்ளாத முஸ்லிம்கள் அனைவரையும் இணைவைப்பாளர்கள் என இக்கூட்டம் கூறிவருகிறது. இது சாதாரன விஷயமல்ல; மிகவும் ஆபத்தான கொள்கைப் பிரச்னை.

இது போன்ற ஆபத்தான விஷயங்களுக்கு இவர்கள் எடுத்து வைக்கும் ஆதாரம், லாஜிக், தர்க்கம், சுய அறிவு ஆகியவை. ஆனால், நாம் இவற்றை ஆதாரமாக கொள்ளாமல் குர்ஆன் சுன்னாவை மட்டுமே ஆதாரமாகக் கொண்டு முடிவெடுக்க வேண்டும்.

## சிஹ்ர் என்னும் பதத்தின் பொருள்

பொதுவாக அரபு மொழியில் ஒரு சொல்லுக்கு பல்வேறு அர்த்தங்கள் உள்ளன. உதாணரமாக அஸ்ஸலாத், சஜ்தா, அல்அய்ன், உம்மா போன்ற சொற்களைக் கூறலாம். பொதுவாக ஸலாத் என்ற சொல் பிரார்த்தனையைக் குறிக்கிறது. ஆனால், இது இடத்திற்கு ஏற்ப தொழுதல், கருணை காட்டுதல், பிரார்த்தித்தல் முதலிய அர்த்தங்களிலும் பயன்படுத்தப்படும்.

ஸுஜூத் என்ற சொல்லுக்கு வணங்குதல், கீழ்படிதல், பணிவு என்ற அர்த்தங்களும் உள்ளன. அல்லாஹ்வுக்கு சஜ்தா செய்யுங்கள் என்றால் தலையை தரையில் வைத்து அல்லாஹ்வை வணங்குங்கள் என்று பொருள். ஒரு மனிதருக்கு ஸஜ்தா செய்யுங்கள் என்றால் அவருக்கு கட்டுப்பட்டு நடங்கள் என்று பொருள். அல் அய்ன் என்ற சொல் கண், நீரூற்று முதலிய பல அர்த்தங்களிலும் பயன்படுத்தப்படும்.

குர்ஆனில் உம்மா என்ற சொல் பல அர்த்தங்களில் பயன் படுத்தப்பட்டுள்ளது. 11:8 வது வசனத்தில் உம்மா என்ற சொல் தவணை, அவகாசம் என்ற பொருளில் கூறப்பட்டுள்ளது.16:120 வது வசனத்தில் தலைவர் என்ற பொருளில் கூறப்பட்டுள்ளது. 43:22 வது

வசனத்தில் கொள்கை என்ற பொருளில் பயன்படுத்தப்பட்டு உள்ளது. 28:23 வது வசனத்தில் பலர் என்ற பொருளில் கூறப் பட்டுள்ளது.7:159 வது வசனத்தில் கூட்டத்தினர் என்ற பொருளில் பயன்படுத்தப்பட்டுள்ளது.

சில இடங்களில் ஒரே சொல்லுக்கு நேர் எதிரான அர்த்தமும் கொடுக்கப்படும். அல்குர்வு என்ற சொல் பெண்ணின் மாதவிடாய்க் காலத்தைக் குறிக்கும்; இதே சொல், ஒரு பெண் மாதவிடாய் இல்லாமல் தூய்மையாக இருக்கும் காலத்தையும் குறிக்கும். ஷஃபக் என்றால் வெண்மை என்று பொருள்; ஆனால், இதற்குச் சிவப்பு என்ற பொருளும் உள்ளது. அல்ஜவ்ன், அஸ்ஸரீம் என்றால் வெண்மை என்று பொருள்; இதற்கு கருப்பு என்ற பொருளும் உள்ளது.

இதை அரபு மொழியில் பல பொருள் கொண்ட சொல் எனக் கூறுவர். பேச்சின் முன் பின் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டும், இடம் மற்றும் சூழலைக் கருத்தில் கொண்டும் ஒரு வார்த்தை குறிப்பிட்ட அந்த இடத்தில் என்ன பொருளில் பயன் படுத்தப்பட்டுள்ளது என்பதைக் கவனித்தே பொருள் கொடுக்க வேண்டும்.

அரபுமொழி அறிவு உள்ளவர்கள் எவ்விதக் குழப்பமும் இல்லாமல், இதைத் தெளிவாகப் புரிந்துகொள்வார்கள். அரபு இலக்கணம் மற்றும் இலக்கியத்தில் இது முக்கியமான ஓர் அம்சமாக பார்க்கப்படுகிறது.

இவ்வாறு ஒரு சொல் வெவ்வேறு அர்த்தங்களில் பயன் படுத்தப்பட்டால் ஓர் அர்த்தத்தை மட்டுமே கொடுத்து அந்த வார்த்தைக்கு வேறு பொருளே இல்லை என மறுப்பது சரியான மொழி அறிவு இல்லை என்பதைக் காட்டும்.

ஒரு வார்த்தைக்கு எந்த இடத்தில் என்ன அர்த்தம் சரியாக இருக்குமோ அதையே கொடுக்க வேண்டும். அதில், மார்க்கம் தொடர்பான விஷயங்களில் கொள்கை, சட்டங்கள், வரலாற்றுப் பின்னணிகள் முதலியவற்றைக் கவனித்தே பொருள் கொடுக்க வேண்டும். இதுதான் இஸ்லாம் காட்டும் வழிமுறை.

இது போல் பல அர்த்தங்களை உள்ளடக்கிய சொல்தான் சிஹ்ர் என்னும் பதம். சிஹ்ர் என்றச் சொல்லைத் தமிழில் சூனியம் எனக் குறிப்பிடுகிறோம். சூனியம் என்ற தமிழ் சொல்லை மட்டும் வைத்துக்கொண்டு சிஹ்ருக்கு விளக்கம் தரமுடியாது. சிஹ்ர்

என்னும் பதத்திற்கு அரபு மொழியில் கூறப்பட்டுள்ள பல்வேறு அர்த்தங்களைக் கொண்டே விளக்கம் தர வேண்டும்.

ஆனால், சகோதரர் பீஜே சிஹ்ர் என்னும் அரபுப் பதத்திற்கு சூனியம் என்ற தமிழ் சொல்லை வைத்துக்கொண்டு, சூனியம் என்றால் பூஜ்யம் அதாவது ஒன்றுமே இல்லை எனப் பொருள் கொடுத்து சிஹ்ரை மறுத்து வருகிறார்; இது மிகவும் தவறான அணுகுமுறையாகும். குர்ஆனிலும், நபிமொழிகளிலும் சிஹ்ர் என்ற சொல் பல அர்த்தங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது.

சிஹ்ர் என்ற சொல்லுக்கு பல அர்த்தங்கள் உள்ளன என்ற தெளிவை மக்களுக்கு முதலில் ஏற்படுத்த வேண்டும். ஏனெனில், இந்த உண்மையை மக்கள் அறியாததால்தான் சிஹ்ர் குறித்து சரியான தெளிவு இல்லாமல் குழம்புகின்றனர்; அது மட்டுமின்றி ஓர் அர்த்தத்தை மட்டுமே வைத்துக் கொண்டு மற்ற அர்த்தங்களை மறுக்கிறார்கள். இது பற்றி இமாம் ஷாஃபியீ(ரஹ்) அல் உம்மு என்ற தன்னுடைய நூலில் கூறுவதைப் பாருங்கள்.

**الأم ــ للشافعي (1/ 256)**

**قَالَ الشَّافِعِيُّ : وَالسِّحْرُ اسْمٌ جَامِعٌ لِمَعَانٍ مُخْتَلِفَةٍ**

*சிஹ்ர் என்பது வெவ்வேறான பல அர்த்தங்களை உள்ளடக்கிய சொல்லாகும்.* **நூல்: அல் உம்மு (பாகம் 1 பக்கம் 256)**

சிஹ்ர் என்ற சொல் வெவ்வேறு அர்த்தங்களில் பயன்படுத்தப்பட்டாலும் அதன் அடிப்படையான அர்த்தம் திருப்புதல் மாற்றுதல் என்பதாகும். அரபுச் சொற்களின் அர்த்தங்களை விவரிக்கும் பிரபல்யமான அரபு நூலான லிஸானுல் அரப் என்ற நூல் இச்சொல்லின் ஏராளமான அர்த்தங்களைப் பட்டியலிடுகிறது. சிஹ்ர் என்ற சொல்லின் அடிப்படையான பொருள் குறித்து பின் வருமாறு விவரிக்கிறது.

**لسان العرب (4/ 348)**

**قال الأَزهري وأَصل السِّحْر صَرْفُ الشيء عن حقيقته إِلى غيره**

*ஒரு பொருளை அதன் எதார்த்தத்திலிருந்து மற்ற நிலைக்கு மாற்றுதல் என்பதே சிஹ்ர் என்ற சொல்லின் அசல் அர்த்தமாகும்.*
**நூல்: லிஸானுல் அரப் (பாகம் 4 பக்கம் 348)**

*இச்சொல்லை இதன் அசல் அர்த்தத்தில் பின்வரும் வசனத்தில் அல்லாஹ் பயன்படுத்தியுள்ளான்.*

**قُلْ مَنْ بِيَدِهِ مَلَكُوتُ كُلِّ شَيْءٍ وَهُوَ يُجِيرُ وَلَا يُجَارُ عَلَيْهِ إِنْ كُنْتُمْ تَعْلَمُونَ (88) سَيَقُولُونَ لِلَّهِ قُلْ فَأَنَّى تُسْحَرُونَ (89) 23**

*பாதுகாப்பவனும் பாதுகாக்கப்படாதவனும் அனைத்து பொருட்களின் அதிகாரத்தை தன்வசமே வைத்திருப்பவனும் யார்? நீங்கள் அறிந்தால் (பதில் கூறுங்கள்) என்று (நபியே) கேளுங்கள். அவர்கள் அல்லாஹ்விற்கே (அதிகாரம்) உள்ளது என்று கூறுவார்கள். அப்படியானால் ஏன் திசைதிரும்புகிறார்கள்? என்று கேட்பீராக.* ***அல்குர்ஆன் 23:89***

*இங்கே அல்லாஹ் சரியான பாதையை விட்டும் தவறான பாதைக்கு திரும்புவதை சிஹ்ர் என்று குறிப்பிடுகிறான். கவர்ச்சியாக பேசி மக்களை திசைதிருப்ப முடியும் என்பதால் பேச்சிலும் சிஹ்ர் உள்ளது என்று இறைத்தூதர்(ஸல்) கூறியுள்ளார்கள்.*

**5767حَدَّثَنَا عَبْدُ اللَّهِ بْنُ يُوسُفَ أَخْبَرَنَا مَالِكٌ عَنْ زَيْدِ بْنِ أَسْلَمَ عَنْ عَبْدِ اللَّهِ بْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّهُ قَدِمَ رَجُلَانِ مِنْ الْمَشْرِقِ فَخَطَبَا فَعَجِبَ النَّاسُ لِبَيَانِهِمَا فَقَالَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ إِنَّ مِنْ الْبَيَانِ لَسِحْرًا أَوْ إِنَّ بَعْضَ الْبَيَانِ لَسِحْرٌ رواه البخاري**

*இரண்டு மனிதர்கள் (மதீனாவுக்குக்) கிழக்கிலிருந்து வந்து உரையாற்றினார்கள். அவ்விருவரின் சொற்பொழிவைக் கேட்டு மக்கள் வியந்தார்கள். அப்போது,*

*“சில சொற்பொழிவில் சிஹ்ர் (ஈர்ப்பு) உள்ளது’ அல்லது “சில சொற்பொழிவுகள் சிஹ்ராகும் (ஈர்ப்பாகும்)” என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*

***அறிவித்தவர்: அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி),***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 5767***

*வித்தை செய்தல், ஏமாற்றுதல் என்ற பொருளும் இச்சொல்லுக்கு உள்ளது. மோசமாக சமைக்கப்பட்டு, மாற்றமடைந்த உணவுக்கு மஸ்ஹூரான உணவு என்று சொல்வார்கள். அதிகமாக மழை பெய்து சேறும் சகதியாக மாறிய நிலத்திற்கும் மஸ்ஹூரான நிலம் என்று கூறுவார்கள். ஆரோக்கியமான ஒருவன் சூனியத்தால் பாதித்து மாற்றம் அடைந்தால், அதற்கும் சிஹ்ர் என்ற சொல் பயன்படுத்தப்படும்.*

لسان العرب (4/ 348)

( * قوله « ابن عائشة » كذا بالأَصل وفي شرح القاموس ابن أبي عائشة ) قال العرب إِنما سمت السِّحْرَ سِحْراً لأَنه يزيل الصحة إِلى المرض

*சிஹ்ர் ஒரு மனிதனை ஆரோக்கியத்திலிருந்து நோயின் நிலைக்கு மாற்றுவதால், இதற்கும் சிஹ்ர் என அரபுகள் குறிப் பிடுகிறார்கள்.* ***நூல்: லிஸானுல் அரப் (பாகம் 4 பக்கம் 348)***

*மாறுதல் மாற்றுதல் என்ற பொருளை அடிப்படையாகக் கொண்டு இன்னும் பல அர்த்தங்களில் சிஹ்ர் என்னும் பதம் பயன்படுத்தப்படுகிறது. அவை நம் தலைப்புக்கு அப்பாற்பட்டவை என்பதால் அவற்றை முழுமையாக நாம் இங்கே குறிப்பிடவில்லை.*

*இந்தத் தலைப்பில் தொடர்புடைய சிஹ்ரின் இரண்டு அர்த் தங்களைப் பற்றி மட்டும் இனி விரிவாக அறிந்துகொள்வோம்.*

*மக்கள் ஆரம்ப காலம் முதல் இன்று வரை சிஹ்ர் என்றச் சொல்லை இரண்டு அர்த்தங்களில் பயன்படுத்தினார்கள். இந்த இரண்டு அர்த்தங்களும் வெவ்வேறானவை.*

1. *வித்தை செய்து கண்களை ஏமாற்றுவதையும் சிஹ்ர் என்ற வார்த்தையால் குறிப்பிட்டார்கள்.*

2. *ஒரு மனிதன் சம்பந்தப்பட்ட சில பொருட்களைக் கொண்டு மறைமுகமாக பாதிப்பு ஏற்படுத்துவதையும் சிஹ்ர் எனக் குறிப்பிட்டார்கள்.*

*மேற்கண்ட இரண்டு அர்த்தத்தில் சிஹ்ர் என்ற ஒரு சொல்லை அவர்கள் பயன்படுத்தினாலும் இரண்டும் வெவ்வேறான விஷயங்கள் என்பதை அறிந்தே வைத்திருந்தனர். இந்த இரண்டு பொருளையும் ஆராய்ந்தால், அவை தனித்தனியே வேறுபட்டு இருப்பதை மிகத் தெளிவாக அறியலாம். இந்த இரண்டு அர்த் தங்களில் ஒன்றை வைத்து இன்னொன்றை மறுக்க முடியாது.*

## வித்தை என்ற பொருளில்

*நபிமார்கள் மக்களிடம் அற்புதங்களை செய்து காட்டியபோது அதை மறுத்தவர்கள் நபிமார்களை சாஹிர் என்றும், அவர்கள் செய்த அற்புதங்களை சிஹ்ர் என்றும் கூறி மறுத்தார்கள்.*

*நம் கண்களுக்குத் தெரியாத சில தந்திரங்களை செய்து இவர் நம்மை ஏமாற்றுகிறார். இது சாதாரண கண்கட்டி வித்தையே தவிர அற்புதம் கிடையாது என்ற அர்தத்தில் அவர்கள் இவ்வாறு கூறினார்கள். இதற்கு பின்வரும் வசனங்கள் சான்றாக உள்ளன.*

*மர்யமின் மகன் ஈஸாவே! உனக்கும் உன் தாயாருக்கும் நான் செய்த அருளையும் ரூஹுல் குத்ஸ் மூலம் நான் உம்மைப் பலப்படுத்தியதையும் நினைத்துப்பார்ப்பீராக.*

*தொட்டிலிலும் இளமைப் பருவத்திலும் நீர் மக்களிடம் பேசினீர். உனக்கு வேதத்தையும், ஞானத்தையும், தவ்ராத் இன்ஜீலையும் நான் கற்றுக்கொடுத்தேன்.*

*என் விருப்பப்படி நீர் களிமண்ணில் பறவையின் வடிவத்தைப் போன்று செய்து அதில் ஊதினாய். என் விருப்பப்படி அது பறவையாக மாறியது. என் விருப்பப்படி நீ குருடரையும் வெண் குஷ்டம் உடையவரையும் குணப்படுத்தினீர். என் விருப்பப்படி மரணித்தவர்களை உயிர்ப்பித்தீர்.*

*நீர் இஸ்ரவேலர்களிடம் தெளிவான சான்றுகளுடன் வந்தபோது, அவர்களில் நிராகரிப்பாளர்கள் இது தெளிவான (சிஹ்ர்) சூனியமே அன்றி வேறில்லை எனக் கூறியபோது, அவர்களிடமிருந்து உன்னை நான் காப்பாற்றினேன் என அல்லாஹ் கூறியதை (நபியே) நினைவூட்டுவீராக.*

***அல்குர்ஆன் 5:110***

**وَلَوْ فَتَحْنَا عَلَيْهِمْ بَابًا مِنَ السَّمَاءِ فَظَلُّوا فِيهِ يَعْرُجُونَ (14) لَقَالُوا إِنَّمَا سُكِّرَتْ أَبْصَارُنَا بَلْ نَحْنُ قَوْمٌ مَسْحُورُونَ (15)15**

*இவர்களுக்காக நாம் வானத்தில் ஒரு வாசலை திறந்து விட்டு அதில் இவர்கள் ஏறிச்சென்றாலும் எங்கள் பார்வை மயக்கப்பட்டிருக்கின்றன. நாங்கள் சூனியம் செய்யப்பட்ட - மஸ்ஹூர் கூட்டமாக இருக்கிறோம் என்று கூறுவார்கள்.*

***அல்குர்ஆன் 15:15***

**وَلَوْ نَزَّلْنَا عَلَيْكَ كِتَابًا فِي قِرْطَاسٍ فَلَمَسُوهُ بِأَيْدِيهِمْ لَقَالَ الَّذِينَ كَفَرُوا إِنْ هَذَا إِلَّا سِحْرٌ مُبِينٌ(7)6**

*(நபியே) காகிதத்தில் எழுதப்பட்ட வேதத்தை உமக்கு நாம் வழங்கி, அதை இவர்கள் தங்கள் கைகளால் தடவிப்பார்த்தாலும்*

*நிராகரிப்பாளர்கள் இது தெளிவான சூனியமே - சிஹ்ர் அன்றி வேறில்லை எனக் கூறுவார்கள்.* **அல்குர்ஆன் 6:7**

*நாம் மூஸாவை நம் வசனங்களுடனும் தெளிவான சான்றுடனும் ஃபிர்அவ்ன், ஹாமான், காரூன் ஆகியோரிடம் அனுப்பியபோது, அவர்கள் இவர் பெரும்பொய்யராகவும் சூனியக்காரராகவும் - சாஹிர் இருக்கிறார் எனக் கூறினார்கள்.* **அல்குர்ஆன் 40:24**

நிராகரிப்பாளர்கள் நபிமார்கள் செய்த அற்புதங்களை கண்கட்டி வித்தை எனக் கூறி மறுத்ததற்கு குர்ஆனில் இன்னும் பல ஆதாரங்கள் உள்ளன. நபி மூஸா(அலை) அற்புதங்களை செய்து காட்டியபோது, ஃபிர்அவ்ன் இது வித்தைதான் அற்பு தமில்லை எனக் கூறினான். மேலும் இது போன்ற வித்தையை எங்களாலும் செய்துகாட்ட முடியும் என சவால் விட்டு போட்டிக்கு வருமாறு அழைத்தான்.

மூஸா(அலை) செய்த அற்புதங்கள் கண்கட்டி வித்தைதான். அல்லாஹ்வின் உதவியுடன் செய்யப்படும் அற்புதம் அல்ல என மக்களை நம்பவைப்பதற்காகவே ஃபிர்அவ்ன் போட்டிக்கு அழைத்தான். ஆனால், அந்தப் போட்டியின் இறுதியில் மூஸா (அலை) வித்தை செய்யவில்லை. அற்புதமே செய்தார்கள் என்பது மக்களுக்கு தெளிவானது. ஃபிர்அவ்ன் தோற்றான். மூஸா(அலை) வெற்றிபெற்றார்கள்.

*“நீ உண்மையாளராக இருந்தால், நீ கொண்டுவந்துள்ள அற்புதத்தை செய்துகாட்டு!” என ஃபிர்அவ்ன் கூறினான்.*

*மூஸா தம் கைத்தடியை போட்டார். அது தெளிவான பாம்பாக மாறியது. தம் கையை வெளியில் எடுத்தார். அது பார்ப்பவர்களுக்கு வெண்மையாகத் தெரிந்தது. ஃபிர்அவ்னின் கூட்டத்தில் இருந்த பிரமுகர்கள்,*

*“இவர் விபரமான சூனியக்காரர். உங்கள் பகுதியிலிருந்து உங்களை வெளியேற்ற நினைக்கிறார். நீங்கள் என்ன கட்டளையிடப் போகிறீர்கள்?” எனக் கேட்டனர்.*

*சூனியக்காரர்கள் ஃபிர்அவ்னிடம் வந்து, “நாங்கள் வெற்றி பெற்றால் எங்களுக்கு கூலி உண்டா?” எனக் கேட்டனர்.*

*“ஆம் நீங்கள் நெருக்கமானவர்கள்” என ஃபிர்அவ்ன் கூறினான்.*

*“மூஸாவே! நீர் (முதலில்) போடுகிறாயா? அல்லது நாங்களே போடட்டுமா?” என அவர்கள் கேட்டனர்.*

“நீங்களே (முதலில்) போடுங்கள்!” என அவர் கூறினார்.

அவர்கள் போட்டபோது பிரம்மாண்டமான சூனியத்தை செய்து, மக்களின் கண்களை வயப்படுத்தி அச்சத்தை ஏற்படுத்தினார்கள்.

“உன்னுடைய கைத்தடியை நீர் போடுவீராக! அது அவர்கள் பொய்யாக உருவாக்கியவற்றை விழுங்கிவிடும்” என நாம் மூஸாவிடம் கூறினோம்.

அப்போது உண்மை வெளிப்பட்டது. அவர்கள் செய்தவை அழிந்தன. அங்கே அவர்கள் தோற்கடிக்கப்பட்டு சிறுமை அடைந்தனர்.

“மூஸா ஹாரூனின் இறைவனான அகிலத்தின் இறைவனை நாங்கள் நம்பிக்கைகொண்டுவிட்டோம்” என சூனியக்காரர்கள் கூறி ஸஜ்தாவில் விழுந்தனர். **அல்குர்ஆன் 7:122**

சிஹ்ர் என்ற சொல் கண் கட்டி வித்தையைக் குறிக்கும் என்பதற்கு மேற்கண்ட வசனங்கள் ஆதாரமாக உள்ளன. இச்சொல்லுக்கு இந்தப் பொருள் இருப்பதை சகோதரர் பீஜே மறுக்கவில்லை. இதை ஏற்றுக்கொள்கிறார்.

இந்த வகையான சிஹ்ரில் இஸ்லாமிய அறிஞர்களிடம் கருத்து வேறுபாடு உள்ளது. ஒரு சாரார் நாம் கூறியது போல் இதனை வெறும் கண்கட்டி வித்தை எனக் கூறுகின்றனர்.

சிஹ்ரில் இரண்டு வகை உள்ளது. ஒன்று வித்தையாகும். இன்னொன்று பாதிப்பு ஏற்படுத்தக் கூடியதாகும். மேலுள்ள வசனங்கள் முதல் வகை சிஹ்ரைப் பற்றிப் பேசுகிறது என இவர்கள் கூறுகிறார்கள்.

இன்னொரு சாரார், சிஹ்ரை இரண்டாகப் பிரிக்க வேண்டியதில்லை. மேற்கண்ட வசனங்களில் சொல்லப்படுவது வித்தையல்ல. இதுவும் தாக்கத்தை ஏற்படுத்தும் சிஹ்ராகும். இதன் மூலம் கண்களை மயக்கி பொய்யான காட்சியைக் காட்ட முடியும் என்கின்றனர்.

சூனியத்தில் இரண்டு வகை உள்ளது என்ற விளக்கத்தை நாம் சுயமாக கூறவில்லை. இஸ்லாமிய அறிஞர்கள் பலர் இக்கருத்தைக் கூறியுள்ளனர். இதை இமாம் இப்னு தைமியா(ரஹ்) தன்னுடைய நூலில் குறிப்பிடுகிறார்கள்.

الفرقان بين أولياء الرحمن وأولياء الشيطان (ص: 16)

وَذَهَبَ جُمْهُورُ أَهْل السُّنَّةِ إِلَى أَنَّ السِّحْرَ قِسْمَانِ :

10 – قِسْمٌ هُوَ حِيَلٌ وَمُخْرَقَةٌ وَتَهْوِيلٌ وَشَعْوَذَةٌ ، وَإِيهَامٌ لَيْسَ لَهُ حَقَائِقُ ، أَوْ لَهُ حَقَائِقُ لَكِنْ لَطُفَ مَأْخَذُهَا ، وَلَوْ كُشِفَ أَمْرُهَا لَعُلِمَ أَنَّهَا أَفْعَالٌ مُعْتَادَةٌ يُمْكِنُ لِمَنْ عَرَفَ وَجْهَهَا أَنْ يَفْعَل مِثْلَهَا ،......

الْقِسْمُ الثَّانِي : مَا لَهُ حَقِيقَةٌ وَوُجُودٌ وَتَأْثِيرٌ فِي الأَْبْدَانِ . فَقَدْ ذَهَبُوا إِلَى إِثْبَاتِ هَـذَا الْقِسْمِ مِنْ حَيْثُ الْجُمْلَةُ . وَهُوَ مَذْهَبُ الْحَنَفِيَّةِ عَلَى مَا نَقَلَهُ ابْنُ الْهُمَامِ ، وَالشَّافِعِيَّةُ وَالْحَنَابِلَةُ(2) .

*அஹ்லுஸ்ஸுன்னாவில் அதிகமானோர் சூனியத்தில் இரண்டு வகை உள்ளது என்ற கருத்தில் உள்ளனர்.*

1. *தந்திரம் செய்து பொய்யான தோற்றத்தை ஏற்படுத்துவது சூனியத்தில் ஒரு வகையாகும். இது, ஒன்றுமே இல்லாத விஷயத்தை உண்மைபோல் சித்தரிப்பதாகும். அதில் உள்ள இரகசியம் நுட்பமானதாக இருக்கும். அந்த விஷயம் தெளிவானால், இது நடைமுறையில் உள்ள சாதாரண விஷயம் என்பதை அறிந்துகொள்ளலாம். இந்த நுட்பத்தை அறிந்த எல்லோராலும் அது போன்று செய்ய முடியும்.*

2. *உடம்பில் பாதிப்பை ஏற்படுத்தக் கூடியது சூனியத்தில் இன்னொரு வகையாகும்; இப்படிப்பட்ட சூனியம் இருக்கிறது. அதற்கு எதார்த்தமும் உள்ளது. இந்த வகையான சூனியம் உண்டு என்ற கருத்தை ஒட்டுமொத்த அஹ்லுஸ் சுன்னாவினர் கூறுகின்றனர். இதுவே ஹனஃபீ, ஷாஃபீ, ஹம்பலீ மத்ஹபினரின் கொள்கையுமாகும்.*

***நூல்: அல்ஃபுர்கானு பைன அவ்லியாயிர் ரஹ்மான் வஅவ்லியாயி ஷைத்தான் (பாகம் 1 பக்கம் 16)***

*வித்தை என விளக்கம் கூறும் அறிஞர்களின் கருத்து நமக்கு சரியாகத் தெரிந்ததால் அதை நாம் ஏற்றுள்ளோம். இங்கு நாம் குறிப்பிட்டுள்ள வசனங்களில் சொல்லப்படும் சிஹ்ர் குறித்து இரண்டு கருத்து இருந்தாலும், சிஹ்ரில் பாதிப்பு ஏற்படுத்தும் ஒரு வகையும் இருக்கிறது என்பதில் இஸ்லாமிய அறிஞர்களிடம் கருத்து வேறுபாடு இல்லை. இதை அனைவரும் ஏகமனதாக ஏற்றுக் கொண்டுள்ளனர்.*

# பாதிப்பு ஏற்படுத்தும் சிஹ்ர்

*நிராகரிப்பாளர்கள் சிஹ்ர் என்ற சொல்லை கண்கட்டி வித்தை என்ற பொருளில் கூறியதைப் போன்று சில காரியங்களைச் செய்து ஒருவருக்கு மறைமுகமாக பாதிப்பு ஏற்படுத்தும் செயலுக்கும் சிஹ்ர் என்று கூறி வந்தனர்.*

*சிஹ்ர் என்ற சொல்லுக்கு இந்த அர்த்தமும் உள்ளது என்பதை சகோதரர் பீஜே மறுக்கவில்லை; ஏற்றுக் கொள்கிறார். ஆனால், அல்லாஹ் இந்த நம்பிக்கையை ஆதரிக்கவில்லை எனக் கூறுகிறார்.*

*அல்லாஹ் இந்த நம்பிக்கையை அங்கீகரிக்கிறானா இல்லையா என்பதை நாம் காண்பதற்கு முன், பாதிப்பை ஏற்படுத்தும் ஒரு வகையான செயலுக்கும் சிஹ்ர் என்று கூறப்படுவது குறித்து நாம் முதலில் அறிந்து கொள்வோம்.*

*நபிமார்கள் மக்களை ஏகத்துவத்தின் பக்கம் அழைத்தபோது இவருக்கு யாரோ சூனியம் வைத்து அதன் பாதிப்பால் உளறுகிறார் என காஃபிர்கள் கூறினார்கள் என்பதற்கு ஆதாரமாக சகோதரர் பீஜே பின்வரும் வசனங்களைக் கூறுகிறார்.*

*சமூத் கூட்டத்தார் சாலிஹ்(அலை) அவர்களைப் பார்த்து சூனியம் செய்யப்பட்டவர் எனக் கூறினார்கள்.*

*நீ சூனியம் செய்யப்பட்டவராகவே இருக்கிறீர். நீர் எங்களைப் போன்ற மனிதர் அன்றி வேறில்லை. நீ உண்மையாளராக இருந்தால் அற்புதத்தை கொண்டு வாரும் என அவர்கள் கூறினர்.*

***அல்குர்ஆன் 26:154***

*மத்யன் வாசிகள் ஷுஐப்(அலை) அவர்களை சூனியம் செய்யப்பட்டவர் எனக் கூறினர்.*

*நீ சூனியம் செய்யப்பட்டவராகவே இருக்கிறீர். நீர் எங்களைப் போன்ற மனிதர் அன்றி வேறில்லை. உன்னை பொய்யராகவே நாங்கள் கருதுகிறோம் எனக் கூறினார்கள்.* ***அல்குர்ஆன் 26:186***

*ஃபிர்அவ்ன் மூஸா(அலை) அவர்களை சூனியம் செய்யப் பட்டவர் எனக் கூறினான்.*

*மூஸாவிற்கு நாம் ஒன்பது தெளிவான அத்தாட்சிகளை வழங்கினோம். அவர் இஸ்ரவேலர்களிடம் வந்தபோது மூஸாவே நான் உன்னை சூனியம் செய்யப்பட்டவராகவே கருதுகிறேன் என ஃபிர்அவ்ன் கூறியதைப் பற்றி நீ அவர்களிடம் கேட்பீராக.*

***அல்குர்ஆன் 17:101***

*மக்கத்து காஃபிர்களும் இறைத்தூதர்(ஸல்) அவர்களை சூனியம் செய்யப்பட்டவர் எனக் கூறினார்கள்.*

*(நபியே) அவர்கள் உன்னிடம் செவியுற்றபோது அவர்கள் எதை செவியுற்றார்கள் என்பதையும், நீங்கள் சூனியம் செய்யப் பட்ட மனிதரையே பின்பற்றுகிறீர்கள் என அநியாயக்காரர்கள் இரகசியமாக பேசிக்கொண்டதையும் நாம் அறிவோம்.*

***அல்குர்ஆன் 17:47***

*இறைத்தூதர்(ஸல்) காலத்தில் சிஹ்ரின் மூலம் கணவன் மனைவியை பிரித்து இல்லறத்தில் இணையவிடாமல் ஆக்க முடியும். இதனால் அவர்களுக்கு குழந்தை பிறக்காது என்ற நம்பிக்கை மக்களிடம் இருந்தது. சிஹ்ர் என்பதை மதீனாவாசிகள் இந்த அர்த்தத்தில் கூறினார்கள்.*

*முஸ்லிம்கள் மதீனாவிற்கு ஹிஜ்ரத் செய்து வந்தபோது யூதர்கள் உங்களுக்கு சூனியம் செய்துவிட்டனர். எனவே, உங்களுக்கு குழந்தை பிறக்காது எனக் கூறப்பட்டது.*

*"அப்துல்லாஹ் (என் மகன்) தான் இஸ்லாமில் பிறந்த முதல் குழந்தையாவார். ஆகவே, முஸ்லிம்கள் அவர் பிறந்ததற்காக மிகவும் மகிழ்ச்சி அடைந்தார்கள். ஏனெனில், அவர்களிடம், "யூதர்கள் உங்களுக்கு சூனியம் வைத்துவிட்டார்கள். ஆகவே, உங்களுக்கு (இனி) குழந்தை பிறக்காது" எனக் கூறப்பட்டுவந்தது.*

***அறிவித்தவர்: அஸ்மா பின்த் அபீபக்ர்(ரலி),***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 5469***

*மறைமுகமாக பாதிப்பு ஏற்படுத்தும் செயலுக்கும் சிஹ்ர் என்று சொல்லும் வழக்கம் நீண்ட நெடுங்காலமாக மக்களிடம் இருந்துள்ளது. நபி நூஹ்(அலை) அவர்களின் காலந்தொட்டு இறைத்தூதர்(ஸல்) அவர்களின் காலத்தையும் கடந்து இன்று வரை மக்கள் இப்படி ஒரு சிஹ்ர் இருப்பதாக நம்பி வருகிறார்கள்.*

*ஒருவரை விமர்சிக்கும்போது உலகத்தில் இல்லாத ஒன்றைக் கூறி விமர்சிக்க முடியாது. மக்கள் நம்புகிற விஷயத்தைச் சொல்லியே விமர்சிக்க முடியும். மக்கள் நம்பாத விஷயத்தைக் கூறி விமர்சித்தால் அந்த விமர்சனத்தில் எந்தப் பலனும் இருக்காது. அதை யாரும் நம்பப்போவதில்லை. இஸ்லாமை ஏற்காத மக்கள் நபிமார்களை பைத்தியக்காரன் குறிகாரன் கவிஞன் எனக் கூறி விமர்சனம் செய்தனர். பைத்தியக்காரன் குறிகாரன் கவிஞன் ஆகியோர் உலகத்தில் இருப்பதால் இதைக் கூறி விமர்சித்தனர்.*

*இதே போன்று சூனியத்தின் மூலம் மற்றவருக்கு பாதிப்பு ஏற்படுத்தலாம் என்ற நம்பிக்கை மக்களிடம் ஆழமாக வேரூன்றி இருந்ததால் எதிரிகள் நபிமார்களை சூனியத்தால் பாதிக்கப் பட்டுவிட்டனர் எனக் கூறி விமர்சித்தனர்.*

*பைத்தியக்காரன், குறிகாரன், கவிஞன் ஆகியோர் உலகத்தில் இருப்பதை அல்லாஹ் மறுக்கவில்லை. மாறாக சத்தியத்தை சொன்ன நபிமார்களை இவ்வாறு விமர்சித்ததையே அல்லாஹ் மறுத்துள்ளான். அது போன்றுதான் சூனியத்தின் மூலம் பாதிப்பு ஏற்படும் என்று மக்கள் நம்பியதை அல்லாஹ்வும் அவன் தூதரும் மறுக்கவில்லை. மாறாக அவர்களின் விமர்சனம் நபிமார்களுக்கு பொருந்தாது என்றே மறுத்துள்ளான்.*

*சிஹ்ரின் மூலம் பாதிப்பு ஏற்படும் என்ற நம்பிக்கை மூட நம்பிக்கையாக இருந்தால் அல்லாஹ்வும் அவன் தூதரும் இதை எதிர்த்து ஏன் பேசவில்லை? மக்களிடமிருந்த அனைத்து மூட நம்பிக்கைகளையும் இறைத்தூதர்(ஸல்) கண்டித்தார்கள். ஆனால், சிஹ்ரின் மூலம் பாதிப்பே ஏற்படாது என அவர்கள் மறுக்கவில்லை. இவ்வாறு நம்பக் கூடாது எனக் கூறவுமில்லை.*

*சகோதரர் பீஜே இறந்தவரின் சாம்பல் மீது சிறுநீர் கழித்தார். "எனக்கு யாராவது சூனியம் செய்ய முடியுமா?" என சவால் விட்டார்; சூனியத்தால் பாதிப்பு ஏற்படாது என மறுத்து வருகிறார். இவர் சொல்வது போல் சிஹ்ரினால் எந்த பாதிப்பும் ஏற்படாது என்பதே இஸ்லாமிய நம்பிக்கையாக இருந்தால் இன்று இவர் விட்ட சவாலைப் போல இறைத்தூதர்(ஸல்) ஏன் சவால் விடவில்லை? "என் தலைமுடியைத் தருகிறேன்; சிறுநீரைத் தறுகிறேன்; எனக்கு உங்களால் சூனியத்தின் மூலம் பாதிப்பை ஏற்படுத்த முடியுமா?" என்று ஒவ்வொரு நபியும் ஏன் சவால் விடவில்லை?*

*இதற்கு நேர் மாற்றமாக, குர்ஆனிலும் நபிமொழிகளிலும் இந்த சூனியத்தை செய்யக் கூடாது. அது பெரும்பாவம் என்றும், அல்லாஹ்வின் நாட்டப்படி அதன் மூலம் பாதிப்பு ஏற்படும் என்றும்தான் சொல்லப்படுகிறது.*

## அல்லாஹ்வின் அங்கீகாரம்

*சூனியத்தின் மூலம் பாதிப்பு ஏற்படலாம் என்று திருக்குர்ஆன், சுன்னா கூறுகிறது. இதற்குச் சுய விளக்கம் கொடுக்காமலும், இதில்*

எதையும் மறுக்காமலும், குர்ஆன் சுன்னாவில் சொல்லப்பட்டு இருப்பதை அப்படியே நம்பும் எண்ணத்தில் ஆதாரங்களை அணுகவேண்டும்; அப்போதே இந்த உண்மையை அறியலாம்.

وَاتَّبَعُوا مَا تَتْلُو الشَّيَاطِينُ عَلَى مُلْكِ سُلَيْمَانَ وَمَا كَفَرَ سُلَيْمَانُ وَلَكِنَّ الشَّيَاطِينَ كَفَرُوا
يُعَلِّمُونَ النَّاسَ السِّحْرَ وَمَا أُنْزِلَ عَلَى الْمَلَكَيْنِ بِبَابِلَ هَارُوتَ وَمَارُوتَ وَمَا يُعَلِّمَانِ مِنْ أَحَدٍ
حَتَّى يَقُولَا إِنَّمَا نَحْنُ فِتْنَةٌ فَلَا تَكْفُرْ فَيَتَعَلَّمُونَ مِنْهُمَا مَا يُفَرِّقُونَ بِهِ بَيْنَ الْمَرْءِ وَزَوْجِهِ وَمَا
هُمْ بِضَارِّينَ بِهِ مِنْ أَحَدٍ إِلَّا بِإِذْنِ اللَّهِ وَيَتَعَلَّمُونَ مَا يَضُرُّهُمْ وَلَا يَنْفَعُهُمْ وَلَقَدْ عَلِمُوا لَمَنِ
اشْتَرَاهُ مَا لَهُ فِي الْآخِرَةِ مِنْ خَلَاقٍ وَلَبِئْسَ مَا شَرَوْا بِهِ أَنْفُسَهُمْ لَوْ كَانُوا يَعْلَمُونَ (102)
وَلَوْ أَنَّهُمْ آمَنُوا وَاتَّقَوْا لَمَثُوبَةٌ مِنْ عِنْدِ اللَّهِ خَيْرٌ لَوْ كَانُوا يَعْلَمُونَ (103)2

*அவர்கள் சுலைமானின் ஆட்சியில் ஷைத்தான்கள் ஓதியதை பின்பற்றினார்கள். சுலைமான் நிராகரிக்கவில்லை; ஷைத்தான்களே மக்களுக்கு சூனியத்தைக் கற்றுக்கொடுத்து நிராகரித்தனர். அது பாபிலோனில் ஹாரூத் மாரூத் என்ற இரண்டு வானவருக்கு அருளப்பட்டது. நாங்கள் சோதனையாக இருக்கிறோம். எனவே, ஏக இறைவனை நிராகரித்துவிடாதீர்கள் என அவர்கள் சொல் லாமல் யாருக்கும் கற்றுக்கொடுக்கவில்லை. இதன் பின்னே அவர்கள் அவ்விருவரிடமிருந்து கணவன் மனைவிக்கிடையே பிரிவினை ஏற்படுத்துவதைக் கற்றுக்கொண்டனர். அதன் மூலம் அவர்கள் அல்லாஹ்வின் அனுமதியின்றி எவருக்கும் தீங்கிழைக்க முடியாது. அவர்களுக்கு பயனளிக்காத தீங்குதரக் கூடியதை கற்றுக் கொண்டனர். அதை விலைக்கு வாங்கியவருக்கு மறுமையில் எந்தப் பலனும் இல்லை என்பதை உறுதியாக அறிந்திருந்தனர். அவர்கள் தன்னையே விற்று விலைக்கு வாங்கிய அந்த விஷயம் மிகவும் கெட்டது. அவர்கள் இதை அறிய வேண்டாமா? அவர்கள் இறைநம்பிக்கைக் கொண்டு அஞ்சியிருந்தால், அல்லாஹ்விடமிருந்து கிடைக்கும் கூலியே அவர்களுக்கு சிறந்ததாகும். அவர்கள் அறிய வேண்டாமா?* ***அல்குர்ஆன் 2:102***

*இந்த வசனத்தில் அடைப்புக்குறிகளை இட்டு நம் விளக்கம் எதையும் சேர்க்கவில்லை. மாறாக இந்த வசனத்தின் நேரடிப் பொருளை அப்படியே மொழிபெயர்த்துள்ளோம். அல்லாஹ் இந்த வசனத்தில் சூனியத்தைப் பற்றி பின்வரும் விஷயங்களை குறிப்பிடுகிறான்.*

1. *சூனியம் உள்ளது; அதைக் கற்பதும் கற்றுக் கொடுப்பதும் குஃப்ரான செயல்.*

2. *அல்லாஹ் சூனியத்தை தடைசெய்துள்ளான்; உலக ஆதாயம் தேடி சூனியத்தை மனிதன் செய்கிறானா? அல்லது அல்லாஹ்வை அஞ்சி இதை விட்டும் விலகி வாழ்கிறானா? என மனிதனை சோதிப்பதற்காகவே ஹாரூத் மாரூத் ஆகிய இரண்டு வானவர்கள் அனுப்பப்பட்டனர்.*

3. *இந்த சூனியத்தின் மூலம் கணவன் மனைவிக்கிடையே பிரி வினையை ஏற்படுத்த முடியும்.*

4. *அல்லாஹ் நாடினால் மட்டுமே சூனியத்தால் ஒருவருக்கு என்ன பாதிப்பு? எப்போது ஏற்படும் என்பது நிகழும். இதைத் தவிர சூனியக்காரர்களால் வேறு எதையும் செய்ய முடியாது.*

*எனவே, அல்லாஹ் நாடினால் சூனியத்தினால் பாதிப்பு ஏற்படும் என நம்புவது இஸ்லாமிற்கு விரோதமானதல்ல. நாம் மேற்குறிப்பிட்டுள்ள விஷயங்கள் குர்ஆனில் உள்ளவை; அதை அப்படியே நம்புவதுதான் ஈமான்.*

*இறைத்தூதர்(ஸல்) அவர்களின் காலம் முதல் இன்று வரை வாழ்ந்து மறைந்துள்ள, வாழுகிற இஸ்லாமிய அறிஞர்கள், உலக முஸ்லிம்கள் அனைவரும் இந்த வசனத்தை அடிப்படையாகக் கொண்டே சூனியத்தால் பாதிப்பு ஏற்படும் என நம்பிவருகின்றனர். குர்ஆன் சுன்னாவை அடிப்படையாகக் கொண்டு வாழ்ந்த எந்த அறிஞரும் இதில் மாற்றுக்கருத்துக் கொள்ளவில்லை.*

*ஹதீஸ்களின் எதிரிகளான முஃதஸிலா என்ற வழிகேடர்களே இந்த வசனத்திற்கு மாற்று விளக்கம் கொடுத்து சூனியத்தால் எந்த பாதிப்பும் ஏற்படுவது இல்லை எனக் கூறியுள்ளார்கள். தற்போது சகோதரர் பீஜேவும் இந்தக் கூட்டத்திற்கு வலுசேர்த்து வருகிறார்.*

*சகோதரர் பீஜே சூனியம் தொடர்பாக பேச்சிலும், எழுத்திலும் குர்ஆனில் சிஹ்ர் என்ற சொல் இடம்பெற்ற பல இடங்களையும் குறிப்பிட்டு சிஹ்ருக்கு விளக்கம் கொடுத்துள்ளார். இவ்வாறு அவர் சூனியத்திற்கு விளக்கம் கொடுக்கும்போது, அல்பகரா அத்தியாயத்தில் சிஹ்ரைப் பற்றி முழுமையாகவும் தெளிவாகவும் விவரிக்கும் 2:102 வது வசனத்தை மட்டும் குறிப்பிடவில்லை. சிஹ்ர் என்ற சொல்லை குர்ஆனில் தேடினால் முதலாவதாக இந்த வசனமே இடம்பெற்றுள்ளது.*

*ஆனால் அவர், இந்த வசனத்திலிருந்து சிஹ்ருக்கான விளக்கத்தைத் தொடங்காமல், இதற்குப் பிறகு உள்ள அத்தியாங்களில் சிஹ்ர் தொடர்பாக இடம்பெறும் வசனங்களையே சுட்டிக் காட்டி சிஹ்ருக்கு விளக்கம் தந்துள்ளார். குர்ஆன் வசனங்களை காட்டி அவரின் கருத்தை ஆழமாக மக்களிடம் விதைத்தப் பிறகே 2:102 வது வசனத்திற்கு மாற்றுமுறையில் விளக்கம் கொடுக்க முன்வந்துள்ளார்.*

*பாதிப்பு ஏற்படுத்தும் சூனியத்தைப் பற்றி முழு விபரத்தையும் தெளிவுபடுத்தும் இந்த வசனம் சகோதரர் பீஜேவின் நிலை பாட்டிற்கு முற்றிலும் நேர் எதிராக இருக்கிறது. எனவேதான் அவர், இதிலிருந்து சிஹ்ரைப் பற்றிய உண்மையை விளங்க வில்லை. மக்களுக்கு விளக்கும் முயற்சியும் மேற்கொள்ளவில்லை.*

*இந்த வசனத்தை நேரடியாகப் புரிந்தால் ஷிர்க்கான பொருள் வந்துவிடும்; மற்ற வசனங்களுக்கு முரணாகவும் ஆகிவிடும் எனக் கூறி ஒவ்வொரு நாளும் புதுப்புது வியாக்கியானங்களைக் கொடுத்து வசனத்தின் தெளிவான நேரடிப் பொருளை மாற்றிக் கொண்டிருக்கிறார்.*

## குழப்பங்களை ஏற்காத வசனம்

*‘சூனியத்தால் அல்லாஹ் நாடினால் பாதிப்பு ஏற்படும்’ என்ற சரியான கொள்கையில் சகோதரர் பீஜே சில வருடங்களுக்கு முன்னால் இருந்தார். இதன் பின் சூனியத்தால் எந்த பாதிப்பும் ஏற்படாது; பாதிப்பு ஏற்படும் என்று நம்புவது இணைவைப்பு எனக் கூறினார்.*

*சூனியத்திற்கு தாக்கம் இல்லை என்று அவர் மறுக்க ஆரம்பித்ததிலிருந்து இன்று வரை இந்த இடைப்பட்ட காலத்தில் 2:102 வது வசனத்திற்கு ஒவ்வொரு நேரத்திலும் அவர் அளித்த விளக்கங்களை கவனித்தால் சூனியம் விஷயத்தில் சகோதரர் பீஜே உண்மையைச் சொல்லவில்லை. தடுமாறி உளறுகிறார் என்பதை தெளிவாக அறியலாம்.*

*இந்த வசனத்திற்கு முதலில் ஒரு விளக்கத்தைக் கூறுவார்; அது மக்களிடம் எடுபடவில்லை என்றால், இரண்டாவது ஒரு விளக்கத்தைக் கூறுவார்; அதுவும் மக்களிடம் எடுபடாவிட்டால், மூன்றாவது ஒரு விளக்கத்தைக் கூறுவார்; இப்படித்தான் தடுமாற்றத்திலேயே விளக்கம் கொடுத்து வருகிறார்.*

*இந்த வசனத்தில் இவருக்கு ஏற்பட்ட தடுமாற்றங்களை அறிந்துகொள்வோம்.*

1. *ஃபலக் அத்தியாயத்திற்கு சகோதரர் பீஜேயின் விளக்கத்தில், "சூனியத்தின் மூலம் கணவன் மனைவிக்கு இடையே பிரிக்க முடியாது" எனக் கூறினார்.*

*அல்லாஹ்வின் நாட்டமின்றி அதன் மூலம் பாதிப்பு ஏற்படுத்த முடியாது என்ற வசனத்திற்கு பொதுவாக பாதிப்புகள் அல்லாஹ் வின் விதிப்படியே நடக்கின்றன; சூனியத்தால் எந்த பாதிப்பும் வராது என விளக்கி, சூனியத்தால் எந்தத் தாக்கமும் ஏற்படாது எனக் கூறியுள்ளார்.*

சூனியத்தின் மூலம் கணவன் மனைவிக்கு மத்தியில் பிரிவினை ஏற்படுத்திவிடலாம், மாயமந்திரத்தின் மூலம் வஸியம் செய்துவிடலாம் என்று நினைத்தே அதைக் கற்றுக் கொள்கின்றனர். ஆனால், அல்லாஹ்வின் நாட்டம் இருந்தாலே தவிர எந்த ஒன்றையும் இவர்களால் செய்யவே முடியாது என்பதை இறைவன் தெள்ளத்தெளிவாக விளக்கி விட்டான். அப்படியெனில் இறைவனால் ஏற்படுத்தப்பட்ட விதியின் மூலம் உண்மை யிலேயே கணவன் மனைவி பிரிவதை சிலர் சூனியத்தின் மூலம் நடந்ததாக நம்பிக் கொண்டு சூனியம் இருப்பது உண்மை என்று வாதிடுகிறார்கள். இதனால் ஏதாவது செய்யமுடியுமா? என்றால் முடியவே முடியாது என்று அல்லாஹ் சொல்லுகிறான்.

***(ஆதாரம்: இஸ்லாத்தின் பார்வையில் பில்லி சூனியம் நூல்)***

*http://www.onlinepj.com/deen_kula_penmani/2012-dkp/apr-dkp-2012/*

2. *சூனியத்தின் மூலம் கணவன் மனைவியைப் பிரிக்க முடியும். கணவன் மனைவியரில் ஒருவரைப் பற்றி மற்றவரிடம் தவறாகச் சொல்லி இருவரின் உள்ளத்திலும் சந்தேகத்தை ஏற்படுத்துவதே சூனியத்தின் மூலம் பிரித்தல் என்று அர்த்தம் என சகோதரர் பீஜே கூறியுள்ளார். அதாவது கோள் சொல்லி பிரிப்பதும் சூனியத்தின் ஒரு வகை எனக் கூறியுள்ளார்.*

***http://www.onlinepj.com/kelvi_pathil/nambikai_thotarbutaiyavai/suniyathal_enna_seyya_mudiyum/***

*மேலும் அல்லாஹ்வின் நாட்டமின்றி அதன் மூலம் அவர்கள் தீங்கிழைக்க முடியாது என்ற வார்த்தை சூனியத்தின் மூலம் பாதிப்பு ஏற்படும் என்ற பொருளைத் தருவதாகக் கூறினார்.*

*அல்லாஹ்வின் அனுமதியின்றி அதன் மூலம் அவர்கள் தீங்கு இழைக்க முடியாது என்ற வசனத்தில் அதன் மூலம் என்ற சொல்லை*

*பீஜே அவருடைய தர்ஜுமாவில் முதலில் மொழிபெயர்க்காமல் விட்டுவிட்டார். சகோதரர் இஸ்மாயீல் சலஃபீ இதைச் சுட்டிக் காட்டியபோது, நான் வேண்டுமென்றே இதை விடவில்லை. தவறுதலாக விடுபட்டுள்ளது. அதன் மூலம் என்ற சொல் அங்கு இல்லாவிட்டாலும், சூனியத்தின் மூலம் என்பதே அதன் பொருள் என ஒப்புக் கொண்டார். இந்த நேரத்தில் அதன் மூலம் என்ற சொல் சூனியத்தையே குறிக்கிறது என்று மிக உறுதியாக வாதிட்டார்.*

*ஆனால், ஃப சபபிய்யா என்ற பெயரில் தற்போது புதுக் குழப்பத்தை கண்டுபிடித்தவுடன் இதற்கு முன்பளித்த விளக்கம் முரணாக இருப்பதால் இஸ்மாயீல் சலஃபிக்கு பதிலளித்து ஆன்லைனில் எழுதிய அந்த ஆக்கத்தை ஆன்லைனிலிருந்து தற்போது அகற்றிவிட்டார்.*

3. *தற்போது கணவன் மனைவிக்கிடையே பிரிவை ஏற் படுத்துவது சூனியம் அல்ல. அது சூனியம் அல்லாத வேறு ஒரு கலை என்று கூறுகிறார். அல்லாஹ்வின் நாட்டமின்றி அதன் மூலம் தீங்கு இழைக்க முடியாது என்றால், தீங்கிழைக்க முடியும் என்ற பொருள் வருவது உண்மை. ஆனால், இது சூனியத்தைக் குறிக்காது. சூனியத்தில் அடங்காத கணவன் மனைவிக்கு இடையில் பிரிக்கும் வேறொரு கலை குறித்துப் பேசுகிறது என்று கூறுகிறார். எப்படித் தெளிவாகக் குழப்புகிறார் பாருங்கள்!*

***http://www.onlinepj.com/Quran-pj-thamizakkam-thawheed/vilakkangal- new/ 495_sooniyathal_pathippu_erpadutha_mudiyathu/***

4. *ஃபலக் அத்தியாயத்தின் விரிவுரை எனும் தலைப்பில் சூனியத்திற்கு எந்த தாக்கமும் இல்லை என்று விவரித்து எழுதியபோது ஹாரூத் மாரூத் இவ்விருவரும் நாங்கள் சோதனையாக இருக்கிறோம் எனக் கூறியதாக பீஜே மொழிபெயர்த்தார்.*

நாங்கள் **சோதனையாக இருக்கிறோம்**. எனவே, எங்களை மறுத்து விடாதீர்கள் என்று சொல்லாமல் எவருக்கும் அவர்கள் இருவரும் (சூனியத்தைக்) கற்றுக் கொடுப்பதில்லை.

***(ஃபலக் அத்தியாயத்தின் விரிவுரை)***

*http://www.onlinepj.com/deen_kula_penmani/2012-dkp/apr-dkp-2012/*

5. *ஆனால், தற்போது நாங்கள் படிப்பினையாக இருக்கிறோம் என்று ஹாரூத் மாரூத் கூறியதாக மொழிபெயர்த்துள்ளார்.*

*(பாபில் நகரத்தில் சூனியத்தை மக்களுக்குக் கற்பித்த ஹாரூத்,*

*மாரூத் என்ற ஷைத்தான்களே மறுத்தனர். "**நாங்கள் படிப் பினையாக இருக்கிறோம்**. எனவே, (இதைக் கற்று இறைவனை) மறுத்து விடாதே!" என்று கூறாமல் அவ்விருவரும் யாருக்கும் கற்றுக் கொடுப்பதில்லை.)*

***http://www.onlinepj.com/Quran-pj-thamizakkam-thawheed/vilakkangal- new/***

***495_sooniyathal_pathippu_erpadutha_mudiyathu/***

*ஃபித்னா என்னும் அரபுச் சொல்லுக்கு சோதனை மற்றும் குழப்பம் என்றுதான் பொருள்; படிப்பினை இதன் பொருள் என எந்த அரபுப் புலமையும் கூறவில்லை. அண்ணாருக்கு மட்டும் எங்கிருந்து இந்தப் பொருள் கிடைத்ததோ தெரியவில்லை.*

*அல்லாஹ்வின் வசனத்தை அவன் கூறியபடி விளங்காமல் தான் ஒரு முடிவை எடுத்துக்கொண்டு, தன் இஷ்டப்படி விளங்கியதால், இத்தனை தடுமாற்றங்களும் முன்னுக்குப்பின் முரணான கருத் துக்களும் இவரிடம் வந்துள்ளது. ஃப சபபிய்யா என்ற பெயரில் தற் போது பீஜே ஏற்படுத்தியுள்ள புதுக் குழப்பத்தையும் இந்த வசனம் நிராகரிக்கவே செய்கிறது. இதை விரிவாக அறிந்துகொள்வோம்.*

# மதீனா வாழ் யூதர்கள் செய்த சூனியம்

*சிஹ்ரில் இரண்டு வகை உள்ளது. அதில் ஒன்று மேஜிக். இன்னொன்று பாதிப்பு ஏற்படுத்தக்கூடியது என்பதை முன்னர் அறிந்துகொண்டோம். 2:102 வது வசனத்தில் சொல்லபடும் சிஹ்ர் மேஜிக் செய்வதைப் பற்றியே பேசுகிறது. பாதிப்பு ஏற்படுத்தும் சிஹ்ரைப் பற்றிப் பேசவில்லை என சகோதரர் பீஜே வாதிடுகிறார்.*

*இதுவும் தவறான வாதமே ஆகும். இந்த வசனத்தின் ஒவ்வொரு வார்த்தையையும் நன்கு சிந்தித்தால் இந்த வசனம் மேஜிக்கைப் பற்றி பேசவில்லை. மாறாக பாதிப்பு ஏற்படுத்தும் சிஹ்ரைப் பற்றியே பேசுகிறது என்பதை தெள்ளத் தெளிவாக அறியலாம்.*

*மதீனாவில் வாழ்ந்த யூதர்கள் அல்லாஹ்வின் வேதமான திருக் குர்ஆனை புறக்கணித்து, சுலைமான் நபி காலத்தில் ஷைத்தான்கள் ஓதிய சிஹ்ரை பின்பற்றுகிறார்கள் என வசனம் துவங்குகிறது. எனவே, இந்த வசனம் மதீனத்து யூதர்களிடம் இருந்த சிஹ்ரைப் பற்றியே பேசுகிறது.*

*அவர்கள் சுலைமானின் ஆட்சியில் ஷைத்தான்கள் ஓதியதை பின்பற்றினார்கள். சுலைமான் நிராகரிக்கவில்லை. ஷைத்தான்களே மக்களுக்கு சூனியத்தை கற்றுக்கொடுத்து நிராகரித்தனர்.*

***அல்குர்ஆன் 2:102***

*மதீனாவில் வாழ்ந்த யூதர்கள் மேஜிக் செய்தார்கள் என வரலாறு தெரிந்த யாரும் கூறமாட்டார்கள். வரலாற்றை திரித்து புதுக்கருத்தைப் புகுத்துபவர்களே மதீனத்து யூதர்கள் மேஜிக் செய்தார்கள் என வாதிடுவர். மதீனாவில் இருந்த யூதர்கள் பிறருக்கு பாதிப்பை ஏற்படுத்தும் சூனியத்தையே செய்தார்கள் என்பதற்கு பல ஹதீஸ்கள் ஆதாரமாக உள்ளன.*

*“அப்துல்லாஹ் (என் மகன்) தான் இஸ்லாமில் பிறந்த முதல் குழந்தையாவார். ஆகவே, முஸ்லிம்கள் அவர் பிறந்ததற்காக மிகவும் மகிழ்ச்சி அடைந்தார்கள். ஏனெனில், அவர்களிடம், “யூதர்கள் உங்களுக்கு சூனியம் வைத்துவிட்டார்கள். ஆகவே, உங்களுக்கு (இனி) குழந்தை பிறக்காது” எனக் கூறப்பட்டுவந்தது.*

***அறிவித்தவர்: அஸ்மா பின்த் அபீபக்ர்(ரலி),***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 5469***

*இந்த ஹதீஸை சகோதரர் பீஜே மறுக்கவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. மேலும் மதீனாவிலிருந்து ஒரு யூதன் இறைத் தூதர்(ஸல்) அவர்களுக்கு சூனியம் செய்தான். அந்த சூனியத்தால் நபிக்கு பாதிப்பு ஏற்பட்டது.*

*இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு ‘பனூ ஸுரைக்’ குலத்தைச் சேர்ந்த லபீத் இப்னு அஃஸம் என்பவன் சூனியம் செய்தான். இதைத் தொடர்ந்து, அவர்கள் ஒரு காரியத்தை செய்யாமல் இருக்கும் போது செய்தது போன்ற உணர்வு அவர்களுக்கு ஏற்பட்டது.*

***அறிவித்தவர்: ஆயிஷா(ரலி), நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 5763***

*மதீனாவிலிருந்த யூதர்கள் மேஜிக் செய்து குஃப்ரை போதித் தார்கள் என்பதற்கு ஒரு ஹதீஸைக் கூட காட்ட முடியாது. ஏன் சகோதரர் பீஜேவின் பாணியில் சொல்வதாக இருந்தால் குர்ஆனுக்கு முரண்படுகிற அறிவிப்பாளர் தொடர் சரியாக உள்ள ஒரு ஹதீஸைக் கூட காட்ட முடியாது. எனவே, மதீனாவிலிருந்த யூதர்கள் செய்த சூனியத்தைப் பற்றி இந்த வசனம் பேசுவதால் இது மேஜிக் செய் வதைப் பற்றிப் பேசவில்லை. பாதிப்பு ஏற்படுத்தும் சூனியத்தைப் பற்றியே பேசுகிறது என்பதை முதலில் அறிந்துகொள்ள வேண்டும்.*

# வரலாற்றுப் பின்னணி

இந்த வசனத்தில் அல்லாஹ் ஷைத்தான்கள் கூறியதை பின்பற்றுகிறார்கள் என்று சொல்லாமல் ஷைத்தான்கள் ஓதியதை பின்பற்றுகிறார்கள் என்று கூறுகிறான். ஓதினார்கள் என்று நாம் மொழிபெயர்த்துள்ள இடத்தில் தத்லூ என்ற சொல் இடம் பெற்றுள்ளது. இது திலாவத் என்ற மூலச் சொல்லில் இருந்து உருவானது. திலாவத் என்றால் முறைப்படி ஓதுதல் என்று பொருள்.

ஒரு கருத்தை ஒவ்வொருவரும் வெவ்வேறு வார்த்தைகளில் சொன்னால் அதை ஓதுவது என்று சொல்லமாட்டோம். ஒரே வார்த்தைகளை அனைவரும் எந்த மாற்றமும் செய்யாமல் ஒன்று பட்டு தொடர்ந்து சொல்லிவருவதையே ஓதுவது என்கிறோம். உதாரணமாக குர்ஆன் ஓதுவது, வேதங்களை ஓதுவது என்று கூறுகிறோம். இவற்றில் உள்ள வாசகங்களை மக்கள் எந்த மாற்றமும் செய்யாமல் அப்படியே காலம் காலமாக படித்து வருவதால், இதனை திலாவத் ஓதுதல் என்று கூறுகிறோம்.

இந்த வசனத்தில் அல்லாஹ் சூனியத்தைப் பற்றி குறிப்பிடும் போது, அது ஷைத்தான்களால் ஓதப்பட்டது என்று கூறுகிறான். இந்த ஷைத்தான்கள் சுலைமான்(அலை) அவர்களின் காலத்தில் வாழ்ந்தவர்கள். இந்த ஷைத்தான்களுக்கு ஹாரூத் மாரூத்திடமிருந்து இந்த சூனியம் வந்தது.

மதீனாவிலிருந்த யூதர்களுக்கும் சுலைமான்(அலை) அவர்களுக்கும் இடையில் பலநூறு வருடங்கள் இடைவெளி உள்ளது. சுலைமான்(அலை) அவர்களின் காலத்தில் வாழ்ந்த ஷைத்தான்களுக்கும் ஹாரூத் மாரூத்திற்கும் இடையில் எவ்வளவு காலம் இடைவெளி உள்ளது என்பதை நம்மால் அறிய முடிய வில்லை. இவ்வாறு நூற்றுக்கணக்கான வருடங்கள் மக்களிடம் தொன்றுதொட்டு வந்த தீய செயலாகவே சூனியம் இந்த வசனத்தில் சொல்லப்படுகிறது. இதை சிந்தித்துப்பார்த்தாலே இங்கே சொல்லப் பட்டுள்ள சூனியம் மேஜிக் என்று அறிவுள்ள யாரும் சொல்ல மாட்டார்கள்.

மேஜிகிற்கு இவ்வளவு பெரிய நீண்ட வரலாறு இருக்குமா? இந்த சூனியம் மேஜிக் என்றால் மேஜிக்தொடர்பான விளக்கங்களை மக்கள் எந்த மாற்றமும் செய்யாமல் அப்படியே போதித்து வந்தார்கள்

என்று கூறுவது சரியா? மேஜிக்கை செய்து அல்லாஹ்வின் ஆற்றல் தனக்கு இருப்பதாக பொய்யாக வாதிட்டு மக்களை ஏமாற்றி வழிகெடுப்பதுதான் சூனியம் என்று பீஜே கூறுகிறார்.

ஒரு தந்திரத்தை செய்து ஒரு நேரத்தில் வேண்டுமானால் மக்களை ஏமாற்றி முட்டாள்களாக ஆக்கலாம். ஆனால், நூற்றுக் கணக்கான வருடங்கள் அந்த ஒரே தந்திரங்களைக் கூறி தொடர்ந்து மக்களை ஏமாற்ற முடியாது. இந்த மேஜிக்கை கற்றவர்களில் எவனாவது ஒருவன் திருந்திவிட்டால் அவனே இந்த மேஜிக் குறித்து மக்களிடம் உண்மையை சொல்லிவிடுவான். இதன் பின் அது அழிந்துபோய்விடும்.

மேஜிக்கைப் பொறுத்தவரை அதில் தந்திரமும் அறிவும் தான் உள்ளது. ஒவ்வொரு காலத்திலும் ஒரே மாதிரியான அறிவு மக்களிடம் இருக்காது. காலம் செல்லச் செல்ல அறிவும் விபரமும் அதிகரிக்கும். எனவே, பலநூறு வருடங்களுக்கு முன்னால் உள்ள மேஜிக்கை மக்கள் இன்று வரை தொடர்ந்து அப்படியே பின்பற்றி வருகிறார்கள் என்று எப்படிக் கூற முடியும்?

மேலும், 2:102 இந்த வசனத்தில் ஷைத்தான்கள் சூனியத்தை மக்களுக்கு கற்றுக் கொடுத்தார்கள் என்று அல்லாஹ் கூறுகிறான். தந்திரம் செய்து மக்களை ஏமாற்றும் மேஜிக்தான் இந்த சூனியம் என்றால் சூனியக்காரர்கள் இதை மக்களிடம் சொல்லிக் கற்றுக் கொடுப்பார்களா? யோசிக்க வேண்டும்.

தந்திர வித்தைகளால் மக்களை ஏமாற்ற நினைப்பவன் தந்திரத்தை எவருக்கும் கற்றுக் கொடுக்கமாட்டான். மக்களை ஏமாற்றத்தான் இந்த சூனியத்தை செய்கிறார்கள் என்றால், மக்களுக்கு இதை எப்படி அவர்கள் கற்றுக்கொடுப்பார்கள்? மக்கள் கற்றுக் கொண்டால் தெளிவடைந்துவிடுவார்கள். பிறகு எப்படி அவர்களை ஏமாற்ற முடியும்? என்று சிந்தித்தால் இந்த வசனத்தில் சொல்லப்பட்டுள்ள சூனியம் மேஜிக் என்று கூறுவது வடிகட்டிய பொய் என்பதை அறியலாம்.

மேலும், மேஜிக்கை கற்றுத்தருவதற்கு ஹாரூத் மாரூத் என்ற வானவர்கள் வர வேண்டிய அவசியம் என்ன? மேஜிக்கைப் பற்றிய அறிவை மனிதன் அனுபவ ரீதியில் இயல்பாகவே பெற்றிருந்தான். உதாரணமாக நபி மூஸா(அலை) காலத்தில் இந்த அறிவுள்ளவர்கள் நிறைந்திருந்தனர். இவர்களுக்கு இந்த அறிவு ஹாரூத் மாரூத்திடமிருந்து வந்ததா?

# மேஜிக் குஃப்ராகுமா?

*இந்த வசனத்தில் சூனியத்தை கற்பதும் கற்றுக்கொடுப்பதும் இஸ்லாமை விட்டும் நம்மை வெளியேற்றிவிடும் என அல்லாஹ் கூறுகிறான்.*

1. *ஷைத்தான்கள் சூனியத்தைக் கற்றுக்கொடுத்து காஃபிரானார்கள்.*
2. *சூனியத்தை கற்றுக்கொடுத்த ஹாரூத் மாரூத் நாங்கள் சோதனை யாக இருக்கிறோம். எனவே, காஃபிராகிவிடாதே எனக் கூறினர்.*
3. *சூனியத்தைக் கற்றவர்கள் ஈமானையும் இறையச்சத்தையும் இழந்தனர். இதனால் மறுமையில் அவர்களுக்கு எந்த நன்மையும் கிடைக்காது. மாறாக தண்டனையே உள்ளது.*

*இந்த வசனத்தில் சொல்லப்படும் சூனியத்திற்கு மேஜிக் என்று அர்த்தம் என்றால் மேஜிக்கை கற்பதும் கற்றுக்கொள்வதும் நம்மை இஸ்லாமை விட்டும் வெளியேற்றும் குஃப்ரான பாவமா?*

*டிஎன்டிஜே மந்திரமா? தந்திரமா? என்ற நிகழ்ச்சியை நடத்தி மக்களுக்கு மேஜிக் செய்து காட்டினார்கள். அப்படியானால் இவர்கள் குஃப்ரான பெரும் பாவத்தையா செய்தார்கள்? இவ்வாறு நாம் கேள்வி கேட்டால், மேஜிக் செய்து அல்லாஹ்வின் ஆற்றல் எனக்குள்ளது என்று வாதிட்டால், அப்போது இது குஃப்ராகும் என சகோதரர் பீஜே விளக்கம் தருகிறார்.*

*முதலில் மதீனத்து யூதர்கள் மேஜிக் செய்தார்கள் என்பதற்கு பீஜே குர்ஆன் ஹதீஸிலிருந்து ஆதாரம் தர வேண்டும். அடுத்து அல்லாஹ்வின் ஆற்றல் தனக்கிருப்பதாக வாதிட்டார்கள் என்பதற்கு ஆதாரம் தர வேண்டும். ஒருபோதும் இதற்கு ஆதாரம் தர முடியாது. அல்லாஹ்வின் வசனத்தை நபிமொழியை வைத்து விளங்குவதை விடுத்து தனிநபரின் சுயவிளக்கத்தையும் கற்பனையையும் கொண்டு விளங்கினால், இதற்கு எப்படி ஆதாரம் காட்ட முடியும்?*

*மேஜிக்கை செய்துவிட்டு அற்புதம் செய்யும் ஆற்றல் எனக்கு உள்ளது என வாதிட்டால், அது குஃப்ர் என்பதில் நமக்கு மாற்றுக் கருத்து இல்லை. இந்த இடத்தில் இதை குஃப்ர் என மேஜிக்கை வைத்து நாம் முடிவுசெய்யவில்லை. மாறாக அல்லாஹ்வின் ஆற்றல் தனக்கு இருப்பதாக அவன் வாதிடுவதை வைத்தே முடிவு செய்கிறோம். அப்படியானால் மேஜிக் செய்வது குஃப்ர் என எப்படிக் கூறலாம்?*

ஒருவன் ஆகுமான ஒரு காரியத்தை தவறாக பயன்படுத்துகிறான் என்றால் அந்த ஆகுமான காரியத்தை பழித்துப் பேசக் கூடாது. மாறாக அவன் துஷ்பிரயோகம் செய்ததையே கண்டிக்க வேண்டும். இந்த இடத்தில் ஆகுமான அந்தச் செயலை பழித்துப் பேசுவது போன்ற வாசகத்தையும் பயன்படுத்தக் கூடாது.

உதாரணமாக தேங்காய் உடைப்பது ஹராமான செயல் அல்ல; தேங்காயை உணவுக்கு பயன்படுத்துவதற்காகவும் உடைக் கிறார்கள்; சிலைக்கு படையல் செய்வதற்காகவும் உடைக்கிறார்கள்.

இந்நிலையில் தேங்காயை உடைத்து காஃபிரானார்கள் எனக் கூறினால் தேங்காய் உடைப்பதே தவறான செயல் என இதை கண்டிப்பதாக பொருள்படும். எனவே, இவ்வாறு பேசக் கூடாது. மாறாக தேங்காயை சிலைக்காக உடைத்து இணைவைத் தார்கள் எனக் கூறுவதே சரி.

பிராணிகளை உணவுக்காகவும் அறுக்கலாம். பலர் சிலைகளுக்கு பலியிடுவதற்காகவும் அறுக்கிறார்கள். இந்நிலையில் மாடுகளை அறுத்து இணைவைத்தார்கள் எனக் கூறினால் மாடுகளை அறுக்கும் செயல் இணைவைப்புச் செயலாகும். இதை செய்யக் கூடாது என்ற பொருள்படும். எனவே, இவ்வாறு கூறாமல் மாடுகளை அறுத்து சிலைகளுக்கு பலியிட்டதால் இணைவைத்தார்கள் எனக் கூறுவதே சரி.

அல்லாஹ்விற்காக தொழும் மக்களும் இருக்கிறார்கள். புகழுக்காக பிறருக்கு காட்டுவதற்காக தொழுகிற மக்களும் இருக்கிறார்கள். ஆனால், பொதுவாக தொழுகை என்பது நல்ல காரியம். இந்நேரத்தில் தொழுகையாளிகளுக்கு கேடு என்று பொத்தாம் பொதுவாக கூறினால் தொழுவதே தவறான செயல். எனவே, தொழக்கூடாது என்ற அர்த்தம் வரும்.

இதைத் தவிர்க்க பிறருக்கு காட்டுவதற்காக தொழும் தொழுகை யாளிகளுக்கு கேடு என்று அவர்களின் நோக்கத்தையும் தெளிவாகக் கூற வேண்டும். இவ்வாறு கூறும்போது தொழுகையை நாம் கண்டிக்கவில்லை. தவறான நோக்கத்தில் செய்வதையே நாங்கள் கண்டிக்கிறோம்.

மேஜிக் செய்வது தவறல்ல. இதுதான் இந்த வசனத்தில் சொல்லப்பட்ட சூனியம் என்றால், இதை நல்ல நோக்கத்திலும் செய்ய முடியும், விளையாட்டாகவும் செய்ய முடியும்; மாய சக்தி எனக்குள்ளது என்று வாதிடுவதற்காகவும் செய்ய முடியும்.

*இந்நிலையில் மேஜிக் செய்து காஃபிரானார்கள் என்று கூறினால் மேஜிக் செய்வதே ஹராமான காரியம் என்று பொருள் படுகிறது. அல்லாஹ் இப்படி அர்த்தமில்லாமல் தவறான பொருள்படுமாறு பேசமாட்டான் என்பதை அறியவேண்டும்.*

*பீஜே கூறுவதுதான் இந்த வசனத்தின் விளக்கம் என்றால் சூனியத்தை செய்து அல்லாஹ்வின் தன்மை தனக்கு இருக்கிறது என வாதிட்டு காஃபிரானார்கள் என்று அல்லாஹ் கூறியிருப்பான். ஆனால், அல்லாஹ் அவ்வாறு கூறாமல் பொதுவாக சூனியத்தை கற்று காஃபிரானார்கள் என்று கூறுவதால் இங்கு நோக்கத்தைப் பற்றி பேசாமல் சூனியம் என்ற செயலே ஹராமானது என்றுதான் புரிய முடியும்.*

*அப்படியானால் இங்கு சொல்லப்படும் சூனியம் நோக்கத்திற்கு தகுந்தவாறு ஹலாலாகவும் ஹராமாகவும் மாறும் மேஜிக்காக இருக்க முடியாது. மாறாக எப்பொழுதும் ஹரமாகவே இருக்கிற பிறருக்கு பாதிப்பை ஏற்படுத்தும் சூனியமாகும். இந்த சூனியம் தான் குஃப்ரும் பெரும்பாவமாகும். இதில் நல்ல நோக்கம் கெட்ட நோக்கம் என்ற நிலை இல்லை. மாறாக இந்த சூனியம் முழுக்க முழுக்க கெட்ட நோக்கம் உடையதுதான்.*

*இறைத்தூதர்(ஸல்) இந்த சூனியத்தையே அழித்தொழிக்கும் பெரும்பாவம் என்று சொன்னார்கள்.*

*“பேரழிவை ஏற்படுத்தும் ஏழு பெரும் பாவங்களை விட்டும் விலகிவிடுங்கள்” என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*

*“இறைத்தூதர் அவர்களே! அவை யாவை?” என தோழர்கள் கேட்டார்கள்.*

*“அல்லாஹ்வுக்கு இணை கற்பிப்பது,* ***சூனியம் செய்வது****, அல்லாஹ் புனிதப்படுத்திய உயிரை முறையின்றி கொல்வது, வட்டியைப் புசிப்பது, அநாதைகளின் செல்வத்தை உண்பது, போரின்போது புறமுதுகிட்டு ஓடுவது, இறைநம்பிக்கை உள்ள அப்பாவிப் பெண்கள் மீது அவதூறு கூறுவது ஆகியவையே (அந்தப் பெரும் பாவங்கள்)” என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.* ***அறிவித்தவர்: அபூ ஹுரைரா(ரலி), நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 6857***

*உலகத்தில் நடக்கிற காரியங்களுக்கு நட்சத்திரங்களையும் கோள்களையும் காரணமாக்குவது மூடநம்பிக்கையும் இணை வைப்புமாகும். இது மன்னிக்கப்படாத குற்றம் என்பதை உணர்த்து*

*வதற்கு, இறைத்தூதர்(ஸல்) இது சூனியத்தின் ஒரு கிளை என கூறினார்கள்.*

*"நட்சத்திரங்கள் பற்றிய (வானசாஸ்திரக்) கல்வியைக் கற்றவர், சூனியத்தில் ஒரு கிளையைக் கற்றுக்கொண்டார். இதை அவர் அதிகமாக்கிக் கொண்டால், சூனியத்தையே அதிகமாக்கிக் கொள்கிறார்" என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*

***நூல்: அபூ தாவூத் 3406***

*கோள்களைப் பற்றிய மூடநம்பிக்கையின் விபரீதத்தை உணர்த்துவதற்கே நபி(ஸல்) இதை சூனியத்துடன் சேர்க்கிறார்கள். சூனியம் என்பது மிகப்பெரிய பாவம் என்பதை அன்றைய மக்கள் நன்கு அறிந்திருந்ததால், சூனியத்தில் இதுவும் ஒரு வகை எனக் கூறி இந்த மூடநம்பிக்கையைக் கண்டிக்கிறார்கள்.*

*மேலும், (2:102) இந்த வசனத்தில் சூனியத்தின் மூலம் கணவன் மனைவிக்கிடையே பிரிவை ஏற்படுத்த முடியும். அல்லாஹ் நாடினால் அதன் மூலம் பாதிப்பு ஏற்படும் என்றும் அல்லாஹ் கூறுகிறான். மேஜிக்கின் மூலம் கணவன் மனைவிக்கிடையே பிரிப்பது உட்பட எந்த பாதிப்பையும் ஏற்படுத்த முடியாது. எனவே, இங்கு சொல்லப்படும் சூனியம் என்பது மேஜிக் அல்ல.*

## ***சூனியத்தால் கணவன் மனைவியைப் பிரித்தல்***

*பீஜே சூனியத்தை மறுத்துக்கொண்டிருந்த காலத்தில் சூனியத்தின் மூலம் கணவன் மனைவிக்கிடையே பிரிவை ஏற்படுத்த முடியும் என்றே முதலில் கூறினார். இந்த விளக்கம் நாத்திகர்களிடம் எடுபடாமல் பல கேள்விகள் வரத்தொடங்கின. எனவே, தற்போது ஃபா சபபிய்யா என்ற புதுக்குழப்பத்தை ஏற்படுத்தி, கணவன் மனைவிக்கிடையே பிரிப்பது வேறு ஒரு கலை. இது சூனியத்தில் அடங்காது என்கிறார்.*

## ***பீஜேவின் விளக்கம்***

...கணவனுக்கும், மனைவிக்குமிடையில் பிரிவினை ஏற்படுத்துவதை அவ்விருவரிடமிருந்தும் அவர்கள் கற்றுக் கொண்டனர்.

இந்த இடத்தில் அரபு மூலத்தில் சபபிய்யா எனப்படும் ஃபா என்ற எழுத்து இடம் பெற்றுள்ளது. அதாவது இச்சொல்லுக்குப் பின்னால் சொல்லப்படும் நிலைமை இச்சொல்லுக்கு முன்னால் சொல்லப்பட்ட செய்தியின் காரணமாக

நடந்தது என்று இதன் பொருள். இதைக் குறிக்க தமிழ்மொழியில் எனவே, அல்லது ஆகவே என்று கூறுவார்கள்.

இந்த மனிதன் ஏமாற்றுபவன் எனவே, அவனுக்கு நான் கடன் கொடுக்க மாட்டேன் என்று சொன்னால் அவனுக்குக் கடன் கொடுக்காமல் இருப்பதற்கு காரணம் அவன் ஏமாற்றுபவனாக இருப்பதுதான் என்ற கருத்து கிடைக்கும்.

அது போல் தான் இச்சொற்றொடரும் அமைந்துள்ளது.

கணவன் மனைவிக்கு இடையே பிரிவினை ஏற்படுத்துவதை அவர்கள் கற்றுக் கொண்டார்கள் என்பதும் இதில் இருந்து விளங்குகிறது. சூனியத்தைக் கற்றால் காஃபிராகி விடுவீர்கள் என்ற எச்சரிக்கை தான் இதற்குக் காரணம் என்றும் விளங்குகிறது.

சூனியத்தைக் கற்றுக் கொள்வதால் காஃபிராகி விடுவீர்கள் என்று எச்சரிக்கப்பட்டதால் தங்களைக் காஃபிர்களாக ஆக்கிவிடும் சூனியத்தைக் கற்றுக் கொள்ளாமல் அது அல்லாத வேறு ஒன்றைக் கற்றுக் கொண்டார்கள் என்பது எனவே, என்ற சொல்லில் இருந்து தெரிகிறது.

சூனியத்தால் கேடு ஏற்படும் என எச்சரித்தார்கள். எனவே, கணவன் மனைவிக்கு இடையே பிரிவு ஏற்படுத்தும் கலையைக் கற்றுக் கொண்டார்கள் என்ற சொல்லில் இருந்து கணவன் மனைவிக்கு இடையே பிரிவினை ஏற்படுத்தும் கலை சூனியத்தில் சேராது. சூனியம் அல்லாத சூனியத்தை விட குறைந்த தீமையுடைய மற்றொன்று என்று நாம் அறிந்து கொள்ளலாம்.

***http://www.onlinepj.com/Quran-pj-thamizakkam-thawheed/vilakkangal-new/ 495_sooniyathal_pathippu_erpadutha_mudiyathu/***

*சகோதரர் பீஜே 2:102 வது வசனத்தை பின்வருமாறு மொழிபெயர்த் துள்ளார்.*

ஸுலைமானின் ஆட்சியில் ஷைத்தான்கள் கூறியதை இவர்கள் பின் பற்றினார்கள். ஸுலைமான் (ஏகஇறைவனை) மறுக்கவில்லை. (ஜிப்ரீல், மீகாயீல் எனும்) அவ்விரு வானவர்களுக்கும் (சூனியம்) அருளப்படவில்லை. பாபில் நகரத்தில் சூனியத்தை மக்களுக்குக் கற்பித்த ஹாரூத், மாரூத் என்ற ஷைத்தான்களே மறுத்தனர். ''நாங்கள் படிப்பினையாக இருக்கிறோம். எனவே, (இதைக் கற்று இறைவனை) மறுத்து விடாதே!'' என்று கூறாமல் அவ்விருவரும் யாருக்கும் கற்றுக் கொடுப்பதில்லை. **எனவே, கணவனுக்கும், மனைவிக்குமிடையில் பிரிவினை ஏற்படுத்துவதை அவ்விருவரிட மிருந்தும் அவர்கள் கற்றுக் கொண்டனர்.** அல்லாஹ்வின் விருப்பமின்றி அதன் மூலம் யாருக்கும் எந்தத் தீங்கும் அவர்களால் செய்ய முடியாது. தமக்குத் தீங்களிப்பதையும், பயனளிக்காததையும் கற்றுக் கொண்டார்கள்.

“இதை விலைக்கு வாங்கியோருக்கு மறுமையில் எந்த நற்பேறும் இல்லை’ என்பதை உறுதியாக அவர்கள் அறிந்து வைத்துள்ளனர். தங்களை எதற்காக விற்றார்களோ அது மிகவும் கெட்டது. அவர்கள் அறிய வேண்டாமா?

***அல்குர்ஆன் 2:102***

*இந்த வசனத்தில் ஃப யதஅல்லமூன என்ற சொல்லில் வரும் ஃப என்ற எழுத்திற்கு பீஜே எனவே, என்று மொழிபெயர்த்துள்ளார். இதற்கு முன்னால் இவ்வாறு இவர் மொழிபெயர்க்கவில்லை. திடீரென இவருக்கு இந்த ஞானம் வந்ததுவிட்டது.*

*சூனியத்தின் மூலம் கணவன் மனைவிக்கிடையே பிரிப்பதைப் பற்றியே இந்த வசனம் பேசுகிறது என்று கூறுபவர்கள் இந்த ஃபாவிற்கு அப்படியிருந்தும் இதன் பின்னே என்ற பொருள்களைக் கொடுத்து மொழிபெயர்க்கின்றனர். இந்த எழுத்திற்கு இவ்வாறு பொருள் இருப்பதை பீஜே மறுக்கவில்லை.*

*ஆனால், பீஜே இந்த வசனத்தில் இவ்வாறு பொருள் கொண்டால் ஷிர்க்கான அர்த்தம் வந்துவிடும். எனவே, இவ்வாறு பொருள்கொள்ளக்கூடாது எனக் கூறுகிறார். ஷிர்க்கான அர்த்தம் வரக்கூடிய வகையில் தான் அல்லாஹ் மனிதர்களிடம் பேசினான். இது வரை வந்த இஸ்லாமிய அறிஞர்கள் அனைவரும் இந்த ஷிர்க்கான அர்தத்ததையே நம்பினர் என்றும் பீஜே இதன் மூலம் துணிந்து கூறுகிறார்.*

*இப்போது பீஜே கொடுக்கும் இந்த விளக்கத்தை இதற்கு முன் இஸ்லாமிய வரலாற்றில் ஓர் அறிஞர் கூட கொடுக்கவில்லை. தஃப்ஸீர்களில் நல்ல கருத்துக்களுடன் தவறான கருத்துக்களும் கூட பதிவு செய்யப்படும். இவ்வாறு குர்ஆனுக்கு ஆயிரக்கணக்கான விரிவுரை உள்ள நிலையில் ஃப சபபிய்யா தொடர்பாக பீஜே கூறிய விளக்கம் எந்த நூலிலும் இடம்பெறவில்லை. இன்று பீஜே மட்டுமே இந்த விளக்கத்தைப் புதிதாகக் கூறுகிறார். இந்த விளக்கம் படுமோசமானது என்பதாலே ஒரு நூலில் கூட இது சொல்லப் படவில்லை.*

*ஹாரூத் மாரூத் இருவரும் சூனியத்தைக் கற்று காஃபிராகி விடாதீர்கள் என்று சொன்னவுடன் யூதர்கள் நாம் காஃபிர்களாக ஆகிவிடக் கூடாது என்று பயந்து சூனியத்தை கற்காமல் கணவன் மனைவிக்கிடையே பிரிக்கும் சூனியம் அல்லாத வேறு ஒரு காரியத்தைக் கற்றுக்கொண்டார்கள் என்று பீஜே கூறுகிறார். ஃபா என்ற எழுத்திற்கு எனவே, என்ற பொருளைக் கொடுத்து இந்த கருத்தை உருவாக்குகிறார்.*

*இந்த வசனத்தில் ஃபா என்ற எழுத்து அரபு இலக்கணப்படி சபபிய்யாவாக (எனவே, என்ற பொருளில்) வராது என்ற கருத்தும் உள்ளது. நாம் இந்த இலக்கணப் பிரச்னைக்குள் செல்லவிரும்ப வில்லை. இந்த வசனத்தில் இந்த எழுத்திற்கு எனவே, என இங்கு பொருள் கொள்ள முடியாது என்பதை மக்களுக்குப் புரிகிற எளிதான வேறு வழிகளில் நிறுவுகிறோம்.*

1. *யூதர்கள் சூனியத்தைக் கற்று காஃபிரானார்கள் என்று இந்த வசனத்தில் அல்லாஹ் மிக அழுத்தமாகக் கூறுகிறான். இக்கருத்தை இந்த வசனத்தில் பல முறை வெவ்வேறு வார்த்தைகளால் கூறுகிறான்.*

   *யூதர்கள் சூனியத்தை பின்பற்றிக் காஃபிரானார்கள். ஹாரூத் மாரூத் இருவரும் இதைக் கற்று காஃபிராகிவிடாதீர்கள் என்று சொல்லியே கற்றுக்கொடுத்தனர். யூதர்கள் நம்பிக்கைக் கொள்ளவுமில்லை. அல்லாஹ்வை அஞ்சவுமில்லை. இவை வசனத்தில் நேரடியாகவே சொல்லப்பட்டுள்ளது.*

   *ஆனால், பீஜே தன் சுயவிளக்கத்தை கொடுத்து யூதர்களை முஃமின்களாகவும் அல்லாஹ்வின் அச்சம் உள்ளவர்களாகவும் சித்தரிக்கிறார். இது குர்ஆனுக்கு முற்றிலும் முரணான விளக்க மாகும். யூதர்கள் அல்லாஹ்வை அஞ்சாமல் ஈமானை இழந் தார்கள் என்று அல்லாஹ் கூறும்போது அவர்கள் ஈமானை இழந்துவிடக் கூடாது என்ற பயத்தில் சூனியத்தை விட்டுவிட்டு வேறொன்றை கற்று முஃமின்களாக இருந்தார்கள் என்று கூறுவது அறிவிலித்தனமாக விளக்கமாகும்.*

   *யூதர்கள் சூனியத்தைக் கற்றார்கள் என அல்லாஹ் அழுத்தமாகக் கூறும்போது, சூனியத்தைக் கற்கவில்லை. சூனியம் அல்லாத கணவன் மனைவிக்கிடையே பிரிக்கும் வேறு ஒரு விஷயத்தையே கற்றுக்கொண்டனர் என்பதே குர்ஆனுக்கு முரணான விளக்கம்.*

2. *வசனங்களை முழுமையாகக் கூறாமல் தன் இஷ்டத்திற்கு ஆங்காங்கே வெட்டி இது போன்ற தில்லுமுல்லு வேலைகளை எளிதாகச் செய்து வருகிறார். மக்கள் இதை அறியாமல் தவிக் கிறார்கள். வசனத்தில் எதையும் விடாமல் முழுமையாகக் கூறினால், இங்குள்ள 'ஃபா'விற்கு எனவே, என்று மொழி பெயர்க்க முடியாது என்பதை அறியலாம்.*

ஹாரூத் மாரூத் இருவரும் சூனியத்தைக் கற்று காஃபிராகி விடாதீர்கள் எனக் கூறினார்கள். எனவே, அவ்விருவரிடமிருந்து கணவன் மனைவிக்கிடையே பிரிக்கிற விஷயத்தை கற்றுக் கொண்டார்கள் என வசனம் இருக்குமானால் அப்போது பீஜே வின் வாதத்தில் ஓரளவுக்கு நியாயம் இருக்கலாம். ஆனால், வசனம் அவ்வாறு இல்லை.

சூனியத்தைக் கற்று காஃபிராகிவிடாதீர்கள் என்று சொல்லாமல் அவ்விருவரும் எவருக்கும் கற்றுக் கொடுக்கவில்லை. அவ்விரு வரிடமிருந்து கணவன் மனைவிக்கிடையே பிரிக்கும் விஷயத்தை கற்றுக் கொண்டனர் என்றே வசனம் உள்ளது. **எவருக்கும் கற்றுக் கொடுக்கவில்லை** என்ற வாசகத்தை பீஜே வசதியாக இருட்டடிப்பு செய்துவிட்டு சம்பந்தமில்லாத உதாரணங்களைக் கூறி வசனத்தின் பொருளை திரித்துக் கூறியுள்ளார்.

இந்த மனிதன் ஏமாற்றுபவன். எனவே, அவனுக்கு நான் கடன்கொடுக்க மாட்டேன் என்ற உதாரணத்தில் முதல் வாக்கியம் இரண்டாவது வாக்கியத்திற்கு காரணமாக அமைந்துள்ளது என்பது உண்மைதான். எனவே, என்ற சொல்லும் இங்கே கச்சிதமாக பொருந்திப் போகிறது. அதாவது அவன் ஏமாற்றக்கூடியவன் என்பதால் அவனுக்கு கடன் தர மாட்டேன் என்பது பொருள். ஆனால், அல்லாஹ்வின் வசனம் இந்த உதாரணத்தப் போன்று அமையவில்லை.

சூனியத்தைக் கற்று காஃபிராகிவிடாதீர்கள் என்று சொல்லியே சூனியத்தைக் கற்றுக் கொடுத்தனர் என்பது முதல் வாக்கியம். கணவன் மனைவிக்கிடையே பிரிக்கும் விஷயத்தை கற்றுக் கொண்டனர் என்பது இரண்டாவது வாக்கியம். இந்த இடத்தில் முதல் வாக்கியத்தை இரண்டாவது வாக்கியத்திற்குக் காரணமாக ஆக்கினால் சரியான பொருள் கிடைக்காது.

சூனியத்தைக் கற்று காஃபிராகிவிடாதீர்கள் என்று சொல்லியே கற்றுக் கொடுத்தனர். எனவே, கணவன் மனைவிக்கிடையே பிரிப்பதைக் கற்றுக்கொண்டனர் என்று கூறினால் சரியான பொருள் அமையவில்லை. எனவே, என்ற சொல் இங்கே பொருத்தமின்றி இருப்பதை அறியலாம்.

சூனியத்தைக் கற்று காஃபிராகிவிடாதீர்கள் என்று சொல்லியே கற்றுக் கொடுத்தனர் என்று அல்லாஹ் கூறுகிறான். கற்றுக் கொடுத்தனர் என்ற வாசகம் யூதர்கள் சூனியத்தை கற்றுக் கொண்

டார்கள் என்பதைத் தெளிவாகக் கூறுகிறது. ஆனால், பீஜே இதற்கு மாற்றமாக சூனியத்தைக் கற்கவில்லை. அதைவிட்டுவிட்டு வேறொன்றைக் கற்றுக் கொண்டார்கள் என்று கூறுகிறார். நாம் அல்லாஹ் கூறுவதை ஏற்பதா? பீஜே சொல்வதை ஏற்பதா?

இங்கே முதல் வாக்கியத்தை இரண்டாவது வாக்கியத்திற்கு காரணமாக ஆக்கினாலும் பீஜேவிற்கு எதிரான பொருளே வருகிறது. ஹாரூத் மாரூத் இவ்விருவரும் காஃபிராகிவிடாதீர்கள் என்று கூறி சூனியத்தை கற்றுக்கொடுத்ததால், அவ்விருவரிடமிருந்து கணவன் மனைவிக்கிடையே பிரிக்கும் விஷயத்தை கற்றுக் கொண்டனர் என்றால், கணவன் மனைவிக்கிடையே பிரிப்பது சூனியம்தான் என்ற கருத்தே வருகிறது.

அவ்விருவரிடமிருந்து கணவன் மனைவிக்கிடையே பிரிக்கும் விஷயத்தை அவர்கள் கற்றுக் கொண்டனர் என வசனம் கூறுகிறது. இங்கே அவர்கள் என்ற சொல் இதற்கு முன்னால் உள்ள எவருக்கும் என்ற வார்த்தையின் பிரதிப் பெயர்ச் சொல்லாகும். ஏற்கனவே சூனியத்தைக் கற்ற நபர்களையே அல்லாஹ் அவர்கள் எனக் குறிப்பிடுகிறான்.

ஆசிரியர் வர்மக் கலை ஆபத்தானது என்று சொல்லியே மாணவர்களுக்கு கற்றுக் கொடுத்தார். இதன் பின்னே அவர்கள் ஆசிரியரிடமிருந்து உறுப்புக்களை செயலிழக்கச் செய்யும் விஷயத்தைக் கற்றுக் கொண்டனர் என்று கூறினால் மாணவர்கள் வர்மக்கலையைக் கற்றுக் கொள்ளவில்லை என்று எந்த அறிவாளி யாவது கூறுவானா? மாணவர்கள் வர்மக்கலையை விட்டுவிட்டு உறுப்புக்களை செயலிழக்கச் செய்யும் வேறொன்றைக் கற்றார்கள் என்றா சொல்ல முடியும்?

இந்த உதாரணத்தில் வர்மக்கலை என்பதும் உறுப்புக்களை செயலிழக்கச் செய்யும் காரியம் என்பதும் ஒன்றுதான். வெவ் வேறானவை அல்ல. இங்கே வர்மக்கலையால் ஏற்படும் விளைவு விளக்கிக் கூறப்பட்டுள்ளது என்று சதாரண அறிவுள்ளவர்கள் கூடப் புரிந்து கொள்வார்கள்.

இது போன்றே குறித்த வசனமும் அமைந்துள்ளது. சூனியமும் இங்கு சொல்லப்படும் கணவன் மனைவிக்கிடையே பிரிப்பதும் ஒன்றுதான். வெவ்வேறானவை அல்ல. சூனியத்தின் மூலம் கணவன் மனைவிக்கிடையே பிரிவினை ஏற்படுத்த முடியும் என்பதால் இந்த விளைவு விளக்கிக் கூறப்பட்டுள்ளது.

இதை அடுத்து அல்லாஹ் இந்த வசனத்தில் தங்களுக்கு கேடு தருகிற நன்மை தராத விஷயத்தை கற்றுக்கொண்டனர் என்று கூறுகிறான். இந்த விஷயம் கணவன் மனைவிக்கிடையே பிரிப்பது அல்லாத வேறு ஒரு விஷயம் என்று கூற மாட்டோம். மாறாக முன்பு சொன்னதை அல்லாஹ் விளக்கிக் கூறுகிறான் என்று புரிந்து கொள்வோம். இந்த வசனத்தின் ஒட்டுமொத்த அமைப்பும் சூனியம் என்ற ஒரே விஷயத்தை ஒன்றுக்குப் பின் ஒன்றாக விளக்குவதாகவே அமைந்துள்ளது.

சூனியத்தை ஏற்கனவே கற்றவர்களைப் பார்த்து கணவன் மனைவிக்கிடையே பிரிப்பதைக் கற்றுக் கொண்டார்கள் என்று கூறினால், இங்கு சொல்லப்படும் விஷயமும் சூனியம்தான் என்பதை அறியலாம். ஹாரூத் மாரூத் சொல்லிக் கொடுத்த விஷயம் சூனியம் என்றால், அவ்விருவரிடமிருந்து கற்றுக் கொள்ளப்பட்ட கணவன் மனைவிக்கிடையே பிரிக்கும் காரியமும் சூனியம் என்பது பளிச்சென்று புரியக் கூடிய விஷயம்தான். எனவே, ஃபா சபபிய்யா என்ற பெயரில் இந்த வசனத்தில் பீஜே செய்யும் உலக மகாக் குழப்பத்தை ஏற்க முடியாது.

சூனியம் என்பது நம்மை காஃபிராக்கும் பெரும்பாவமாகும். கணவன் மனைவியைப் பிரிப்பதால் மனிதன் காஃபிராகமாட்டான். எனவே, கணவன் மனைவிக்கிடையே பிரிப்பது சூனியத்தில் அடங்காது என பீஜே வாதிடுகிறார்.

சூனியம் அல்லாத முறையில் கணவன் மனைவிக்கிடையே பிரித்தால் இதனை குஃப்ர் என்று சொல்லமாட்டோம். ஒருவன் கோள் சொல்லி கணவன் மனைவியைப் பிரித்தால் அவன் செய்தது பெரும்பாவம் என்றாலும் இதன் காரணத்தால் அவன் இஸ்லாமை விட்டும் வெளியேறமாட்டான்.

ஆனால், சூனியத்தின் மூலம் கணவன் மனைவிக்கிடையே பிரிப்பதற்கு முயன்றால், அவன் இஸ்லாமை விட்டும் வெளியேறி விடுவான். இவன் இஸ்லாமை விட்டும் வெளியேறுவதற்கு இவன் செய்த சூனியமே காரணமாகும். இவன் செய்த சூனியத்தால் கணவன் மனைவி பிரிந்தாலும் பிரியாவிட்டாலும் சரியே.

உணவுப் பொருட்களை வீண் விரயம் செய்யக் கூடாது. வீண் விரயம் செய்வது பாவமான செயலாக இருந்தாலும், இதனால் ஒருவன் இஸ்லாமை விட்டும் வெளியேறமாட்டான். ஆனால், உணவுகளை சிலைகளுக்கு படையல் செய்து வீணாக்கினால்

*இதை குஃப்ர் என்று கூறுவோம். குஃப் என்று நாம் கூறியதற்கு வீண் விரையத்தை காரணமாகக் கூறமாட்டோம். மாறாக அவன் சிலைகளுக்குப் படையல் செய்ததையே காரணமாகக் கூறுவோம். இது போன்றுதான் சூனியத்தின் மூலம் கணவன் மனைவியை பிரிப்பதையும் புரிந்துகொள்ள வேண்டும்.*

## கணவன் மனைவியைப் பிரித்தல்

*2:102 வது வசனத்தில் சூனியத்தின் மூலம் கணவன் மனைவிக் கிடையே பிரிக்க முடியும் என அல்லாஹ் கூறுகிறான். கணவன் மனைவியைப் பிரிப்பது என்றால் எப்படி என்ற விளக்கம் இங்கே சொல்லப்படவில்லை. கணவன் மனைவிக்கு மத்தியில் விவாகரத்து ஏற்பட்டு பிரிந்துவிடுவதைப் பற்றி இது பேசுகிறதா? அல்லது இருவரையும் இல்லறத்தில் ஈடுபடவிடாமல் தடுப்பதைப் பற்றி பேசுகிறதா?*

*சூனியத்தின் மூலம் சம்பந்தப்பட்டவருக்கு உடலில் பாதிப்பு ஏற்படும். இந்த பாதிப்பால் அவரால் மனைவியுடன் இல்லறத்தில் ஈடுபட முடியாத நிலை ஏற்படும் என்ற விளக்கம் நபிமொழிகளில் கூறப்பட்டுள்ளது.*

*“அப்துல்லாஹ் (என் மகன்) தான் இஸ்லாமில் பிறந்த முதல் குழந்தையாவார். ஆகவே, முஸ்லிம்கள் அவர் பிறந்ததற்காக மிகவும் மகிழ்ச்சி அடைந்தார்கள். ஏனெனில், அவர்களிடம், “யூதர்கள் உங்களுக்கு சூனியம் வைத்துவிட்டார்கள். ஆகவே, உங்களுக்கு (இனி) குழந்தை பிறக்காது” எனக் கூறப்பட்டுவந்தது.*

***அறிவித்தவர்: அஸ்மா பின்த் அபீபக்ர்(ரலி),***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 5469***

*சூனியம் வைத்தால் குழந்தை பிறக்காது என்ற நம்பிக்கை மதீனா மக்களிடையே இருந்தது. இல்லறம் நடக்காவிட்டாலே குழந்தை பிறக்காது. சூனியம் செய்யப்பட்டவரால் இல்லறத்தில் ஈடுபட முடியாது என்ற நம்பிக்கை இறைத்தூதர்(ஸல்) காலத்தில் மக்களிடம் இருந்தது. இந்த நம்பிக்கை தவறானது என இறைத் தூதர்(ஸல்) கண்டிக்கவில்லை.*

*மாறாக இறைவன் சூனியத்தின் மூலம் கணவன் மனைவிக் கிடையே பிரிக்க முடியும் எனக் குர்ஆனில் கூறி இதை உண்மைப் படுத்துகிறான். இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு சூனியம் செய்யப் பட்டு அவர்கள் உடல் ரீதியான பாதிப்பிற்குள்ளான போதும் அவர்களின் இல்லற வாழ்வில் பாதிப்பு ஏற்பட்டது.*

*இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு (சூனியம் செய்யப்பட்டதால்) மனைவியிடம் அவர்கள் உடலுறவு கொள்ளாமலேயே உடலுறவு கொண்டதாக உணர்வு ஏற்பட்டது...*

***அறிவித்தவர்: ஆயிஷா(ரலி), நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 6063***

*உடலுறவு கொண்டால் உடலுறவில் நாட்டம் வராது. சோர்வும் களைப்பும் ஏற்படும். இந்த நிலை உடலுறவு கொள்ளாமலேயே நபிக்கு ஏற்பட்டது என அன்னை ஆயிஷா(ரலி) கூறினார்கள். அப்படியானால் இறைத்தூதர்(ஸல்) இல்லறத்தில் நாட்டமில்லாமல் இருந்தார்கள். உடலுறவு கொள்ள நாடினாலும் அவர்களால் உடலுறவு கொள்ள முடியவில்லை என்பதையே ஆயிஷா(ரலி) இங்கே குறிப்பிடுகிறார்கள். இதை பின்னர் விரிவாக விளக்குவோம்.*

*எனவே, 2:102 வது வசனத்தில் சொல்லப்படும் கணவன் மனைவிக்கிடையே பிரித்தல் என்பதை நபிமொழிகளின் துணையுடன் இந்த அடிப்படையில் அறிந்து கொள்ளலாம்.*

## அல்லாஹ்வின் அனுமதி

*அது பாபிலோனில் ஹாரூத் மாரூத் என்ற இரு வானவருக்கு அருளப்பட்டது. நாங்கள் சோதனையாக இருக்கிறோம் எனவே, ஏக இறைவனை நிராகரித்துவிடாதீர்கள் என்று சொல்லாமல் அவர்கள் யாருக்கும் கற்றுக் கொடுக்கவில்லை. இதன் பின்னே அவர்கள் அவ்விருவரிடமிருந்து கணவன் மனைவிக்கிடையே பிரிக்கும் விஷயத்தை கற்றுக் கொண்டனர். அதன் மூலம் அவர்கள் அல்லாஹ்வின் அனுமதியின்றி எவருக்கும் தீங்கிழைக்க முடியாது.*

***அல்குர்ஆன் 2:102***

*ஆசிரியர் வர்மக்கலையைக் கற்றுக்கொடுத்தார். மாணவர்கள் அவரிடமிருந்து உறுப்புக்களை செயலிழக்கச் செய்யும் விஷயத்தை கற்றுக் கொண்டனர். அதன் மூலம் மற்றவர்களைப் பாதிப்பிற்கு உள்ளாக்கினார்கள். இந்த உதாரணத்தில் அதன் மூலம் என்ற சொல் உறுப்புக்களை செயலிழக்கச் செய்யும் விஷயத்தை நோக்கித் திரும்பினாலும் இது வர்மக்கலையைத்தான் குறிக்கிறது என்பதை யாரும் மறுக்க முடியாது. இது போன்றே மேற்கண்ட வசனத்திலும் அதன் மூலம் என்ற சொல் சூனியத்தையே குறிக்கிறது என்பதையும் மறுக்க முடியாது.*

அதன் மூலம் என்ற சொல் இதற்கு முன்னுள்ள கணவன் மனைவிக்கிடையே பிரித்தல் என்ற வார்த்தையை நோக்கி மீளுகிறது. இங்கே கணவன் மனைவியைப் பிரிப்பது சூனியத்தின் மூலம் நடக்கிறது. எனவே, அதன் மூலம் என்ற சொல்லுக்கும் சூனியத்திற்கும் சம்பந்த மில்லை என்று கூற இடமே இல்லை.

وَمَا هُمْ بِضَارِّينَ بِهِ مِنْ أَحَدٍ إِلَّا بِإِذْنِ اللَّهِ

அல்லாஹ்வின் அனுமதியின்றி அதன் மூலம் அவர்கள் எவருக்கும் தீங்கிழைக்க முடியாது என்ற சொல்லின் சரியான விளக்கத்தை இனி அறிந்துகொள்வோம்.

சூனியத்தால் எந்த பாதிப்பும் ஏற்படாது என மறுப்பவர்கள் அதன் மூலம் அவர்கள் யாருக்கும் எந்த பாதிப்பும் ஏற்படுத்த முடியாது என்ற வாசகத்தை சுட்டிக்காட்டி சூனியத்தால் எந்த தீங்கும் ஏற்படாது என அல்லாஹ் கூறுவதாக வாதிடுகிறார்கள்.

முழு வாசகத்தையும் கவனிக்காமல் பாதியை விட்டு பாதிக்கு மட்டும் பொருள் செய்தால் எப்படிப்பட்ட நல்ல கருத்தையும் மோசமானதாக சித்தரிக்க முடியும். குறிப்பாக குர்ஆன் வசனங்களில் இது போன்ற மோசடிச் செயலைச் செய்யவே கூடாது.

லா இலாஹ இல்லல்லாஹ் என்ற கலிமாவில் இல்லல்லாஹ் என்பதை விட்டுவிட்டு அர்த்தம் கொடுத்தால் இறைவனே இல்லை என்ற நாத்திக கொள்கையைத்தான் கூற நேரிடும். இல்லல்லாஹ் (அல்லாஹ்வைத் தவிர) என்ற வார்த்தையும் சேர்த்துக் கூறினாலே அல்லாஹ்வைத் தவிர வேறு எந்த இறைவனும் இல்லை என்ற சரியான ஏகத்துவக் கொள்கையைக் கூற முடியும்.

சூனியத்தின் மூலம் யாருக்கும் தீங்கு ஏற்படுத்த முடியாது என்பதுடன் வசனம் முடிந்துவிட்டால் சூனியத்தால் எந்த பாதிப்பும் ஏற்படாது என்று கூறலாம். ஆனால், வசனம் இத்துடன் முடியாமல் அல்லாஹ்வின் அனுமதியில்லாமல் என்ற வாசகமும் இத்துடன் சேர்ந்துள்ளது. அல்லாஹ்வின் அனுமதியின்றி தீங்கிழைக்க முடியாது என்றால் அல்லாஹ் அனுமதித்தால் தீங்கிழைக்க முடியும் என்பதைப் புரிந்துகொள்ளலாம்.

தாங்களாக ஒரு முடிவை எடுத்துக் கொண்டு அதற்குத் தகுந்தாற் போல் அல்லாஹ்வின் வார்த்தைகளை வளைக்க நினைக்கிறார்கள். சூனியத்தின் மூலம் பாதிப்பு ஏற்படும் என்று தெளிவாகக் கூறும் இந்த வசனத்திற்கு சூனியத்தால் எந்த பாதிப்பும்

*ஏற்படாது என அறிவீனமாக விளக்கம் தருகிறார்கள். மனோஇச்சை என்ற நோய்தான் இப்படியெல்லாம் இவர்களைச் சிந்திக்க வைக்கிறது.*

*அல்லாஹ்வின் அனுமதியுடன் நடக்கிற விஷயங்களைக் குறிப்பிடும்போது இது போன்ற சொற்பிரயோகத்தை அல்லாஹ் குர்ஆனில் பல இடங்களில் பயன்படுத்துகிறான்.*

**وَمَا كَانَ لِنَفْسٍ أَنْ تَمُوتَ إِلَّا بِإِذْنِ اللَّهِ كِتَابًا مُؤَجَّلًا**

*அல்லாஹ்வின் அனுமதியின்றி எந்த ஆத்மாவும் மரணிக்க முடியாது.* ***அல்குர்ஆன் 3:145***

**وَمَا كَانَ لِنَفْسٍ أَنْ تَمُوتَ إِلَّا بِإِذْنِ اللَّهِ كِتَابًا مُؤَجَّلًا**

*அல்லாஹ்வின் அனுமதியின்றி எந்த ஆத்மாவும் நம்பிக்கைக் கொள்ள முடியாது.* ***அல்குர்ஆன் 10:100***

**يَوْمَ يَأْتِ لَا تَكَلَّمُ نَفْسٌ إِلَّا بِإِذْنِهِ**

*அது வரும் நாளில் அல்லாஹ்வின் அனுமதியின்றி எந்த ஆத்மாவும் பேச முடியாது.* ***அல்குர்ஆன் 11:105***

**وَمَا أَرْسَلْنَا مِنْ رَسُولٍ إِلَّا لِيُطَاعَ بِإِذْنِ اللَّهِ**

*அல்லாஹ்வின் அனுமதியுடன் பின்பற்றப்படுவதற்காகவே தவிர நாம் எந்தத் தூதரையும் அனுப்பவில்லை.*

***அல்குர்ஆன் 4:64***

**مَا أَصَابَ مِنْ مُصِيبَةٍ إِلَّا بِإِذْنِ اللَّهِ**

*அல்லாஹ்வின் அனுமதியின்றி எந்த தீங்கும் ஏற்படுவதில்லை.* ***அல்குர்ஆன் 64:11***

**إِنَّمَا النَّجْوَى مِنْ الشَّيْطَانِ لِيَحْزُنَ الَّذِينَ آمَنُوا وَلَيْسَ بِضَارِّهِمْ شَيْئًا إِلَّا بِإِذْنِ اللَّهِ وَعَلَى اللَّهِ فَلْيَتَوَكَّلْ الْمُؤْمِنُونَ(10)58**

*இறைநம்பிக்கையாளர்களை கவலையில் ஆழ்த்துவதற்காகவே ஷைத்தானிடமிருந்து இரகசியம் பேசுதல் ஏற்படுகிறது. அல்லாஹ்வின் அனுமதியில்லாமல் அதன் மூலம் அவர்களுக்கு எந்த தீங்கும் ஏற்படாது.* ***அல்குர்ஆன் 58:10***

**مَنْ ذَا الَّذِي يَشْفَعُ عِنْدَهُ إِلَّا بِإِذْنِهِ (255)2**

*அல்லாஹ்வின் அனுமதியின்றி அவனிடம் யார் பரிந்துரைக்க முடியும்?* ***அல்குர்ஆன் 2:255***

**وَمَا كَانَ لِرَسُولٍ أَنْ يَأْتِيَ بِآيَــةٍ إِلَّــا بِإِذْنِ اللَّهِ لِكُلِّ أَجَلٍ كِتَابٌ(38)13**

*அல்லாஹ்வின் அனுமதியின்றி எந்தத் தூதரும் எந்த அற்புதத் தையும் கொண்டுவர முடியாது.* ***அல்குர்ஆன் 13:38***

மேற்கண்ட வசனங்களில் அல்லாஹ்வின் அனுமதியுடன் உலகில் நடக்கிற விஷயங்களைப் பற்றியே அல்லாஹ் பேசுகிறான். எனவே, சூனியத்தின் மூலம் அல்லாஹ்வின் அனுமதியின்றி பாதிப்பு ஏற்படுத்த முடியாது என்றால் அல்லாஹ்வின் அனுமதி இருக்கும் பட்சத்தில் அதன் மூலம் பாதிப்பு ஏற்படும் என்பதை அறியலாம்.

## ஹாரூத் மாரூத் வானவர்களே!

*அவர்கள் சுலைமானின் ஆட்சியில் ஷைத்தான்கள் ஓதியதைப் பின்பற்றினார்கள். சுலைமான் நிராகரிக்கவில்லை. ஷைத்தான்களே மக்களுக்கு சூனியத்தைக் கற்றுக்கொடுத்து நிராகரித்தார்கள். அது பாபிலோனில் ஹாரூத் மாரூத் என்ற இரண்டு வானவருக்கு அருளப் பட்டது. நாங்கள் சோதனையாக இருக்கிறோம். எனவே, ஏக இறைவனை நிராகரித்துவிடாதீர்கள் என்று சொல்லாமல் அவர்கள் யாருக்கும் கற்றுக் கொடுக்கவில்லை. இதன் பின்னே அவர்கள் அவ்விருவரிடமிருந்து கணவன் மனைவிக்கிடையே பிரிக்கும் விஷயத்தை கற்றுக் கொண்டனர்.* ***அல்குர்ஆன் 2:102***

வசனங்களை வெட்டாமல் மேலே நாம் மொழிபெயர்த் துள்ளவாறு நேரடியாகப் பொருள் செய்தால் ஹாரூத் மாரூத் இவ்விருவரும் வானவர்கள் என்பதை தெள்ளத் தெளிவாக அறியலாம். இந்த வசனம் நேரடியாக இதையே கூறுகிறது என்பதை மாற்றுக்கருத்தில் உள்ளவர்கள் மறுப்பதில்லை.

நேரடியாகப் பொருள் செய்தால் தவறான கருத்து வருகிறது என்று இவர்கள் கருதுகிறார்கள். இதற்காக வசனத்தை வெட்டி தூரதொலைவில் கொண்டு சென்று ஒட்டும் வேலையை செய்கிறார்கள்.

அந்த இரண்டு வானவர்கள் மீது இந்த சூனியக்கலை அருளப் படவில்லை. பாபில் நகரத்தில் சூனியத்தை கற்பித்த ஹாரூத் மாரூத் என்ற ஷைத்தான்களே மறுத்தனர் என்று மொழிபெயர்க்கின்றனர்.

*இந்த மொழிபெயர்ப்புக்காக இந்த வசனத்தில் இவர்கள் என்னென்ன வேலைகளைச் செய்துள்ளார்கள் என்பதை முதலில் அறிந்து கொள்வோம்.*

*ஹாரூத் மாரூத் என்ற வானவர்கள் என்று அமைந்துள்ள வசனத்தில் ஹாரூத் மாரூத் என்பதற்கும் வானவர்கள் என்பதற்கும் இடையே பிரிக்கிறார்கள். அதாவது வசனத்தை இரண்டாக வெட்டுகிறார்கள்.*

*இந்த வசனத்தில் உள்ள ஹாரூத் மாரூத் என்ற சொல்லை இதற்கு முன்னுள்ள ஒன்பது வார்த்தைகளையும் தாண்டி ஷைத்தான் கள் என்ற சொல்லில் கொண்டு சென்று ஒட்டுகிறார்கள். இதாவது பரவாயில்லை. அல்மலகைன் இரண்டு வானவர்கள் என்ற சொல்லை நான்கு வசனங்களுக்கு முன்னால் சென்று தொலைவில் அமைந்துள்ள ஜிப்ரீல் மீக்காயீல் என்ற சொல்லில் கொண்டு சென்று இணைக்கிறார்கள்.*

*அல்லாஹ் தெளிவாகவும் மக்களுக்கு புரியும் விதமாகவும் பேசக் கூடியவன். அல்லாஹ்வின் வார்த்தைகளில் இவர்கள் செய்யும் இச்செயல் அல்லாஹ் தெளிவாக வசனத்தை இறக்க வில்லை. நாங்கள்தான் அதை சரிசெய்ய வேண்டியுள்ளது என்ற தவறான கருத்தையே பிரதிபலிக்கிறது.*

*ஒரு விஷயத்தை இவர்கள் சரியாக விளங்காததால் அல்லாஹ் வின் வசனத்தில் இப்படிப்பட்ட வேலைகளை செய்துள்ளனர். சூனியத்தைக் கற்பதும் கற்பிப்பதும் குஃப்ரான செயலாகும். இதை வானவர்கள் எப்படி செய்வார்கள்? எனவே, ஹாரூத் மாரூத் இவ்விருவரையும் வானவர்கள் என்று நாம் சொல்லக் கூடாது. இதுவே இவர்களுக்கு ஏற்பட்ட பிரச்னை.*

*ஹாரூத் மாரூத் இவ்விருவரும் சூனியத்தைக் கற்றுக் கொடுக் கும்போது நாங்கள் சோதனையாகவே இருக்கிறோம். இதைக் கற்று காஃபிராகிவிடாதீர்கள் என்று கூறுகின்றனர். சூனியம் செய்வது நல்ல காரியம். எனவே, இதைச் செய்யுங்கள் என்று அவர்கள் ஆர்வமூட்டவில்லை. மாறாக இதைச் செய்யக் கூடாது. இது குற்றச்செயல் என்று கூறி மக்களுக்கு எச்சரிக்கின்றனர்.*

*அல்லாஹ் அடியார்களை சோதிப்பதற்காக எத்தகைய ஏற்பாட்டை வேண்டுமானாலும் செய்வான். தஜ்ஜால் தன்னை இறைவன் என வாதிடுவான். இதற்காக அவன் பல அதிசயங்களைச்*


وَبُشْرٰى لِلْمُؤْمِنِيْنَ ﴿٩٧﴾ مَنْ كَانَ عَدُوًّا لِّلّٰهِ وَمَلٰٓئِكَتِهٖ وَ
رُسُلِهٖ وَجِبْرِيْلَ وَمِيْكٰلَ فَاِنَّ اللّٰهَ عَدُوٌّ لِّلْكٰفِرِيْنَ ﴿٩٨﴾
وَلَقَدْ اَنْزَلْنَآ اِلَيْكَ اٰيٰتٍۢ بَيِّنٰتٍ ۚ وَمَا يَكْفُرُ بِهَآ اِلَّا
الْفٰسِقُوْنَ ﴿٩٩﴾ اَوَكُلَّمَا عٰهَدُوْا عَهْدًا نَّبَذَهٗ فَرِيْقٌ مِّنْهُمْ
بَلْ اَكْثَرُهُمْ لَا يُؤْمِنُوْنَ ﴿١٠٠﴾ وَلَمَّا جَآءَهُمْ رَسُوْلٌ مِّنْ عِنْدِ
اللّٰهِ مُصَدِّقٌ لِّمَا مَعَهُمْ نَبَذَ فَرِيْقٌ مِّنَ الَّذِيْنَ اُوْتُوا
الْكِتٰبَ ۙ كِتٰبَ اللّٰهِ وَرَآءَ ظُهُوْرِهِمْ كَاَنَّهُمْ لَا يَعْلَمُوْنَ ﴿١٠١﴾
وَاتَّبَعُوْا مَا تَتْلُوا الشَّيٰطِيْنُ عَلٰى مُلْكِ سُلَيْمٰنَ ۚ وَمَا
كَفَرَ سُلَيْمٰنُ وَلٰكِنَّ الشَّيٰطِيْنَ كَفَرُوْا يُعَلِّمُوْنَ النَّاسَ
السِّحْرَ ۗ وَمَآ اُنْزِلَ عَلَى الْمَلَكَيْنِ بِبَابِلَ هَارُوْتَ وَمَارُوْتَ ۭ
وَمَا يُعَلِّمٰنِ مِنْ اَحَدٍ حَتّٰى يَقُوْلَآ اِنَّمَا نَحْنُ فِتْنَةٌ فَلَا

**மேற்கண்ட வரை படத்தைக் கூர்ந்து கவனியுங்கள்!**

*ஹாரூத் மாரூத் என்னும் இரண்டு வார்த்தைகளை அதன் அருகில் உள்ள அல்மலகைன் என்ற அரபுக்கே உகந்த இருமைச் சொல்லுடன் இணைக்காமல், அதையும் தாண்டி ஒன்பது வார்த்தைகளுக்கு முன்னால் அமைந்துள்ள ஷயாத்தீன் என்ற பன்மைச் சொல்லுடன் இணைக்கிறார் பீஜே.*

*இது மட்டுமல்லாமல் 2:102 வசனத்தில் இடம் பெற்றுள்ள அல் மலகைன் என்ற வார்த்தையை கொஞ்சமும் சம்பந்தம் இல்லாமல் 64 வார்த்தைகளுக்கு முன்னால் உள்ள 2:98 வசனத்தில் கொண்டு போய் சேர்க்கிறார் பீஜே.*

*இது சரியான தமிழாக்கமே இல்லை. அல்லாஹ்வின் வசனங்களை வெட்டித் துண்டாடும் வேலைதான் இது.*

செய்து காட்டுவான். பலர் அவனை இறைவன் என்று நம்புவார்கள். இவனுக்கு அதிசயங்கள் செய்யும் ஆற்றலை வழங்கியவன் அல்லாஹ்தான்.

சாமிரீ என்பவன் காளைமாட்டை செய்தபோது அதில் சப்தத்தை ஏற்படுத்தியவனும் அல்லாஹ்தான். இதன் காரணத்தால் பலர் அந்த காளைமாட்டை வணங்கினர். இது அவர்களின் ஈமானிற்கு ஏற்படுத்தப்பட்ட ஒரு சோதனை.

சனிக் கிழமை மீன் பிடிக்கக் கூடாது என்று அல்லாஹ் இஸ்ரவேலர்களுக்கு உத்தரவிட்டான். ஆனால், மற்ற நாள்களில் வராத அளவுக்கு அதிகமான மீன்களை தடை செய்யப்பட்ட நாளில் அல்லாஹ்தான் வரவழைத்தான்; ஷைத்தான் வரவழைக்க வில்லை. அல்லாஹ்வின் உத்தரவுகளை இவர்கள் மீறுகிறார்களா என தன் அடியார்களை சோதிப்பதற்காகவே அல்லாஹ் இவ்வாறு செய்தான்.

இந்த அடிப்படையில் அடியார்களை சோதிப்பதற்காகவே வானவர்கள் மூலம் சூனியத்தைக் கற்றுக் கொடுக்கும் வேலையையும் அல்லாஹ்தான் செய்கிறான். எனவே, "அல்லாஹ் இப்படி செய்வானா?" என கேள்வி கேட்கும் அதிகாரத்தைக் கையில் எடுக்கக் கூடாது. அடியார்களைச் சோதிப்பதற்காக அல்லாஹ், தான் நாடியதை செய்பவன். அந்த அதிகாரம் அல்லாஹ்விற்கு உள்ளது. இதில் இப்படி ஏன் அவன் செய்யவேண்டும் என்ற கேள்வியை எழுப்புவதுதான் நாத்திகம்.

ஹாரூத் மாரூத் இருவரும் மனிதத் தோற்றத்தில் சென்றதால் அவர்கள் வானவர்கள் என்பதை மக்கள் அறிந்திருக்கமாட்டார்கள். மேலும் அவர்கள் சூனியத்தைக் கற்பதும் அதில் ஈடுபடுவதும் குஃப்ரான செயல் என்று கூறி, எச்சரிக்கை செய்வதால் இதை கற்கும் அனைவரும் இது அல்லாஹ்வால் தடைசெய்யப்பட்ட விஷயம் என்பதை நன்கு அறிந்த பின்னரே கற்றுக் கொண்டனர்.

மக்களை சோதிப்பதற்காக சூனியத்தைக் கற்றுக் கொடுப்பதை ஹாரூத் மாரூத் வானவர்களுக்கு மட்டும் அல்லாஹ் அனுமதித் தான். எனவே, இந்த வேலையை வானவர்கள் செய்வதால் அவர்கள் காஃபிராகிவிடமாட்டார்கள். மாறாக அல்லாஹ்வின் உத்தரவிற்கு கட்டுப்பட்டவர்களாகவே ஆவார்கள். ஆனால், மனிதர்களுக்கு சூனியத்தைக் கற்பதற்கும் பிறருக்கு கற்றுக் கொடுப்

*பதற்கும் வேறு யாருக்கும் அல்லாஹ் அனுமதி வழங்கவில்லை. கியாமத் நாள் வரை அல்லாஹ் இதை ஹராமாக்கிவிட்டான். எனவே, இதை வேறு யார் செய்தாலும் அது குஃப்ரான செயலாகும்.*

*தீயதையும் பாவமானதையும் அல்லாஹ் ஏவமாட்டான் என்ற கருத்தில் வரும் குர்ஆன் வசனங்களைக் கொண்டு வந்து சூனியம் பாவமான விஷயமாக இருக்கும்போது வானவர் இதை எப்படி மக்களுக்குக் கற்றுக்கொடுத்திருப்பார்கள்? என்றும் கேட்கிறார்கள்.*

*அல்லாஹ் தீயதையும் பாவமானதையும் ஏவமாட்டான் என்றால், தீயவற்றை செய்யுமாறு மனிதர்களுக்கு உத்தரவிட மாட்டான். பாவமான விஷயங்களை செய்யுமாறு மனிதர்களுக்கு சட்டமாக்க மாட்டான் என்பதே அதன் பொருள்.*

*ஹாரூத் மாரூத் இருவரும் சூனியம் செய்வது ஹலாலான காரியம். இதை செய்யுங்கள் என்று மக்களுக்கு கூறியிருந்தால் அப்போது இது குர்ஆன் வசனங்களோடு முரண்படுகிறது எனக் கூறலாம். ஆனால், அவர்கள் இதை பெரும்பாவம். இதைக் கற்று காஃபிராகிவிடாதீர்கள் என்று எச்சரிக்கின்றனர். இது ஹலாலான காரியம் என்று மக்களுக்கு சட்டமாக்கவில்லை. இது எப்படி குர்ஆன் வசனத்திற்கு முரணாகும்?*

*ஷைத்தான் தீயதை மட்டுமே ஏவுவான் என்று குர்ஆன் கூறுகிறது.*

*அவன் தீயதையும் மானக்கேடான காரியத்தையும் நீங்கள் அறியாத விஷயங்களைஅல்லாஹ்வின் மீது கூறுவதையே உங்களுக்கு ஏவுகிறான்.* ***அல்குர்ஆன் 2:169***

*ஆனால், ஷைத்தான் அபூ ஹுரைரா(ரலி) அவர்களுக்கு ஒரு நல்லவிஷயத்தைக் கற்றுக் கொடுத்தான்.*

*“இறைத்தூதர்(ஸல்) ரமளானின் (ஃபித்ரா) ஸகாத்தைப் பாதுகாக்கும் பொறுப்பை என்னிடம் ஒப்படைத்தார்கள். அப்போது யாரோ ஒருவன் என்னிடம் வந்து அந்த (ஸகாத்) உணவுப் பொருளை அள்ளத் தொடங்கினான். உடனே அவனை நான் பிடித்து, “உன்னை இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் கொண்டு செல்லப் போகிறேன்’ என்றேன்’ என்று கூறிவிட்டு, - அந்த நிகழ்ச்சியை முழுமையாகக் குறிப்பிட்டார்கள்...*

*(இறுதியில், திருட வந்த) அவன், “நீங்கள் படுக்கைக்குச் செல்லும்போது “ஆயத்துல் குர்ஸீ’யை ஓதுங்கள்! (அவ்வாறு செய்தால்,) விடியும் வரை அல்லாஹ்வின் தரப்பிலிருந்து (உங்களைப் பாதுகாக்கிற) காவலர் (வானவர்) ஒருவர் இருப்பார்; எந்த ஷைத்தானும் உங்களை நெருங்கமாட்டான்” என்று கூறினான். (இதை நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் தெரிவித்தேன்). அப்போது நபியவர்கள், “அவன் பெரும் பொய்யனாயிருப்பினும் அவன் உம்மிடம் உண்மையைத்தான் சொல்லியிருக்கிறான்; (உம்மிடம் வந்த) அவன்தான் ஷைத்தான்” என்று கூறினார்கள்.*
***அறிவித்தவர்: அபூ ஹுரைரா(ரலி), நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 5010***

*ஷைத்தான் தீயதையே ஏவுவான் என்று குர்ஆன் கூறுகிறது. ஆனால், அபூ ஹுரைரா(ரலி) அவர்களுக்கு நல்ல விஷயத்தை கற்றுக் கொடுத்துள்ளான். இது குர்ஆனுக்கு முரணாக உள்ளது என்று கூறி இந்த ஹதீஸை நிராகரிக்க முடியுமா? அபூ ஹுரைரா (ரலி) அவர்களிடம் வந்தவன் ஷைத்தான் அல்ல; தீய மனிதன் என சகோதரர் பீஜே வாதிடுகிறார். ஆனால், நபிமொழியில் வந்தவன் ஜின் இனத்தைச் சார்ந்த ஷைத்தான் எனத் தெளிவாகவே கூறப் பட்டுள்ளது.*

*...அப்போது எனக்கு முன்னால் ஒரு ஜின் நின்றது; இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் கொண்டு செல்வதற்காக நான் அதைப் பிடித்தேன். ஏழை ஜின்களுக்காகவே நான் இதை எடுத்தேன். இனிமேல் வரமாட்டேன் என அது கூறியது...*

***அறிவித்தவர்: அபூ ஹுரைரா(ரலி)***
***நூல்: ஸுனன் அல் குப்ரா நஸாயீ 7963***

*ஷைத்தான் எப்போதும் நல்லதை கற்றுக் கொடுக்கமாட்டான். அபூ ஹுரைரா(ரலி) அவர்களுக்கு நல்ல விஷயத்தைக் கற்றுக் கொடுத்தது விதிவிலக்கு. இங்கே இவன் நல்லதைக் கற்றுக் கொடுத்தது கூட நல்ல எண்ணத்தில் அல்ல. தான் அவர் கையில் மாட்டிக் கொள்ளாமல் தப்பிக் வேண்டும் என்ற சுயநலத்தில்தான் என இதைப் புரிந்துகொள்வோம்.*

*களிர்(அலை) ஒரு சிறுவனை அவன் அறியாப் பருவத்தில் இருந்தபோது கொல்கிறார். காரணம் கூறியபோது அவன் தன் இளமைப் பருவத்தில் தன் பெற்றோரைக் கொடுமைப்படுத்துவான் எனக் கூறினார். குற்றம் நிகழும் முன்பே ஓர் உயிரைக் கொல்வது நியாயமில்லை. இது போன்று நாம் செய்யலாமா? எனவே, இச்*

*செயல் அநியாயமானது; அல்லாஹ் இவ்வாறு கூறி இருக்கமாட்டான் என வாதிட்டு குர்ஆன் வசனத்தை மறுப்பார்களா?*

*எதிர் காலத்தில் நடக்கவிருப்பதை அறிந்த அல்லாஹ்வின் உத்தரவுப்படி நடந்தேறிய விதிவலக்கான ஒரு நிகழ்வு என்றுதான் நாம் இதைப் புரிந்து கொள்ள வேண்டும். இது போன்று ஹாரூத் மாரூத் சூனியத்தை கற்றுக் கொடுத்ததையும் புரிந்துகொள்ள வேண்டும்.*

*வானவர்கள் தீயதைக் கற்றுக் கொடுக்கமாட்டார்கள் என்பது பொது விதி. ஆனால், சூனிய விஷயத்தில் மட்டும் விதிவிலக்காக அல்லாஹ்வின் ஏற்பாட்டால், மக்களை சோதிப்பதற்காக எச்சரிக்கை செய்து கற்றுக் கொடுத்தார்கள் என்றே புரிந்து கொள்ள வேண்டும். இவ்வாறு இமாம் இப்னு கஸீர் அவர்களும் விளக்கம் கொடுத்துள்ளார்கள்.*

*ஹாரூத் மாரூத் வானவர்கள் அல்ல; ஷைத்தான்கள் என இமாம் குர்துபி(ரஹ்) கூறியிருப்பதை சுட்டிக்காட்டுகிறார்கள். அதே இமாம் குர்துபி(ரஹ்)தான் இந்த வசனத்தை ஆதாரமாகக் கொண்டு சூனியத்தால் பாதிப்பு ஏற்படும். சூனியத்தின் மூலம் கணவன் மனைவிக்கிடையே பிரிக்க முடியும் என்றும் கூறுகிறாரே. அதை இவர்கள் ஏற்றுக் கொள்வார்களா? பாதி ஏற்று பாதி மறுப்பதுதானே இவர்களின் நிலைப்பாடு; யூதர்களும் இதைத்தான் செய்தார்கள்.*

*அதிகமான ஸலஃபுகள் ஹாரூத் மாரூத் என்போர் வானவர்கள் என்று கூறியிருப்பதாக இமாம் இப்னு கஸீர்(ரஹ்) தன்னுடைய விரிவுரையில் குறிப்பிடுகிறார்கள்.*

*இதுவே சரியான கருத்து. இதற்கு மாற்றமாக இவ்விஷயத்தில் இமாம் குர்துபி(ரஹ்) கூறுவதை ஏற்க இயலாது.*

## முடிச்சுக்களில் ஊதுபவர்களின் தீங்கு

قُلْ أَعُوذُ بِرَبِّ الْفَلَقِ (1) مِنْ شَرِّ مَا خَلَقَ (2) وَمِنْ شَرِّ غَاسِقٍ إِذَا وَقَبَ (3) وَمِنْ شَرِّ النَّفَّاثَاتِ فِي الْعُقَدِ (4) وَمِنْ شَرِّ حَاسِدٍ إِذَا حَسَدَ (5)

*அதிகாலையில் இறைவனிடம் அவன் படைத்தவற்றின் தீங்கை விட்டும், இருள் பரவும்போது ஏற்படும் தீங்கை விட்டும், முடிச்சுகளில்*

*ஊதுபவர்களின் தீங்கை விட்டும் பொறாமைக்காரன் பொறாமை கொள்ளும்போது ஏற்படும் தீங்கை விட்டும் பாதுகாப்புத் தேடுகிறேன் என்று கூறுவீராக.* ***அல்குர்ஆன், அத்தியாயம் 113***

*இந்த வசனத்தில் முடிச்சுகளில் ஊதக்கூடியவர்களால் தீங்கு ஏற்படும் என்று அல்லாஹ் கூறுகிறான். முடிச்சுகளில் ஊதுகிற வேலையை சூனியக்காரர்கள் செய்கிறார்கள் என்பதை யாரும் மறுக்க முடியாது. நடைமுறையில் சூனியக்காரர்கள் முடிச்சுகளில் ஊதி சூனியத்தை செய்து கொண்டிருக்கும்போது முடிச்சுகளில் ஊதக் கூடியவர்களின் தீங்கு என அல்லாஹ் கூறினால் அல்லாஹ் சூனியக் காரர்களை குறிப்பிடுகிறான் என்றே அனைவரும் புரிவார்கள்.*

*மக்கள் குழப்பமின்றி இவ்வாறு இலகுவாக புரிந்து கொள் வார்கள் என்பதால் சூனியக்காரர்களின் தீங்கு என்று சொல்லாமல் முடிச்சுகளில் ஊதக்கூடியவர்களின் தீங்கு என்று கூறி சூனியக் காரர்கள் சூனியத்தில் செய்யும் காரியத்தை விளக்கிக் கூறுகிறான்.*

*சூனியக்காரர்களால் எந்தத் தீங்கும் ஏற்படாது. தீங்கு ஏற்படும் என்று நம்புவது மூடநம்பிக்கை என்றால் இதை ஆதரிப்பது போன்று அல்லாஹ் வசனத்தை இறக்குவானா? நன்மக்கள் அனைவரும் அல்லாஹ்வின் வார்த்தையை தவறாக புரியும் வகையில் அல்லாஹ் பேசுவானா?*

*இந்த வசனம் சூனியக்காரர்களையே குறிக்கிறது என்று இமாம் புகாரீ உட்பட இப்னு தைமிய, இப்னுல் கய்யூம் இன்னும் பல அறிஞர்கள் கூறியுள்ளனர். முஃதஸிலாக்களையும் அவர்களின் சிந்தனையில் உள்ள சிலரையும் தவிர மற்ற யாரும் இதில் மாற்றுக் கருத்து கொள்ளவில்லை.*

*மேற்கண்ட வசனம் சூனியக்காரர்களை குறிக்கிறது என்று கூறும் அறிஞர்கள் வசனத்தில் உள்ள முடிச்சு என்ற சொல்லுக்கு அதன் நேரடிப் பொருளை அப்படியே கொடுக்கின்றனர். ஊதக் கூடியவர்கள் என்பதையும் அப்படியே ஏற்கின்றனர். இதற்கு மாற்று விளக்கம் சொல்லாமல் வசனத்தில் உள்ளதை அப்படியே ஏற்கின்றனர். இதுதான் அல்லாஹ்வின் வசனத்தில் நாம் கட்டாய மாகக் கடைபிடிக்க வேண்டிய ஒழுங்காகும்.*

*மேலும் குர்ஆன் மற்றும் ஆதாரப்பூர்வமான ஹதீஸ்களில் சூனியத்தின் மூலம் பாதிப்பு ஏற்படலாம் என்று கூறப்பட்டுள்ளது. இதையும் கவனத்தில் கொண்டால், இது சூனியக்காரர்களையே*

குறிக்கிறது என்பதை தெளிவாக அறியலாம். ஆனால், இது சூனியக்காரர்களைப் பற்றி பேசவில்லை என்று கூறுபவர்கள் முடிச்சு என்பதற்கும் ஊதக் கூடியவர்கள் என்பதற்கும் தங்களின் சுயக்கருத்தை விளக்கமாக கூறுகின்றனர். வசனத்தின் நேரடிப் பொருளை மாற்றுகின்றனர்.

முடிச்சுகளில் ஊதக் கூடியவர்கள் என்றால் சதிகாரர்கள் என்றும் கோள் சொல்லி குழப்பங்களை ஏற்படுத்தக் கூடியவர்கள் என்றும் மாற்று விளக்கம் தருகின்றனர். முடிச்சுகளில் ஊதக் கூடியவர் என்ற சொல் கோள் சொல்பவர்களுக்கு பயன்படுத்தப் பட்டுள்ளது என்ற இவர்களின் கற்பனை விளக்கத்திற்கு குர்ஆன் ஹதீஸில் எந்த ஆதாரத்தையும் காட்ட இயலாது.

முடிச்சு என்ற சொல் மட்டும் சில இடங்களில் வேறு பொருளில் பயன்படுத்தப்பட்டுள்ளது. அவற்றை ஆதாரமாக கூறுகின்றனர்.

*அந்தப் பெண்களுக்கு நீங்கள் மஹர் தொகையை நிர்ணயித்து விட்ட நிலையில் அவர்களை தொடுவதற்கு முன்னால் விவாகரத்துச் செய்தால் நீங்கள் நிர்ணயித்ததில் பாதி தொகையை கொடுங்கள். அவர்களோ அல்லது யாருடைய கையில்* **திருமண ஒப்பந்தம்** *செய்யும் அதிகாரம் உள்ளதோ அவரோ மன்னித்தாலே தவிர.*

***அல்குர்ஆன் 2:237***

இந்த வசனத்தில் திருமண ஒப்பந்தம் என்று நாம் மொழி பெயர்த்துள்ள இடத்தில் உக்ததுன் நிகாஹ் என்ற சொல் உள்ளது. திருமணத்தின் முடிச்சு என்பது இதன் நேரடிப் பொருள். இந்த வசனத்தில் முடிச்சு என்றால் நாம் முடிச்சு என்று விளங்கமாட்டோம். ஒப்பந்தம் என்று விளங்குவோம். இது போன்று முடிச்சுகளில் ஊதக்கூடியவர்கள் என்றால் அங்குள்ள முடிச்சையும் நேரடிப் பொருளில் விளங்கக் கூடாது என்று கூறுகின்றனர்.

மேலுள்ள வசனத்தில் உக்தத் என்ற சொல்லுக்கு முடிச்சு என்று நாம் பொருள் கொள்ள மாட்டோம். ஏனென்றால், அந்த வசனத்திலேயே திருமணம் என்று அல்லாஹ் கூறுவதால் இது திருமண ஒப்பந்தத்தைப் பற்றி பேசுகிறது என்று பளிச்சென்று புரிந்துகொள்வோம். மேலும் உக்தத் என்ற சொல்லுக்கு ஒப்பந்தம் என்ற அர்த்தம் இருப்பதை அரபு அகராதி நூல்களிலும் குர்ஆனிலும் தெளிவாக அறியலாம்.

*எனவேதான், இந்த வசனம் ஒப்பந்தம் அல்லாத வேறு ஒரு முடிச்சைப் பற்றி பேசுகிறது என்று இஸ்லாமிய அறிஞர்கள் யாரும் கூறவில்லை. இதில் யாருக்கும் கருத்துவேறுபாடு எழவில்லை. ஆனால், முடிச்சுகளில் ஊதக் கூடியவர்கள் என்றால் அது கோள் சொல்பவர்களைக் குறிக்கும் என அல்லாஹ் அந்த வசனத்திலோ அல்லது வேறு ஏதாவது வசனத்திலோ விளக்கினானா? அல்லது நபி(ஸல்) இவ்வாறு விளக்கினார்களா? இதற்கு இவர்களின் சுய விளக்கத்தைத் தவிர வேறு எந்த ஆதாரமும் இல்லை.*

*மேலும் முடிச்சு என்பதை நேரடிப் பொருளில் விளங்கக் கூடாது என்பதற்கு பின்வரும் வசனத்தையும் காட்டுகின்றனர்.*

*என் இறைவா! என் உள்ளத்தை எனக்காக விரிவுபடுத்துவாயாக. என் காரியத்தை எனக்கு இலகுவாக்குவாயாக. என்* ***நாவிலுள்ள முடிச்சை*** *அவிழ்ப்பாயாக. (அப்போது தான்) அவர்கள் என் சொல்லைப் புரிவார்கள்.* ***அல்குர்ஆன் 20:28***

*நாவிலுள்ள முடிச்சு என்றால் மூஸா(அலை) அவர்களின் நாவில் முடிச்சு இருந்தது என்று புரிந்துகொள்வோமா? எனவே, இங்கே முடிச்சு என்றால் சிக்கல் என்று பொருள் எனக் கூறுகின்றனர்.*

*இங்கே முடிச்சு என்ற சொல் சிக்கல் என்ற அர்த்தத்தில்தான் பயன்படுத்தப்பட்டுள்ளது என்பதை நாம் மறுக்கவில்லை. இது தான் அர்த்தம் என்பதை இந்த வசனத்தை பார்க்கும் அனைவரும் அறிவார்கள். இதற்கு யாருடைய விளக்கமும் தேவையுமில்லை. அப்போதுதான் என் சொல்லை அவர்கள் புரிவார்கள் என மூஸா (அலை) கூறும் அடுத்த வாசகம் இதை விளக்கிவிடுகிறது.*

*மேலும், குர்ஆனில் வெவ்வேறு இடங்களில் மூஸா(அலை) அவர்களுக்கு தெளிவாகப் பேச முடியாத பிரச்னை இருந்தது என்பதை அல்லாஹ்வே விளக்கிவிடுகிறான். எனவே, இங்குள்ள முடிச்சு என்பது நாவிலுள்ள முடிச்சு என்று யாரும் கூறவில்லை. ஆனால், முடிச்சுகளில் ஊதக் கூடியவர்கள் என்றால் கோள் சொல்பவர்கள் என்று அர்த்தம் என்று புரிவதற்கு என்ன வழி இருக்கிறது? இவ்வாறு விளங்குவதற்கு குறித்த வசனத்தில் அல்லது வேறு வனங்களில் என்ன ஆதாரம் உள்ளது?*

*சூனியக்காரன் முடிச்சுகளில் ஊதி மட்டும் சூனியம் செய்யவில்லை. இன்னும் பல காரியங்களையும் செய்கிறான். அப்படியிருக்க முடிச்சுகளில் ஊதக் கூடியவர்களின் தீங்கை விட்டும் என்று அல்லாஹ் கூறுவானா? என்று எதிர் கேள்வி கேட்கின்றனர். மேலும்*

முடிச்சுகளில் ஊதும் பெண்களின் தீங்கை விட்டும் என்றால் ஆண்கள் செய்யும் சூனியத்திலிருந்து பாதுகாப்பில்லையே என்றும் கேட்கின்றனர்.

தேவையில்லாமல் சில எதிர்கேள்விகள் கேட்டு அதையே தங்களுக்கு ஆதாரமாக ஆக்கி வசனத்தின் பொருளை மாற்றி வசனத்தில் சுய விளக்கத்தை புகுத்த முயற்சிக்கிறார்கள். சூனியம் குறித்து அல்லாஹ் என்ன விளக்கம் தருகிறானோ அதைத்தான் நாம் சூனியம் என்று நம்ப முடியும். சூனியக்காரன் சொல்லும் சொல்லையோ அவன் செய்யும் செயலையோ வைத்து சூனியத்தை நாம் புரியக் கூடாது.

எனவே, சூனியம் என்றால் அதில் முடிச்சுகளில் ஊதும் செயல் இருக்கும் என்பதோடு நிறுத்திக்கொள்ள வேண்டும். ஹராம் என்று தடுக்கப்பட்ட சூனியத்திற்குள் புகுந்து குப்பையைக் கிளறும் வேலையைச் செய்யக் கூடாது. முடிச்சுகளில் ஊதும் பெண்கள் என்று சிலர் மொழிபெயர்க்கின்றனர். முடிச்சுகளில் ஊதும் தீயவர்கள் என்றும் சில அறிஞர்கள் மொழிபெயர்க்கின்றனர். இரண்டில் எவ்வாறு மொழிபெயர்த்தாலும் அது தவறில்லை.

முடிச்சுகளில் ஊதும் பெண்கள் என்ற வாசகம் பெரும்பாலும் சூனியத்தில் பெண்களே அதிகம் ஈடுபடுவார்கள் என்பதால் பெரும் பான்மையை கவனத்தில் கொண்டு பெண்கள் என்று கூறப் பட்டுள்ளது. ஆணா பெண்ணா என்பது இங்கு முக்கியமல்ல. தீங்கிலிருந்து பாதுகாப்புத் தேடுவதுதான் நோக்கம் என்பதை நல்ல முறையில் புரிந்துகொள்ளலாம். முடிச்சுகளில் ஊதும் தீயவர்கள் என்று மொழிபெயர்த்தால் அப்போது ஆண் சூனியக் காரர்களின் தீங்கிலிருந்து பாதுகாப்பில்லையே என்று கேட்பதற்கு எந்த முகாந்திரமும் இருக்காது.

இறைத்தூதர்(ஸல்) நோயுற்றபோது ஜிப்ரீல்(அலை) இறைத் தூதர்(ஸல்) அவர்களுக்கு பின்வருமாறு ஓதிப்பார்த்தார்கள்.

**4055** حَدَّثَنَا مُحَمَّدُ بْنُ أَبِي عُمَرَ الْمَكِّيُّ حَدَّثَنَا عَبْدُ الْعَزِيزِ الدَّرَاوَرْدِيُّ عَنْ يَزِيدَ وَهُوَ ابْنُ عَبْدِ اللَّهِ بْنِ أُسَامَةَ بْنِ الْهَادِ عَنْ مُحَمَّدِ بْنِ إِبْرَاهِيمَ عَنْ أَبِي سَلَمَةَ بْنِ عَبْدِ الرَّحْمَنِ عَنْ عَائِشَةَ زَوْجِ النَّبِيِّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ أَنَّهَا قَالَتْ كَانَ إِذَا اشْتَكَى رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ رَقَاهُ جِبْرِيلُ قَالَ بِاسْمِ اللَّهِ يُبْرِيكَ وَمِنْ كُلِّ دَاءٍ يَشْفِيكَ وَمِنْ شَرِّ حَاسِدٍ إِذَا حَسَدَ وَشَرِّ كُلِّ ذِي عَيْنٍ رواه مسلم

*இறைத்தூதர்(ஸல்) நோய்வாய்ப்பட்டால் அவர்களுக்கு (வானவர்) ஜிப்ரீல்(அலை), "பிஸ்மில்லாஹி யுப்ரீக்க, வ மின் குல்லி தாயின் யஷ்ஃபீக்க, வ மின் ஷர்ரி ஹாசிதின் இதா ஹசத, வ ஷர்ரி குல்லி தீ அய்னின்" என ஓதிப்பார்த்தார்கள்.*

*(பொருள்: அல்லாஹ்வின் பெயரால் (ஓதிப் பார்க்கிறேன்). அவன் உங்களுக்கு குணமளிப்பானாக! அனைத்து நோயிலிருந்தும் உங்களுக்குச் சுகமளிப்பானாக. பொறாமைக்காரன் பொறாமைப் படும்போது ஏற்படும் தீமையிலிருந்தும் கண்ணேறு உள்ள ஒவ்வொருவரின் தீமையிலிருந்தும் (காப்பானாக!).*

***அறிவித்தவர்: இறைத்தூதர்(ஸல்) அவர்களின் மனைவி ஆயிஷா(ரலி), நூல்: முஸ்லிம் 4402***

*ஹதீஸ் மறுப்பாளர்கள் இதுவரை இந்த ஹதீஸை மறுக்க வில்லை! இதை நன்கு சிந்தித்துப்பாருங்கள். ஃபலக் சூராவிற்கும் இந்த ஹதீஸிற்கும் உள்ள தொடர்பை அறியலாம். பொறாமைக்காரன் பொறாமை கொள்ளும்போது தீங்கு ஏற்படும் என்றும் இந்தத் தீங்கு உடலைப் பாதிக்கும் தீங்கு என்றும் இந்த ஹதீஸ் கூறுகிறது. எனவேதான், இறைத்தூதர்(ஸல்) நோய்வாய்ப்பட்டபோது ஜிப்ரீல் (அலை) இந்தத் தீங்கைக் குறிப்பிட்டு ஓதிப்பார்க்கிறார்கள். நம் கண்களுக்கு புலப்படாத மறைமுகமான இந்தத் தீங்கு குறித்தே ஃபலக் அத்தியாயத்திலும் அல்லாஹ் கூறுகிறான். ஃபலக் அத்தி யாயத்தில் கூறப்படும் பொறாமைக்காரன் பொறாமை கொள்ளும் போது ஏற்படும் தீங்கு எது என்பதை இந்த ஹதீஸ் தெளிவுபடுத்தி விட்டது.*

*பொறாமைக்காரன் பொறாமை கொள்ளும்போது ஏற்படும் தீங்கு என்பது கண்ணேறு என்று நபிமொழி விளக்கம் தருகிறது. அப்படியானால் இத்துடன் சேர்த்து கூறப்படும் முடிச்சுகளில் ஊதக் கூடியவர்களின் தீங்கு என்பதும் கண்ணேறு போன்று மறைமுகமான தீங்காக உள்ள சூனியமாகவே இருக்கிறது.*

## ஷைத்தான் போடும் முடிச்சு

*"உங்களில் ஒருவர் உறங்கும்போது உங்கள் தலையின் பின் பக்கத்தில் ஷைத்தான் மூன்று முடிச்சுகளைப் போடுகிறான். ஒவ்வொரு முடிச்சின்போதும் "இன்னும் உனக்கு நீண்ட இரவு இருக்கிறது. ஆகவே, நீ உறங்கு' எனக் கூறுகிறான். நீங்கள் கண்*

*விழித்து அல்லாஹ்வை நினைவு கூர்ந்தால் ஒரு முடிச்சு அவிழ்ந்து விடுகிறது. நீங்கள் உளூ செய்தால் மற்றொரு முடிச்சு அவிழ்ந்து விடுகிறது. நீங்கள் தொழுது விட்டால் முடிச்சுகள் முழுவதும் அவிழ்ந்துவிடுகின்றன. நீங்கள் சுறுசுறுப்புடனும் உற்சாகத்துடனும் காலைப் பொழுதை அடைவீர்கள். இல்லையெனில் மனக்குழப் பத்துடனும், சோம்பலுடனும் காலைப் பொழுதை அடைவீர்கள்" என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*

***அறிவித்தவர்: அபூ ஹுரைரா(ரலி), நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 1142***

*நாம் தூங்கும்போது ஷைத்தான் பிடரியில் மூன்று முடிச்சு களைப் போடுகிறான் என்று ஹதீஸில் வருகிறது. நம் பிடரியைத் தடவிப் பார்த்தால் முடிச்சு தெரியுமா? எனவே, இங்கும் முடிச்சு என்பதற்கு அதன் நேரடிப் பொருள் அல்ல. சூழ்ச்சி என்று அர்த்தம் என வாதிடுகிறார்கள்.*

*சூனியம் விஷயத்தில் இவர்களின் நிலைபாட்டை தகர்த்து எறியும் இந்த ஹதீஸை இவர்கள் தங்களுக்கு ஆதாரமாகக் காட்டு வதுதான் ஆச்சரியமாக உள்ளது. ஷைத்தான் நம் பிடரியில் முடிச்சு போடுகிறான் என ஹதீஸ் கூறவில்லை.*

*தலைக்கு அருகில் உள்ள ஒரு கயிற்றில் முடிச்சு போடுகிறான் என்றே ஹதீஸ் கூறுகிறது. இதை பின்வரும் அறிவிப்பில் தெளிவாக அறியலாம்.*

*"இரவில் உங்கள் தலையின் பின்புறத்திற்கு அருகில் ஒரு கயிற்றில் ஷைத்தான் மூன்று முடிச்சுகளைப் போடுகிறான்" என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*

***அறிவித்தவர்: அபூ ஹுரைரா(ரலி), நூல்: இப்னு மாஜா 1319***

*ஷைத்தானை நாம் கண்களால் பார்க்க முடியாது. அவன் வைத்திருக்கும் கயிறையும் அதில் அவன் போடும் முடிச்சுகளையும் எப்படி பார்க்க முடியும்? இந்த ஹதீஸில் முடிச்சு என்றால் முடிச்சு தான். அதன் நேரடிப் பொருளிலேயே புரிய வேண்டும்.*

*ஷைத்தான் போட்ட முடிச்சு அவிழாவிட்டால் மனிதனுக்கு சோம்பலும் மனக்குழப்பமும் ஏற்படும் என்று இறைத்தூதர்(ஸல்) கூறுகிறார்கள். அப்படியானால் தீயவர்கள் போடும் முடிச்சுகளால் தீங்கு ஏற்படும் என்று அல்லாஹ் வசனத்தில் கூறும் கருத்துடன் இந்த ஹதீஸ் ஒத்துப்போகிறது. முடிச்சு போடுவதால் மனிதனுக்கு இந்த பாதிப்புகள் எப்படி ஏற்படும்? இது அல்லாஹ்வின் ஆற்றல்*

ஷைத்தானுக்கு உள்ளது போன்ற கருத்தைத் தருகிறது. எனவே, இது குர்ஆனுக்கு முரணான ஹதீஸ் என்று கூறி இதையும் மறுப்பார்களா?

ஷைத்தான் தீய எண்ணத்தை மட்டுமே ஏற்படுத்த முடியும். அவ்வாறிருக்க சோம்பலையும் மனக்குழப்பத்தையும் எப்படி ஏற்படுத்துவான்? எனவே, இது குர்ஆனுக்கு முரண்படுகிறது எனக் கூறி இந்த ஹதீஸை மறுப்பார்களா? மறுத்தாலும் ஆச்சரியப் படுவதற்கில்லை. எனவே, தீயவர்கள் போடும் முடிச்சுகளில் அல்லாஹ் மறைமுகமான பாதிப்பை வைத்திருக்கிறான். அல்லாஹ்வை நெருங்குவதிலேயே இதற்கு தீர்வுள்ளது என்பதை இந்த ஹதீஸில் இறைத்தூதர்(ஸல்) தெளிவாகச் சுட்டிக் காட்டியுள்ளார்கள்.

## நபி(ஸல்) அவர்களின் அங்கீகாரம்

சூனியத்தின் மூலம் பாதிப்பு ஏற்படும் என்ற நம்பிக்கை நபிமார்களின் காலம் முதல் நீண்ட நெடுங்காலமாக மக்களிடம் இருந்து வருகிறது. இந்த நம்பிக்கை தவறானது என்று அல்லாஹ் சொல்லவில்லை. மாறாக அவனே (2:102) வது வசனத்தில் சூனியத்தால் பாதிப்பு ஏற்படும் என்று கூறி, நாம் இவ்வாறு நம்பு வதற்கு அங்கீகாரம் தருகிறான். அல்லாஹ் தன் தூதர் முஹம்மத்(ஸல்) அவர்களின் வார்த்தைகள் மூலமும் இந்த உண்மையை வெளிப் படுத்தியுள்ளான்.

இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு யூதன் ஒருவன் சூனியம் வைத்தான். இதனால் சில நாள்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு உடல் பாதிப்பு ஏற்பட்டது. பிறகு அல்லாஹ் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு நிவாரணம் வழங்கினான்.

இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு சூனியம் செய்யப்பட்டது. இதையடுத்து ஒரு செயலை செய்யாமலிருந்த நிலையில் அதை செய்து விட்டது போன்ற உணர்வு அவர்களுக்கு ஏற்பட்டது. இறைத்தூதர்(ஸல்) (ஒரு நாள்) தம் இறைவனிடம் பிரார்த்தித்த பிறகு (என்னிடம்), "(ஆயிஷா!) தெரியுமா? அல்லாஹ்விடம் நான் கேட்டுக்கொண்டிருந்த ஒரு விஷயத்தில் அவன் எனக்கு விளக்கம் அளித்துவிட்டான்" எனக் கூறினார்கள்.

"அது என்ன? இறைத்தூதர் அவர்களே!" என நான் கேட்டேன்.

என்னிடம் (கனவில் வானவர்கள்) இரண்டு பேர் வந்தனர். அவர்களில் ஒருவர் என் தலைமாட்டிலும், மற்றொருவர் என்

*கால்மாட்டிலும் அமர்ந்து கொண்டனர். அவர்களில் ஒருவர் தம் தோழரிடம்,*

*“இந்த மனிதருக்கு ஏற்பட்டுள்ள உடல் பாதிப்பு என்ன?'' எனக் கேட்டார்.*

*“இவருக்குச் சூனியம் வைக்கப்பட்டுள்ளது” என அவரின் தோழர் பதிலளித்தார்.*

*''இவருக்குச் சூனியம் வைத்தது யார்?'' என முதல் நபர் வினவினார்.*

*“லபீத் இப்னு அஃஸம்” என தோழர் பதிலளித்தார்.*

*“அவன் எதில் (சூனியம் வைத்தான்)? என அவர் கேட்டார்.*

*''சீப்பிலும், அதில் சிக்கி இருந்த முடியிலும், பேரீச்சம் பாளையின் உறையிலும்” என தோழர் பதில் அளித்தார்.*

*“அது எங்கே உள்ளது?” என அவர் கேட்டார்.*

*“தர்வானில் உள்ளது” என்றார்.*

*தர்வான்' என்பது பனூ ஸுரைக் குலத்தாரிடையே இருந்த ஒரு கிணறாகும்.*

*பிறகு இறைத்தூதர்(ஸல்) அங்கு சென்றுவிட்டு என்னிடம் வந்தார்கள்.*

*''அல்லாஹ்வின் மீது ஆணையாக! அந்தக் கிணற்றின் தண்ணீர் மருதாணிச் சாற்றைப் போன்றுள்ளது. அதன் பேரீச்சம் மரங்கள் ஷைத்தானின் தலையைப் போல் இருந்தன” எனக் குறிப்பிட்டார்கள். இறைத்தூதர்(ஸல்) வந்து என்னிடம் அக்கிணற்றைப் பற்றித் தெரிவித்தபோது,*

*“இறைத்தூதர் அவர்களே! அதைத் தாங்கள் மக்களுக்கு வெளிப் படுத்தவில்லையா?” என நான் கேட்டேன்.*

*''எனக்கோ அல்லாஹ் நிவாரணம் அளித்துவிட்டான்; மக்களிடையே குழப்பத்தைக் கிளப்பிவிடுவதை நான் வெறுத்தேன்” என்றார்கள்.*

*ஆயிஷா(ரலி) அவர்களிடமிருந்து உர்வா இப்னு ஸுபைர் (ரஹ்) அவர்கள் வழியாக வரும் ஓர் அறிவிப்பில்,*

*“இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்குச் சூனியம் செய்யப்பட்டது; இறைத்தூதர்(ஸல்) பிரார்த்தித்தார்கள்; பிரார்த்தித்தார்கள்.*

*(திரும்பத் திரும்பப் பிரார்த்தித்தார்கள்)" என கூடுதலாக இடம் பெற்றுள்ளது.*

***அறிவித்தவர்: ஆயிஷா(ரலி), நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 6391***

*சூனியத்தால் பாதிப்பு ஏற்படாது என்று கூறுபவர்கள் 2:102 வது வசனத்தின் கருத்தை மாற்றி சுயவிளக்கம் கொடுத்தார்கள். இது போன்று மேற்கண்ட ஆதாரப்பூர்வமான செய்திக்கு இவர்களால் சுயவிளக்கம் கொடுக்க முடியாது. ஏனென்றால், இச்செய்தி சூனியத்தால் பாதிப்பு ஏற்படும் என்று மிகத் தெளிவாக கூறுகிறது. இங்கே எந்த விளக்கமும் எடுபடாது என்பதால் இந்த ஹதீஸ் குர்ஆனுக்கு முரண்படுகிறது எனக் கூறி இதையும் மறுக்கின்றனர்.*

*மக்கள் இந்த நபிமொழியை நம்பாமல் இருப்பதற்காக தன்னால் முடிந்த அளவு எப்படியெல்லாம் இதில் சந்தேகத்தை ஏற்படுத்த முடியுமோ அவ்வளவு முயற்சியையும் செய்கிறார்கள். இந்த விமர்சனங்களுக்குள் செல்வதற்கு முன்னால் இந்த நபிமொழி எப்படிப்பட்ட அறிவிப்பாளர்கள் வழியாக வந்துள்ளது என்ற உண்மையை அறிந்துகொள்ள வேண்டும்.*

1. *ஆயிஷா(ரலி)*
2. *உர்வா இப்னு ஸுபைர்*
3. *ஹிஷாம் இப்னு உர்வா*

   *ஹிஷாம் இப்னு உர்வாவிடமிருந்து இந்த ஹதீஸை கிட்டத்தட்ட 14 நம்பகமான உறுதியான ஆட்கள் அறிவிக்கிறார்கள். அவர்கள்*

1. *யஹ்யா இப்னு சயீத் அல்கத்தான் (பஸரீ)*
2. *ஈஸா இப்னு யூனுஸ் (கூஃபீ)*
3. *இப்னு ஜுரைஜ் (மக்கீ)*
4. *சுஃப்யான் இப்னு உஐனா (கூஃபீ)*
5. *அனஸ் இப்னு இயாள் (மதனீ)*
6. *அப்துல்லாஹ் இப்னு நுமைர் (கூஃபீ)*
7. *அபூ உசாமா (கூஃபீ)*
8. *மஃமர் இப்னு ராஷித் (யமனீ)*
9. *உஹைப் இப்னு காலித் (பஸரீ)*
10. *அப்துர் ரஹ்மான் இப்னு அபிஸ் ஸனாத் (மதனீ)*
11. *லைஸ் இப்னு சஅத் (மிஸ்ரீ)*

12. மர்ஜா இப்னு ரஜா (பஸரீ)

13. ஹம்மாத் இப்னு சலமா (பஸரீ)

14. அலீ இப்னு முஸ்ஹிர் (கூஃபீ)

ஆயிஷா(ரலி) பொய் சொல்லமாட்டார்கள் என்பதில் யாருக்கும் மாற்றுக்கருத்து இருக்க முடியாது. ஆயிஷா(ரலி) அவர்களின் சகோதரி அஸ்மா(ரலி) அவர்களின் மகன்தான் உர்வா ஆவார். அதாவது உர்வா தன் சிற்றன்னையிடமிருந்து இந்த ஹதீஸை அறிவிக்கிறார். ஹிஷாம் தன் தந்தை உருவாவிடமிருந்து இதை அறிவிக்கிறார்.

உர்வா ஹிஷாம் இந்த இரண்டு அறிவிப்பாளர்களும் ஆயிஷா(ரலி) அவர்களுக்கு இரத்த பந்த உறவினர்களாவார்கள். இவ்விருவரும் ஆயிரக்கணக்கான ஹதீஸ்களை அறிவித்து ஹதீஸ் துறையில் பெரிய இமாமாகவும் மார்க்க விஷயங்களை நன்கு கற்றறிந்த அறிஞர்களாகவும் வாழ்ந்த நல்லவர்கள். இவர்களில் யாரையாவது நிராகரித்தால் ஆயிரக்கணக்கான ஹதீஸ்களை நிராகரிக்க வேண்டிவரும். இப்படிப்பட்ட தலைசிறந்த நம்பகமான உறுதியான உலகத்திற்கு நன்கு பிரபல்யமான ஆட்கள் வழியாகவே இந்த ஹதீஸ் வந்துள்ளது.

ஹிஷாமிடமிருந்து வெவ்வேறு நாட்டைச் சார்ந்த 14 நம்பக மானவர்கள் அறிவிப்பதால் ஹிஷாம் இந்த ஹதீஸை அறிவித்தார் என்பதில் எள்ளளவு கூட சந்தேகம் கொள்ள முடியாது. ஹிஷாம் அல்லாத வேறு யாரோ இட்டுக்கட்டி இருப்பார்கள் என்று யூகம் செய்யவும் முடியாது. அப்படியானால் இந்த சம்பவத்தை இட்டுக் கட்டியது யார்?

ஆயிஷா(ரலி) இட்டுக்கட்டினார்களா? உர்வா இட்டுக் கட்டினாரா? ஹிஷாம் இட்டுக்கட்டினாரா?

இந்த ஹதீஸை மறுப்பவர்கள் இந்த மூவரில் ஒருவரைத்தான் குறிப்பிட வேண்டும். இவர்களில் யாரைச் சொன்னாலும் இதைத் தொடர்ந்து ஆயிரக்கணக்கான ஹதீஸ்களை நிராகரிக்க வேண்டும். எனவேதான், இந்த ஹதீஸை மறுப்பவர்கள் நாம் கேட்கும் அறிவுப்பூர்வமான இந்த கேள்விக்கு பதிலளிக்காமல் யாரோ ஏதோ தவறுசெய்துவிட்டார்கள் என்று கண்மூடித்தனமாக கூறு கின்றனர். ஆனால், சிந்திக்கிற மக்களுக்கு உண்மை வெளிச்சம் போல் வெளிப்படும்.

## பைத்தியம் யாருக்கு?

இச்செய்தி சூனியத்தால் இறைத்தூதர்(ஸல்) பைத்திய மானர்கள் எனக் கூறுகிறது. இறைத்தூதர்(ஸல்) பைத்தியமில்லை என்று அல்லாஹ் கூறுகிறான். எனவே, இதை ஏற்க முடியாது என்று கூறுகின்றனர்.

ஹதீஸில் இல்லாததை இருப்பதாகச் சொல்லும் இவர்களுக்குத் தான் பைத்தியம் என்றால் மிகையாகாது. ஒட்டுமொத்த ஹதீஸையும் கவனித்து முறைப்படி விளங்காமல் ஹதீஸில் வரும் ஏதாவது ஒரு வாசகத்தை பிடித்துக்கொண்டு அநாகரீகமாக சித்தரிப்பதே இவர்களுக்கு வேலையாகிவிட்டது.

இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு சூனியம் செய்யப்பட்டதாகக் கூறும் இந்த ஹதீஸில் வானவர்களின் சொல், இறைத்தூதர்(ஸல்) அவர்களின் சொல், ஆயிஷா(ரலி) அவர்களின் சொல் என மூவரின் கூற்றுக்கள் அடங்கியுள்ளன. ஹதீஸ் மறுப்பாளர்கள் இந்த ஹதீஸை மறுப்பதற்கு இங்கே வானவரின் சொல்லையோ இறைத்தூதர்(ஸல்) அவர்களின் சொல்லையோ விமர்சிப்பதில்லை. மூடலாக அன்னை ஆயிஷா(ரலி) கூறிய ஒரு வாசகத்தையே பிடித்துக்கொண்டு முழு ஹதீஸையும் மறுக்கின்றனர்.

இந்த நீண்ட ஹதீஸில் ஒரு செயலை செய்யாமல் இருந்த நிலையில் அதை செய்துவிட்டது போன்ற உணர்வு இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு ஏற்பட்டது என்ற ஆயிஷா(ரலி) அவர்களின் சொல்லைப் பிடித்துக் கொண்டு ஒட்டுமொத்த ஹதீஸையும் நிராகரிக்கின்றனர். ஆயிஷா(ரலி) எதை சொல்ல வருகிறார்கள் என்பதை பின்னர் விளக்குவோம். இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு சூனியம் செய்யப்பட்ட பிறகு அவர்கள் பைத்தியமாகவில்லை. சுய நினைவோடுதான் இருந்தார்கள். அவர்களுக்கு உடல் பாதிப்பே ஏற்பட்டது என இந்த ஹதீஸ் தெள்ளத் தெளிவாகக் கூறுகிறது. இதை முதலில் அறிவோம்.

சூனியத்தால் தமக்கு ஏற்பட்ட பாதிப்பை இறைத்தூதர்(ஸல்) தானே உணரக் கூடியவர்களாக இருந்தார்கள். இந்த பாதிப்பை வேறு ஒருவர் சுட்டிக்காட்டி அதன் மூலம் நபியவர்கள் அறிய வில்லை. மேற்கண்ட ஹதீஸில் இது தெளிவாக உள்ளது.

பைத்தியம் பிடித்தவர் தனக்கு பைத்தியம் பிடித்திருக்கிறது என்பதை அறியமாட்டார். மற்றவர்கள் சொன்னாலும் அதை

ஏற்றுக் கொள்ளமாட்டார். ஆனால், தமக்கு ஏற்பட்டுள்ள பாதிப்பு இதுதான் என்பதை ஒருவர்தானே தெளிவாக உணர்ந்து கொண்டால் அவர் நிச்சயமாக முழு தெளிவான மனநிலையில் இருக்கிறார் என்றுதான் அறிவுள்ளவர்கள் முடிவு செய்வார்கள். சூனியத்தின் மூலம் பாதிப்பிற்குள்ளான இறைத்தூதர்(ஸல்) அவர்களும் இந்த தெளிவான மனநிலையில்தான் இருந்தார்கள். இது முதலில் கவனிக்க வேண்டிய விஷயம்.

நல்ல மனநிலையில் உள்ள ஒரு முஃமின் தனக்கு துன்பம் ஏற்பட்டால் அல்லாஹ்விடம் நெருங்கி தன் பிரச்னையை முறையிடுவான். அறிவிலும் மார்க்கத்திலும் தெளிவாக இருப்பவர்கள் இவ்வாறு செய்வார்கள். இந்த சம்பவத்தில் இறைத்தூதர்(ஸல்) அவர்களும் இதைத்தான் செய்கிறார்கள். தமக்கு ஏற்பட்டுள்ள பாதிப்பை அல்லாஹ்விடம் முறையிட்டு பலமுறை தொடர்ந்து பிரார்த்தனை செய்கிறார்கள். மனநிலை பாதிக்கப்பட்டவரிடம் இதைக் காண முடியாது. இது சிந்திக்க வேண்டிய இரண்டாவது விஷயம்.

இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு கனவில் இரண்டு வானவர்கள் வந்து உண்மை நிலவரத்தை எடுத்துச்சொல்கிறார்கள். இந்த கனவை அடிப்படையாகக் கொண்டு அடுத்தகட்ட நடவடிக்கைகளில் இறைத்தூதர்(ஸல்) ஈடுபடுகிறார்கள். இதன் பின் நிவாரணமும் கிடைக்கிறது.

இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு சூனியம் செய்யப்பட்டு அவர்கள் பாதிக்கப்பட்ட நிலையில்தான் அவர்களுக்கு கனவில் வஹீ வருகிறது. இந்த வஹீ விஷயத்தில் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு எந்த குழப்பமும் ஏற்படவில்லை. சூனியத்தின் பாதிப்பு இருக்கும்போதே தெளிவான மனநிலையோடு வஹீயை செயல்படுத்துகிறார்கள். பாதிக்கப்பட்ட நிலையிலும் தூதுப்பணியை நபி சிறப்பாக செயலாற்றினார்கள். எனவே, இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு பைத்தியம் ஏற்பட்டதாகக் கூறுவது முழுமுட்டாள்தனமாகும். இது சிந்திக்க வேண்டிய மூன்றாவது முக்கியமான விஷயம்.

மொத்தத்தில் இவர்கள் நபி(ஸல்) அவர்களுக்கு பைத்தியப் பட்டம் கட்டத் துணிந்துவிட்டார்கள்; முஸ்லிம் சமுதாயம் இதை வேடிக்கை பார்த்துக் கொண்டு இருக்காது என்பதை விரைவில் இறைவன் புரியவைப்பான்.

## வானவர்களின் வாக்குமூலம்

*இறைத்தூதர்(ஸல்) அவர்களின் கனவில் மனிதத் தோற்றத்தில் வந்த வானவர்கள் கூறிய தகவலை நாம் சிந்தித்துப் பார்த்தால் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு சூனியத்தின் மூலம் ஏற்பட்ட பாதிப்பு உடல் பாதிப்புதான் என்பதை சந்தேகமற அறியலாம்.*

**مَا وَجَعُ الرَّجُلِ** *இந்த மனிதருக்கு ஏற்பட்ட உடல் பாதிப்பு என்ன?*

*உடல் பாதிப்பு என்று நாம் மொழிபெயர்த்துள்ள இடத்தில்* **வஜ்வு** *என்ற அரபுச் சொல் இடம்பெற்றுள்ளது. இது உடல் பாதிப்பையே குறிக்கிறது. இந்த ஹதீஸை மறுத்திருக்கும் பீஜேவும் இந்த உண்மையை ஏற்றுள்ளார். வஜ்வு என்ற சொல் உடல் பாதிப்பையே குறிக்கும் என்பதை இவர் மறுக்கவில்லை.*

*உதாரணமாகப் பின்வரும் ஹதீஸ்களில் இந்தச் சொல் உடல் நோயைக் குறிக்க பயன்படுத்தப்பட்டுள்ளது.*

**190بَاب حَدَّثَنَا عَبْدُ الرَّحْمَنِ بْنُ يُونُسَ قَالَ حَدَّثَنَا حَاتِمُ بْنُ إِسْمَاعِيلَ عَنْ الْجَعْدِ قَالَ سَمِعْتُ السَّائِبَ بْنَ يَزِيدَ يَقُولُ ذَهَبَتْ بِي خَالَتِي إِلَى النَّبِيِّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ فَقَالَتْ يَا رَسُولَ اللَّهِ إِنَّ ابْنَ أُخْتِي وَجِعٌ فَمَسَحَ رَأْسِي وَدَعَا لِي بِالْبَرَكَةِ ثُمَّ تَوَضَّأَ فَشَرِبْتُ مِنْ وَضُوئِهِ ثُمَّ قُمْتُ خَلْفَ ظَهْرِهِ فَنَظَرْتُ إِلَى خَاتَمِ النُّبُوَّةِ بَيْنَ كَتِفَيْهِ مِثْلَ زِرِّ الْحَجَلَةِ رواه البخاري**

*என் சிறிய தாயார் என்னை இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் அழைத்துச் சென்று “இறைத்தூதர் அவர்களே! என் சகோதரி மகன் உடல் நிலை சரியின்றி உள்ளான்” எனக் கூறினார்கள்.*

***அறிவித்தவர்: சாயிப் இப்னு யஸீத்(ரலி),***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 190***

**114حَدَّثَنَا يَحْيَى بْنُ سُلَيْمَانَ قَالَ حَدَّثَنِي ابْنُ وَهْبٍ قَالَ أَخْبَرَنِي يُونُسُ عَنْ ابْنِ شِهَابٍ عَنْ عُبَيْدِ اللَّهِ بْنِ عَبْدِ اللَّهِ عَنْ ابْنِ عَبَّاسٍ قَالَ لَمَّا اشْتَدَّ بِالنَّبِيِّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ وَجَعُهُ قَالَ ائْتُونِي بِكِتَابٍ أَكْتُبْ لَكُمْ رواه البخاري**

*இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு (மரண தருவாயில்)* **வேதனை கடுமையானபோது,**

*“என்னிடம் ஓர் ஏடு கொண்டு வாருங்கள். உங்களுக்கு நான் ஒரு மடலை எழுதித் தருகிறேன். அதன் பிறகு நீங்கள் வழிதவறவே*

*மாட்டேர்கள்" என அவர்கள் கூறினார்கள்.*

***அறிவித்தவர்: இப்னு அப்பாஸ்(ரலி), நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 114***

**1296حَدَّثَنَا عَبْدُ اللَّهِ بْنُ يُوسُفَ أَخْبَرَنَا مَالِكٌ عَنْ ابْنِ شِهَابٍ عَنْ عَامِرِ بْنِ سَعْدِ بْـــنِ أَبِـــي وَقَّاصٍ عَنْ أَبِيهِ رَضِيَ اللَّهُ عَنْهُ قَالَ كَانَ رَسُولُ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ يَعُودُنِي عَامَ حَجَّةِ الْوَدَاعِ مِنْ وَجَعٍ اشْتَدَّ بِي فَقُلْتُ إِنِّي قَدْ بَلَغَ بِي مِنْ الْوَجَعِ وَأَنَا ذُو مَالٍ وَلَا يَرِثُنِي إِلَّـــا ابْنَـــةٌ**

**رواه البخاري**

*"விடைபெறும்' ஹஜ்ஜின்போது* ***கடும் நோயினால்*** *பாதிக்கப் பட்டிருந்த என்னை நலம் விசாரிக்க வரும் வழக்கம் உடையவர்களாக இறைத்தூதர்(ஸல்) இருந்தார்கள்.*

***அறிவித்தவர்: சஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி),***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 1296***

*எனவே, இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு சூனியத்தின் மூலம் ஏற்பட்ட பாதிப்பு உடல் சம்பந்தப்பட்டது என்பதைத்தான் வானவர்களின் கூற்றிலிருந்தும், இறைத்தூதர்(ஸல்) அவர்களின் சொல்லில் இருந்தும் அறிய முடிகிறது. இங்கே மனநிலைப் பாதிப்பு ஏற்பட்டிருக்குமோ எனச் சந்தேகப்படுவதற்கு எந்த முகாந்திரமும் இல்லை. இந்த அடிப்படையில் விளங்கினால் ஹதீஸை மறுப்பதற்கு எந்த காரணத்தையும் கூற முடியாது.*

## *முழு ஹதீஸையும் நிராகரிக்கலாமா?*

*இறைத்தூதர்(ஸல்) தம் மனைவியிடம் சேராமலிருந்த நிலையில் சேர்ந்தது போன்ற உணர்வு அவர்களுக்கு வரும் என்று ஆயிஷா(ரலி) கூறியதைக் கொண்டே இந்த முழு ஹதீஸையும் மறுக்கின்றனர். எனவே, இது தொடர்பான விளக்கத்தை இனி அறிந்து கொள்வோம்.*

*இவர்கள் ஆதாரப்பூர்வமான ஹதீஸ்களை மறுக்கும்போது வித்தியாசமான ஒரு முறையை கடைபிடிக்கிறார்கள். ஒரு நீண்ட ஹதீஸில் ஒரு வாக்கியம் மட்டும் பிரச்னையாக இருந்தால் அல்லது இவர்களின் வாதப்படி அந்த வாக்கியம் மட்டும் குர்ஆனுக்கு முரணாக இருந்தால் அந்த வாக்கியத்தை மட்டும் விட்டுவிட வேண்டும். அந்த ஹதீஸின் மீதமுள்ள பகுதிகளை ஏற்று அதனை ஆதாரமாக சுட்டிக்காட்டலாம் என்று கூறுகின்றனர்.*

*உதாரணமாக உம்மு ஹராம்(ரலி) இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு பேன் பார்த்துவிட்ட ஹதீஸ் சூனியம் ஹதீஸைப்*

*போன்று நீண்ட செய்தியாகும். இதில் பேன் பார்த்த தகவலை மட்டுமே இவர்கள் மறுக்கின்றனர். மீதமுள்ள விஷயங்களை ஆதாரமாக ஏற்றுக்கொள்கின்றனர். குர்ஆனுக்கு முரண்படுகிறது எனக் கூறி நீங்கள் மறுத்துள்ள உம்மு ஹராம் தொடர்பான ஹதீஸை நீங்கள் எப்படி ஏகத்துவம் மாத இதழில் ஆதாரம் காட்டலாம்? என்று இவர்களிடம் கேள்வி கேட்கப்பட்டது. அதற்கு இவர்கள் பிரச்னைக்குரிய வாசகத்தை தவிர்த்து மீத முள்ள ஹதீஸ்களை ஏற்றுக்கொள்வோம் என்று பதிலளித்தனர்.*

*இவர்களின் இந்த விதியின் படி முடிவெடுத்தால் இறைத் தூதர்(ஸல்) அவர்களுக்கு சூனியம் செய்யப்பட்டதாக வரும் ஹதீஸையும் இவர்கள் ஏற்க வேண்டும். நீண்ட இந்த ஹதீஸில் இவர்களின் வாதப்படி ஆயிஷா(ரலி) கூற்றுதான் குர்ஆனுக்கு முரண்படுகிறது. எனவே, அதை விட்டுவிட்டு ஹதீஸின் மீதமுள்ள பகுதிகளை ஏற்றுக்கொள்ள வேண்டுமல்லவா?*

*மீதமுள்ள முழுச் செய்தியும் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு உடல்பாதிப்பு ஏற்பட்டது. பிறகு குணமானது. அவர்கள் தெளிவான மனநிலையில் இருந்தார்கள் என்று கூறுகிறது. எனவே, இதை அவர்கள் ஏற்க வேண்டும். அப்படி ஏற்றால் சூனியத்தின் மூலம் பாதிப்பு ஏற்படும் என்ற உண்மையையும் ஏற்க வேண்டிய நிலைக்குத் தள்ளப்படுவார்கள். இவர்களின் குழப்பம் அனைத்தும் தகர்ந்து போகும். எனவே, இவ்வாறு ஒப்புக் கொள்வார்கள் என்பது சந்தேகமே.*

## *அரபுச் சொல் அறியா அறிவிலிகள்*

**6391 حَدَّثَنَا إِبْرَاهِيمُ بْنُ مُنْذِرٍ حَدَّثَنَا أَنَسُ بْنُ عِيَاضٍ عَنْ هِشَامٍ عَنْ أَبِيهِ عَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا أَنَّ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ طُبَّ حَتَّى إِنَّهُ لَيُخَيَّلُ إِلَيْهِ أَنَّهُ قَدْ صَنَعَ الشَّيْءَ وَمَا صَنَعَهُ رواه البخاري**

*இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு சூனியம் செய்யப்பட்டது. இதையடுத்து ஒரு செயலை செய்யாலிருந்த நிலையில் அதை செய்தது போன்ற உணர்வு அவர்களுக்கு ஏற்பட்டது.*

***அறிவித்தார்: ஆயிஷா(ரலி), நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 6391***

*இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு ஏற்பட்ட பாதிப்பு தொடர் பாக ஆயிஷா(ரலி) கூறிய இந்த வாசகம் பல அர்த்தங்களையும் தரக் கூடிய வகையில் மூடலாக உள்ளது.*

*“இறைத்தூதர்(ஸல்) ஒரு காரியத்தை செய்யாமல் இருக்கும் போது அதை செய்ததாக நினைத்தார்கள். செய்யாத காரியத்தை செய்ததாகச் சொன்னார்கள் என்று ஹதீஸ் கூறுகிறது. பைத்தியம் ஏற்பட்டவர்தான் இப்படி சொல்வார்'' எனக் கூறி இதை மறுக்கின்றனர்.*

*இறைத்தூதர்(ஸல்) சூனியம் செய்யப்பட்ட பிறகு நல்ல மனநிலையில்தான் இருந்தார்கள் என்பதை இதே ஹதீஸிலிருந்து முன்னர் விரிவாக அறிந்துகொண்டோம். எனவே, ஹதீஸ் எதை நிராகரித்துவிட்டதோ அதை ஹதீஸில் இருப்பதாக இவர்கள் கூறுகிறார்கள் என்றால் இவர்களின் வாதத்தில் எள்ளளவு கூட உண்மை இல்லை. குழப்பம் செய்ய வருகிறார்கள் என்பதை மக்கள் புரிய வேண்டும்.*

*இறைத்தூதர்(ஸல்) தான் செய்யாதவற்றை செய்ததாகச் சொன்னார்கள் என்று இவர்கள் கூறுவது ஹதீஸில் இவர்கள் துணிந்து இட்டுக்கட்டும் வடிகட்டிய பொய்யாகும். இப்படி எந்த ஒரு வாசகமும் ஹதீஸில் இல்லை. செய்யாமல் செய்தது போன்ற உணர்வு வந்தது என்றே கூறப்பட்டுள்ளது.*

*பைத்தியத்தைக் குறிப்பதற்கு அரபியில் மஜ்னூன் என்ற சொல் உள்ளது. இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு பைத்தியம் ஏற்பட்டது (அல்லாஹ் பாதுகாக்க வேண்டும்) என்று ஆயிஷா (ரலி) சொல்வதாக இருந்தால் மஜ்னூன் என்ற சொல்லைக் குறிப் பிட்டிருப்பார்கள். ஆனால், அவர்கள் அவ்வாறு சொல்லாமல் யுகையல் (உணர்வு வந்தது) என்ற சொல்லையே பயன்படுத்தி உள்ளார்கள்.*

*அரபிகள் பைத்தியத்தை குறிப்பதற்கு இந்தச் சொல்லை பயன் படுத்தவே மாட்டார்கள். அரபுமொழி சம்பந்தப்பட்ட எந்த நூலிலும் இந்தச் சொல் பைத்தியத்தைக் குறிக்கும் என்று காட்டவே முடியாது. பின்வரும் வசனத்தில் மூஸா(அலை) விஷயத்தில் யுகய்யல் என்ற இந்த வாசகத்தை அல்லாஹ் பயன்படுத்தியுள்ளான்.*

قَالَ بَلْ أَلْقُوا فَإِذَا حِبَالُهُمْ وَعِصِيُّهُمْ يُخَيَّلُ إِلَيْهِ مِنْ سِحْرِهِمْ أَنَّهَا تَسْعَى (66) 20

*நீங்களே போடுங்கள் என்று மூஸா கூறினார். அவர்களின் சூனியத்தால் அவர்களின் கயிறுகளும் கைத்தடிகளும் ஓடுவது போன்று **மூஸாவிற்குத் தோன்றியது**. **அல்குர்ஆன் 20:66***

*இங்கே மூஸா(அலை) அவர்களுக்கு தஃக்யீல் ஏற்பட்டதால் அவர்களுக்கு பைத்தியம் ஏற்பட்டது என்று சொல்ல முடியுமா? இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு சூனியம் செய்யப்பட்டதாக கூறும் ஹதீஸில் வரும் யுகய்யல் என்ற சொல்லுக்கு* **பிரம்மையூட்டப் பட்டது** *என்று தவறாக மொழிபெயர்த்துள்ளார்கள். இது நபி மொழியை விகாரப்படுத்திக்காட்டும் முயற்சியாகும்.*

*சகோதரர் பீஜே இந்த வார்த்தைக்கு வேறு ஒரு ஹதீஸில் உணர்வு ஏற்பட்டது என சரியான பொருளைக் கொடுத்துள்ளார். இதோ அந்த ஹதீஸ்.*

**فَمَا زِلْتُ أَجِدُ بَرْدَهُ عَلَى كَبِدِي فِيمَا يُخَالُ إِلَيَّ حَتَّى السَّاعَةِ رواه البخاري**

*இறைத்தூதர்(ஸல்) தம் கையை என் நெற்றியின் மீது வைத்து, பிறகு அதை என் வயிற்றின் மீதும் என் முகத்தின் மீதும் தடவி னார்கள். பின்னர், "இறைவா! சஅதுக்குக் குணமளிப்பாயாக. அவரின் ஹிஜ்ரத்தை முழுமைப் படுத்துவாயாக" எனப் பிரார்த் தித்தார்கள். அவர்களின்(கரத்தின்) குளிர்ச்சியை என் ஈரலில் இப்போதும் நான்* **உணர்வதைப் போன்று உள்ளது.**

***அறிவித்தவர்: சஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி),***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 5659***

*ஆன்லைன் பீஜே இணையதளத்தில் இந்த ஹதீஸிற்கு இவ்வாறே மொழிபெயர்ப்பு தரப்பட்டுள்ளது.*

***http://www.onlinepj.com/buhari_thamizakam/athiyayam75/padam_75/#.VPVTodKUf1E***

*நான் உணர்வதைப் போன்றுள்ளது என நாம் மொழிபெயர்த் துள்ள இடத்தில் யுகாலு என்ற சொல் இடம்பெற்றுள்ளது. யுகாலு யுகய்யல் இரண்டும் சற்று வேறுபட்டிருந்தாலும் இரண் டிற்கும் ஒரே பொருள்தான் உள்ளது. இங்கே சஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) அவர்களுக்கு தஃக்யீல் ஏற்பட்டுள்ளதாக ஹதீஸ் கூறுகிறது. அப்படியானால் இந்த நபித்தோழர் பைத்தியமாகி விட்டார் என இவர்கள் கூறுவார்களா? நபி(ஸல்) அவரை பைத்தியமாக்கினார்களா?*

*எனவே, இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு சூனியத்தின் பாதிப்பால் தக்யீல் (உணர்வு) ஏற்பட்டது என்பதிலிருந்து இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு பைத்தியமோ மனபாதிப்போ ஏற்படவில்லை என்பதையே அறிய முடிகிறது. இனி இறைத் தூதர்(ஸல்) அவர்களுக்கு ஏற்பட்ட உணர்வு குறித்து அறிந்து கொள்வோம்.*

# பாலுறவில் ஏற்பட்ட பாதிப்பு

ஒரு செயலைச் செய்யாமலேயே செய்துவிட்ட உணர்வு இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு ஏற்பட்டது என ஆயிஷா(ரலி) கூறியுள்ளார்கள். இவ்வாறு சில அறிவிப்புகள் மூடலாக வருகிறது. செய்யாமலேயே செய்தது போன்ற உணர்வு இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு வந்தது என்றால், எந்த விஷயத்தில் இவ்வாறு ஏற்பட்டது என்ற கேள்வி இங்கே வருகிறது. இந்தக் கேள்விக்கு பின்வரும் அறிவிப்புகளில் தெளிவான விடை உள்ளது. மூடலாக வரும் அறிவிப்புகளுக்கு விளக்கமாக இந்த அறிவிப்புகள் உள்ளன.

இப்னு ஜுரைஜ், சுஃப்யான், மஃமர் ஆகிய மூவரின் அறிவிப்புக்களில் உடலுறவு விஷயத்தில் தான் இந்த பாதிப்பு இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு ஏற்பட்டது என்று குறிப்பாகவும் தெளிவாகவும் சொல்லப்பட்டுள்ளது.

இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்குச் சூனியம் செய்யப்பட்டது. அதையடுத்து அவர்கள் தம் துணைவியரிடம் செல்லாமலேயே சென்றதாக உணர்வு ஏற்பட்டது.

**அறிவித்தார்: ஆயிஷா(ரலி), ஸஹீஹ் அல் புகாரீ 5765**

தம் வீட்டாரிடம் செல்லாமலேயே சென்றதைப் போன்ற உணர்வு இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு (சூனியம் செய்யப் பட்டதால்) ஏற்பட்டது. இந்நிலை சில நாள்கள் நீடித்தது.

**அறிவித்தவர்: ஆயிஷா(ரலி), நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 6063**

இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு சூனியத்தின் மூலம் ஏற்பட்ட பாதிப்பு உடலுறவு விஷயத்தில்தான். மார்க்கத்தை எத்திவைப்பதிலோ உடலுறவு அல்லாத வேறு விஷயங்களிலோ எந்த பாதிப்பும் ஏற்படவில்லை. இதை ஹதீஸ் தெளிவாகக் கூறுகிறது. ஹதீஸில் இல்லாதவற்றை இருப்பதாகக் கூறி ஹதீஸை மறுக்க நினைப்பவர்களே இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு பைத்தியம் ஏற்பட்டது என்று இந்த ஹதீஸ் கூறுவதாக ஹதீஸை திரித்துக் கூறுகின்றனர்.

உடலுறவு சம்பந்தமாக இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு ஏற்பட்ட இந்த ஒரு பாதிப்பும்கூட மன ரீதியான பாதிப்பு அல்ல. இதுவும் உடல் ரீதியான ஒரு பாதிப்புதான். அல்லாஹ் 2:102 வது வசனத்தில் சூனியத்தின் மூலம் கணவன், மனைவிக்கிடையே

*பிரிக்க முடியும் என்று கூறியதையும் மதீனத்து மக்கள் யூதர்கள் உங்களுக்கு சூனியம் செய்துவிட்டார்கள். எனவே, உங்களுக்கு குழந்தை பிறக்காது என்று கூறியதையும் இங்கே மறுபடியும் உங்களுக்கு நினைவூட்டுகிறேன்.*

*இந்த இரண்டு தகவலும் சூனியத்தின் பாதிப்பால் கணவன் மனைவி இல்லறத்தில் ஈடுபட முடியாது என்ற கருத்தையே கொடுக்கிறது. இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு சூனியம் செய்யப்பட்டதாகக் கூறும் நபிமொழியும் இதையே கூறுகிறது. சூனியத்தின் பாதிப்பால் இறைத்தூதர்(ஸல்) அவர்களால் இல்லறத்தில் ஈடுபடமுடியவில்லை என்பதை அன்னை ஆயிஷா (ரலி) வெளிப்படையாகச் சொல்லாமல் இலைமறைக்காயாக மூடலாக இதைத் தெரிவித்துள்ளார்கள். இது ஹதீஸ் மறுப்பாளர் களுக்கு ஹதீஸை மறுப்பதற்கு ஒரு வாய்ப்பாக அமைந்துவிட்டது.*

*“இரண்டு நாள்கள் நான் சாப்பிடவில்லை. சாப்பிடாமலேயே சாப்பிட்டது போல இருக்கிறது” என சகோதரர் பீஜே கூறினால், இவர் பைத்தியமாகிவிட்டார் என நாம் கூறுவோமோ? அல்லது அவருக்கு பசி இல்லை; உணவில் நாட்டமில்லை என தம் உடல் பாதிப்பு குறித்து பேசுகிறார் என்று புரிந்துகொள்வோமா?*

*இந்த அடிப்படையில் தான் ஆயிஷா(ரலி) அவர்களும் கூறுகிறார்கள். உடலுறவு கொண்டால் களைப்பும் சோர்வும் ஏற்படும். உடலுறவில் நாட்டம் இருக்காது. இந்த நிலை உடலுறவு கொள்ளாமலேயே இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு ஏற்பட்டது. அப்படியானால் அவர்களால் இல்லறத்தில் ஈடுபடமுடியவில்லை என்பதையே ஆயிஷா(ரலி) சூசகமாக இங்கே குறிப்பிடுகிறார்கள். செய்யாமலேயே செய்தது போன்ற உணர்வு ஏற்படும்; மனைவி இடத்தில் செல்லாமலேயே சென்றது போன்ற உணர்வு ஏற்படும் என்ற ஆயிஷா(ரலி) அவர்களின் கூற்றின் அர்த்தம் இதுதான்.*

*இறைத்தூதர்(ஸல்) மனைவியிடத்தில் சேராமல் சேர்ந்ததாக நினைத்தார்கள் என்றால் கடைசி வரை அப்படியே நினைத்துக் கொண்டே இருந்திருப்பார்கள். ஆனால், தமக்கு பாதிப்பு ஏற் பட்டுள்ளது என்பதை தாமாகவே உணர்ந்து, அல்லாஹ்விடம் பிரார்த்திக்கிறார்கள். அது மட்டுமின்றி, தாம் உடலுறவு கொள்ள வில்லை என்பதை வேறு யாரும் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்குத் தெரிவிக்காமல் தாமாகவே அறிந்து கொண்டார்கள். அப்படி இருக்க உடலுறவு கொள்ளாமல் உடலுறவு கொண்டதாக அவர்கள் எப்படி நினைப்பார்கள்?*

*இறைத்தூதர்(ஸல்) ஒவ்வொரு நாளும் மக்களை பல முறை சந்திக்கும் தலைவராக இருந்தார்கள். அவர்களுக்கு மன ரீதியான பாதிப்பு ஏற்பட்டிருந்தால் நிச்சயமாக அது அன்றைக்கு இருந்த மக்கள் அனைவரிடமும் பரவியிருக்கும். ஆனால், இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு சூனியத்தால் ஏற்பட்ட பாதிப்பை ஆயிஷா(ரலி) அவர்களைத் தவிர வேறு யாரும் அறிந்திருக்கவில்லை.*

*இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு சூனியத்தால் ஏற்பட்ட பாதிப்பு அந்தரங்க விஷயம் தொடர்பானது. எனவேதான், இதை அவர்களின் மனைவி அன்னை ஆயிஷா(ரலி) அவர்களைத் தவிர வேறு யாரும் அறிவிக்கவில்லை. சூனியத்தால் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு ஏற்பட்ட உடல் பாதிப்பு அவர்களின் அழைப்புப் பணியை எந்த வகையிலும் பாதிக்கவில்லை. வெளிப்படையாக மக்கள் அறியும் வகையில் இந்த பாதிப்பு நபி(ஸல்) அவர்களுக்கு ஏற்படவில்லை என்பதை இதன் மூலம் அறிய முடிகிறது.*

## உடலுறவு கொண்டதில் சந்தேகம்

*இறைத்தூதர்(ஸல்) பைத்தியமானார்கள் என்ற கருத்திற்கு இடமே இல்லை. அதிகபட்சமாக உடலுறவு விஷயத்தில் சந்தேகம் வந்தது என்று வேண்டுமானால் கூறலாம்.*

*யுகய்யல் என்றச் சொல்லுக்கு சந்தேகம் ஏற்படுதல் என்பதே அசல் அர்த்தமாகும். அரபு அகராதி நூல்களில் இதன் பொருள் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. சந்தேகம் ஏற்படுதல் என்ற அர்த்தத்தில் பின்வரும் ஹதீஸில் இச்சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது.*

**137 حَدَّثَنَا عَلِيٌّ قَالَ حَدَّثَنَا سُفْيَانُ قَالَ حَدَّثَنَا الزُّهْرِيُّ عَنْ سَعِيدِ بْنِ الْمُسَيَّبِ ح وَعَنْ عَبَّادِ بْنِ تَمِيمٍ عَنْ عَمِّهِ أَنَّهُ شَكَا إِلَى رَسُولِ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ الرَّجُلُ الَّذِي يُخَيَّلُ إِلَيْهِ أَنَّهُ يَجِدُ الشَّيْءَ فِي الصَّلَاةِ فَقَالَ لَا يَنْفَتِلْ أَوْ لَا يَنْصَرِفْ حَتَّى يَسْمَعَ صَوْتًا أَوْ يَجِدَ رِيحًا رواه البخاري**

*“தொழும்போது காற்றுப் பிரிவது போன்ற உணர்வு ஒருவருக்கு ஏற்படுகிறது?” என நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் முறையிட்டேன்.*

*“சப்தத்தைக் கேட்காத வரை அல்லது நாற்றத்தை உணராத வரை*

(தொழுகையை விட்டும்) திரும்ப வேண்டாம்" என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.

***அறிவித்தவர்: அப்துல்லாஹ் இப்னு ஸைத் இப்னி ஆஸிம்(ரலி), நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 137***

இச்செய்தியில் உணர்வு ஏற்படுகிறது என மொழிபெயர்த் துள்ள இடத்தில் யுகய்யல் என்ற சொல்லே இடம் பெற்றுள்ளது. அப்படியானால் இந்த நபித்தோழருக்கு பைத்தியம் ஏற்பட்டது என்றுதான் சகோதரர் பீஜே கூறுவாரா? இது பைத்தியமல்ல; உடல் பாதிப்பால் ஏற்படும் சந்தேகமான உணர்வு என்பதைப் புரிந்து கொள்ளமாட்டாரோ?

மலம் வரவில்லை. மலம் வருவதைப் போன்ற உணர்வு உள்ளது என ஒருவர் கூறினால் இவருக்கு பைத்தியம் பிடித்துள்ளது எனக் கூறமாட்டோம். இவருக்கு வயிறு சரியில்லை என்றே புரிந்துகொள் வோம். இது போன்றுதான் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கும் சூனியத்தால் உடல் ரீதியான பாதிப்பு ஏற்பட்டது. இந்தப் பாதிப் பால் உடலுறவு கொள்ளாத போதும் உடலுறவு கொண்டது போன்ற உணர்வு ஏற்பட்டது.

சூனியத்தால் பாதிப்பு ஏற்படும் என்பதை அறிவைக்கொண்டோ லாஜிக்கை கொண்டோ நிரூபிக்க முடியாது. குர்ஆன் சுன்னாவை வைத்தே நிரூபிக்க முடியும். எனவே, சூனியத்தால் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு ஏற்பட்ட பாதிப்பையும் இது லாஜிக்கிற்கு ஒத்து வருகிறதா? என்று பார்க்காமல் நபிமொழியில் கூறப்பட்டுள்ளதால் அப்படியே நம்பிவிட வேண்டும்.

எத்தனையோ விஷயங்களில் சர்வசாதாரணமாக மனிதர் களுக்கு சந்தேகம் வந்து பிறகு அந்தச் சந்தேகம் நீங்குகிறது. ஒரு வருக்கு பணம் கொடுத்திருக்க மாட்டோம். ஆனால், கொடுத்ததாக நினைப்போம். சற்று நிதானமாக யோசித்துப்பார்த்தால் நாம் கொடுக்கவில்லை என்பதை நாமே அறிந்துகொள்வோம். இவ்வாறு சந்தேகம் வந்தால் பைத்தியம் பிடித்துவிட்டது என்று சொல்வோமா?

சில அறிவிப்புகளில் யரா என்னும் அரபுச் சொல் இடம் பெற்றுள்ளது. எண்ணம் ஏற்படும், உணர்வு ஏற்படும் என்பது இதன் பொருள்.

இறைத்தூதர்(ஸல்) உடலுறவு கொள்ளவில்லை. உடலுறவு கொண்டது போன்ற உணர்வு ஏற்பட்டது. அதாவது உடலுறவு

கொண்டதாக சந்தேகம் வருகிறது என்று வைத்துக் கொள்வோம். தான் உடலுறவு கொள்ளவில்லை என்பதை நபி அறிந்துள்ள நிலையில் இது போன்ற சந்தேகம் தொடர்ந்து வருவதால் இது குறித்து அல்லாஹ்விடம் விளக்கம் கேட்கிறார்கள்.

இவ்வாறு ஆயிஷா(ரலி) கூறியதை நல்ல முறையில் புரிவதற்கு எத்தனையோ வழிகள் இதில் உள்ளன. மனிதர்களின் சுய கற்பனை விளக்கம் நமக்கு வேண்டாம். நபிமொழிதான் நமக்கு வேண்டும் என்போருக்கு இந்த விளக்கங்கள் போதுமானவை. ஆனால், இந்த ஹதீஸை மறுத்தே ஆக வேண்டும். இதில்தான் எங்களின் கொள்கைப் பிடிப்பு அடங்கியுள்ளது என பிடிவாதம் பிடிப்பவர்கள் தொடர்ந்து மறுத்துக்கொண்டே தான் இருப்பார்கள். அல்லாஹ் தான் அவர்களுக்கு நேர்வழி காட்ட வேண்டும்.

## பாதிப்பு ஆறுமாத காலம் நீடித்ததா?

இறைத்தூதர்(ஸல்) ஆறுமாத காலம்தான் செல்லாமலிருந்த நிலையில் செல்வது போன்ற உணர்வு அவர்களுக்கு ஏற்பட்டது.

**நூல்: அஹ்மது 24347**

இறைத்தூதர்(ஸல்) பைத்தியமாகவில்லை. உடலுறவு விஷயத்தில் உடல் பாதிப்புதான் ஏற்பட்டது. இதனால், அவர்களின் தூதுப்பணி தடையாகவில்லை என்பதை முன்னர் அறிந்து கொண்டோம். எனவே, ஆறுமாதகாலம் என்ன? ஒரு வருட காலம் இந்த பாதிப்பு நபிக்கு நீடித்திருந்தது என்று நம்பினாலும் அது குர்ஆனுக்கோ இறைத்தூதர்(ஸல்) அவர்களின் தகுதிக்கோ எதிரானது அல்ல. என்றாலும் ஆறுமாத காலம் பாதிப்பு ஏற்பட்டது என்ற தகவல் ஏற்றுக்கொள்ள முடியாத பலவீனமான தகவலாகும்.

இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு சூனியம் செய்யப்பட்டதாக கூறும் ஹதீஸை ஹிஷாம் இப்னு உர்வாவிடமிருந்து மொத்தம் 14 நபர்கள் அறிவிக்கிறார்கள். இவர்களில் மஃமர் என்ற அறிவிப்பாளரைத் தவிர்த்து மற்றவர்கள் யாரும் ஆறுமாத காலம் பாதிப்பு ஏற்பட்டது என்ற தகவலைக் கூறவில்லை. மஃமர் மட்டுமே இதை அறிவிக்கிறார்.

மஃமர் மட்டும் ஹிஷாமிடமிருந்து கூடுதலாக இதனைக் கேட்டு அறிவித்திருக்க வாய்ப்புள்ளது என இவர் விஷயத்தில் எண்ண முடியாது. ஏனென்றால், அறிவிப்பாளர் மஃமர் நம்பக

*மானவர் என்றாலும் பல தவறுகளை செய்யக் கூடியவர் ஆவார். குறிப்பாக ஹிஷாமிடமிருந்து அறிவிக்கும் ஹதீஸ்களில் தவறு இழைப்பார் என அறிஞர்கள் கூறியுள்ளனர்.*

تقريب التهذيب (2/ 541)

**6809– معمر ابن راشد الأزدي مولاهم أبو عروة البصري نزيل اليمن ثقة ثبت فاضل إلا أن في روايته عن ثابت والأعمش [وعاصم بن أبي النجود] وهشام ابن عروة شيئا وكـــذا فيما حدث به بالبصرة من كبار السابعة مات سنة أربع وخمسين وهو ابن ثمان وخمسين ســـنة**

*மஃமர் நம்பகமானவர் உறுதியானவர் சிறப்பிற்குரியவர் என்றாலும் ஹிஷாம் இப்னு உர்வா வழியாக மஃமர் அறிவிக்கும் அறிவிப்புகளில் பிரச்னை உள்ளது.*

***நூல்: தக்ரீபுத் தஹ்தீப் (பாகம் 2 பக்கம் 541)***

**قال يحيى : و حديث معمر عن ثابت و عاصم بن أبي النجود و هشام بن عروة و هذا الضرب مضطرب كثير الأوهام .**

*சாபித், ஆஸிம், ஹிஷாம் இப்னு உர்வா ஆகியோர் வழியாக மஃமர் அறிவிக்கும் அறிவிப்புகளில் அதிகமான தவறுகளும் முரண்பாடும் உள்ளன என யஹ்யா கூறியுள்ளார்.*

***நூல்: தஹ்தீபுத் தஹ்தீப் (பாகம் 10 பக்கம் 245)***

*எனவே, இந்த நிலையில் உள்ள அறிவிப்பாளர் மஃமர் அவர்கள் ஆறு மாதகாலம் பாதிப்பு இருந்தது என்ற தகவலை மற்ற யாரும் கூறாத நிலையில் இவர் மட்டும் கூறுகிறார் என்றால் இங்கே இவர் கூறிய இந்தத் தகவல் தவறானது என்பது உறுதியாகிறது. இது ஷாத் என்ற அடிப்படையில் பலவீனமான தகவலாகும்.*

*இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு குறிப்பிட்ட சில நாள்கள் உடல் பாதிப்பு இருந்தது பிறகு அல்லாஹ் குணமாக்கினான் என்று புரிந்து கொள்ளலாம்.*

## தேவையற்ற சந்தேகங்கள்

*இறைத்தூதர்(ஸல்) சூனியம் செய்யப்பட்டு பாதிக்கப்பட்டிருந்தால் அவர்களுக்கு வந்த வஹீச் செய்தியில் சந்தேகம் வரும். வஹீ வராமல் வஹீ வந்ததாக கூறியிருப்பார்கள் என்றால் இது குர்ஆனின் பாதுகாப்பை தகர்க்கிறது என்று வாதிடுகிறார்கள்.*

*ஹதீஸில் இருப்பதை அப்படியே கூறினால் எந்த குழப்பமும் வராது. ஹதீஸில் இல்லாத விஷயங்களைக் கூறி மக்களுக்கு தேவையற்ற சந்தேகங்களை இவர்கள் கிளப்புவதே மொத்த குழப்பத்திற்கும் காரணம். இந்த ஹதீஸில் இறைத்தூதர்(ஸல்) தமக்கு வஹீ வராத நிலையில் வஹீ வந்ததாகக் கூறினார்கள் என்று உள்ளதா? இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு ஏற்பட்டது உடல் பாதிப்பு என்பதும், உடலுறவு விஷயத்தில் தான் அந்த பாதிப்பு ஏற்பட்டது என்பதும் தெளிவாக ஹதீஸில் இருக்கும் போது இப்படி அநியாயமாக ஹதீஸை திரித்துக் கூறலாமா?*

*இறைத்தூதர்(ஸல்) சிறப்புக்குரியவர்கள் என்றாலும் அவர்களும் நம்மைப் போன்ற மனிதரே. சாதாரண மனிதருக்கு ஏற்படும் பலவீனங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கும் இருந்தது. உலக விஷயங்களில் அனைத்து மனிதர்களைப் போன்று இறைத் தூதர்(ஸல்) அவர்களுக்கும் பாதிப்புகள் ஏற்பட்டது.*

*அல்லாஹ் இந்த பலவீனங்கள் இல்லாதவராக இறைத் தூதர்(ஸல்) அவர்களைப் படைக்கவில்லை. அல்லாஹ் நினைத்திருந் தால் இது போன்ற பலவீனங்கள் இன்றி இறைத்தூதர்(ஸல்) அவர்களைப் படைத்திருக்க முடியும். அல்லாஹ் இதை விரும்ப வில்லை. பலவீனங்கள் இருந்தாலும் இந்த பலவீனங்கள் வஹீ விஷயத்தில் அவர்களுக்கு எந்த பாதிப்பையும் ஏற்படுத்தாதவாறு அல்லாஹ் பாதுகாத்தான். இதையே குர்ஆன் இறைவேதம் என்பதற்குரிய சான்றாக அல்லாஹ் வைத்திருக்கிறான்.*

*பலவீனங்கள் உள்ளவரின் வாயிலிருந்து தவறில்லாத முரண் பாடில்லாத சிறந்த நேர்வழிகாட்டல் வருகிறதென்றால் இது அவரின் கூற்றல்ல. மாறாக இறைவனின் சொல் என்று அல்லாஹ் மனித சமுதாயத்திற்கு புரியவைக்கிறான். எனவே, இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு இருந்த பலவீனங்கள் குர்ஆனின் பாதுகாப்பிற்கு வலுப்படுத்துகிறதே தவிர பலவீனப்படுத்தவில்லை.*

*நாமே இந்த உபதேசத்தை அருளினோம். இதை நாமே பாது காப்போம்.* ***அல்குர்ஆன் 15:9***

*எல்லா மனிதர்களைப்போன்று இறைத்தூதர்(ஸல்) அவர்களும் மறதியுள்ளவராகவே இருந்தார்கள். இந்த மறதி தொழுகையில்கூட இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு ஏற்பட்டது.*

*இறைத்தூதர்(ஸல்) தொழுதார்கள். (தொழுகையை முடிக்க) அவர்கள் ஸலாம் கொடுத்தபோது அவர்களிடம்,*

*“இந்தத் தொழுகையின்போது, மாற்றுகிற அறிவிப்பு ஏதேனும் வந்ததா?” எனக் கேட்கப்பட்டது.*

*“ஏன் இவ்வாறு (வினவுகிறீர்கள்?)” என இறைத்தூதர்(ஸல்) கேட்டார்கள்.*

*“நீங்கள் இப்படி இப்படித் தொழுதீர்கள்” என மக்கள் கூறினர்.*

*உடனே இறைத்தூதர்(ஸல்) தம் காலை (தொழுகை அமர்வில் மடக்கு போல) மடக்கி, கிப்லாவை முன்னோக்கி இரண்டு ஸஜ்தாக்கள் செய்தார்கள்; பின்னர் மீண்டும் ஸலாம் கொடுத்தார்கள். இதன் பின்னர் எங்களை நோக்கித் திரும்பி,*

*“அறிந்து கொள்ளுங்கள்! தொழுகையில் ஏதேனும் மாற்றம் வருமானால், கட்டாயம் அதை நான் உங்களுக்குத் தெரிவித்து விடுவேன். ஆயினும் நானும் உங்களைப் போல ஒரு மனிதன்தான்; நீங்கள் மறந்துவிடுவதைப் போன்று நானும் (சில நேரங்களில்) மறந்து விடுகின்றேன். அவ்வாறு நான் மறக்கும்போது எனக்கு நினைவூட்டுங்கள்” என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*

***அறிவித்தவர்: அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி),***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 401***

*பொதுவாக மனிதன் தன் சுய விருப்பத்தை தெரிவிக்கும்போது அது தவறாகிவிட வாய்ப்புள்ளது. இந்த பலவீனம் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கும் மற்ற மனிதர்களைப் போல் இருந்தது.*

*நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் பேரீச்சமரங்களுக்கு அருகில் சென்றேன். ஆண் மரங்களையும் பெண் மரங்களையும் இணைத்து மகரந்தச் சேர்க்கைச் செய்யும் வேலையை செய்யும் ஒரு கூட்டத்தை கண்டார்கள்.*

*“இவர்கள் என்ன செய்கிறார்கள்?” என கேட்டார்கள்.*

*“அவர்கள் ஆண் மரத்தை பெண் மரத்துடன் (மகரந்தச் சேர்க்கையாக) இணைக்கிறார்கள்” எனக் கூறினர்.*

*“இது பயனுள்ள காரியமாக எனக்குத் தெரியவில்லை” என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*

*இச்செய்தி மக்களுக்கு எட்டியபோது மரங்களிலிருந்து இறங்கி இதை கைவிட்டனர். இது இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்குத் தெரிந்தபோது,*

*"நான் கூறியது யூகம்தான். நீங்கள் செய்துகொண்டிருந்த காரியத்தால் நன்மை ஏற்படும் என்றால் அவ்வாறே செய்யுங்கள். நானும் உங்களைப் போல மனிதன்தான். யூகம் தவறாகவும் இருக் கலாம். சரியாகவும் இருக்கலாம். ஆனால், அல்லாஹ் கூறினான் என்று நான் உங்களிடம் சொன்னால், அல்லாஹ்வின் மீது நான் பொய்யுரைக்கமாட்டேன்" என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*

***அறிவித்தவர்: தல்ஹா இப்னு உபைதில்லாஹ்(ரலி),***
***நூல்: இப்னு மாஜா 2461***

*வஹீ விஷயத்தில் மட்டுமே இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு தவறு ஏற்படாது என இந்த ஹதீஸ் தெளிவாகக் கூறுகிறது. இறைத் தூதர்(ஸல்) அவர்களுக்கு மறதியே வராது என அல்லாஹ் கூற வில்லை. மாறாக வஹீ விஷயத்தில் மறதி வராது என்றே கூறுகிறான்.*

*நாம் உமக்கு ஓதிக்காட்டுவோம்; நீர் மறக்கமாட்டீர்.*

***அல்குர்ஆன் 87:6***

*உன் நாவை அசைத்து இதில் அவசரப்பட்டு நீர் ஓத வேண்டாம். இதை (உன் உள்ளத்தில்) சேர்ப்பதும் ஓத வைப்பதும் நம் கடமையாகும். எனவே, அதை நாம் ஓதினால் அதைப் பின் தொடர்வீராக. இதன் பின் அதை விளக்குவதும் நம் கடமை.*

***அல்குர்ஆன் 75:19***

*இறைத்தூதர்(ஸல்) அவர்களும் மனிதரே. அவரின் பேச்சுக் களிலும் தவறு வரும் என்பது உண்மை. ஆனால், மார்க்கம் தொடர்பாக அவர்கள் பேசும் விஷயங்களில் தவறிழைக்கமாட் டார்கள். இந்த விளக்கத்தை முஃமின்கள் ஏற்பார்கள். காஃபிர்கள் ஏற்கமாட்டார்கள். காஃபிர்களுக்காக இந்த உண்மையை நாம் மறுக்க முடியாது.*

*நான் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து செவியுறும் அனைத்து விஷயங்களையும் மனனம் செய்துகொள்வதற்காக எழுதிக்கொள்வேன். அப்போது,*

*"இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் நீ செவியுறும் அனைத்து விஷயங்களையும் எழுதிக்கொள்கிறாயா? இறைத்தூதர்(ஸல்) கோபத்திலும் சந்தோஷமான நேரத்திலும் (தவறுதலாக எதை யாவது) பேசிவிடும் மனிதர் தானே?" என குரைஷியர் கூறி (எழுது வதை விட்டும்) என்னைத் தடுத்தார்கள்.*

*எனவே, நான் எழுதுவதை நிறுத்திவிட்டு இதை இறைத் தூதர்(ஸல்) அவர்களிடம் தெரிவித்தேன். அவர்கள் தம் விரலால்*

*தம் வாயை சுட்டிக்காட்டி "என் உயிரைத் தன் கைவசம் கொண்டவன் மீது ஆணையாக! இதிலிருந்து (என் வாயிலிருந்து) உண்மையைத் தவிர வேறு எதுவும் வெளிப்படாது. நீ (நான் கூறுவதைத் தயக்கமின்றி) எழுதிக்கொள் எனக் கூறினார்கள்.*

***அறிவித்தவர்: அப்துல்லாஹ் இப்னு அம்ர் இப்னி அல் ஆஸ்(ரலி), நூல்: அபூ தாவூத் 3161***

*எனவே, வஹீ விஷயத்தில் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு அல்லாஹ்வின் பாதுகாப்பு இருக்கிறது. இறைத்தூதர்(ஸல்) சூனியத்தால் பாதிக்கப்பட்டார்கள் என்று நம்புவதால் வஹீ விஷயத்தில் அவர்களுக்கு குழப்பம் வந்தது என்று எந்த முஃமினும் சந்தேகப்படமாட்டான்.*

*நல்ல எண்ணங்களை இறைவன் ஏற்படுத்துகிறான். ஹதீஸ்களில் இது போன்ற சந்தேகங்களை ஷைத்தான் ஏற்படுத்துகிறான். எச்சரிக்கையாக இருங்கள் ஷைத்தானின் மாய வலையில் சிக்கிவிடாதீர்கள்.*

## யூதன் நபிக்கு பாதிப்பை ஏற்படுத்தினானா?

*ஒரு யூதன் தலைசிறந்த நம் தூதர்(ஸல்) அவர்களுக்கு சூனியம் செய்து பாதிப்பு ஏற்படுத்தினான் என்பதை நாம் எப்படி நம்ப முடியும்? என்று சிலர் உணர்ச்சிவசப்படுகின்றனர். இது அறிவீனமான உணர்ச்சியாகும்.*

*எதிரிகளால் நபிமார்கள் நிறைய துன்பங்களுக்கு ஆளானார்கள். இஸ்லாமிய விரோதிகள் பல நபிமார்களை கொலையும் செய்தனர் என அல்லாஹ் குர்ஆனில் கூறுகிறான். நபிமார்களை எப்படி கொல்ல முடியும் எனக் கேட்டு குர்ஆன் வசனத்தை இவர்கள் மறுக்கத் துணிவார்களா? உஹத் போரில் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் கன்னம் வெட்டுபட்டு பல் உடைந்தது. இறைத்தூதர் (ஸல்) அவர்களின் முகமே இரத்தக்கறையானது. நபியை எப்படி காயப்படுத்த முடியும் என்று கேட்டு இந்த ஹதீஸ்களை இவர்கள் மறுப்பார்களா?*

*யூதப் பெண் ஒருத்தி இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு ஆட்டிறைச்சியில் விஷம் கொடுத்தாள். இறைத்தூதர்(ஸல்) மரணிக்கும் வரை அதன் பாதிப்பு இருந்தது என ஆதாரப் பூர்வமான ஹதீஸ்கள் கூறுகின்றன. நபிக்கு எப்படி பாதிப்பு ஏற்படுத்த முடியும் எனக் கேள்வி கேட்டு இந்த ஹதீஸ்களை இவர்கள் எப்போது மறுப்பார்கள் என்பதுதான் தெரியவில்லை.*

*மனிதர்களில் நபிமார்களே கடுமையான சோதனைக்கு ஆளானார்கள். எதிரிகளால் இவர்களுக்கு ஏற்படும் எந்தத் துன்பமானாலும் அதன் மூலம் இவர்களின் அந்தஸ்த்து அல்லாஹ்விடம் உயருமே அன்றி நபிமார்களின் கண்ணியத்திற்கு இதனால் எந்த பாதிப்பும் வராது.*

*யூதன் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு சூனியம் செய்து அதன் மூலம் அவர்கள் பட்ட துன்பம் நபியவர்களுக்கு அல்லாஹ்விடம் மென்மேலும் சிறப்பைத் தருமே தவிர இதனால் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் கண்ணியத்திற்கோ சிறப்பிற்கோ எந்த பாதிப்பும் வரப்போவதில்லை. அல்லாஹ் தன் தூதருக்கு சூனியம் தொடர்பான விளக்கத்தை அளித்து நிவாரணம் அளித்தான். எனவே, அல்லாஹ்வின் உதவியும் பாதுகாப்பும் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு என்றைக்கும் இருந்தது.*

*இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு சூனியத்தின் மூலம் பாதிப்பு ஏற்பட்டதும் அல்லாஹ்வின் நாட்டப்படியே நடந்தது. அல்லாஹ் நாடினால் சூனியத்தால் பாதிப்பு ஏற்படும். அதை குணப்படுத்தக் கூடிய அதிகாரம் அல்லாஹ்விடமே உள்ளது. இறைநம்பிக்கையாளர்கள் அல்லாஹ்வையே சார்ந்திருக்க வேண்டும் என்று பல படிப்பினைகளை அல்லாஹ் இதன் மூலம் மக்களுக்கு உணர்த்துகிறான்.*

## இறைமறுப்பாளர்கள் கூறியது என்ன?

*இறைத்தூதர்(ஸல்) அவர்களைப் பார்த்து இவர் சூனியம் செய்யப்பட்ட மனிதர் என்று காஃபிர்களே கூறினர். இவ்வாறு கூறியவர்களை அல்லாஹ் அநியாயக்காரன் எனக் கண்டிக்கிறான்.*

*(நபியே) அவர்கள் உன்னிடம் செவியுற்றபோது அவர்கள் எதை செவியுற்றார்கள் என்பதையும் நீங்கள் சூனியம் செய்யப்பட்ட மனிதரையே பின்பற்றுகிறீர்கள் என அநியாயக்காரர்கள் இரகசியமாக பேசிக்கொண்டதையும் நாம் அறிவோம். அவர்கள் உமக்கு எவ்வாறு உதாரணங்களைக் கூறி வழிகெட்டுப் போகிறார்கள் என்பதை (நபியே) பார்ப்பீராக. அவர்கள் (நேர்) வழிக்கு வர வேமாட்டார்கள்.* ***அல்குர்ஆன் 17:47***

*நீங்கள் சூனியம் செய்யப்பட்ட மனிதரையே பின்பற்றுகிறீர்கள் என்று அநியாயக்காரர்கள் இரகசியமாக பேசிக்கொண்டதையும் நாம் அறிவோம். அவர்கள் உமக்கு எவ்வாறு உதாரணங்களைக்*

*கூறி வழிகெட்டுப் போகிறார்கள் என்பதை (நபியே) பார்ப்பீராக. அவர்கள் (நேரான) வழிக்கு வரவேமாட்டார்கள்.*

***அல்குர்ஆன் 25:9***

*நபி(ஸல்) அவர்களுக்கு சூனியம் செய்யப்பட்டதாக காஃபிர் களே கூறிவந்தார்கள். இவ்வாறு கூறியவர்களை அநியாயக்காரர்கள் என அல்லாஹ் மேற்கண்ட வசனங்களில் கண்டிக்கிறான் எனவே, நபி(ஸல்) அவர்களுக்கு சூனியம் செய்யப்பட்டதாக கூறுவது இந்த வசனங்களுக்கு முரணானது.இந்த அடிப்படையில் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு சூனியம் செய்யப்பட்டதாக கூறும் ஹதீஸ்களை நிராகரிக்க வேண்டும் என்று வாதிடுகிறார்கள்.*

*இந்த வசனங்களில் வரும் மஸ்ஹூர் என்ற சொல்லுக்கு பல அர்த்தங்கள் உள்ளன. இதை நாம் ஏற்கனவே விளக்கியுள்ளோம். ஆனால், அவற்றை விட்டுவிட்டு சூனியத்தின் மூலம் பாதிப்பு ஏற் பட்டவர் என்ற பொருளை இங்கே இவர்கள் கொடுப்பதற்குக் காரணம் அப்போதுதான் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு சூனியம் செய்யப்பட்டதாக வரும் ஹதீஸை மறுக்க முடியும் என்பதற்காகத்தான்.*

*இந்த வசனங்களில் மஸ்ஹூர் என்ற சொல்லுக்கு இவர்கள் கொடுக்கும் அர்தத்தைக் கொடுத்தாலும் சூனியம் தொடர்பான ஹதீஸை எந்த வகையிலும் நிராகரிக்க முடியாது.*

*குர்ஆனுக்கும் நபிமொழிக்கும் இடையே முரண்பாட்டை கற்பிப்பதில் இவர்கள் வல்லவர்கள். இந்த வசனங்களில் காஃபிர்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களைப் பற்றி கூறிய தகவலும் சூனியம் தொடர்பான ஹதீஸ் இறைத்தூதர்(ஸல்) அவர்களைப் பற்றி கூறும் தகவலும் ஒரே அம்சமாக இருந்தாலே காஃபிர்கள் சொன்னதை அப்படியே ஹதீஸ் கூறுகிறது. எனவே, ஹதீஸை நிராகரிக்க வேண்டும் என்று இவர்கள் வாதிடலாம். ஆனால், காஃபிர்கள் சொன்னதை இந்த ஹதீஸ் அங்கீகரிக்கவில்லை. இந்த ஹதீஸ் கூறுகிற கருத்தை காஃபிர்கள் கூறவில்லை. இரண்டும் முற்றிலும் வெவ்வேறான விஷயங்கள் என்றால் அப்போது இந்த வசனங்களை காட்டி ஹதீஸை மறுக்கக் கூடாது.*

*மேலுள்ள வசனங்களை முழுமையாக நன்கு படித்துப் பாருங்கள். காஃபிர்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் உடல் நிலையை பார்த்துவிட்டு இவருக்கு சூனியத்தால் உடலில் பாதிப்பு ஏற்பட்டுள்ளது என்று சொல்லவில்லை. இறைத்தூதர்(ஸல்)*

கூறிய உங்கள் இறைவன் ஒருவனே என்ற செய்தியைக் கேட்டுத்தான் இந்தக் குர்ஆன் இறைவனின் வார்த்தையல்ல. இவருக்கு பைத்தியம் பிடித்துள்ளது; அதன் காரணத்தால் உளறும் உளறலாகும் எனக் கூறி குர்ஆனை ஏற்க மறுத்தனர். இறைத்தூதர்(ஸல்) அவர்களை சூனியம் செய்யப்பட்டவர் என்று அவர்கள் கூறியது இந்தக் கருத்தில் தான்.

சூனியம் தொடர்பான ஹதீஸ் இறைத்தூதர்(ஸல்) பைத்திய மானார்கள் என்றோ, இறைத்தூதர்(ஸல்) கொண்டு வந்த குர்ஆன் இறைவனின் வார்த்தையல்ல. பைத்திய பாதிப்பால் இறைத்தூதர்(ஸல்) உளறிய உளறல் என்றோ, சொல்லவில்லை. மாறாக சூனியத்தால் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு உடல் பாதிப்புதான் ஏற்பட்டது. இந்த நேரத்தில் தெளிவான மனநிலையில் உள்ளவர் நடந்து கொள்வதைப் போன்றே இறைத்தூதர்(ஸல்) அவர்களின் நடத்தையும் அமைந்திருந்தது. இது தொடர்பாக அவர்களுக்கு அல்லாஹ் விடமிருந்து இறைச்செய்தியும் வந்தது. வானவர்களின் தொடர்பும் ஏற்பட்டது. இறையருளால் அந்தப் பாதிப்பு நீங்கியும் போனது எனக் கூறி முஹம்மத்(ஸல்) இறைத்தூதரே எனச் சான்று பகர்ந்து கொண்டிருக்கிறது. அவ்வாறிருக்க இந்த ஹதீஸை நம்பினால் காஃபிர்கள் சொன்னது உண்மையாகிவிடும் என சித்தரிப்பது எந்த வகையில் நியாயம்?

ஒரு சீர்திருத்தவாதி தலையில் பட்ட காயத்துடன் நல்ல உபதேசங்களை சுய நினைவோடு போதிக்கிறார். இதை ஏற்க மறுத்தவன் இவருக்கு மண்டையில் அடிபட்டுள்ளது. எனவேதான், இவ்வாறு தவறாகப் பேசுகிறார் என்று கூறி நல்லுபதேசத்தை ஏற்க மறுக்கிறான். இவனை அநியாயக்காரன் என்று கூறுவோம்.

இவனை அநியாயக்காரன் என்று நாம் கூறுவதால் அந்த நல்ல மனிதருக்கு தலையில் அடிபட்டதை நாம் மறுக்கிறோம் என்று எப்படிப் பொருள்படும்? அவருக்கு தலையில் அடிபட்டதை நாம் மறுக்கவில்லை. ஆனால், தலையில் அடிபட்டதைக் கூறி பைத்திய மாகிவிட்டார் என்று அவன் அவதூறு சொல்வதையும் நல்லுப தேசத்தை அவன் ஏற்க மறுப்பதையுமே கண்டிப்போம்.

இது போன்று தான் அல்லாஹ் மேற்கண்ட வசனங்களில் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு பைத்தியம் ஏற்பட்டது என்று காஃபிர்கள் கூறியதையும் இந்தக் குர்ஆனை அவர்கள் ஏற்க மறுத்ததையும் கண்டிக்கும் விதமாகவே அவர்களை அநியாயக் காரர்கள் என்று குறிப்பிடுகிறான்.

*இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு சூனியத்தால் எந்த பாதிப்பும் ஏற்படாது என அவன் மறுக்கவில்லை. மாறாக காஃபிர்கள் எதிர் மறையாகச் செய்த விமர்சனத்திற்கு அல்லாஹ் பதில் தருகிறான்.*

*காஃபிர்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களை பைத்தியம் என்று சொன்னார்கள். சூனியம் தொடர்பான ஹதீஸ் இதைக் கூறவில்லை. எனவே, இந்த வசனங்களுக்கும் சூனியம் தொடர்பான ஹதீஸிற்கும் இடையே எந்த முரண்பாடும் இல்லை. முரண்பாடு கற்பிப்போரின் சிந்தனையில்தான் கோளாறு உள்ளது.*

*காஃபிர்கள் செய்த விமர்சனத்தை முழுமையாக கவனிக்க வேண்டும். வசனத்தை அரைகுறையாக விளங்கிக்கொண்டு வார்த்தை ஜாலம் காட்டினால் தவறான முடிவுகளையே நாம் எடுக்க வேண்டிவரும். காஃபிர்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களை இவர் நம்மைப் போன்ற மனிதர்தான். இவரிடம் ஈர்ப்பைத் தவிர சத்தியம் எதுவும் இல்லை என விமர்சித்தனர்.*

*அவர்களின் உள்ளங்கள் அலட்சியமாக உள்ளன. இவர் உங்களைப் போன்ற மனிதரே அன்றி வேறில்லை. எனவே, நீங்கள் (இதை) தெளிவாக காண்பதுடன் சூனியத்திடமா செல்கிறீர்கள்? என்று அநியாயக்காரர்கள் இரகசியமாக பேசினார்கள்.*

***அல்குர்ஆன் 21:3***

*இறைத்தூதர்(ஸல்) நம்மைப் போன்ற மனிதர் என அநியாயக் காரர்கள் கூறியதை இந்த வசனத்தில் அல்லாஹ் கூறுகிறான். அநியாயக்காரர்கள் இவ்வாறு கூறியதால் இறைத்தூதர்(ஸல்) நம்மைப் போன்ற மனிதர் இல்லை என்று சொல்ல முடியுமா? இறைத் தூதர்(ஸல்) அவர்களும் மனிதரே என நாம் கூறுவதால் இந்த வசனத்தில் காஃபிர்கள் சொன்னதை உண்மைபடுத்திவிட்டோம். எனவே, நாம் அநியாயக்காரர்களாகி விட்டோம் என்று கூறலாமா?*

*இங்கே காஃபிர்கள் சொன்னதும் நாம் சொல்வதும் வார்த்தையில் ஒன்றாக இருந்தாலும் காஃபிர்கள் சொன்னதின் நோக்கத்தையும் முழு விமர்சனத்தையும் கவனிக்கும்போது நாம் வேறு அர்த்தத்தில் சொல்கிறோம். காஃபிர்கள் இதை வேறு அர்த்தத்தில் சொன்னார்கள். எனவே, நாம் இறைத்தூதர்(ஸல்) அவர்களை நம்மைப் போன்ற மனிதர் என்று சொல்வது தவறில்லை என்பதை அறியலாம்.*

*முஹம்மத்(ஸல்) இறைத்தூதர் இல்லை. மற்றவர்களைப் போன்ற சாதாரண மனிதர். அவருக்கு அல்லாஹ்விடமிருந்து*

எந்த இறைச்செய்தியும் வரவில்லை. அவர் இறைச்செய்தி என்று கூறும் குர்ஆனும் இறைச்செய்தி அல்ல என்ற அர்த்தத்தில் இறைத் தூதர்(ஸல்) அவர்களை இவர் உங்களைப் போன்ற மனிதர் என காஃபிர்கள் சொன்னார்கள். ஆனால், நாம் இந்த அடிப்படையில் இறைத்தூதர்(ஸல்) அவர்களை மனிதர் என்று சொல்லவில்லை. இறைத்தூதர்(ஸல்) இறைத்தூதரும் மனிதரும் ஆவார்கள். அவர்கள் கொண்டு வந்தது இறைவேதம் என்றே நம்புகிறோம்.

இந்த வசனத்தை இவ்வாறு சரியாக விளங்குவது போன்று இறைத்தூதர்(ஸல்) அவர்களை சூனியம் செய்யப்பட்டவர் என காஃபிர்கள் கூறியதையும் புரிந்து கொண்டால் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு சூனியத்தால் உடல் பாதிப்பு ஏற்பட்டது எனக் கூறும் ஹதீஸை மறுக்க வேண்டிய நிலை ஏற்படாது.

ஃபலக் அத்தியாயத்தில் முடிச்சுகளில் ஊதுபவர்களின் தீங்கை விட்டும் பாதுகாப்புத் தேடுமாறு இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு அல்லாஹ் உத்தரவிடுகிறான்.

அதிகாலையில் இறைவனிடம் அவன் படைத்தவற்றின் தீங்கை விட்டும் இருள் பரவும்போது ஏற்படும் தீங்கை விட்டும் முடிச்சுகளில் ஊதுபவர்களின் தீங்கை விட்டும் பொறாமைக்காரன் பொறாமைகொள்ளும்போது ஏற்படும் தீங்கை விட்டும் பாதுகாப்புத் தேடுகிறேன் என்று கூறுவீராக. **அல்குர்ஆன், அத்தியாயம் 113**

முடிச்சுகளில் ஊதக்கூடியவர்கள் என்று சூனியக்காரர் களையே அல்லாஹ் கூறுகிறான். இதை முன்னர் அறிந்துகொண் டோம். இந்தத் தீங்கிலிருந்து பாதுகாப்புத் தேடுமாறு இறைத்தூதர் (ஸல்) அவர்களுக்கு அல்லாஹ் உத்தரவிடுகிறான். அப்படியானால் சூனியத்தின் மூலம் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கும் பாதிப்பு ஏற்படலாம் என்பதை அல்லாஹ் இங்கே சுட்டிக்காட்டுகிறான்.

இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு யூதன் செய்த சூனியத்தில் முடிச்சுகள் எங்கே இருந்தது? என்ற கேள்வி கேட்கின்றனர். இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு யூதன் செய்த சூனியத்தில் முடிச்சுகள் இருந்தது என பல ஹதீஸ்கள் உள்ளன. ஆனால், அந்த ஹதீஸ்கள் பலவீனமானவையாக உள்ளதால், அவற்றை நாம் ஆதாரம் காட்ட முடியாது.

சரியான அறிவிப்புகளில் முடிச்சுகள் பற்றி வரவில்லை என்றாலும், இதனால் யூதன் செய்த சூனியத்தில் முடிச்சு இல்லை

என்று கூறமுடியாது. யூதன் செய்த சூனியத்தில் முடிச்சுகள் இருந்திருக்கும். ஆனால், அந்தத் தகவல் ஆதாரப்பூர்வமான ஹதீஸ்களின் வழியாக நமக்கு கிடைக்கவில்லை. மேற்கண்ட வசனத்தில் சூனியத்தில் முடிச்சுகள் போடப்படும் என அல்லாஹ் கூறுவதால் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு யூதன் செய்த சூனியத்திலும் முடிச்சுகள் இருந்திருக்கும் என்பதை அறிய முடிகிறது.

நபி(ஸல்) அவர்களுக்கு சூனியத்தால் பாதிப்பு ஏற்பட்டதா இல்லையா என்பதைத்தான் நாம் ஆராய வேண்டுமே தவிர, அவன் முடிச்சுக்கள் போட்டுத்தான் செய்தானா இல்லை வேறு விதமாகச் செய்தானா என்ற விவாதம் இங்கு அவசியமில்லை.

## மஸ்ஹூர் என்பதன் சரியான பொருள்

சூனியம் செய்யப்பட்ட மனிதரையே பின்பற்றுகிறீர்கள் என காஃபிர்கள் கூறியதாக வரும் அந்த வசனங்களில் சொல்லப் பட்டுள்ள மஸ்ஹூர் என்ற சொல்லுக்கு சூனியத்தால் பாதிப் பிற்குள்ளானார் என்று பொருள் வைக்க வேண்டிய அவசியமில்லை. வழிதவறியவர் என்ற அர்த்தம் கச்சிதமாக பொருந்திப்போகிறது. மக்கா காஃபிர்களும் முஹம்மத் நம் முன்னோர்களின் வழியிலிருந்து தவறிவிட்டார் என்றே கூறிவந்தனர்.

மஸ்ஹூர் என்ற சொல்லுக்கு சரியான பாதையை விட்டும் திசைமாறியவர் என்ற அர்த்தமும் உள்ளது. பின்வரும் வசனங்கள் இதற்கு ஆதாரமாக உள்ளன.

பாதுகாப்பவனும் பாதுகாக்கப்படாதவனும் அனைத்து பொருட்களின் அதிகாரத்தை தன்வசமே வைத்திருப்பவனும் யார்? நீங்கள் அறிந்தால் (பதில் கூறுங்கள்) என்று (நபியே) கேளுங்கள். அவர்கள் அல்லாஹ்விற்கே (அதிகாரம்) உள்ளது என்று கூறு வார்கள். அப்படியானால் ஏன் திசைமாறுகிறார்கள்? என்று கேட்பீராக. **அல்குர்ஆன் 23:89**

இந்த வசனத்தில் **துஸ்ஹரூன்** என்ற சொல்லை சரியான வழியை விட்டு தடம்புரளுதல் திசைமாறுதல் என்ற பொருளில் அல்லாஹ் பயன்படுத்தியுள்ளான். சூனியத்தின் மூலம் பாதிப் பிற்குள்ளாகிவிட்டார்கள் என்ற பொருள் இங்கே எந்த வகையிலும் பொருந்தாது. நபி மூஸா(அலை) அவர்களை மஸ்ஹூர் என ஃபிர்அவ்ன் சொன்னதும் இந்த அர்த்தத்தில்தான்.

*மூஸாவிற்கு நாம் ஒன்பது தெளிவான அத்தாட்சிகளை வழங்கினோம். அவர் இஸ்ரவேலர்களிடம் சென்றது பற்றி நீ அவர்களிடம் கேட்பீராக. மூஸாவே! நான் உன்னை வழிதவறிய வராகவே கருதுகிறேன் என ஃபிர்அவ்ன் அவரிடம் கூறினான்.*

***அல்குர்ஆன் 17:101***

*இந்த வசனத்திற்கு இவ்வாறு அர்த்தம் உள்ளது என்று பல தஃப்சீர்களில் கூறப்பட்டுள்ளது.*

**شرح السنة ـــ للإمام البغوى متنا وشرحا (12/ 363)**

**وأصل السحر في كلامهم الصرف ، وسمي السحر سحرا ، لأنه مصروف عن جهته ، ومنه قوله سبحانه وتعالى : ( فأنى تسحرون ( [ المؤمن : 89 ] أي :تصرفون عن الحق ، وقوله عز وجل : ) إن تتبعون إلا رجلا مسحورا ( [ الإسراء : 47 ] أي : مصروفا عن الحق ،**

*மஸ்ஹூரான மனிதரையே பின்பற்றுகிறீர்கள் என்றால் சத்தியத்தை விட்டு திசைமாறிய மனிதரையே பின்பற்றுகிறீர்கள் என்று பொருள்.* ***நூல்: ஷரஹு சுன்னா (பாகம் 12 பக்கம் 363)***

*தஃப்சீரு சம்ஆனிணீ, தஃப்சீருல் லுபாப்ணீ, தஃப்சீருல் ஹாஸின்ணீ, தஃப்சீருல் ஹாவீ ஆகிய விரிவுரைகளிலும் இந்தப் பொருள் கூறப்பட்டுள்ளது.*

**تفسير السمعاني (3/ 247)**

**وقيل : مسحورا أي : مصروفا عن الحق .**

***நூல்: தஃப்சீரு சம்ஆனி (பாகம் 3 பக்கம் 247)***

**تفسير اللباب لابن عادل ـــ موافق للمطبوع (ص: 3333)**

**وقيل : مصروفاً عن الحقّ يقال: ما سحرك عن كذا اي : ما صرفك**

**قاله الكلبي. وقال ابن عباس : مخدوعاً , وقال : مصروفاً عن الحقّ.**

***தஃப்சீருல் லுபாப் (பக்கம் 3333) (3/ 309) .***

**تفسير الخازن ـــ نسخة محققة (3/ 309)**

**وَقالَ الظَّالِمُونَ إِنْ تَتَّبِعُونَ إِلَّا رَجُلًا مَسْحُوراً يعني مخدوعا و قيل مصروفا عن الحق.**

***தஃப்சீருல் ஹாஸின் (பாகம் 3 பக்கம் 309)***

***அல்ஹாவி ஃபீ தஃப்சீரில் குர்ஆன் (பாகம் 250 பக்கம் 559)***

*எனவே, சத்தியத்தை விட்டும் திசைமாறிய மனிதரையே பின்பற்றுகிறீர்கள் என்று காஃபிர்கள் கூறினார்கள். குர்ஆனைக் கேட்டபின் இந்த வார்த்தையை அவர்கள் சொன்னார்கள். இதன் மூலம் குர்ஆனின் கருத்துக்கள் அசத்தியமானது எனக் கூறி குர்ஆனை மறுப்பதே அவர்களின் நோக்கமாக இருந்தது. இவ்வாறு பொருள் கொண்டால் இந்த வசனங்களுக்கும் சூனியம் தொடர்பான ஹதீஸிற்கும் இடையே துளி அளவு கூட தொடர்பு வராது. இரண்டுக்கும் இடையே முரண்பாடு கற்பிக்கவும் முடியாது.*

## அஜ்வா பேரீச்சம் பழம்

*"தினந்தோறும் காலையில் (வெறும் வயிற்றில்) ஏழு 'அஜ்வா' (ரகப்) பேரீச்சம் பழங்களைச் சாப்பிட்டு வருபவருக்கு, அந்த நாளில் எந்த விஷமும் இடர் அளிக்காது; எந்தச் சூனியமும் அவருக்கு இடையூறு செய்யாது" என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*

***அறிவித்தவர்: சஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி),***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 5445***

*இந்த ஹதீஸ் ஸஹீஹ் அல் புகாரீ, ஸஹீஹ் முஸ்லிம், அபூ தாவூத் இன்னும் பல ஹதீஸ் நூல்களில் பதிவு செய்யப்பட்டுள்ளது. இது அறிவிப்பாளர் தொடரில் எந்தக் குறையும் இல்லாத மிகச் சரியான ஹதீஸாகும். இந்த ஹதீஸ் சூனியத்தால் பாதிப்பு ஏற்படும் என்று தெள்ளத் தெளிவாக கூறுகிறது. சூனியத்தின் மூலம் பாதிப்பு ஏற்படாது எனக் கூறுபவர்களுக்கு இது பேரிடியாக உள்ளது. எனவே, இந்த ஹதீஸிலும் வழக்கம் போல் குதர்க்கமும் வீண் தர்க்கமும் செய்து மறுக்கின்றனர்.*

*ஏழு அஜ்வா பேரீச்சம்பழங்களை சாப்பிட்டால் விஷம் பாதிக்காது என்று இந்த ஹதீஸ் கூறுகிறது. இதை நடைமுறைப் படுத்திக்காட்ட முடியாது. இந்த ஹதீஸ் உண்மை என்றால் அஜ்வா பேரீச்சம் பழங்களை சாப்பிட்டுவிட்டு விஷம் குடித்துக் காட்ட வேண்டும். இவ்வாறு செய்து காட்ட யாரும் முன்வரமாட்டார்கள். எனவே, இது பொய்யான செய்தி எனக் கூறுகின்றனர். இவ்வாறு வாதம் வைத்து நபிமொழியை மறுத்ததின் மூலம் நாங்கள் ஏற்குமாறாக விளங்கும் மோசமான புத்தியுள்ளவர்கள் என்பதை மக்களுக்கு வெளிப்படுத்தியுள்ளனர்.*

*இந்த ஹதீஸை செய்துகாட்டினால்தான் நம்புவோம் என இவர்கள் கூறினால் பின்வரும் நபிமொழியையும் இவர்கள் செய்து காட்ட வேண்டும்.*

السُّلَمِيَّةَ تَقُولُ سَمِعْتُ رَسُولَ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ يَقُولُ مَنْ نَزَلَ مَنْزِلًا ثُمَّ قَالَ أَعُوذُ بِكَلِمَاتِ اللَّهِ التَّامَّاتِ مِنْ شَرِّ مَا خَلَقَ لَمْ يَضُرَّهُ شَيْءٌ حَتَّى يَرْتَحِلَ مِنْ مَنْزِلِهِ ذَلِكَ رواه مسلم

*"யாரேனும் (பயணத்தில்) ஓரிடத்தில் இறங்கித் தங்கிவிட்டுப் பின்னர், "அவூது பி கலிமாத்தில்லாஹித் தாம்மாத்தி மின் ஷர்ரி மா கலக்' எனக் கூறிப் பிரார்த்தித்தால், அந்த இடத்திலிருந்து அவர் புறப்பட்டுச் செல்லும்வரை எதுவும் அவருக்குத் தீங்கிழைக்காது" என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*

*(பொருள்: அல்லாஹ்வின் முழுமையான சொற்களின் மூலம் அவனுடைய படைப்பினங்களின் தீங்கிலிருந்து நான் பாதுகாப்புக் கோருகிறேன்.)*

***அறிவித்தவர்: கவ்லா பின்த் ஹகீம் அஸ்ஸுலமிய்யா(ரலி), நூல்: முஸ்லிம் 5247***

*"அவூது பி கலீமாத்தில்லாஹித் தாம்மாத்தி மின் ஷர்ரி மா கலக்' என்ற வாசகத்தை நாம் கூறினால் எந்த பிராணியும் நமக்கு தீங்கிழைக்காது என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள். இதை இவர்களும் நம்புகிறார்கள்.*

*ஹதீஸில் வரும் வார்த்தைகளை இவர்கள் கூற வேண்டும். இதற்குப் பிறகு பாம்பை விட்டு இவர்களை கடிக்கவிடுவோம். பாம்பு கடித்து இவர்களுக்கு பாதிப்பு ஏற்பட்டுவிட்டால் இந்த ஹதீஸ் பொய் எனக் கூறுவார்களா? நடைமுறைப்படுத்திக் காட்ட முடியாது என்பதால் இதை மறுப்பார்களா? இந்த ஹதீஸை இவ்வாறு புரியக் கூடாது என்று விளக்கம் தருகிறார்கள். இது போன்றே அஜ்வா சம்பந்தமான ஹதீஸையும் மறுத்துவிடாமல் அதற்குரிய சரியான விளக்கத்தை அறிந்து கொள்ள வேண்டும்.*

*ஒரு மருத்துவர் நம்மிடம் தினமும் ஓர் ஆப்பிள் சாப்பிடு உனக்கு நோய் வராது என்று கூறுகிறார். இதை எப்படி புரிந்து கொள்வோம். ஆப்பிளை சாப்பிட்டுவிட்டு பேதி மாத்திரையை முழுங்கினால் வயிற்றுக்கோளாறு ஏற்படக்கூடாது. வயிற்றுக் கோளாறு ஏற்பட்டால் மருத்துவர் சொன்னது பொய் என்று யாராவது புரிவோமா? இப்படி யாராவது புரிந்தால் அவனை வடிகட்டிய முட்டாள் என்று தான் கூறுவோம்.*

*மருத்துவர் நோய்வராமல் ஆரோக்கியமாக இருப்பதற்கு வழிகாட்டினார். எனவே, அவர் சொன்னபடி நடந்து ஆரோக்கிய*

மாக இருப்பதற்கு முயற்சி செய்ய வேண்டும் என்று அறிவாளிகள் புரிந்துகொள்வார்கள். நோயை தானாக இழுத்துக்கொள்ளும் முயற்சியை செய்யமாட்டார்கள். மருத்துவர் சொன்னபடி செயல் பட்டுக்கொண்டிருக்கும்போது தனக்கு நோய் ஏற்பட்டால் கூட மருத்துவர் சொன்னது பொய் என்று கூறமாட்டார்கள். ஏதோ காரணங்களால் அவர் சொன்ன மருத்துவத்தின் பலன் நமக்கு கிடைக்கவில்லை என்று நினைப்பார்கள். சாதாரண ஒரு மனிதரின் மருத்துவ வழிகாட்டை இவ்வாறு சரியாகப் புரிந்துகொள்ளும்போது இறைத்தூதர்(ஸல்) அவர்களின் சொல்லை மட்டும் இதற்கு மாற்றமாக ஏற்குமாறாக புரியலாமா?

அல்லாஹ் உலகத்தில் ஆரோக்கியம் தரக் கூடிய எண்ணெற்ற பொருட்களையும் மருந்துகளையும் படைத்துள்ளான். இந்தப் பொருட்களில் நோயை குணமாக்கும் சக்தி இருந்தாலும் இவற்றைக் கொண்டு நூறு சதவீதம் தீர்க்கமாக யாருக்கும் குணத்தை ஏற்படுத்த முடியாது. ஏனென்றால், ஆரோக்கியம் என்பது அல்லாஹ்வின் அதிகாரத்தில் உள்ள விஷயம். மருந்துகள் காரணிகளாக இருந்தாலும் அதனால் ஏற்படும் பலனை அல்லாஹ்வே தீர்மானிக்கிறான்.

விஷம் பாதித்தவர்களுக்கு விஷ முறிவு மருந்தை மருத்துவர்கள் தருகிறார்கள். மருந்து சாப்பிட்ட அனைவரும் குணமாவதில்லை. மருந்து வேலை செய்து குணமாகக் கூடியவர்களும் இருக்கிறார்கள். மருந்தின் பலன் கிடைக்காமல் மரணிப்பவர்களும் இருக்கிறார்கள்.

நோயை குணப்படுத்தும் அம்சம் மருந்தில் இருந்தாலும் சிலரின் உடல் அந்த மருந்தை ஏற்றுக் கொண்டு வேலை செய்கிறது. சிலரின் உடலில் அந்த மருந்து வேலை செய்வதில்லை. மருந்து வேலை செய்யாமல் போவதற்கு உடலும் காரணமாக உள்ளது. பின்வரும் சம்பவம் இதைத் தெளிவாக உணர்த்துகிறது.

ஒரு மனிதர் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்து "என் சகோதரர் வயிற்று வலியால் சிரமப்படுகிறார்" என்றார்.

"அவருக்குத் தேன் ஊட்டுங்கள்" என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள். பிறகு இரண்டாம் முறையாக அவர் வந்தார்.

''அவருக்குத் தேன் ஊட்டுங்கள்'' என மீண்டும் இறைத் தூதர்(ஸல்) கூறினார்கள். பிறகு மூன்றாம் முறையாக அவர் வந்தார். "அவருக்குத் தேன் ஊட்டுங்கள்" என இறைத்தூதர்(ஸல்) அப்போதும் சொன்னார்கள். அதன் பிறகும் அவர் வந்து,

*“நான் செய்தேன் (ஆனால் குணமாகவில்லை)” என அவர் கூறினார்.*

*“அல்லாஹ் (தேனில் நிவாரணம் உள்ளது என குர்ஆனில்) உண்மையே கூறியுள்ளான்; உங்கள் சகோதரரின் வயிறுதான் பொய் சொல்கிறது; அவருக்குத் தேன் ஊட்டுங்கள்” என்றே அப்போது இறைத்தூதர்(ஸல்) சொன்னார்கள்.*

*அம்மனிதர், மீண்டும் தம் சகோதரருக்குத் தேன் ஊட்டினார். அதையடுத்து அவர் குணமடைந்தார்.*

***அறிவித்தவர்: அபூ சயீத் அல் குத்ரீ(ரலி),***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 5684***

*தேனில் நிவாரணம் இருக்கிறது என அல்லாஹ் கூறுகிறான். ஆனால், இச்சம்பவத்தில் வரும் நபித்தோழரின் சகோதரருக்கு நான்கு முறை தேன் கொடுத்தும் வயிற்றுவலி தீரவில்லை. அல்லாஹ் நிவாரணமாக வழங்கியுள்ள தேனில் எந்தக் கோளாறும் இல்லை. சம்பந்தப்பட்டவரின் உடலே சரியில்லை என்பதை இறைத்தூதர்(ஸல்) சுட்டிக்காட்டுகிறார்கள்.*

*அஜ்வா பழத்தை சாப்பிட்டுவிட்டு விஷம் குடித்துக் காட்டுங்கள் எனக் கேட்பவர்களிடம் நாம் ஒரு கேள்வியை கேட்கிறோம். உலகத்தில் விஷமும் விஷ முறிவு மருந்தும் உள்ளது. நீங்கள் விஷத்தை குடித்துவிட்டு அதன் பின் விஷ முறிவு மருந்தை குடிக்க வேண்டும். உங்களுக்கு எந்த பாதிப்பும் ஏற்படக் கூடாது. இதை நீங்கள் செய்து காட்டத் தயாரா? உங்கள் ஜமாஅத்தில் உள்ள யார் வேண்டுமானாலும் இதற்கு முன்வருவார்களா என்பதே நம் கேள்வி.*

*இது ஆபத்தான முயற்சி என்பதை மக்களுக்குப் புரிய வைப்பதற்காகவே இந்தக் கேள்வியை கேட்கிறோம். விஷத்தை குடித்துவிட்டு விஷ முறிவு மருந்தை சாப்பிடும் எவருக்கும் நூறு சதவீதம் எந்த பாதிப்பும் ஏற்படாது என உறுதியாக சொல்ல முடியாது. விஷ முறிவு மருந்து வேலை செய்து காப்பாற்றப்படலாம். ஆனால், வேறு பின்விளைவுகளும் தீங்குகளும் அந்த விஷத்தால் ஏற்பட வாய்ப்புள்ளது. சிலருக்கு விஷ முறிவு மருந்து வேலை செய்யாமல் விஷம் வேலை செய்து மரணம் ஏற்படவும் வாய்ப்புள்ளது.*

*ஒரு பொருளுக்கு விஷத்தை முறிக்கும் ஆற்றல் இருந்தால் நூறு சதவீதம் எல்லா மனிதர்கள் விஷயத்திலும் அது விஷத்தை*

முறிக்க வேண்டும் என்கிற அவசியமில்லை. எனவே, இது போன்ற சவால்கள் முட்டாள் தனமாது. இது, நபிமொழியை நம்பக் கூடியவர்களை தற்கொலைக்குத் தூண்டும் மோசமான செயலாகும். அஜ்வா பேரீச்சம் பழம் தொடர்பாக இறைத்தூதர்(ஸல்) அல்லவா கூறியிருக்கிறார்கள். அவர்களின் போதனைக்கும் வழிகாட்டலுக்கும் உட்பட்டு இதை விளங்க வேண்டும் என்ற அடிப்படை அறிவுகூட இவர்களுக்குத் தெரியவில்லை.

உண்மையில் இவர்களுக்கு ஹதீஸ்களின் மீது மதிப்பும் மரியாதையும் இருந்தால், இந்த ஹதீஸ் கூறுவதுபோல் அஜ்வா பேரீச்சம் பழத்திற்கு விஷத்தை முறிக்கும் ஆற்றல் உள்ளதா என்பதை விஞ்ஞான ரீதியில் ஆராயும் முயற்சியில் இறங்கி இருப்பார்கள். ஆனால், இவர்கள் இது போன்ற ஆக்கப்பூர்வமான ஆராய்ச்சியை செய்யவில்லை. இந்த ஆராய்ச்சியில் இறங்கி இருந்தால் கண்டிப்பாக இந்த நபிமொழியை மறுத்திருக்க மாட்டார்கள். உண்மையை அறிந்திருப்பார்கள்.

பொதுவாக பேரீச்சம் பழத்தில் ஏராளமான மருத்துவ குணங்கள் இருப்பதை உலகம் ஏற்றுக் கொண்டுள்ளது. நோய் எதிர்ப்பு சக்தியும், உடலை வலுப்படுத்தும் ஆற்றலும், இரும்புச் சத்தும் இதில் அடங்கியுள்ளது.

மனித உடல் நோய் எதிர்ப்புச் சத்தியுடன் வலுவாக இருந்தாலே விஷத்தால் ஏற்படும் பாதிப்புகளை எதிர்த்து தாக்கு பிடிக்கும். பலவீனமாக இருந்தால் சிறு பாதிப்பைக்கூட தாங்காது. இது அனைத்து பேரீச்சம் பழங்களிலும் உள்ள மருத்துவக் குணம் என்றாலும் இறைத்தூதர்(ஸல்) குறிப்பாக இங்கே அஜ்வா பேரீச்சம் பழத்தை குறிப்பிடுகிறார்கள். எனவே, அஜ்வாவில் இந்த அம்சம் கூடுதலாக இருப்பதை இறைத்தூதர்(ஸல்) சுட்டிக் காட்டுகிறார்கள்.

அஜ்வா பழத்தை ஒரு நாள் சாப்பிட்டுவிட்டால் உடனே அது விஷபாதிப்பை நீக்கிவிடும் என்று இறைத்தூதர்(ஸல்) சொல்லவில்லை. மதீனாவில் கருங்கற்கள் நிறைந்த பகுதியில் விளையும் குறிப்பிட்ட இந்த வகை அஜ்வா பழத்தை ஏழு எண்ணிக்கையில் நாள்தோறும் காலையில் வெறும் வயிற்றில் எச்சிலுடன் மென்று வழமையாக சாப்பிட வேண்டும் என்ற அடிப்படையில்தான் கூறுகிறார்கள். அஜ்வா சம்பந்தமாக வரும் ஹதீஸ்கள் அனைத்தையும் கவனித்தால் இதை அறியலாம்.

அஜ்வா பேரீச்சம் பழத்தில் விஷத்தை முறிக்கும் அம்சம் இல்லை என்று இன்றைய விஞ்ஞானம் மறுக்கவில்லை. மாறாக தற்போது அஜ்வா பேரீச்சம் பழம் குறித்து வெளிவரும் ஆய்வுகள் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் சொல்லை உண்மைப்படுத்தும் வகையிலேயே அமைந்துள்ளன. விஞ்ஞான வளர்ச்சி இல்லாத காலத்தில் இறைத்தூதர்(ஸல்) கூறிய எத்தனையோ விஷயங்களை இன்றைய விஞ்ஞானம் மெய்யென நிரூபித்து வருகிறது. இனி வரும் காலங்களில் இந்த ஹதீஸை விஞ்ஞானம் பகிரங்கமாக மெய்பிக்கலாம். அதை உட்கொள்ளும் அளவு மற்றும் காலத்தையும் நிர்ணயம் செய்யலாம்.

நாம் விஞ்ஞானத்தை ஈமான் கொள்ளவில்லை. ஆனால், நிரூபனமான விஞ்ஞானத்தை இஸ்லாம் எதிர்ப்பதுமில்லை. இறைவனையும் இறைத்தூதர்(ஸல்) அவர்களையுமே நாம் ஈமான் கொண்டிருக்கிறோம். நாம் அனைத்தையும் அறிந்த அறிவாளிகள் அல்ல; நாம் அறியாத விஷயங்கள் ஏராளம் உள்ளன. இந்த உண்மையை உணர்ந்தால் யாரும் தேவை இல்லாமல் குதர்க்கம் செய்து இந்த ஹதீஸை மறுக்கமாட்டார்கள்.

மேற்கண்ட ஹதீஸை சஅத் இப்னு அபீ வக்காஸ்(ரலி) அறிவித்துள்ளார்கள்.

அஜ்வா பேரீச்சம் பழத்தில் விஷத்திற்கு நிவாரணம் உள்ளது என இறைத்தூதர்(ஸல்) கூறியதாக அன்னை ஆயிஷா(ரலி) அவர்களும் அறிவித்துள்ளார்கள்.

"(மதீனாவின்) மேட்டுப் பகுதியில் விளையும் "அஜ்வா' பேரீச்சம் பழத்தை அதிகாலை உண்பதில் "நிவாரணம்' அல்லது 'விஷமுறிவு' உள்ளது" என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.

**அறிவித்தவர்: ஆயிஷா(ரலி), நூல்: முஸ்லிம் 4159**

பொதுவாகவே மருத்துவ விஞ்ஞான ஆய்வின்படி ஒரு நோயை மருந்து மட்டும் முற்றிலுமாகக் குணப்படுத்துவதில்லை. முதலில் நோயாளிக்கு நாம் குணம் அடைந்துவிடுவோம் என்ற நம்பிக்கை வேண்டும். மருந்து பாதி நோயாளியின் நம்பிக்கை பாதி என்ற அடிப்படையில்தான் எல்லா நோய்களும் குணமாகின்றன. புற்றுநோயாளிகளில் பலர் விரைவில் இறந்துவிடுவதற்குக் காரணம் அவர்களின் பயம், நம்பிக்கை இழந்துபோகுதல், நாம் மரணித்துவிடுவோம் என்ற எண்ணம் என மருத்துவம் கூறுகிறது.

*மருந்துகள் இல்லாமலோ அல்லது குறிப்பிட்ட உணவின் மூலமோ நிவாரணம் கிடைக்கும் என்பது இந்த வகையில் ஆழமான நம்பிக்கையைச் சார்ந்தது என்பதை மருத்துவ விஞ்ஞானமும் கூறத்தான் செய்கிறது.*

*சூனியத்தின் மூலம் பாதிப்பு ஏற்படும் என்பதை தெளிவாக அறிவிக்கும் அஜ்வா தொடர்பான ஹதீஸ் ஆதாரப்பூர்வமானதே. குதர்க்கம் செய்து இந்த ஹதீஸை மறுத்து ஹதீஸை நம்பும் மக்களை முஷ்ரிக் என்றும் காஃபிர் என்றும் இவர்கள் கூறுகிறார்கள். குழப்பவாதிகள் யார் என்பதை மக்கள் புரிய வேண்டும்.*

## நாத்திகனின் அளவுகோல்

*ஒரு மனிதன் இன்னொரு மனிதனுக்கு பாதிப்பு ஏற்படுத்த வேண்டுமென்றால் கத்தி கம்பு போன்ற புறச் சாதனங்களைப் பயன்படுத்தி அதன் மூலமே பாதிப்பு ஏற்படுத்த முடியும். எந்த புறச்சாதனமும் இன்றி பாதிப்பை ஏற்படுத்துவது இறைவனின் ஆற்றல். சூனியக்காரன் புறச்சாதனங்கள் எதுவும் இன்றி பாதிப்பை ஏற்படுத்துவான் என நம்புவதால், இது இணைவைப்பு எனக் கூறுகின்றனர்.*

*நாம் முஸ்லிம்கள்; வெறுமனே குன்றிய அறிவை மட்டும் வைத்துக்கொண்டு பாதிப்புகள் இப்படித்தான் ஏற்படும்; அப்படித் தான் ஏற்படும் என முடிவு செய்யக் கூடாது. அல்லாஹ்வும் அவன் தூதரும் மறைமுகமான சில பாதிப்புகள் இருக்கின்றன என்று சொன்னால் அதையும் சேர்த்து நம்புவதே ஒரு முஸ்லிமின் கடமையாகும். நாம் அறியாத எத்தனையோ விஷயங்கள் உலகத்தில் உள்ளன. அல்லாஹ் அனைத்தையும் அறிந்தவன். நாம் அனைத்தையும் அறிந்துவிட்டோம் என்ற மமதையில் பேசக் கூடாது.*

*கத்தி கம்பு போன்ற பொருட்களின் மூலம்தான் பாதிப்பு ஏற்படுத்த முடியும். சூனியத்தின் மூலம் பாதிப்பு ஏற்படுத்த முடியாது என்ற இந்த அளவுகோலை அல்லாஹ்வை நம்பாத நாத்திகர்களே கூறுவார்கள். ஆனால், இஸ்லாமை ஏற்றுள்ளவர்கள் வெளிப் படையான இந்தப் பாதிப்புகள் இருப்பது போன்று சூனியம், கண்ணேறு போன்றவற்றால் மறைமுகமான பாதிப்புகளும் உள்ளன என்றே நம்புவார்கள். ஏனென்றால், மறைமுகமான பாதிப்புகளும் உள்ளன என்றே அல்லாஹ்வும் அவன் தூதரும் கூறியுள்ளார்கள்.*

*பாதிப்புகள் எந்தெந்த முறைகளில் ஏற்படும் என்பதை குர்ஆன், சுன்னாவை வைத்து முடிவு செய்ய வேண்டும். குர்ஆனையும், நபிவழியையும் ஓரங்கட்டிவிட்டு, கண்ணுக்குத் தெரியும் விஷயத்தை மட்டுமே கூறி இப்படித்தான் பாதிப்பு ஏற்படும் என்று சொன்னால், இந்த அளவுகோல் இஸ்லாமிற்கு எதிரான அளவுகோலாகும். இதை வைத்து மார்க்கத்தை நிலைநாட்ட முற்பட்டால், மார்க்கத்தை மறுக்க வேண்டிய நிலையே ஏற்படும். உண்மையை ஒருபோதும் அறிய முடியாது.*

*சூனியம் என்பது மறைமுகமான தீங்காகும். இந்தத் தீங்கை நம் கண்களால் காணமுடியாது. அல்லாஹ்வும் அவன் தூதரும் கூறியுள்ளார்கள் என்ற அடிப்படையில்தான் இதை நம்புகிறோம்.*

*மறைமுகமான தீங்கு இருப்பது போன்று மறைமுகமான நன்மையும் உள்ளது என இறைத்தூதர்(ஸல்) கூறியுள்ளார்கள். நோயுற்றவர்களுக்கு குர்ஆன் வசனங்களை ஓதி ஊதினால் அல்லாஹ்வின் நாட்டத்துடன் அந்த நோய் குணமாகும் என மார்க்கம் கூறுகிறது.*

*நபித்தோழர்களில் சிலர் (ஒரு பயணத்தின்போது) ஓர் அரபுக் குலத்தாரிடம் சென்றார்கள். அவர்களுக்கு அக்குலத்தார் விருந்தளிக்க முன்வரவில்லை. இந்நிலையில் அக்குலத்தாரின் தலைவனுக்கு ஒரு விஷ ஜந்து கொட்டிவிட்டது. அப்போது, அக்குலத்தார் (நபித்தோழர்களிடம் வந்து),*

*"உங்களிடம் (இதற்கு) மருந்து ஏதும் உள்ளதா? அல்லது ஓதிப்பார்ப்பவர் எவரும் உங்களில் இருக்கிறாரா?'' எனக் கேட்டனர்.*

*"நீங்கள் எங்களுக்கு விருந்தளிக்க முன் வரவில்லை. ஆகவே, நீங்கள் எங்களுக்கு குறிப்பிட்ட கூலியைத் தந்தாலே தவிர உங்களுக்கு நாங்கள் ஓதிப் பார்க்கமாட்டோம்" என நபித்தோழர்கள் கூறினர்.*

*உடனே, நபித்தோழர்களுக்காக அக்குலத்தார் ஓர் ஆட்டு மந்தையைக் கூலியாக நிர்ணயித்தார்கள். நபித்தோழர்களில் ஒருவர் (எழுந்து சென்று) ''திருக்குர்ஆனின் தாய்' எனப்படும் "அல்ஃபாத்திஹா' அத்தியாயத்தை ஓதித் தம் எச்சிலைக் கூட்டி (கடிபட்ட இடத்தில்) உமிழ்ந்தார். உடனே அவர் வலி நீங்கி குணமடைந்தார். (பேசியபடி) அவர்கள் ஆடுகளைக் கொடுத்தனர்.*

*நபித்தோழர்கள், "இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் (அனுமதி) கேட்காத வரை இதை நாம் எடுத்துக் கொள்ளக் கூடாது" என பேசிக்கொண்டு அவ்வாறே இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் (சட்டம்) கேட்டனர். இறைத்தூதர்(ஸல்) சிரித்துவிட்டு,*

*"அல் ஃபாத்திஹா' அத்தியாயம் ஓதிப்பார்க்கத் தகுந்தது என உமக்கு எப்படித் தெரியும்? அந்த ஆடுகளை எடுத்துக் கொள்ளுங்கள்; எனக்கும் அதில் ஒரு பங்கு கொடுங்கள்" எனக் கூறினார்கள்.*

***அறிவித்தவர்: அபூ சயீத் அல்குத்ரீ(ரலி), நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 5736***

**5745حَدَّثَنَا عَلِيُّ بْنُ عَبْدِ اللَّهِ حَدَّثَنَا سُفْيَانُ قَالَ حَدَّثَنِي عَبْدُ رَبِّهِ بْنُ سَعِيدٍ عَنْ عَمْرَةَ عَـــنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا أَنَّ النَّبِيَّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ كَانَ يَقُولُ لِلْمَرِيضِ بِسْمِ اللَّـــهِ تُرْبَـــةُ أَرْضِنَا بِرِيقَةِ بَعْضِنَا يُشْفَى سَقِيمُنَا بِإِذْنِ رَبِّنَا رواه البخاري**

*நோயாளிக்காக, "பிஸ்மில்லாஹி. துர்பத்து அர்ளினா பிரீகத்தி பஅளினா யுஷ்ஃபா சகீமுனா பிஇத்னி ரப்பினா" என இறைத்தூதர்(ஸல்) கூறுவார்கள்.*

*(பொருள்: அல்லாஹ்வின் பெயரால்... எங்களில் சிலரின் உமிழ் நீரோடு எம்முடைய இந்த பூமியின் மண் (இணைந்தால் அது) எங்கள்* ***இறைவனின் அனுமதியுடன்*** *எங்களில் நோயுற்று இருப்பவரைக் குணப்படுத்தும்.)*

***அறிவித்தவர்: ஆயிஷா(ரலி), நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 5745***

*"நாங்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் அமர்ந்திருந்த போது எங்களில் ஒருவரைத் தேள் கொட்டிவிட்டது.*

*"இறைத்தூதர் அவர்களே! நான் ஓதிப் பார்க்கட்டுமா?" என ஒருவர் கேட்டார்.*

*"உங்களில் ஒருவர் தம் சகோதரருக்குப் பயனளிக்க முடிந்தால் அவ்வாறே செய்யட்டும்" என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள் எனக் கூறியதை நான் செவியுற்றேன்.*

***அறிவித்தவர்: ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி), நூல்: முஸ்லிம் 4424***

நோயுற்றவருக்கு ஓதிப்பார்த்து நன்மை செய்ய முடியும் என்பதை இந்த நபிமொழிகள் உணர்த்துகின்றன. நாத்திகனைப் போன்று சிந்தித்தால் இந்த நபிமொழிகளையும் மறுக்க வேண்டும். ஒரு மனிதன் இன்னொரு மனிதனுக்கு சிகிச்சை செய்வதாக

*இருந்தால் மருந்து, மாத்திரை, டானிக் போன்ற பொருட்களின் மூலம்தான் சிகிச்சை செய்ய முடியும். வெறுமனே சில வார்த்தைகளை உச்சரித்து எச்சிலை தடவினால் அல்லது சுவாசக்காற்றை நோயாளியின் மீது ஊதினால் நோயை குணப்படுத்த இயலாது.*

*எச்சில் சுவாசக்காற்று இவற்றில் நோயை குணப்படுத்தும் சக்தி இல்லை. வேண்டுமானால் ஓதிப்பார்த்தவரின் எச்சிலையும் அவர் ஊதிய காற்றையும் லேபிற்கு அனுப்பி சோதனை செய்து பார்ப்போம். அவற்றில் நோயை குணப்படுத்தும் அம்சம் எதுவும் இல்லை என்றே முடிவு வரும். இவ்வாறு நாத்திகம் பேசலாமா? மருந்து மாத்திரை இல்லாமல் குணப்படுத்துவது அல்லாஹ்வின் அதிகாரம். இப்படிப்பட்ட ஆற்றல் மனிதனுக்கு இருக்கிறது என நம்புவது இணைவைப்பாகும் என்றும் கூறி மேற்கண்ட நபிமொழிகளை மறுக்க முடியுமா?*

*பூச்சிகளையும் விஷ ஜந்துக்களையும் விரட்ட வேண்டும் என்றால் அதற்குரிய மருந்துகளை அடித்தால் அவை வராது. ஆனால், ஒரு சில வார்த்தைகளைக் கூறினால் விஷ ஜந்துக்கள் பாதிப்பை ஏற்படுத்தாது என்பது அறிவுக்குப் பொறுந்தவில்லை. நடைமுறையில் இதை செய்து காட்டவும் முடியாது. எனவே, இவ்வாறு நம்புவது இணைவைப்பு எனக் கூறி பின்வரும் ஹதீஸை மறுப்பார்களா?*

*இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்:*

*"யாரேனும் (பயணத்தில்) ஓரிடத்தில் இறங்கித் தங்கிவிட்டுப் பின்னர் "அவூது பி கலிமாத்தில்லாஹித் தாம்மாத்தி மின் ஷர்ரி மா கலக்' எனக் கூறிப் பிரார்த்தித்தால், அந்த இடத்திலிருந்து அவர் புறப்பட்டுச் செல்லும்வரை எதுவும் அவருக்குத் தீங்கிழைக்காது" என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*

*(பொருள்: அல்லாஹ்வின் முழுமையான சொற்களின் மூலம் அவனுடைய படைப்பினங்களின் தீங்கிலிருந்து நான் பாதுகாப்புக் கோருகிறேன்.)*

***அறிவித்தவர்: கவ்லா பின்த் ஹகீம் அஸ்ஸுலமிய்யா(ரலி),***
***நூல்: முஸ்லிம் 5247***

*மறைமுகமான நன்மைகள் உள்ளன. அந்த நன்மைகள் அல்லாஹ் நாடும்போதே ஏற்படும். நாம் நினைத்த நேரத்தில் நம்மால் ஏற்படுத்த முடியாது. இந்த நன்மைகளுக்கு அல்லாஹ்*

நல்லவர்களையும் நல்ல வார்த்தைகளையும் காரணமாக ஆக்கு கிறான். அதிகாரம் அல்லாஹ்வின் கையில்தான் உள்ளது என நாம் நம்புகிறோம்.

இதுபோன்றுதான் சூனியத்தின் பாதிப்பும் அமைந்துள்ளது. சூனியக்காரன் சூனியத்தின் மூலம் நினைத்த நேரத்தில் நினைத்த வர்களுக்கு அவன் நினைத்த பாதிப்புகளை ஏற்படுத்த முடியாது. அல்லாஹ் யாருக்கு எப்போது என்ன பாதிப்பு ஏற்பட வேண்டும் என முடிவு செய்கிறானோ அதுதான் நடக்கும். அதிகாரம் அல்லாஹ்வின் கையிலே உள்ளது. இந்தத் தீங்கிற்கு சூனியக் காரர்களை அல்லாஹ் காரணமாக ஆக்கியுள்ளான்.

எனவே, நாத்திகனின் அளவுகோலைக் கொண்டு மார்க்கத்தை அணுகாமல் குர்ஆன், சுன்னாவைக் கொண்டு சிந்திப்போமேயானால், நம் கண்களுக்குத் தெரிகிற நன்மைகள் இருப்பது போல் நம் கண்களுக்குப் புலப்படாத நன்மைகளும் உள்ளன. நம் கண்களுக்குத் தெரிகிற தீமைகள் இருப்பதுபோல் நம் கண்களுக்குப் புலப்படாத தீமைகளும் உள்ளன என்பதை அறியலாம்.

மறைமுகமான நன்மையும் தீமையும் அல்லாஹ்வின் நாட்டம் இல்லாமல் நடப்பதில்லை. இவற்றை விரும்பிய நேரத்தில் செய்ய மனிதர்களுக்கு அதிகாரம் இல்லை. இந்த அதிகாரம் அல்லாஹ்விடமே உள்ளது. நம் அறிவுக்கு அப்பாற் பட்ட விஷயங்கள் மறைமுகமானவை. இந்த விஷயங்கள் குறித்து அல்லாஹ்வும் அவன் தூதரும் கூறினால் மட்டுமே நம்ப வேண்டும். வேறு யார் கூறினாலும் நம்பக் கூடாது.

சில நோய்கள் வருவதற்கான காரணமும், அதன் மூலம் ஏற்படும் தீங்குகளும் ஏன் எப்படி என்பதை மருத்துவ விஞ்ஞானமே அறிந்து கொள்ள முடியாமல் தவித்துக் கொண்டிருக்கிறது. அவ்வாறே சில நோய்களுக்கு நிவாரணம் எப்படி கிடைத்தது என்பதைக்கூடப் புரிந்து கொள்ள முடியாத நிலையும் மருத்து வத்தில் உள்ளது.

## எது இணைவைப்பு?

சூனியத்தின் மூலம் பாதிப்பு ஏற்படும் என்று கூறினால் சூனியக்காரன் அல்லாஹ்வைப் போல் செயல்படுகிறான் என நம்ப வேண்டியுள்ளது. எனவே, அது இணைவைப்பு என்று வாதிடுகின்றனர்.

குர்ஆன் சுன்னாவை நம்பும் மக்கள் சூனியம் குறித்து எப்படி நம்புகிறார்கள் என்பதைக்கூடப் புரிந்து கொள்ளாமல் இப்படித்தான் நம்புகிறார்கள்; அப்படித்தான் நம்புகிறார்கள் என இவர்களாகக் கற்பனை செய்துகொண்டு முஸ்லிம்களுக்கு முஷ்ரிக் பட்டம் சூட்டிக் கொண்டிருக்கிறார்கள்.

சில நேரங்களில் இயல்புக்கு மாறான விஷயங்களை அல்லாஹ் தன் அடியார்கள் மூலம் வெளிப்படுத்துவான். இவ்வாறு அல்லாஹ் செய்வதால் அடியார்களுக்கு இச்சக்தி இயல்பாகவே உள்ளது எனப் புரிந்து கொள்ளக் கூடாது.

அடியார்கள் தாங்கள் விரும்பும் நேரத்தில் இந்தக் காரியங் களை செய்துகாட்ட முடியாது. மாறாக அல்லாஹ் அவர்களின் மூலம் எப்போது எது நடக்க வேண்டும் என முடிவு செய்கிறானோ அதுவே நடக்கும். எனவே, ஆற்றல்கள் அனைத்தும் அல்லாஹ் விடமே உள்ளன. அவனே தன் அடியார்களின் மூலம், தான் விரும்பும் காரியத்தை நடத்துகிறான். இவ்வாறு நம்புவதே ஈமான். இது ஒருபோதும் இணைவைப்பு ஆகாது.

நபிமார்கள் செய்த அற்புதங்கள் அனைத்தும் இயல்புக்கு மாறான காரியங்கள். கடலை பிளத்தல் கைத்தடியை பாம்பாக மாற்றுதல் வெண்குஷ்ட நோயாளிகளை குணப்படுத்துதல் பார்வை யற்றவர்களுக்கு பார்வையை வழங்குதல், இறந்தவர்களை உயிர்ப் பித்தல் போன்ற இன்னும் பல அற்புதங்களை நபிமார்கள் செய்தார்கள். இந்தக் காரியங்களைச் சாதாரண மனிதர்களால் செய்யவே முடியாது. மனிதர்களுக்கு இயல்பாக அல்லாஹ் இந்தச் சக்தியை வழங்கவில்லை.

நபிமார்களும் தாங்கள் விரும்பிய நேரத்தில், விரும்பிய இடத்தில், விரும்பிய அற்புதத்தைச் செய்து காட்ட முடியாது. அல்லாஹ் அனுமதிக்கும்போதே அவர்களால் அற்புதம் செய்ய முடியும். அவர்களால் அல்லாஹ்வின் அனுமதியின்றி தாங்கள் விரும்பியதை எல்லாம் செய்து காட்ட முடியாது எனும்போது அதிகாரம் அனைத்தும் அல்லாஹ்விற்கே உள்ளன என்றே நாம் நம்புகிறோம். அல்லாஹ் நாடும்போது அவர்கள் அற்புதம் செய்வார்கள் என்பதையும் மறுக்கமாட்டோம். நபிமார்கள் அல்லாஹ்வின் அனுமதியுடனே அற்புதம் செய்ய முடியும் என அல்லாஹ் குர்ஆனில் பல இடங்களில் கூறுகிறான்.

**அல்லாஹ்வின் அனுமதியின்றி** எந்த இறைத்தூதராலும் அற்புதத்தை கொண்டு வர இயலாது. **அல்குர்ஆன் 40:78**

*மர்யமின் மகன் ஈசாவே! உனக்கும் உன் தாயாருக்கும் நான் செய்த அருளையும் ரூஹுல் குத்ஸ் மூலம் நான் உன்னை பலப் படுத்தியதையும் நினைத்துப்பார்ப்பீராக. தொட்டிலிலும் இளமைப் பருவத்திலும் நீர் மக்களிடம் பேசினீர். உனக்கு வேதத்தையும் ஞானத்தையும் தவ்ராத் இன்ஜீலையும் கற்றுக்கொடுத்தேன். **என் அனுமதியுடன்** நீர் களிமண்ணில் பறவையின் வடிவத்தைப் போன்று செய்து அதில் ஊதினாய். **என் அனுமதியுடன்** அது பறவையாக மாறியது. **என் அனுமதியுடன்** நீ குருடரையும் வெண்குஷ்டமுடையவரையும் குணப்படுத்தினீர். **என் அனுமதி யுடன்** மரணித்தவர்களை உயிர்பித்தீர்.* ***அல்குர்ஆன் 5:110***

*நான் உங்களுடைய இறைவனிடமிருந்து அற்புதத்துடன் உங்களிடம் வந்துள்ளேன். களிமண்ணால் பறவையின் வடிவத்தைப் போன்று செய்து அதில் ஊதுவேன். **அல்லாஹ்வின் அனுமதியுடன்** அது பறவையாக மாறும். **அல்லாஹ்வின் அனுமதியுடன்** குருடரையும் வெண்குஷ்டமுடையவரையும் குணப்படுத்துகிறேன். இறந்தவர்களை உயிர்பிக்கிறேன். நீங்கள் உண்பதையும் உங்கள் வீடுகளில் சேமித்து வைப்பதையும் உங்களுக்கு அறிவிக்கிறேன் என்று இஸ்ரவேலர்களின் தூதர் (ஈசா கூறினார்)*

***அல்குர்ஆன் 3:49***

*அல்லாஹ் நாடினால் நபிமார்கள் அற்புதம் செய்வார்கள் என்ற இந்த நம்பிக்கை எந்த வகையிலும் ஈமானைப் பாதிக்காது.*

*ஆனால், காதியானிகள் முஃதஸிலாக்கள் போன்ற வழி கேடர்கள் நபிமார்கள் அற்புதம் செய்வார்கள் என்ற உண்மையை மறுக்கிறார்கள். அல்லாஹ் இதற்கு நாடமாட்டான் என்றும் கூறுகிறார்கள். நபிமார்கள் அற்புதம் செய்வார்கள் என்ற நம்பிக்கை அல்லாஹ்வின் ஆற்றல் மனிதர்களுக்கு உள்ளது என்ற கருத்தைத் தருவதால் இது ஷிர்க் எனக் கூறி மறுக்கின்றனர். நபிமார்கள் அற்புதம் செய்ததாகக் கூறும் குர்ஆன் வசனங்களுக்கு சுய வியாக்கி யானங்களைக் கூறி மறுக்கின்றனர்.*

*நபிமார்கள் அற்புதம் செய்த விஷயத்தில் காதியானிகளுக்கும் முஃதஸிலாக்களுக்கும் ஏற்பட்டுள்ள அதே சிந்தனைக் கோளாறு தான் இன்று சூனியத்தால் எந்த பாதிப்பும் ஏற்படாது எனக் கூறுபவர்களிடமும் ஏற்பட்டுள்ளது. சூனியத்தின் மூலம் அல்லாஹ் நாடினால்தான் பாதிப்பு ஏற்படும் என அல்லாஹ் தெளிவாக கூறும் போது பாதிப்பே ஏற்படாது. பாதிப்பு ஏற்படும் என நம்பினால்,*

*அது ஷிர்க் ஆகிவிடும் என்றால் முஃதஸிலாக்களுக்கும் காதியானி களுக்கும் ஏற்பட்ட சிந்தனைக் கோளாறு இவர்களுக்கு ஏற் பட்டுள்ளது என்பதே உண்மை. அல்லாஹ் நாடினால் நபிமார்கள் அற்புதம் செய்வார்கள் என்ற நம்பிக்கையில் ஷிர்க் இல்லை. மாறாக இதை ஷிர்க் போல் சித்தரித்துக்காட்டுபவர்களின் மூளையில்தான் கோளாறு உள்ளது.*

*அல்லாஹ் நாடுவான் என்று சொன்ன விஷயத்தில் அல்லாஹ் நாடமாட்டான் என்று பேசுவது அதிகப்பிரசங்கித் தனமாகும். அல்லாஹ்வை எதிர்த்து தன்னை அறிவாளியாக காட்டும் ஆணவமாகும். அல்லாஹ்வின் அதிகாரத்தில் தலையிடும் அறிவற்ற செயலாகும். நான் நாடுவேன் என அல்லாஹ் சொன்ன பிறகு அவன் நாடவே மாட்டான் என்று சொல்ல யாருக்கும் அதிகாரம் இல்லை. அவ்வாறு சொல்பவரின் கருத்தை குப்பையில் தூக்கி எறிய வேண்டும்.*

*இந்த இடத்தில் மற்றொரு சாராரும் வரம்பு மீறுகிறார்கள். நல்லடியார்கள் யார் வேண்டுமானாலும் அற்புதம் செய்வார்கள். இறந்துபோன குறிப்பிட்ட இந்த நல்லடியாரும் அற்புதம் செய்வார் எனக் கூறி வழிகெட்டுவிடுகின்றனர். அல்லாஹ் யாருக்கு நாடுவான் என்பதை அவன் சொன்னால்தான் நம்மால் அறிய முடியும். நாமாக இவருக்கு நாடுவான் எனக் கூறினால் நமக்கு அறிவில்லாத விஷயத்தில் நாம் மூக்கை நுழைத்து அல்லாஹ்வின் அதிகாரத்தை கையில் எடுக்கிறோம் என்பதைப் புரிய வேண்டும். எனவே, இதுவும் வழிகேடு. இரு சாராரைப் போன்று வரம்புமீறாமல் அல்லாஹ் கூறுவது போல் நடுநிலையாக இருப்பதே ஈமானுக்கு பாதுகாப்பானது.*

***அல்லாஹ்வின் அனுமதி*** *இன்றி மறுமையில் யாரும் பரிந்துரைக்க முடியாது என்று அல்லாஹ் கூறுகிறான்.*

***அவனுடைய அனுமதியில்லாமல்*** *யார் அவனிடம் பரிந்துரைக்க முடியும்?* ***அல்குர்ஆன் 2:255***

*இதை சரியாக விளங்காதவர்கள் இறந்துபோன இந்த நல்லடியார் நமக்கு பரிந்துரை செய்வார் என அவர்களாக அல்லாஹ்வின் அதிகாரத்தில் உள்ள விஷயத்தை முடிவு செய்து விடுகிறார்கள். அல்லாஹ்வின் அதிகாரத்தில் உள்ள விஷயத்தில் குறிப்பிட்ட இன்னார் பரிந்துரைப்பார் என நாமாக முடிவெடுப்பது வழிகேடாகும். இவர்களின் வழிகேட்டை மறுப்பதற்காக சிலர்*

*மறுமையில் பரிந்துரை என்பதே கிடையாது என ஒட்டுமொத்தமாக பரிந்துரையை மறுத்துவிடுகிறார்கள். முஃதஸிலாக்கள் இவ்வாறு கூறுகின்றனர். இதுவும் தவறாகும்.*

*மறுமையில் அல்லாஹ்வின் அனுமதியைப் பெற்றவர்கள் பரிந்துரை செய்ய முடியும் என்பதே சரியான கொள்கை. பரிந்துரையிலும் அற்புதத்திலும் இவ்வாறு சரியாக விளங்கியவர்கள் சூனிய விஷயத்திலும் இவ்வாறு விளங்கியிருந்தால் சூனியத்தால் பாதிப்பே ஏற்படாது என்ற முஃதஸிலாக்களின் கருத்தைக் கூறியிருக்கமாட்டார்கள். அல்லாஹ் நாடினால் பாதிப்பு ஏற்படும் என நம்பும் மக்களை முஷ்ரிக் என்றும் கூறியிருக்கமாட்டார்கள்.*

*நோயுற்றவர்களுக்கு குர்ஆன் வசனங்களை ஓதி காயம் பட்ட இடத்தில் எச்சிலைத் தடவி அவர்கள் மீது ஊதிவிட்டால் நோய் அல்லாஹ்வின் நாட்டத்துடன் சரியாகும் என இறைத் தூதர்(ஸல்) கூறியதை முன்பு அறிந்து கொண்டோம். மருந்து மாத்திரை இல்லாமல் குணப்படுத்துவது அல்லாஹ்வின் ஆற்றல் எனக் கூறி இந்த நபிமொழியை மறுக்க முடியாது. யாராவது இதை ஷிர்க் எனக் கூறினால், அவ்வாறு கூறுபவர்களின் மூளை கெட்டுவிட்டது என்றே முடிவெடுப்போம். இங்கே நோயை குணப்படுத்தும் அதிகாரம் ஓதி ஊதுபவரின் கையில் இல்லை. அல்லாஹ்விடமே உள்ளது.*

*ஓதிப்பார்ப்பவர் தான் விரும்பிய நேரத்தில் விரும்பியவருக்கு இவ்வாறு குணமளிக்க முடியாது. இதன் மூலம் அல்லாஹ் யாருக்கு நிவாரணம் கிடைக்க வேண்டும் என்பதை அல்லாஹ்வே முடிவுசெய்கிறான். அல்லாஹ்வின் அனுமதியுடன் நடக்கிறது என்ற சிறிய வாசகத்தில்தான் இவ்வளவு விளக்கங்களும் அடங்கியுள்ளன.*

1. *அல்லாஹ் விரும்பிய நேரத்தில் விரும்பியதை செய்யக் கூடியவன். சூனியக்காரன் விரும்பிய நேரத்தில் விரும்பியதை செய்ய முடியாது. அல்லாஹ் கடலை பிளப்பான். கம்பை பாம்பாக மாற்றுவான். இறந்தவரை உயிர்பிப்பான். இது போன்ற வேலைகளை சூனியக்காரனால் ஒருபோதும் செய்ய முடியாது. அவன் சூனியத்தின் மூலம் அதிகபட்சமாக பிறருக்கு பாதிப்பு ஏற்படுத்த முயற்சிக்கலாம். அதுவும் உறுதி இல்லை. அல்லாஹ் நாடினாலே அந்த பாதிப்பும் ஏற்படும். அல்லாஹ் நாடாவிட்டால் எதுவும் ஏற்படாது.*

2. அல்லாஹ் தான் செய்யும் காரியங்களை அவனே முடிவு செய்கிறான். அவனுடைய முடிவை மாற்றவோ தடுக்கவோ யாருக்கும் சக்தி இல்லை. ஆனால், சூனியத்தால் ஏற்படும் பாதிப்பை சூனியக்காரன் முடிவு செய்வதில்லை. அல்லாஹ்வே அது எப்போது? யாருக்கு? ஏற்பட வேண்டும் என்பதை முடிவு செய்கிறான். இந்த இடத்தில் சூனியக்காரனை ஒரு காரணியாகவே அல்லாஹ் ஆக்குகிறான். சூனியக்காரன் பாதிப்பு ஏற்படுத்த வேண்டும் என்று நினைத்து அல்லாஹ் அதை தடுக்க நினைத்தால் சூனியக்காரனால் ஒன்றும் செய்ய முடியாது.

3. அல்லாஹ் ஒருவருக்கு தீங்கை நாடிவிட்டால் அந்தத் தீங்கை அவனைத் தவிர வேறு யாராலும் நீக்க முடியாது. சூனியத்தின் மூலம் ஏற்பட்ட பாதிப்பை அல்லாஹ் நினைத்தால் உடனே குணப்படுத்திவிடுவான். சூனியத்தின் பாதிப்பு தொடர்ந்து இருக்க வேண்டும் என சூனியக்காரன் நினைத்தாலும் அது நிறைவேறாது. இங்கேயும் சூனியக்காரனின் பலவீனம் தெளிவாகிறது. உதாரணமாக இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு ஏற்பட்ட சூனியத்தின் பாதிப்பு நீங்கியது போன்று.

4. அல்லாஹ் ஒரு காரியத்தை செய்ய நாடி, ஆகு எனச் சொன்னால் போதும். அது நடந்தேறிவிடும். ஆனால், சூனியக்காரன் ஆகு எனச் சொன்னால் எதுவும் நடக்கப்போவதில்லை. சூனியம் என்ற கலையைக் கற்று சில காரியங்களைச் செய்த பிறகே பாதிப்பு ஏற்படுத்த முயற்சிக்க முடியும். அந்த பாதிப்பு ஏற்படுவதும் ஏற்படால் இருப்பதும் அல்லாஹ்வின் நாட்டத்தைப் பொறுத்தே அமையும்.

## சாமிரியும் - தஜ்ஜாலும்

இயல்புக்கு மாறான காரியங்களை நல்லடியார்கள் மூலம் அல்லாஹ் வெளிப்படுத்தியது போல் அல்லாஹ் விரும்பினால் தீயவர்கள் மூலமும் வெளிப்படுத்துவான். இது ஒரு சோதனை என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும்.

சதையுடன் கூடிய உடலமைப்பும் உலோகத்தால் செய்யப் பட்ட தலையும் கொண்ட காளைக் கன்றுக்கு சப்தமிடும் ஆற்றல் இயல்பாக இல்லை. ஆனால், சாமிரீ என்பவனுக்கு அல்லாஹ் ஏதோ ஒரு விஷயத்தை கண்ணில் காட்டுகிறான். அவன் மனதில்

*சில எண்ணங்களை ஏற்படுத்துகிறான். ஜிப்ரீல்(அலை) அவர்களின் காலடி மண்ணை எடுத்து சில வேலைகளை அவன் செய்கிறான். அந்தக் கன்று சப்தமிடுகிறது. மக்களை சோதிப்பதற்காக அல்லாஹ் இதை நடத்துகிறான்.*

*அந்தக் கூட்டத்தாரின் அணிகலன்கள் எங்கள் மீது சுமத்தப் பட்டது. அதை நாங்கள் எறிந்தோம். அவ்வாறே சாமிரியும் எறிந்தான். அவர்களுக்காக அவன் உடலுடன் கூடிய காளைக்கன்றை வெளிப் படுத்தினான். அது சப்தமும் போட்டது. இதுவே உங்கள் கடவுளும் மூஸாவின் கடவுளுமாகும். மூஸா மறந்துவிட்டார் என அவர்கள் கூறினர். அது அவர்களின் சொல்லுக்கு பதிலளிக்காது. அவர்களுக்கு நன்மை செய்யவோ தீங்கிழைக்கவோ அதற்கு ஆற்றல் இல்லை என்பதை அவர்கள் சிந்திக்க வேண்டாமா? இதற்கு முன் ஹாரூன் அவர்களிடம் என் சமுதாயமே! இதன் மூலம் நீங்கள் சோதிக்கப் பட்டுள்ளீர்கள். அளவற்ற அருளாளனே உங்கள் இறைவனாவான். எனவே, என்னை பின்பற்றி என் உத்தரவுக்கு கட்டுப்படுங்கள் எனக் கூறினார்...*

*சாமிரியே உன் விஷயம் என்ன? என்று (மூஸா) கேட்டார். அவர்கள் பார்க்காததை நான் பார்த்தேன். எனவே, தூதரின் காலடி மண்ணில் ஒரு பிடியை எடுத்து எறிந்தேன். இவ்வாறே என் உள்ளம் என்னைத் தூண்டியது என அவன் கூறினான்.*

***அல்குர்ஆன் 20:87***

*இயல்புக்கு மாற்றமான காரியத்தை சாமிரீ செய்துள்ளான் என அல்லாஹ் கூறுகிறான். இதை நம்பினால் ஷிர்க் என நாம் கூற முடியுமா?*

*இறுதி காலத்தில் தஜ்ஜால் வருவான் என்று இறைத்தூதர் (ஸல்) கூறியுள்ளார்கள். அவன் ஒரு மனிதனை சாகடித்துவிட்டு மறுபடியும் உயிர்கொடுப்பான். மலையளவு உணவுடனும் நீர்வளத்துடனும் வருவான். சொர்க்கம் நரகத்தையும் காண்பிப் பான். வானத்திற்கு உத்தரவிட்டவுடன் வானம் மழை பெய்யும். அவன் பூமிக்கு உத்தரவிட்டவுடன் பூமி செடிகொடிகளையும் பொக்கிஷங்களையும் வெளிப்படுத்தும். இது போன்று அநேக அற்புதங்களைச் செய்வான்.*

*“நான் உங்களிடம் தஜ்ஜாலைப் பற்றிய செய்தி ஒன்றைச் சொல்லப் போகிறேன் வேறெந்த இறைத்தூதரும் அதைத் தன் சமூகத்தாருக்குச் சொன்னதில்லை. அவன் ஒற்றைக் கண்ணன்*

*ஆவான். அவன் தன்னுடன் சொர்க்கம் நரகம் போன்றதைக் கொண்டு வருவான். அவன் எதை சொர்க்கம் எனக் கூறுகிறானோ அது தான் நரகமாக இருக்கும். நூஹ் அவர்கள் அவனைக் குறித்து தன் சமூகத்தாரை எச்சரித்ததைப் போன்று நானும் உங்களை (அவனைக் குறித்து) எச்சரிக்கின்றேன்" என இறைத் தூதர்(ஸல்) கூறினார்கள்.*

***அறிவித்தவர்: அபூ ஹுரைரா(ரலி), நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 3338***

*இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் தஜ்ஜாலைக் குறித்து நான் வினவியதைவிட அதிகமாக வேறெவரும் வினவியதில்லை.*

*"உம் கேள்வி என்ன?" என இறைத்தூதர்(ஸல்) கேட்டார்கள்.*

*''தஜ்ஜாலுடன் மலையளவு ரொட்டியும் இறைச்சியும் நதியளவு நீரும் இருக்கும் என மக்கள் கூறுகிறார்கள்" என நான் கூறினேன்.*

*"(இது என்ன பிரமாதம்? அவன் மூலம் அல்லாஹ் எதை எல்லாம் காட்டவிருக்கிறானோ) அவற்றை விட இவை அல்லாஹ் வுக்கு மிகவும் சாதாரணமானவையே" என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.* ***அறிவித்தவர்: முஃகீரா இப்னு ஷுஅபா(ரலி), நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 7122, முஸ்லிம்***

*தஜ்ஜால் அதிசயிக்கத்தக்க எத்தனை பெரிய காரியங்களைச் செய்தாலும் அவற்றை அல்லாஹ்வே நிகழ்த்திக் காட்டுகிறான் என்பதை இந்த ஹதீஸில் இறைத்தூதர்(ஸல்) சுட்டிக் காட்டு கிறார்கள்.*

*''இறைத்தூதர் அவர்களே! அவன் பூமியில் எத்தனை நாள்கள் தங்கியிருப்பான்?" என நாங்கள் கேட்டோம்.*

*"நாற்பது நாள்கள்' என இறைத்தூதர்(ஸல்) பதிலளித்தார்கள்.*

*"அன்றைய ஒரு நாள் ஓர் ஆண்டைப் போன்றும், மறுநாள் ஒரு மாதத்தைப் போன்றும், அதற்கு அடுத்த நாள் ஒரு வாரத்தைப் போன்றும், மற்ற நாள்கள் உங்களின் (சாதாரண) நாள்களைப் போன்றும் இருக்கும்" எனக் குறிப்பிட்டார்கள்.*

*"இறைத்தூதர்(ஸல்) அவர்களே! ஓர் ஆண்டிற்குச் சமமாக இருக்கும் அந்த ஒரு நாளில், வழக்கமாகத் தொழும் (ஐவேளைத்) தொழுகைகளைத் தொழுதால் போதுமா?'' என நாங்கள் கேட்டோம்.*

“இல்லை; அதைத் தெளிவாகக் கணக்கிட்டுக் கொள்ளுங்கள்” என பதிலளித்தார்கள்.

நாங்கள், “இறைத்தூதர் அவர்களே! பூமியில் தஜ்ஜால் (சுற்றித் திரியும்) வேகம் எப்படி இருக்கும்?” என நாங்கள் கேட்டோம்.

“பின்னாலிருந்து காற்று விரட்டிச் செல்லும் மேகம் போன்று (அவன் வேகமாக பூமியைச் சுற்றிவருவான்)” என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.

“அவன் ஒரு சமுதாயத்திடம் வந்து (தன்னை இறைவன் என்று ஏற்றுக்கொள்ளுமாறு) அவர்களுக்கு அழைப்பு விடுப்பான். அவர்களும் அவன் மீது நம்பிக்கை கொண்டு அவனுடைய அழைப்புக்குப் பதிலளிப்பார்கள். உடனே வானத்திற்கு (மழை பொழியுமாறு) அவன் கட்டளையிட, மழை பொழியும். பூமிக்கு(த் தாவரங்களை முளைக்கச் செய்யுமாறு) கட்டளையிட, அது முளையவைக்கும். (அவற்றை மேய்ந்து) அவர்களின் கால்நடைகள் ஏற்கெனவே இருந்ததைவிட நீண்ட திமில்களைக் கொண்டவையாகவும் மடி கனத்தவையாகவும் வயிறு நிரம்பியவையாகவும் மாலையில் (வீடு) திரும்பும்.

பின்னர், அவன் மற்றொரு சமுதாயத்தாரிடம் வந்து, (தன்னை இறைவன் என ஏற்றுக்கொள்ளுமாறு) அவர்களுக்கும் அழைப்பு விடுப்பான். ஆனால், அவனுடைய அழைப்பை அவர்கள் நிராகரித்து விடுவார்கள். அவர்களிடமிருந்து அவன் திரும்பிச் சென்றுவிடுவான். அதனால், அவர்கள் பஞ்சத்தாலும் வறட்சியாலும் பாதிக்கப் பட்டவர்களாகக் காலைப் பொழுதை அடைவார்கள். அவர்களின் கைகளில் அவர்களின் செல்வம் ஏதும் (எஞ்சி) இருக்காது.

அவன் பாழடைந்த இடம் ஒன்றைக் கடந்து செல்வான். அதைப் பார்த்து, “உன்னிடம் இருக்கிற புதையல்களை வெளிப் படுத்து” எனக் கூறுவான். அப்போது (வெளிப்படும்) அந்தப் புதையல்கள், இராணித் தேனீக்களை (பின்பற்றிச் செல்லும் தேனீக்களை)ப் போன்று அவனைப் பின்தொடர்ந்து செல்லும்.

பின்னர், அவன் வாட்டசாட்டமான இளைஞர் ஒருவரை அழைத்து, அவரை வாளால் வெட்டி இரண்டு துண்டுகளாக்கி, அம்பெய்யும் தூரத்திற்கு இடைவெளி விட்டு (அவ்விரண்டையும்) போடுவான். பின்னர் அந்தச் சடலத்தை அழைப்பான். உடனே அந்த இளைஞர் முகம் ஒளிர சிரித்துக் கொண்டே எழுந்து வருவார்”

*என்றும் இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்:*

***அறிவித்தவர்: நவ்வாஸ் இப்னு சம்ஆன்(ரலி), நூல்: முஸ்லிம் 5629***

*"தஜ்ஜால் (மதீனாவை நோக்கி) வருவான்; மதீனாவின் வாசல்களில் நுழைவது அவனுக்குத் தடுக்கப்பட்டிருக்கிறது; எனவே, (மதீனாவுக்கு வெளியே), மதீனாவில் உலர் நிலத்தில் அவன் தங்குவான்; அவனை நோக்கி மக்களில் சிறந்த ஒரு மனிதர் அன்று புறப்படுவார்.*

*"இறைத்தூதர்(ஸல்) (அடையாளம்) சொல்லிய தஜ்ஜால் நீதான் என நான் உறுதியாகக் கூறுகிறேன்!" என அவர் கூறுவார்.*

*"நான் இவனைக் கொன்று, பிறகு உயிர்ப்பித்தால் (என்) விஷயத்தில் நீங்கள் சந்தேகம்கொள்வீர்களா?" என தஜ்ஜால் (மக்களை நோக்கி) கேட்பான்.*

*"கொள்ளமாட்டோம்!" என மக்கள் கூறுவார்கள்.*

*அவன் அவரைக் கொன்று, பின்னர் உயிர்ப்பிப்பான். அப்போது, அந்த நல்ல மனிதர் உயிர்ப்பிக்கப்பட்டதும், "அல்லாஹ்வின் மீதாணையாக! இன்றைய தினத்தைவிடத் தெளிவாக உன்னைப் பற்றி நான் (இதற்கு முன்) ஒருபோதும் அறிந்திருக்கவில்லை!" எனக் கூறுவார்.*

*"நான் இவரைக் கொல்வேன்!" என தஜ்ஜால் கூறுவான். ஆனால், அவனால் அவரைக் கொல்ல முடியாது!" என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*

***அறிவித்தவர்: அபூ சயீத்(ரலி), நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 1882***

மேற்கண்ட ஹதீஸ்கள் தஜ்ஜால் இயல்புக்கு மாற்றமான அல்லாஹ்வால் மட்டுமே செய்ய முடிந்த காரியங்களைச் செய்வான் எனக் கூறுகின்றன. இதை நம்பினால் இணைவைப் பாகிவிடும் எனக் கூறி இந்த ஹதீஸ்களை முஃதஸிலா காதியானிகள் மறுக்கின்றனர்.

சூனியத்தால் பாதிப்பு ஏற்படாது எனக் கூறுபவர்கள் தஜ்ஜால் தொடர்பாக வரும் இந்த ஹதீஸ்களை ஏற்கின்றனர். இங்கே இவர்களின் இரட்டை வேடம் அம்பலமாகிறது. தஜ்ஜால் தொடர்பான ஹதீஸ்களை நம்புவது இணைவைப்பு என இவர்கள் சொல்வதில்லை. இதையும் மறுத்துவிட்டால் இவர்களே முஃதஸிலா காதியானிகள் என மக்கள் அறிந்து கொள்வார்கள் என்ற பயமோ? அல்லாஹ்வே அறிந்தவன்.

*தஜ்ஜால் பல அற்புதங்களைச் செய்தாலும் இதை அல்லாஹ் வின் நாட்டம் இல்லாமல் அவன் செய்யவில்லை. அல்லாஹ்வே அவன் மூலம் இந்தக் காரியங்களை மக்களை சோதிப்பதற்காக வெளிப்படுத்துகிறான். எனவே, அல்லாஹ்வின் நாட்டப்படியே இது நடக்கிறது என்று நம்பும்போது இவ்வளவு பெரிய விஷயம்கூட இணைவைப்பின்றி இறைநம்பிக்கையாகிறது.*

*சூனியத்தால் ஏற்படும் பாதிப்பும் இது போன்றதாகும். சூனியத்தால் ஏற்படும் பாதிப்பை அல்லாஹ்வே படைக்கிறான். சூனியத்தின் மூலம் எப்போது? யாருக்கு? என்ன பாதிப்பு? ஏற்பட வேண்டும் என அவன் முடிவு செய்வதே நடக்கும். இதுவன்றி சூனியக்காரன் விரும்பிய நேரத்தில், தான் விரும்பும் பாதிப்பை விரும்பிய நபர்களுக்கு ஏற்படுத்த முடியாது. இந்த விஷயத்தில் அதிகாரம் இறைவனிடம்தான் எனும்போது இந்த நம்பிக்கை இறைநம்பிக்கையைத் தான் நமக்கு அதிகப்படுத்துகிறது.*

*தஜ்ஜால் சாமிரி போன்ற தனி மனிதர்களுக்கே இயல்புக்கு மாற்றமான தன்மையை அல்லாஹ் வழங்கினான். சூனியக்காரர்கள் யார் வேண்டுமானாலும் சூனியம் செய்வார்கள் என நம்பப்படுகிறது. எனவே, இது ஷிர்க் என்றும் வாதிடுகின்றனர்.*

*ஒருவர் என்றாலும் பலர் என்றாலும் அதிகாரம் அல்லாஹ்வின் கையில் இருக்கும்போது அதை இணைவைப்பு எனக் கூறக் கூடாது. அற்புதம் செய்யும் ஆற்றலை ஒரு நபிக்கு மட்டும் அல்லாஹ் வழங்கவில்லை. மாறாக பல நபிமார்களுக்கு வழங்கினான். பலருக்கு வழங்கினாலும் யார் யாருக்கு வழங்க வேண்டும்? எப்போது வழங்க வேண்டும்? எதை வழங்க வேண்டும்? என்பதை அல்லாஹ்வே முடிவு செய்வதால் இது இணைவைப்பு என்று சொல்லமாட்டோம்.*

*நோயாளிக்கு ஓதிப்பார்த்து குணமளிக்கும் வேலையை பலர் செய்கிறார்கள். இதையும் இணைவைப்பு என்று சொல்ல மாட்டோம். பிறகு ஏன்? அல்லாஹ் நாடும் போதே சூனியத்தால் பாதிப்பு ஏற்படும் என்று கூறுவதை மட்டும் இணைவைப்பு என்று சொல்ல வேண்டும்?*

*ஆயிரம் சூனியக்காரர்கள் சூனியம் செய்கிறார்கள். அல்லாஹ் நாடவில்லை என்றால் இவர்கள் அனைவரும் செய்த சூனியத்தால் ஒன்றும் ஏற்படாது. ஒருவரின் சூனியத்தால் மட்டும் பாதிப்பு ஏற்படுவதை அல்லாஹ் நாடினால் அது மட்டுமே ஏற்படும். அனைத்து அதிகாரமும் அல்லாஹ்வுடை கையில் இருக்கிறது.*

*அவனே அனைத்தையும் முடிவு செய்கிறான். சூனியத்தால் ஏற்படும் தீங்கையும் அவனே உருவாக்குகிறான். அவனே அந்த தீங்கை குணமாக்குகிறான். இவ்வாறு நம்புவது எப்படி இணை வைப்பாகும்?*

*இயல்புக்கு மாறான தன்மைகளை அடியார்களிடம் அல்லாஹ் வெளிப்படுத்தினால் அடியார்களுக்கு அந்த சக்தி இல்லை. அல்லாஹ்வே இவற்றை செய்கிறான். அடியார்கள் மூலம் இதை வெளிப்படுத்துகிறான் என்று நம்ப வேண்டும். தஜ்ஜால், சாமிரீ அதிசயங்கள், நபிமார்களின் அற்புதம், ஓதிப் பார்த்து குணமாக்குதல், ஜின்கள் ஒட்டுக் கேட்கும் நிகழ்வு ஆகிய விஷயங்களைப் புரிந்துகொள்வதைப் போன்று, சூனியத்தால் பாதிப்பு ஏற்படுவதையும் புரிந்துகொண்டால் ஒரு பிரச்னையும் இல்லை.*

## சில செய்திகளை ஒட்டுக்கேட்கும் ஜின்கள்

*மறைவான விஷயத்தை அல்லாஹ்வைத் தவிர வேறு யாராலும் அறிய முடியாது. ஆனால் மக்கள் குறிகாரர்கள் சொல்வதை உண்மை என நம்புகிறார்களா? எனச் சோதிப்பதற்காக வானுலகில் பேசப்படுகிற செய்திகளில் ஓரிரு விஷயங்களை ஜின்கள் செவியுறும் வகையில் அல்லாஹ்வின் ஏற்பாடு உள்ளது.*

*கடும்போராட்டத்திற்கு இடையே ஓரிரு விஷயங்களை ஒட்டுக் கேட்ட ஜின்கள் உலகில் உள்ள குறிகாரர்களின் உள்ளத்தில் அந்த விஷயங்களை போட்டுவிடுகின்றன. குறிகாரர்கள் இத்துடன் பலப் பொய்களைச் சேர்த்து குறிசொல்கின்றனர்.*

*குறிகாரன் சொல்லும் வார்த்தைகள் அனைத்தும் 100 சதவிகிதம் பொய்யாகவே இருந்தால் அவனை யாரும் நம்ப மாட்டார்கள். ஓரிரு விஷயங்கள் உண்மையாக அமைந்துவிடுவதால் ஈமான் இல்லாதவர்கள் இதைக் கண்டு அவனுக்கு மறைவான ஞானம் உண்டு என நம்பிவிடுகின்றனர். இது மனிதர்களை சோதிப்பதற்காக அல்லாஹ் ஏற்படுத்திய ஏற்பாடாகும்.*

*கட்டுப்படாத ஒவ்வொரு ஷைத்தானிடமிருந்தும் பாது காப்பதற்காக முதல் வானத்தை நாம் நட்சத்திரங்களைக் கொண்டு அலங்கரித்தோம். உயர்ந்த கூட்டத்தாரிடமிருந்து* ***சில***

*பொய்யுரை ஒட்டுக் கேட்பவனைத் தவிர அவர்களால் செவியுற முடியாது. அவர்களை விரட்டுவதற்காக எல்லாத் திசைகளிலிருந்தும் அவர்கள் மீது எறியப்படும். அவர்களை பிரகாசமான தீப்பந்தம் விரட்டும். அவர்களுக்கு நிலையான வேதனையும் உண்டு.* **அல்குர்அன் 39:7**

***ஒட்டுக் கேட்பவனைத் தவிர*** *விரட்டப்பட்ட அனைத்து ஷைத்தானிடமிருந்தும் வானத்தை நாம் பாதுகாத்துள்ளோம். அவனை ஒளிவீசும் தீப்பந்தம் விரட்டும்.* **அல்குர்அன் 15:17**

*ஷைத்தான்கள் யார் மீது இறங்குவார்கள் என்பதை உங்களுக்கு நான் அறிவிக்கவா? பொய்கூறும் ஒவ்வொரு பாவியின் மீதும் இறங்குகின்றனர்.* ***அவர்கள் ஒட்டுக்கேட்டதை போடுகின்றனர்.*** *அவர்களில் அதிகமானோர் பொய்யர்களே.*
**அல்குர்அன் 26:221**

*ஜின்களால் ஓரிரு விஷயங்களை ஒட்டுக்கேட்க முடியும் என இவ்வசனங்கள் கூறுகின்றன. மேலும் இதற்கு ஏராளமான நபிமொழிகளும் ஆதாரமாக உள்ளன.*
***ஸஹீஹ் அல் புகாரீ: 4701, 1355 ஸஹீஹ் முஸ்லிம்: 4136***

*இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் சோதிடர்கள் குறித்துச் சிலர் கேட்டனர். அவர்களிடம் இறைத்தூதர்(ஸல்) "சோதிடர்கள் (பொருட்படுத்தத் தக்க) ஒரு பொருளே அல்ல" என்று பதில் அளித்தார்கள். அவர்கள், "இறைத்தூதர் அவர்களே! அவ்வாறாயின், சோதிடர்கள் சில வேளைகளில் ஒன்றைப் பற்றி அறிவிக்க அது உண்மையாகி விடுகிறதே (அது எப்படி?)" என்று வினவினர். அதற்கு இறைத்தூதர்(ஸல்), "அந்த உண்மையான வார்த்தைகளை ஜின் (வானவரிடமிருந்து) ஒட்டுக் கேட்டு வந்து தம் (சோதிட) நண்பனின் காதில் சேவல் கொக்கரிப்பது போல் போட்டு விடுகிறது. சோதிடர்கள் அதனுடன் நூற்றுக்கும் அதிகமான பொய்களைக் கலந்து விடுகின்றனர்" என்று கூறினார்கள்.*
***அறிவித்தவர்:ஆயிஷா(ரலி), நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 6213***

*அல்லாஹ் நினைத்தால் ஜின்களால் ஓரிரு விஷயங்களைக் கூட கேட்க முடியாத அளவுக்கு முழுமையாக தடுக்க முடியும். ஆனால், அல்லாஹ் இதை விரும்பவில்லை. இப்படியொரு நிலையை ஏற்படுத்தி இதன் மூலம் மனிதர்களை அல்லாஹ் சோதிக்க நாடுகிறான். எனவே இதை நாம் மறுக்க முடியாது.*

நடக்கப்போகின்ற ஒருசில விஷயங்களை சில ஜின்கள் செவியுறுவதும் அந்த ஜின்களின் மூலம் அத்தகவல் குறிகாரனுக்கு கிடைப்பதும் இயல்புக்கு மாறான நிகழ்வாகும். நாத்திகச் சிந்தனை உள்ளவர்கள் இதனை ஏற்கமாட்டார்கள். ஆனால், அல்லாஹ்வை யும் அவன் தூதரையும் நம்பியவர்கள் நிச்சயம் இதனை ஏற்பார்கள்.

வானுலகச் செய்தியை ஜின்கள் ஒட்டுக்கேட்ட நிகழ்வு நபி(ஸல்) அவர்கள் நபியாகுவதற்கு முன்னால் உள்ளது எனக் கூறவும் முடியாது. ஏனென்றால், நபி(ஸல்) மதீனா சென்ற பிறகும் ஜின்கள் வானுலக செய்திகளை ஒட்டுக்கேட்பது சம்பந்தமாக பலமுறை மக்களிடம் கூறியுள்ளார்கள்.

மறைவானவற்றை அல்லாஹ்வைத் தவிர வேறு யாராலும் அறிய முடியாது. ஜின்களும் குறிகாரர்களும் இதை எப்படி அறிவார்கள்? எனக் கேள்வி கேட்டு மேற்கண்ட வசனங்களை சகோதரர் பீஜே மறுப்பாரா?

இவ்விசயத்தில் குர்ஆனையும் நபிமொழிகளையும் நம்பக் கூடியவர்களை இணைவைப்பாளர்கள் என இவர் கூறினாலும் அது ஆச்சர்யமானதல்ல.

அல்லாஹ்வின் நாட்டத்தால் மிகவும் அரிதாக ஓரிரு விஷயங்களை சில ஜின்களால் கேட்க முடியும் என்பதால் மறை வானவற்றை அறியும் ஆற்றல் ஜின்களுக்கும் குறிகாரர்களுக்கும் இயல்பாகவே உள்ளது என சித்தரிப்பது அறியாமை. அதிகாரம் அனைத்தும் அல்லாஹ்விடம் உள்ளது. அவனுடைய நாட்டத்தை மீறி யாரும் ஒட்டுக்கேட்க முடியாது. யார் வேண்டுமானாலும் எதை வேண்டுமானாலும் ஒட்டுக்கேட்கும் வகையில் அல்லாஹ் நாடவும் மாட்டான். இதுபோன்று சூனியத்தின் பாதிப்பையும் விளங்கிக்கொண்டால் இதை இணைவைப்பு என அறிவுள்ள யாரும் கூறமாட்டார்.

## அல்லாஹ் நாடினால் சிலைகள் பேசுமா?

“அல்லாஹ் நாடினால் சிலைகள் பேசும். உதவி செய்யும் என்று நம்பலாமா?” எனக் கேட்கின்றனர். அல்லாஹ் இதில் நாடுவான். அதில் நாடுவான் என்று நாமாக இஷ்டத்திற்கு பேசக் கூடாது. அல்லாஹ் எவ்விஷயத்தில் எதை நாடுவான் என்பதைப் பற்றி அவன் கூறினாலே அதைப் பற்றி நாம் பேச நமக்கு உரிமை உள்ளது.

*சிலைகள் பேசாது. உதவி செய்யாது என அல்லாஹ் குர்ஆனில் தெளிவுபடுத்திவிட்டான். எனவே, இந்த விஷயத்தில் அல்லாஹ்வின் நாட்டத்தைப் பற்றி பேசுவது தவறு. கல் பேசாது. உதவி செய்யாது என்றே நாம் கூற வேண்டும். அதே நேரத்தில் ஒரு கல் பேசியது என்ற தகவலை அல்லாஹ்வோ, அவனுடைய தூதரோ நமக்குச் சொன்னால் அப்போது அதை நம்புவது நம் கடமையாகிவிடும். இப்போது இதற்கு எதிராக கல் பேசாது என்று கூறினால், அவன் காஃபிராகிவிடுவான்.*

*சூனியத்தின் மூலம் பாதிப்பு ஏற்படும் என்ற கருத்தை நாம் சுயமாக கூறினால், அப்போது அல்லாஹ் இதனை நாடுவான் என்பது உங்களுக்கு எப்படித் தெரியும் என்று கேட்கலாம். அல்லாஹ்வே குர்ஆனில் சூனியத்தின் மூலம் நான் நாடினால் பாதிப்பு ஏற்படும் என்று கூறியுள்ளான். எனவே, நாமும் அவ்வாறே கூற வேண்டும். இதன் பிறகு நீ எப்படி கூறலாம்? என்று கேட்பதே தவறு. அல்லாஹ் நான் நாடுவேன் என்று சொன்ன பிறகு அல்லாஹ் நாடமாட்டான் என்று வாதிப்பது அல்லாஹ்வை எதிர்த்துப் பேசும் செயலாகும். முஃமின்கள் இது போன்று பேசமாட்டார்கள்.*

## உண்மையான இறைநம்பிக்கை

*சூனியத்தால் பாதிப்பு ஏற்படும் என்பதை நம் அறிவால் அறிந்துகொள்ள முடியவில்லை. அல்லாஹ்வும் அவன் தூதரும் சொன்னார்கள் என்பதற்காகவே இவ்வாறு நம்புகிறோம். நம் கண்களுக்கும் அறிவுக்கும் தெரியாவிட்டாலும் நம்புகிறோம் என்றால் இதுதான் ஈமான்.*

*அவர்கள் மறைவானவற்றை நம்புவார்கள். தொழுகையை நிலைநாட்டுவார்கள். நாம் அவர்களுக்கு வழங்கியதிலிருந்து செலவழிப்பார்கள்.* ***அல்குர்ஆன் 2:3***

*சூனியத்தால் பாதிப்பு ஏற்படும் என்பது என் அறிவுக்கு சரியாகத் தெரியவில்லை. எனவே, நம்பமாட்டேன். செய்து காட்டினால்தான் நம்புவேன் என்று கூறினால் அவர்கள் அல்லாஹ் வையும் அவன் தூதரையும் நம்பியவர்களாக மாட்டார்கள். மறாக நான் அறியாத விஷயம் ஒன்றும் இல்லை. எனக்குத் தெரியாத விஷயம் உண்மையில்லை என்ற தலைக்கனமே அவர்களை வழிகெடுக்கிறது.*

சூனியத்தால் பாதிப்பு ஏற்படாது என்று கூறுபவர்கள். உலகத்தில் கண்ணுக்குத் தெரியும் பாதிப்புகள் மட்டுமே உள்ளது. நமக்குத் தெரியாத மறைமுகமான பாதிப்புகள் இல்லை என்கின்றனர்.

சூனியம் கண்ணேறு போன்ற மறைமுகமான பாதிப்புகளும் உள்ளது என்ற நம்பிக்கை அல்லாஹ்விடத்தில் அதிக தொடர்பு களையும் ஆழமான நம்பிக்கையையும் ஏற்படுத்துகிறது. வெளிப் படையாக நாம் அறிந்த தீங்குகளுக்கு மருந்து மாத்திரையை பயன்படுத்தி மருத்துவம் செய்துகொள்வோம். ஆனால் சூனியம், கண்ணேறு போன்ற மறைமுகமான தீங்குகளிலிருந்து தப்பிக்க வல்ல அல்லாஹ்விடமே தீர்வு உள்ளது.

எனவே, மறைமுகமான பாதிப்பு உள்ளது என்று ஒரு சரியான முஃமின் நம்பும்போது அவன் தனக்கு ஏதாவது பாதிப்பு ஏற்பட்டால் அல்லாஹ்வை நினைப்பான். குர்ஆன் ஓதுவான். திக்ருகளை செய்வான். சூராக்களை ஓதி ஊதுவான். சூனியத்தால் பாதிக்கப்பட்டிருந்த நேரத்தில் இறைத்தூதர்(ஸல்) செய்ததைப் போன்று அதிகம் அதிகமாக பிரார்த்தனை செய்வான்.

மறைமுகமான முறையில் நமக்கு தீங்கு ஏற்படலாம் என்று நம்பும் அதே வேலையில் அது அல்லாஹ் நாடினால் தான் ஏற்படும் என்று அவன் எண்ணும்போது இந்த நம்பிக்கை அவனிடம் தவக்குலை அதிகப்படுத்துகிறது. அவன் அல்லாஹ்வை முழுமை யாக சார்ந்திருப்பான். எனவே, இந்த நம்பிக்கையால் ஒரு முஃமினுக்கு நன்மையே ஏற்படுகிறது.

பாதிப்பே இல்லை என்று ஒட்டுமொத்தமாக மறுப்பது தவக்குல் (ஆழமான நம்பிக்கை) அல்ல. பாதிப்பு ஏற்படும். ஆனால், அந்த பாதிப்பு என் இறைவன் நாடினால்தான் ஏற்படும் என்று நம்புவதே ஆழமான நம்பிக்கையாகும். பின்வரும் வசனங்களில் இருந்து இதை அறியலாம்.

**அல்லாஹ்வின் அனுமதியின்றி** எந்த துன்பமும் ஏற்படு வதில்லை. அல்லாஹ்வை நம்புவோரின் உள்ளத்தில் அவன் நேர்வழி காட்டுகிறான். அல்லாஹ் அனைத்து விஷயத்தையும் அறிந்தவன். **அல்குர்ஆன் 64:11**

தெளிவான சான்றை எங்களிடம் கொண்டு வாருங்கள் என்று கேட்டனர். அவர்களின் தூதர்கள் நாங்கள் உங்களைப் போன்ற மனிதர்களே. ஆனால், தன் அடியார்களில் தான் நாடிய

*வர்களுக்கு அல்லாஹ் அருள்புரிகிறான். **அல்லாஹ்வின் அனுமதி யின்றி** எங்களால் உங்களிடம் அற்புதத்தை கொண்டுவர இயலாது. அல்லாஹ்வையே இறைநம்பிக்கையாளர்கள் சார்ந்திருக்கட்டும். அல்லாஹ் எங்களுக்கு நேர்வழிகாட்டியிருக்கும்போது நாங்கள் எப்படி அவனை சாராமலிருப்போம்? நீங்கள் எங்களை நோவினை செய்ததை பொறுத்துக்கொள்வோம். சார்ந்திருப்பவர்கள் அல்லாஹ்வையே சார்ந்திருக்கட்டும். **அல்குர்ஆன் 14:12***

*இறைநம்பிக்கையாளர்களை கவலையில் ஆழ்த்துவதற்காக இரகசியம் ஷைத்தானிடமிருந்தே வருகிறது. **அல்லாஹ்வின் அனுமதியின்றி** அதனால் அவர்களுக்கு எந்தத் தீங்கும் நேராது. எனவே, இறைநம்பிக்கையாளர்கள் அல்லாஹ்வை சார்ந்திருக் கட்டும். **அல்குர்ஆன் 58:10***

*குர்ஆனில் பிஇத்னில்லாஹ் என்று வரும் வசனங்கள் அனைத்தையும் எடுத்துப்பார்த்தால் அந்த வசனங்களில் அல்லாஹ் குறிப்பிடும் விஷயங்கள் உலகில் நடக்கக் கூடியது என்றும் அதிகாரம் அல்லாஹ்விடம் உள்ளது என்றும் அல்லாஹ் கூறுவதை அறியலாம். எனவே, சூனியத்தின் மூலம் அல்லாஹ் அனுமதித்தால் தான் பாதிப்பு ஏற்படும் என்ற கூற்று சூனியத்தால் பாதிப்பு ஏற்படும் என்பதை தெரிவிப்பதுடன் அதிகாரம் அல்லாஹ்விற்கே உரியது என்ற ஏகத்துவ கருத்தையே அறிவிக்கிறது.*

## *சவடால் சவால்கள்*

*சூனியத்தால் எந்த பாதிப்பும் ஏற்படாது என்று கூறுபவர்கள் சூனியத்தின் மூலம் பாதிப்பு ஏற்படுவது உண்மை என்றால் எனக்கு செய்துகாட்டி இதை நிரூபியுங்கள் என சவால் விடுகின்றனர். இதன் மூலம் சூனியத்தால் எந்த பாதிப்பும் ஏற்படாது என்று மக்களை நம்ப வைக்க முயற்சிக்கிறார்கள்.*

*இந்த சவால் அல்லாஹ்விற்கும், அவன் தூதருக்கும், ஒட்டு மொத்த முஃமின்களுக்கும் எதிரான சவாலாகும். அல்லாஹ்வும் அவன் தூதரும் ஒரு காரியத்தை உண்மை என்று நம்பச்சொன்னால் அதை நம்பாமல் செய்துகாட்டினாலே நம்புவேன். இல்லை என்றால் நம்பமாட்டேன் என்று கூறுவது ஈமானை பாதிக்கும் மோசமான செயலாகும்.*

*இயல்புக்கு மாறான விஷயங்களை அடியார்களின் மூலம் அல்லாஹ் வெளிப்படுத்தும்போது அந்த அடியார்களிடம் அந்த*

*விஷயங்களை செய்துகாட்டச் சொன்னால் அவர்களால் செய்து காட்ட முடியாது. அதிகாரம் அல்லாஹ்விடத்தில் இருக்கும்போது அவன் முடிவுசெய்யாமல் இவர்கள் எப்படி செய்துகாட்ட முடியும்?*

*அல்லாஹ்வின் அனுமதியுடனே நபிமார்கள் அற்புதம் செய்ய முடியும். காஃபிர்கள் நபிமார்களிடம் எங்களுக்கு அற்புதம் செய்துகாட்டுங்கள் என்று கேட்டபோது அதற்கு நபிமார்கள் நாங்கள் விரும்பிய நேரத்தில் அற்புதம் செய்ய முடியாது என்றே பதிலளித்தனர். நல்லவர்கள் இந்த உண்மையை ஒப்புக்கொள் வார்கள். ஆனால், தீயவர்கள் இதை ஒப்புக்கொள்ளமாட்டார்கள்.*

*தெளிவான சான்றை எங்களிடம் கொண்டு வாருங்கள் என்று கேட்டனர். அவர்களின் தூதர்கள் நாங்கள் உங்களைப் போன்ற மனிதர்களே. ஆனால், தன் அடியார்களில் தான் நாடியவர்களுக்கு அல்லாஹ் அருள்புரிகிறான்.* ***அல்லாஹ்வின் அனுமதியின்றி*** *எங்களால் உங்களிடம் அற்புதத்தை கொண்டுவர இயலாது. அல்லாஹ்வையே இறைநம்பிக்கையாளர்கள் சார்ந்து இருக்கட்டும். அல்லாஹ் எங்களுக்கு நேர்வழிகாட்டி இருக்கும் போது நாங்கள் எப்படி அவனை சாராமலிருப்போம்? நீங்கள் எங்களை நோவினை செய்ததை பொறுத்துக்கொள்வோம். சார்ந்திருப்பவர்கள் அல்லாஹ்வையே சார்ந்திருக்கட்டும்.*

***அல்குர்ஆன் 14:12***

*இந்தப் பூமியில் எங்களுக்காக நீர் நீரூற்றை ஓடச் செய்யாத வரை உம்மை நாங்கள் நம்பமாட்டோம் என்று கூறினர். அல்லது பேரீச்சை மற்றும் திராட்சைத் தோட்டம் உமக்கிருந்து அதன் நடுவே ஆறுகளை நீர் ஓடச்செய்ய வேண்டும். அல்லது நீர் கூறியது போல் வானத்தை எங்கள் மீது துண்டு துண்டாக விழச் செய்ய வேண்டும். அல்லது அல்லாஹ்வையும் வானவர்களையும் நேரில் கொண்டுவர வேண்டும். அல்லது தங்கத்தால் உமக்கு வீடு இருக்க வேண்டும். அல்லது வானில் நீர் ஏறிச் சென்று நாங்கள் படிக்கும் வகையில் ஒரு புத்தகத்தை எங்களிடம் கொண்டுவரும் வரை நீர் ஏறிச் சென்றதை நாங்கள் நம்பிக்கை கொள்ளமாட்டோம் (என்று கூறினர்). (நபியே)* ***என் இறைவன் தூயவன் நான் மனிதனாகவும் தூதராகவுமே இருக்கிறேன்*** *என்று கூறுவீராக.*

***அல்குர்ஆன் 17:90***

*இவருக்கு ஒரு புதையல் அருளப்படக்கூடாதா? அல்லது இவருடன் வானவர் வர வேண்டாமா? என்று அவர்கள் கூறு*

*வதால் உம் உள்ளம் சங்கடப்பட்டு உமக்கு அறிவிக்கப்படும் இறைச் செய்தியில் சிலவற்றை நீர் விட்டுவிடக்கூடும். நீர் எச்சரிக்கை செய்பவரே. அல்லாஹ் அனைத்துப் பொருளுக்கும் பொறுப்பாளன்.*

***அல்குர்ஆன் 11:12***

*எங்களிடம் அற்புதம் வந்தால் அதை நாங்கள் நம்பிக்கை கொள்வோம் என்று அல்லாஹ்வின் மீது ஆணையிட்டு உறுதியாக கூறுகின்றனர். அற்புதங்கள் அல்லாஹ்விடமே உள்ளது என்று கூறுவீராக. அந்த அற்புதங்கள் வந்தால் அவர்கள் நம்பிக்கை கொள்வார்கள் என்பது உங்களுக்கு எப்படி தெரியும்?*

***அல்குர்ஆன் 6:109***

*இவருக்கு அவருடைய இறைவனிடமிருந்து அற்புதம் அருளப்படக்கூடாதா? என்று கேட்கின்றனர். மறைவான ஞானம் அல்லாஹ்விற்கே உள்ளது. எனவே, (அல்லாஹ்வின் வேதனையை) எதிர்பாருங்கள். நானும் உங்களுடன் எதிர்பார்க்கிறேன் எனக் கூறுவீராக.* ***அல்குர்ஆன் 10:20***

*அற்புதத்தை செய்துகாட்டினால் தான் நாங்கள் நம்புவோம் என்ற வாதத்தை காஃபிர்களே நபிமார்களிடம் வைத்தனர். இதற்கு நபிமார்கள் அல்லாஹ் நாடும்போது தான் அற்புதங்கள் நடக்கும். நீங்கள் கேட்ட நேரத்தில் எங்களால் செய்துகாட்ட முடியாது என்றே பதிலளித்தனர். எனவே, அல்லாஹ்வின் அதிகாரத்தில் உள்ள விஷயத்தை விரும்பிய நேரத்தில் செய்துகாட்டி நிரூபிக்க முடியாது.*

*வேதனையைக் கொண்டு வரும் அதிகாரம் அல்லாஹ்விடமே உள்ளது. காஃபிர்கள் நூஹ் நபியிடம் வேதனையைக் கொண்டு வா என்று கேட்டனர். அதற்கு நூஹ்(அலை) அளித்த பதிலை சிந்தித்துப்பாருங்கள்.*

*நூஹே! நீர் எங்களிடம் தர்க்கம் செய்துவிட்டீர். அதிகமாகவே தர்க்கம் செய்துவிட்டீர். நீர் உண்மையாளராக இருந்தால் நீர் எச்சரிப்பதை கொண்டு வாரும் என்றனர். அதற்கு அவர் அதனை* **அல்லாஹ்வே தான் நாடும்போது உங்களிடம் கொண்டு வருவான்.** *உங்களால் ஒன்றும் செய்ய முடியாது என்றார்.*

***அல்குர்ஆன் 11:32***

*அல்லாஹ்வின் அதிகாரத்தில் உள்ள எந்த விஷயத்தையும் செய்துகாட்டச் சொல்லிக் கேட்க முடியாது என்பதை இந்த*

வசனங்கள் தெளிவாக உணர்த்துகிறது. நோயாளிகளுக்கு ஓதிப் பார்த்து குணமாக்கலாம் என்பதை முன்னர் அறிந்துகொண்டோம்.

ஒரு நோயாளியை கொண்டு வந்து இவருக்கு ஓதிப்பார்த்து குணமாக்கிக்காட்டுங்கள் என்று சவால் விடலாமா? அப்படி சவால் விட்டால் நான் ஓதிப்பார்த்து குணமளிக்கிறேன் என்று நல்ல முஃமின் கூறுவானா? குணமளிப்பது அல்லாஹ்வின் அதிகாரத்தில் இருக்கும்போது செய்துகாட்டச் சொல்லி கேட்டால் அவன் இஸ்லாமிய நெறியை அறிந்துகொள்ளாத அறிவிலியாகவே இருக்க முடியும்.

இது போன்றே சூனியத்தால் ஏற்படும் பாதிப்பை அல்லாஹ் தன் அதிகாரத்தில் வைத்திருக்கிறான். மறைமுகமாக பாதிப்பு ஏற்படுத்தும் விஷயமாக இது இருப்பதால் சூனியக்காரன் அவன் விரும்பிய நேரத்தில் விரும்பிய பாதிப்புகளை ஏற்படுத்த முடியாது. அவனிடத்தில் செய்து காட்டு என்று கேட்பதும் அறிவீனம். நான் செய்துகாட்டுவேன் என்று அவன் கூறுவது அதை விட முட்டாள்தனமாகும்.

மேலும், சூனியம் என்பது காஃபிர்கள் செய்யும் ஹராமான தீய செயலாகும். முஸ்லிம்களுக்கும் இதற்கும் எந்த சம்பந்தமும் இல்லை. இதைச் செய்யக்கூடாது என்று முஃமின்களை அல்லாஹ் தடுத்துள்ளான். எனவே, சூனியத்தைப் பற்றிய அறிவு இறைநம்பிக்கையாளர்களிடம் இல்லை.

இந்நிலையில் முஸ்லிம்களைப் பார்த்து எனக்கு சூனியம் செய்து காட்டுங்கள் என்று ஒருவர் சவால் விட்டால் முஸ்லிம்களே காஃபிர்களாக மாறி ஹராமான காரியத்தைச் செய்து நரகத்திற்குச் செல்லுங்கள் என்றே அவர் கூறுகிறார். நன்மையை ஏவுவதற்கு பதிலாக தீமைக்கு அழைப்பு விடுகிறார். அல்லாஹ்வை பயந்தவர்கள் இது போன்ற வேலையை ஒருபோதும் செய்யமாட்டார்கள். இது போன்று அறிவீனமாக சவால் விட்டு முஸ்லிம்களுக்கு சோதனையாகவும் இருக்கமாட்டார்கள்.

## சூனியமும் - அற்புதமும் ஒன்றா?

சூனியத்தால் பாதிப்பு ஏற்படும் என்று நம்பினால் சூனியக் காரன் அற்புதம் செய்கிறான் என்ற அர்த்தம் வருகிறது. எனவே, சூனியத்தால் எந்த பாதிப்பும் ஏற்படாது என்று வாதிடுகின்றனர்.

*சம்பந்தமில்லாத விஷயத்தை சம்பந்தப்படுத்தி மறுக்கும் போக்கு மிகவும் ஆபத்தானது. சூனியம் விஷயத்தில் பல இடங்களில் இந்த ஆபத்தான வேலையை இவர்கள் தொடர்ந்து செய்துகொண்டிருக்கிறார்கள். அல்லாஹ் தான் இவர்களைக் காப்பாற்ற வேண்டும். இவர்களின் இந்த அளவுகோல் படி பார்த்தால் நோயாளிகளுக்கு ஓதிப்பார்ப்பதையும் மறுக்க வேண்டும். மருந்து மாத்திரை இல்லாமல் குணப்படுத்துவது அற்புதமாகும். மனிதர்கள் அற்புதம் செய்ய முடியாது. எனவே, நோயாளிக்கு ஓதிப்பார்த்தால் குணம் ஏற்படாது என்று கூறுவார்களா?*

*ஜின்களில் சிலர் வானுலகில் பேசப்படும் சில விஷயங்களை ஒட்டுக் கேட்டு வந்து குறிகாரனிடம் சேர்த்துவிடுகின்றனர். இதவும் இயல்புக்கு மாறான ஒரு நிகழ்வாகும். இதையும் அற்புதத்துடன் ஒப்பிட்டுக் குழப்புவார்களா?*

*அற்புதத்திற்கும் சூனியத்திற்கும் இடையே மிகப்பெரிய வேறு பாடு உள்ளது. இந்த வேறுபாட்டை உணராமல் இரண்டையும் ஒன்றாகக் காட்டி மக்களைக் குழப்பும் வேலையை செய்கிறார்கள். நபிமார்கள் அற்புதம் செய்யும்போது நான் அல்லாஹ்வின் உதவியால் அற்புதம் செய்யப்போகிறேன். பாருங்கள் என்று கூறி மக்களை அழைப்பார்கள். அவர்கள் சொன்னது போல் மக்களுக்கு முன்னால் அவர்கள் அற்புதம் நிகழ்த்திக்காட்டுவார்கள்.*

*அற்புதம் நிகழ்த்துவது அல்லாஹ்வின் அதிகாரம். நபிமார் களுக்கு அல்லாஹ்வின் தொடர்பு இருப்பதால் மக்களுக்கு எப்போது? என்ன அற்புதத்தைச் செய்து காட்ட வேண்டும் என்ற தகவலை அல்லாஹ் அவர்களுக்கு அறிவித்துவிடுவான். அல்லாஹ் அறிவித்தபடி நபிமார்கள் அற்புதம் செய்துகாட்டுவார்கள். நபி மூஸா(அலை) தைத்தடியை பாம்பாக மாற்றிக் காட்டியதும் கடலை இரண்டாகப் பிளந்ததும் இந்த அடிப்படையில் ஆகும்.*

*சூனியக்காரர்கள் இது போன்று மக்களுக்கு முன்னறிவிப்புச் செய்து பிறருக்கு பாதிப்பு ஏற்படுத்திக்காட்ட முடியாது. இந்த அதிகாரம் அல்லாஹ்விடம் உள்ளது. அல்லாஹ் சூனியக்காரனுக்கு இந்த நேரத்தில் இவனுக்கு இன்ன பாதிப்பு ஏற்படும் என்று வஹீ அறிவிக்கமாட்டான். எனவே, சூனியக்காரனால் எப்போது? யாருக்கு? என்ன? பாதிப்பு ஏற்படும் என்பதை அறிய முடியாது.*

*சில சூனியக்காரர்கள் நான் இந்த நாளுக்குள் இந்த நபருக்கு இந்த பாதிப்பை ஏற்படுத்துவேன் என்று சொன்னாலும் அவன் பொய் சொல்கிறான் என்பதே உண்மை. அல்லாஹ்வின் அதிகாரத்தில் உள்ள விஷயத்தை இவ்வாறு இவன் முடிவு செய்ய முடியாது. எனவேதான், இவ்வாறு சவால் விட்ட சூனியக்காரர்கள் போட்டியில் தோற்றுப்போய்விடுகின்றனர்.*

*நான் இன்னாருக்கு ஓதிப்பார்த்து குணமாக்கிவிடுவேன் என்று யாராவது சவால் விட முடியுமா? அவ்வாறு சவால் விடக்கூடியவன் மார்க்க அறிஞனாக இருக்க முடியுமா? நல்லவர்களே இந்த நன்மை செய்வதில் சவால் விட முடியாது என்றால் தீயவனான சூனியக்காரன் மறைமுகமான தீங்கை ஏற்படுத்துவதில் எப்படி சவால் விட முடியும்? அவன் சவால் விட்டாலும் அதை அவனால் எப்படி நடத்திக்காட்ட முடியும்? என்பதை நாம் சிந்தித்துப்பார்க்க வேண்டும்.*

*கண்ணேறு என்ற மறைமுகமான பாதிப்பும் இருப்பதாக இறைத் தூதர்(ஸல்) கூறியுள்ளார்கள். தீய எண்ணத்துடன் பொறாமைக் கொள்ளும் தீயவர்களை காரணமாக ஆக்கி அல்லாஹ் இந்தத் தீங்கை உருவாக்குகிறான். ஆனால், பொறாமை கொள்பவன் தான் விரும்பிய நேரத்தில் விரும்பிய நபருக்கு கண்ணேறு மூலம் பாதிப்பு ஏற்படுத்த முடியாது. இந்தத் தீங்கை ஏற்படுத்துவது அல்லாஹ்வின் கையிலேயே உள்ளது. இந்த உண்மையை விளங் காமல் இதையும் அற்புதத்துடன் சேர்த்து குழப்பும் வேலையை இவர்கள் செய்தாலும் அது ஆச்சரியமான விஷயமல்ல.*

*நபிமார்கள் அற்புதம் செய்வார்கள் என்று நாம் நம்பும்போது, இந்த ஆற்றல் நபிமார்களுக்கு இல்லை; அல்லாஹ்விடமே இருக்கிறது என்பதை நாம் புரிந்து கொள்கிறோம். இவ்வாறே , சூனியத்தின் மூலம் பாதிப்பைத் தீர்மானிக்கும் அதிகாரம் அல்லாஹ்விடமே உள்ளது. இவ்வாறு இருக்க, சூனியக்காரன் தான் விரும்பிய நேரத்தில் விரும்பிய அற்புதத்தைச் செய்துவிடுவான் என இங்கு மட்டும் தலைகீழாகப் புரிந்து கொள்வது ஏனோ?*

*எனவே, அல்லாஹ் நாடினால், சூனியத்தால் பாதிப்பு ஏற்படும் என்று நம்பினால், சூனியக்காரனுக்கு அற்புதம் செய்யும் ஆற்றல் உள்ளது என்று கூற வேண்டிய நிலை ஒருபோதும் வராது. சூனியத்தின் நிலை வேறு. நபிமார்கள் செய்த அற்புதத்தின் நிலை வேறு. இரண்டையும் ஒன்றாகக் காட்டி மக்களைக் குழப்பக்கூடாது.*

# கண்ணேறு

*கண்ணேறு என்ற பாதிப்பு இருப்பதாக குர்ஆனும் நபி மொழிகளும் கூறுகிறது. சூனியத்தால் பாதிப்பு ஏற்படாது என்று மறுப்பவர்கள் கண்ணேறையும் மறுக்கின்றனர்.*

*சூனியமும் கண்ணேறும் வெவ்வேறு விஷயங்கள் என்றாலும் இரண்டும் ஒரே அடிப்படையைக் கொண்ட வெவ்வேறு தீங்கு களாகும். இதனால் தான் ஹதீஸ் மறுப்பாளர்கள் முதலில் சூனியத்தை மறுத்தனர். அடுத்து கண்ணேறு தொடர்பாக வரும் ஹதீஸ்களை மறுத்தால் தான் சூனியத்தில் தங்கள் கொள்கையை நிலைநாட்ட முடியும் என்ற நிலை வரும்போது கண்ணேறு பற்றி வரும் ஹதீஸ்களையும் மறுத்துவிட்டனர்.*

*ஒருவன் மற்றவரை பொறமை என்ற தீய எண்ணத்துடன் பார்க்கும்போது அல்லாஹ் அவன் நாடும்போது தீங்கை ஏற்படுத்து கிறான். இவன் யாரைப் பார்த்து பொறமைகொண்டானோ அவனுக்கு அந்தத் தீங்கு ஏற்படுகிறது. இந்த தீங்கை ஏற்படுத்திய பாவத்தை பொறமைகொண்டவன் சுமந்துகொள்கிறான். இதைத் தான் கண்ணேறு என்று நபிமொழிகள் கூறுகிறது.*

*பொறாமை கொள்வதை நபி(ஸல்) தடைசெய்துள்ளார்கள்.*

*“இரண்டு விஷயங்களைத் தவிர வேறெதிலும் பொறாமை கொள்ளக் கூடாது. ஒரு மனிதருக்கு அல்லாஹ் வழங்கிய செல்வத்தை அவர் நல்ல வழியில் செலவு செய்தல்; இன்னொரு மனிதருக்கு அல்லாஹ் அறிவு ஞானத்தை வழங்கி, அதற்கேற்ப அவர் தீர்ப்பு வழங்குபவராகவும் கற்றுக் கொடுப்பவராகவும் இருப்பது (ஆகியவையே அந்த இரண்டு விஷயங்கள்)” என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*

***அறிவித்தவர்: அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி),***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 73***

*கண்ணேறு உண்டு என்று ஏராளமான நபிமொழிகள் கூறுகிறது. சுமார் பத்து நபித்தோழர்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து கண்ணேறு உண்டு என்ற கருத்தை அறிவிக்கின்றனர். எனவே, இந்த ஹதீஸ் முதவாதிர் என்ற நம்பகத் தன்மையில் மிக உறுதியான உயர்ந்த நிலையை அடைந்துள்ளது.*

*தவறாகவோ பொய்யாகவோ இருக்க வாய்ப்பே இல்லாமலும் சந்தேகத்திற்கு அப்பாற்பட்டும் உள்ள ஹதீஸ்களை முதவாதிர்*

*என்று ஹதீஸ் துறையினர் குறிப்பிடுவார்கள். இது சஹாபாக்கள் தாபியீன்கள் என ஒவ்வொரு படித்தரத்திலும் பலர் இடம்பெற்று அவர்கள் வழியாக வரும் ஹதீஸாகும்.*

*கண்ணேறு தொடர்பாக வரும் ஹதீஸ்கள் இப்படிப்பட்ட உயந்த நிலையில் உள்ள ஹதீஸ்களாகும். இவை பொய்யாகவோ தவறாகவோ இருக்க வாய்ப்பே இல்லை. கண்ணேறு தொடர்பாக சிறு சிறு குறைகள் உள்ள அறிவிப்புகளும் நிறைய உள்ளன. அவற்றைத் தவிர்த்து ஆதாரப்பூர்மான ஹதீஸ்களை மட்டும் இங்கே அறிந்துகொள்வோம்.*

## அபூ ஹுரைரா(ரலி)

*“கண்ணேறு (ஏற்படுவது) உண்மையே” என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள். மேலும், பச்சைகுத்துவதைத் தடை செய்தார்கள்.*
***அறிவித்தவர்: அபூ ஹுரைரா(ரலி), நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 5740***

## இப்னு அப்பாஸ்(ரலி)

*“கண்ணேறு உண்மையாகும். விதியை ஏதேனும் ஒன்று வெல்ல முடியுமானால், கண்ணேறு அதை வென்றிருக்கும். (கண்ணேறுக்குக் காரணமான) உங்களிடம் குளித்துக் கொள்ளுமாறு கோரப்பட்டால் குளித்துக்கொள்ளுங்கள்” என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*

***அறிவித்தவர்: இப்னு அப்பாஸ்(ரலி), நூல்: முஸ்லிம் (4405)***

*இறைத்தூதர்(ஸல்), ஹஸன்(ரலி) மற்றும் ஹுஸைன்(ரலி) ஆகியோருக்காக (அல்லாஹ்விடம்) பாதுகாப்புக் கோரிவந்தார்கள். “அல்லாஹ்வின் முழுமையான (குணமளிக்கும்) சொற்களைக் கொண்டு ஒவ்வொரு ஷைத்தானிடமிருந்தும் நச்சுப் பிராணியிடமிருந்தும் தீய எண்ணத்துடன் தீண்டும் (பொறாமைக்) கண்ணிலிருந்தும் அவனிடம் பாதுகாப்புக் கோருகின்றேன்” எனும் இந்தச் சொற்களின் மூலம் உங்கள் இருவரின் தந்தை(யான இப்ராஹீம்(அலை) தம் மகன்களான) இஸ்மாயீல்(அலை) மற்றும் இஸ்ஹாக்(அலை) ஆகியோருக்காகப் பாதுகாப்புக் கோரிவந்தார்கள்-என்று கூறுவார்கள்.*

***அறிவித்தவர்: இப்னு அப்பாஸ்(ரலி),***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 3371***

## சஹ்ல் இப்னு ஹுனைஃப்(ரலி)

*என் தந்தை சஹ்ல் இப்னு ஹுனைஃப்(ரலி) கர்ரார் எனும் இடத்தில் குளித்தார்கள். அவர்கள் அணிந்திருந்த ஆடையை கழற்றியபோது ஆமிர் இப்னு ரபீஆ பார்த்துக்கொண்டிருந்தார். சஹ்ல் வெண்மை நிற அழகிய தோலுள்ள மனிதர். அப்போது ஆமிர் இன்று நான் பார்த்ததைப் போன்று வேறு எப்போதும் திரைக்குள் இருக்கும் கன்னிப்பெண்ணின் தோலைக்கூட பார்த்ததில்லை என்று கூறினார். உடனே அவ்விடத்தில் சஹ்ல் (ரலி) அவர்களுக்கு முடியாமல் போனது. அவருக்குச் காய்ச்சல் கடுமையானது. இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் சென்று சஹ்ல்(ரலி) அவர்களுக்கு காய்ச்சல் ஏற்பட்டுள்ளது. அவர் உங்களுடன் வர முடியாது என்று தெரிவிக்கப்பட்டது. உடனே அவரிடம் இறைத்தூதர்(ஸல்) புறப்பட்டு வந்தார்கள். ஆமிர் நடந்து கொண்ட விதம் பற்றி சஹ்ல்(ரலி) இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் தெரிவித்தார்கள். அப்போது இறைத்தூதர்(ஸல்) உங்களில் ஒருவர் ஏன் தன் சகோதரனை கொல்ல வேண்டும்? நீங்கள் (அவரிடம் விரும்பத்தக்க விஷயத்தை பார்க்கும்போது அவருக்காக) பரகத்தை வேண்டியிருக்கக்கூடாதா? கண்ணேறு என்பது உண்மையே. (ஆமிரே) நீங்கள் உளூ செய்து அந்நீரை சஹ்லிடம் கொடுங்கள் என்று கூறினார்கள். ஆமிர்(ரலி) உளூ செய்து அந்நீரை சஹ்ல்(ரலி) அவர்களிடம் கொடுத்தார்கள். இதன் பின் சஹ்ல்(ரலி) எவ்விதப் பிரச்னையுமின்றி இறைத்தூதர் (ஸல்) அவர்களுடன் புறப்பட்டுச் சென்றார்கள்.*

***அறிவித்தவர்: அபூ உமாமா(ரலி), நூல்: முவத்தா மாலிக் 1471***

## அனஸ்(ரலி)

*இறைத்தூதர்(ஸல்) கண்ணேறு, விஷக்கடி, சின்னம்மை ஆகியவற்றுக்காக ஓதிப்பார்ப்பதற்கு அனுமதியளித்தார்கள்.*

***அறிவித்தவர்: அனஸ்(ரலி), நூல்: முஸ்லிம் 4072***

## இம்ரான் இப்னு ஹுஸைன்(ரலி)

*இம்ரான் இப்னு ஹுஸைன்(ரலி) "கண்ணேறு, அல்லது விஷக்கடி தவிர வேறெதற்காகவும் ஓதிப்பார்த்தல் (சிறப்பு) கிடையாது" என்று கூறினார்கள்.*

***அறிவித்தவர்: ஆமிர் அஷ்ஷஅபீ(ரஹ்),***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 5705***

## ஆயிஷா(ரலி)

*இறைத்தூதர்(ஸல்) கண்ணேறுவி(ன் தீயவிளைவி)லிருந்து விடுபட ஓதிப்பார்த்துக்கொள்ளும்படி "கட்டளையிட்டார்கள்' அல்லது "எனக்குக் கட்டளையிட்டார்கள்.*

***அறிவித்தவர்: ஆயிஷா(ரலி), நூல்: ஸஹீஹ் அல்புகாரீ 5738***

*இறைத்தூதர்(ஸல்) நோய்வாய்ப்பட்டால் அவர்களுக்கு (வானவர்) ஜிப்ரீல்(அலை), "பிஸ்மில்லாஹி யுப்ரீக்க, வ மின் குல்லி தாயின் யஷ்ஃபீக்க, வ மின் ஷர்ரி ஹாசிதின் இதா ஹசத, வ ஷர்ரி குல்லி தீ அய்னின்" என்று ஓதிப்பார்ப்பார்கள்.*

*(பொருள்: அல்லாஹ்வின் பெயரால் (ஓதிப் பார்க்கிறேன்). அவன் உங்களுக்கு குணமளிப்பானாக! அனைத்து நோயிலிருந்தும் உங்களுக்குச் சுகமளிப்பானாக. பொறாமைக்காரன் பொறாமைப் படும்போது ஏற்படும் தீமையிலிருந்தும் கண்ணேறு உள்ள ஒவ்வொருவரின் தீமையிலிருந்தும் (காப்பானாக!).*

***அறிவித்தவர்: இறைத்தூதரின் துணைவியார் ஆயிஷா(ரலி), நூல்: முஸ்லிம் 4402***

## அபூ சயீத் அல்குத்ரீ(ரலி)

*இறைத்தூதர்(ஸல்) அவர்(கள் உடல் நலிவுற்றிருந்தபோது அவர்)களிடம் (வானவர்) ஜிப்ரீல்(அலை) வந்து, "முஹம்மதே! உடல்நலம் பாதிக்கப்பட்டுள்ளதா?" என்று கேட்டார்கள். அதற்கு இறைத்தூதர்(ஸல்) "ஆம்' என்று பதிலளித்தார்கள். அப்போது, "பிஸ்மில்லாஹி அர்கீக்க, மின் குல்லி ஷைஇன் யுஃதீக்க, மின் ஷர்ரி குல்லி நஃப்சின் அவ் அய்னின் ஹாசிதின், அல்லாஹு யஷ்ஃபீக்க, பிஸ்மில்லாஹி அர்கீக்க" என்று ஓதிப்பார்த்தார்கள்.*

*(பொருள்: அல்லாஹ்வின் பெயரால் உமக்கு ஓதிப்பார்க்கிறேன். உமக்குத் தொல்லை தரும் அனைத்து அம்சங்களில் இருந்தும், பொறாமை கொள்ளக்கூடிய அனைவரின் அல்லது கண்களின் தீமையிலிருந்தும் உமக்கு அல்லாஹ் நிவாரணமளிப்பானாக. அல்லாஹ்வின் பெயரால் உமக்கு ஓதிப்பார்க்கிறேன்.)*

***அறிவித்தவர்: அபூ சயீத் அல்குத்ரீ(ரலி), நூல்: முஸ்லிம் 4403***

*மனித ஜின் கண்ணேறிலிருந்து இறைத்தூதர்(ஸல்) பாது காப்புத்தேடுபவராக இருந்தார்கள். பாதுகாப்புக் கோரும் இரு*

*அத்தியாயங்கள் இறங்கியவுடன் அவ்விரண்டையும் எடுத்துக் கொண்டு மற்றவற்றை கைவிட்டார்கள்.*

***அறிவித்தவர்: அபூ சயீத்(ரலி), நூல்: நஸாயீ 5399***

*கண்ணேறு பாதிப்பு நீங்குவதற்காக ஆரம்பத்தில் நபி(ஸல்) சில முயற்சிகளைச் செய்தார்கள். பின்னர் ஃபலக் அந்நாஸ் அத்தியாயங்கள் அருளப் பெற்றதும் அதையே இதற்கு முழுத்தீர்வாக ஆக்கிக் கொண்டார்கள்.*

## உம்மு சலமா(ரலி)

*இறைத்தூதர்(ஸல்) என் வீட்டில் ஒரு சிறுமியைப் பார்த்தார்கள். அவளுடைய முகத்தில் கருஞ்சிவப்பான படர்தாமரை ஒன்று இருந்தது. இறைத்தூதர்(ஸல்), "இவளுக்கு ஓதிப்பாருங்கள். ஏனெனில், இவள் மீது கண்ணேறு பட்டிருக்கிறது'' என்று சொன்னார்கள்.*

***அறிவித்தவர்: உம்மு சலமா(ரலி), நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 5739***

## ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி)

*இறைத்தூதர்(ஸல்) பாம்புக்கடிக்கு ஓதிப் பார்த்துக்கொள்ள ''ஹஸ்ம்' குடும்பத்தாருக்கு அனுமதியளித்தார்கள். மேலும், அஸ்மா பின்த் உமைஸ்(ரலி) அவர்களிடம், "என் சகோதரர் (ஜஅஃபரின்) மக்களுடைய உடல்களை நான் மெலிந்திருக்கக் காண்கிறேனே ஏன்? அவர்கள் வறுமையில் வாடுகின்றனரா?" என்று கேட்டார்கள்.*

*அதற்கு அஸ்மா(ரலி), "இல்லை; கண்ணேறு அவர்களை வேகமாகப் பாதிக்கிறது" என்று கூறினார்கள். அதற்கு இறைத்தூதர்(ஸல்), "அவர்களுக்கு ஓதிப்பார்ப்பீராக" என்று கூறினார்கள். நான் அவர்களிடம் (ஒரு துஆவை) எடுத்துரைத்தேன். இறைத்தூதர்(ஸல்) "(அதையே) அவர்களுக்கு ஓதிப் பார்ப்பீராக" என்று கூறினார்கள்.*

***அறிவித்தவர்: ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி), நூல்: முஸ்லிம் 4423***

*இந்த ஆதாரப்பூர்வமான ஹதீஸ்கள் அனைத்தும் கண்ணேறு உண்டு என்று தெளிவாகக் கூறுகிறது. ஏராளமான நபித்தோழர்கள் அறிவிக்கும் இந்த ஹதீஸ்கள் அனைத்தும் எப்படி பொய்யாக இருக்க முடியும்?*

*கண்ணேறு மூலம் அல்லாஹ்வே பாதிப்பை ஏற்படுத்துகிறான். பொறாமைக்காரன் அவன் விரும்பும் நேரத்தில் அவனால் பாதிப்பை ஏற்படுத்த முடியாது. பாதிப்பு ஏற்படுவதும் ஏற்படாமல் இருப்பதும் அல்லாஹ்வின் நாட்டத்தைப் பொறுத்தே அமையும். இவ்விஷயத்தில் இதுவும் சூனியத்தைப் போன்றுள்ளது. எனவே, கண்ணேறு மூலம் பாதிப்பை ஏற்படுத்திக்காட்ட முடியுமா? என்று கேள்வி கேட்பது அறியாமையாகும்.*

*சிலர் கண்ணேறு பாதிக்கக்கூடாது என்பதற்காக தாயத்து அணிதல் முட்டை உடைத்தல் சூடம் ஏற்றுதல் போன்ற ஷிர்க்கான காரியங்களை செய்கிறார்கள். இஸ்லாம் இதை அனுமதிக்கவில்லை. இது போன்ற காரியங்களை உண்மை முஸ்லிம் ஒருபோதும் செய்யமாட்டான்.*

*நான் இறைத்தூதர்(ஸல்) மேற்கொண்ட பயணமொன்றில் அவர்களுடன் இருந்தேன். அப்போது இறைத்தூதர்(ஸல்) அறிவிப்பாளர் ஒருவரை அனுப்பி, "எந்த ஒட்டகத்தின் கழுத்திலும் (கண்ணேறு கழிவதற்காகக் கட்டப்படுகிற) கயிறு மாலையோ அல்லது வேறெந்த மாலையோ இருக்கக் கூடாது. இருந்தால் அவை துண்டிக்கப்பட வேண்டும்" என்று அறிவிக்கச் செய்தார்கள்.*

***அறிவித்தவர்: அபூ பஷீர் கைஸ் இப்னு உபைத் அல்அன்ஸாரீ(ரலி), நூல்: முஸ்லிம் 4296***

*அல்லாஹ்வின் மீது ஆழமான நம்பிக்கை வைக்க வேண்டும் என்பதற்காகவே கண்ணேறு போன்ற மறைமுகமான தீமைகளை அல்லாஹ் ஏற்படுத்தியுள்ளான். அவ்வாறிருக்க இவ்விஷயத்தில் அல்லாஹ்வை சார்ந்திருக்காமல், அவனால் படைக்கப்பட்ட பொருட்களைச் சார்ந்திருந்தால், இது அல்லாஹ்விற்கு கடும் கோபத்தை ஏற்படுத்தும் பெரும்பாவமாகும்.*

*நமக்கு ஏற்பட்ட பாதிப்பு கண்ணேறால் தான் ஏற்பட்டது என்பதை நம்மால் அறிய முடியாது. எனவே, வைத்தியம் செய்வதுடன் இறைத்தூதர்(ஸல்) கற்றுத்தந்த அடிப்படையில் குர்ஆன் வசனங்களை ஓதிக்கொள்ள வேண்டும். அல்லாஹ்வின் வார்த்தைகளைக் கூறி அல்லாஹ்விடம் சரணடைவதைத் தவிர இதற்கு வேறு தீர்வில்லை.*

*ஃபலக் அத்தியாயத்தில் பொறாமைக்காரன் பொறாமை கொள்ளும்போது ஏற்படும் தீங்கை விட்டும் பாதுகாப்புத்தேட அல்லாஹ் நமக்கு கற்றுத்தருகிறான். கண்ணேறு மூலம் ஏற்படும் பாதிப்பையே அல்லாஹ் இவ்வாறு கூறுகிறான்.*

*அதிகாலையின் இறைவனிடம், அவன் படைத்தவற்றின் தீங்கை விட்டும், இருள் பரவும்போது ஏற்படும் தீங்கை விட்டும், முடிச்சுகளில் ஊதுபவர்களின் தீங்கை விட்டும், பொறாமைக் காரன் பொறாமைகொள்ளும்போது ஏற்படும் தீங்கை விட்டும் பாதுகாப்புத் தேடுகிறேன் என்று கூறுவீராக.*

***அல்குர்ஆன், அத்தியாயம் 113***

*பொறாமைக்காரன் பொறாமைகொள்ளும்போது ஏற்படும் தீங்கு என்பது கண்ணேறு தான் என்று மேலுள்ள ஹதீஸ்கள் தெளிவாக விவரிக்கிறது. குர்ஆனுக்கு நபிமொழிகள் தரும் விளக்கத்தைத்தான் நாம் எடுக்க வேண்டும். நபிமொழிகளை மறுத்துவிட்டு சுய வியாக்கியானம் கொடுப்பவர்களின் விளக்கத்தை தூக்கி எறிந்துவிட வேண்டும்.*

## அல்லாஹ்வின் ஏற்பாடு

*சூனியத்தில் அல்லாஹ் ஏன் பாதிப்பை வைக்க வேண்டும் என்ற கேள்வி சிலருக்கு வரலாம். அல்லாஹ் 2:102 வது வசனத்தில் இதற்கான பதிலைக் கூறுகிறான்.*

*பிறருக்கு மறைமுகமாக பாதிப்பு ஏற்படுத்தும் அம்சத்தை அல்லாஹ் சூனியத்தில் வைத்துள்ளான். அல்லாஹ்வை நம்பிய வர்கள் இந்த காரியத்தில் ஈடுபடமாட்டார்கள். அல்லாஹ்வின் அச்சத்தையும் ஈமானையும் இழந்தவர்களே இதில் ஈடுபடுவார்கள்.*

*மனிதன் அல்லாஹ் தடை செய்த இந்த சூனியத்தை செய்கிறானா? அல்லது அல்லாஹ்வுக்கு பயந்து இதை விட்டு விலகுகிறானா? என்று அடியார்களை சோதிப்பதற்காகவே அல்லாஹ் சூனியத்தில் பாதிப்பை வைத்துள்ளான். சூனியத்தால் ஒன்றும் செய்ய முடியாது என்றால் இதை யாரும் படிக்க மாட்டார்கள். மற்றவர்களுக்கு இதை கற்றுக்கொடுக்கவும் மாட்டார்கள். மனிதர்களுக்கு இது சோதனையாகவும் இருக்காது.*

*சூனியத்தில் பாதிப்பு ஏற்படுத்தும் அம்சத்தை அல்லாஹ் வைத்துள்ள காரணத்தால் தான் ஹாரூத் மாரூத்திடமிருந்து இதை மக்கள் கற்று சுலைமான்(அலை) அவர்களின் காலத்தையும் கடந்து ஆயிரக்கணக்கான வருடங்களாக தொன்றுதொட்டு இப்படியொரு விஷயம் மக்களிடம் இருந்து வருகிறது.*

*சரியான இறைநம்பிக்கையுள்ளவர்கள் இந்த பாதிப்பில் இருந்து தப்பிக்க அல்லாஹ்வை நெருங்கி, அல்லாஹ்வின் மீதுள்ள நம்பிக்கையை பலப்படுத்திக்கொள்வார்கள். அரைகுறை நம்பிக்கை உள்ளவர்கள், அல்லாஹ் அல்லாதவர்களை நாடி அழிந்து போவார்கள். மொத்தத்தில் அடியார்களை சோதிப்பதற்காகவே அல்லாஹ் சூனியத்தில் பாதிப்பை வைத்துள்ளான். அல்லாஹ் அவன் நாடியதை செய்யக்கூடியவன்.*

*அவன் செய்வது குறித்து அவன் விசாரிக்கப்படமாட்டான். அவர்களே விசாரிக்கப்படுவார்கள்.* ***அல்குர்ஆன் 21:23***

*தான் நாடியதை செய்து முடிப்பவன்.* ***அல்குர்ஆன் 85:16***

# வழிகேடர்களின் வழி முறை

*சூனியம் தொடர்பான ஹதீஸ்களை மறுப்பவர்கள் அல்லாஹ் நாடினால் சூனியத்தால் பாதிப்பு ஏற்படும் என்று கூறுபவர்களை முஷ்ரிக்குகள் என்று கூறுகிறார்கள்.*

*நம் விளக்கத்தை சொல்ல வேண்டும். விளக்கத்தை கேட்ட பிறகும் அல்லாஹ் நாடினால் சூனியத்தால் பாதிப்பு ஏற்படும் என்று யாராவது பிடிவாதமாக இருந்தால் அவர்கள் இணை வைப்பவர்கள். அவர்களுக்குப் பின்னால் நின்று தொழக்கூடாது என்று கூறுகின்றனர். பல ஊர்களில் இதை அமல்படுத்தவும் செய்கின்றனர்.*

*அப்படியானால் இமாம் புகாரீ, இமாம் முஸ்லிம், இமாம் இப்னு தைமியா, இமாம் இப்னுல் கய்யூம் போன்ற பெரும் மார்க்க அறிஞர்கள் அனைவரும் இணைவைப்பில் இருந்திருக்கிறார்கள் என்று கூற வருகிறார்கள். அல்லாஹ் பாதுகாக்க வேண்டும்.*

*குர்ஆனும் நபிமொழியும் தெளிவாக சூனியத்தால் பாதிப்பு ஏற்படும் என்று கூறும்போது இதற்கு மாற்றமாக இவர்களின் விளக்கத்தை ஒரு முஸ்லிமால் எப்படி ஏற்றுக்கொள்ள முடியும்? இவர்களின் விளக்கத்தையும் மீறி நபிமொழியின் மீது நம்பிக்கை வைத்தால் அவர்களுக்குப் பின்னால் நின்று தொழமாட்டார்களாம். அவன் இறந்துபோனால் அவனுடைய ஜனாஸாவில் கலந்து கொள்ளமாட்டார்களாம். மக்கத்து காஃபிர்கள் விஷயத்தில் இறைத்தூதர்(ஸல்) கடைபிடித்த சட்டங்களை அல்லாஹ்வை மட்டும் வணங்கும் மக்கள் விஷயத்தில் கடைபிடிப்பார்களாம்.*

*நபிமொழிகளை மறுத்து, குர்ஆனுக்கு சுய விளக்கம் கொடுத்து நபிமொழிகளை நம்பக்கூடியவர்களை முஷ்ரிக் என்று கூறுவது கவாரிஜ், முஃதஸிலாக்கள் போன்ற வழிகேடர்களின் வழிமுறை யாகும். இஸ்லாமிய வரலாற்றில் முதன் முதலில் கவாரிஜ்களே நபித்தோழர்களையும், முஸ்லிம்களையும் காஃபிர்கள் என்று கூறி தனிக்கூட்டமாக உருவெடுத்தார்கள்.*

*இவர்களை அடுத்து முஃதஸிலாக்கள் புதுக் கருத்துக்களை கூறி அதனை ஏற்றுக்கொள்ளாத முஸ்லிம்களை காஃபிர்கள் என்று கூறினார்கள். இவர்கள் அனைவரும் ஏதாவது ஒரு குர்ஆன் வசனத்தை எடுத்துக்கொண்டு முஸ்லிம்கள் குர்ஆன், சுன்னா அடிப்படையில் நம்பும் சரியான நம்பிக்கையை ஷிர்க் குஃப்ரின் அளவுக்கு நிகராக்கி குழப்பம் செய்தனர். இதே குழப்பம் தற்போது சூனியம் விஷயத்தில் தமிழ்நாட்டில் செய்யப்படுகிறது. எனவே, இந்த இடத்தில் வழிகேடர்களின் வழிமுறை குறித்து நமக்கு முன் வாழ்ந்த நல்லறிஞர்கள் கூறிய விஷயத்தை நாம் அறிந்து கொள்வது அவசியம்.*

**مجموع الفتاوى (3/ 355)**

**<u>وَإِذَا عُرِفَ أَصْلُ الْبِدَعِ فَأَصْلُ قَوْلِ الْخَوَارِجِ أَنَّهُمْ يُكَفِّرُونَ بِالذَّنْبِ ، وَيَعْتَقِدُونَ ذَنْبًا مَا لَيْسَ بِذَنْبِ ، وَيَرَوْنَ اتِّبَاعَ الْكِتَابِ دُونَ السُّنَّةِ الَّتِي تُخَالِفُ ظَاهِرَ الْكِتَابِ – وَإِنْ كَانَتْ مُتَـــوَاتِرَةً – وَيُكَفِّرُونَ مَنْ خَالَفَهُمْ وَيَسْتَحِلُّونَ مِنْهُ لِارْتِدَادِهِ عِنْدَهُمْ مَا لَا يَسْتَحِلُّونَهُ مِنْ الْكَافِرِ الْأَصْلِيِّ</u> كَمَا قَالَ النَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ فِيهِمْ { يَقْتُلُونَ أَهْلَ الْإِسْلَامِ وَيَدَعُونَ أَهْـــلَ الْأَوْثَـــانِ } وَلِهَذَا كَفَّرُوا عُثْمَانَ وَعَلِيًّا وَشِيعَتَهُمَا ؛ وَكَفَّرُوا أَهْلَ صفين – الطَّائِفَتَيْنِ – فِي نَحْوِ ذَلِكَ مِنْ الْمَقَالَاتِ الْخَبِيثَةِ .**

*கவாரிஜ்கள் தவறுசெய்பவர்களை காஃபிர்கள் என்று கூறுவார்கள். பாவமாக இல்லாத விஷயத்தை இவர்களே பாவம் என்று எண்ணிக்கொள்வார்கள். வெளிப்படையில் குர்ஆனுக்கு முரண்படுவது போன்றுள்ள நபிமொழியை புறக்கணித்துக் குர்ஆனைப் பின்பற்றுவதாகக் கருதுவார்கள். அந்த நபிமொழி முதவாதிர் என்ற (உயர்ந்த) நிலையில் இருந்தாலும் சரியே. இவர்களுக்கு மாற்றமாக கருத்து தெரிவிப்பவரை காஃபிர்கள் என்று கூறுவார்கள். அவர்களின் பார்வையில் இவர் இஸ்லாமை விட்டு வெளியேறிவிட்டார் என்பதற்காக (ஒரு முஸ்லிமிடத்தில் செய்யக் கூடாத விஷயங்களை) அவரிடத்தில் ஆகுமாக்கிக்*

கொள்வார்கள். ஆனால், அசல் காஃபிர்களிடம் இவ்வாறு நடந்துகொள்ளமாட்டார்கள். இவர்கள் விஷயத்தில் தான் "முஸ்லிம்களை கொலைசெய்வார்கள். சிலை வழிபாடு செய்பவர்களை விட்டுவிடுவார்கள்'' என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள். எனவேதான், கவாரிஜ்கள் உஸ்மான்(ரலி) அலீ(ரலி) மற்றும் அவ்விருவரின் அணியினரையும் காஃபிர் என்று கூறினார்கள். மேலும் ஸிஃப்பீன் போர்க்களத்தில் கலந்து கொண்டவர்களையும் காஃபிர்கள் என்று மோசமான கருத்துக்களைக் கூறினர். இதுவே கவாரிஜ்கள் செய்த பித்அத்தின் அடிப்படையாகும்.

***மஜ்மூஉல் ஃபதாவா பாகம்: 3 பக்கம்: 355***

இமாம் இப்னு கஸீர் அவர்களும் வழிகேடர்களின் இந்த வழிமுறையை தெளிவுபடுத்தியுள்ளார்கள்.

**تلخيص كتاب الاستغاثة (2/ 485)**

**فإنه من غلاة أهل البدع الذين يبتدعون القول و يكفرون من خالفهم فيه كالخوارج و الروافض و الجهمية**

வரம்பு மீறும் பித்அத்வாதிகள் புதிதாக ஒரு கருத்தைச் சொல் வார்கள். அதில் அவர்களுக்கு மாற்றுக்கருத்து சொல்பவர்களை காஃபிர்கள் என்று கூறுவார்கள். கவாரிஜ்கள், ராஃபிளாக்கள் ஜஹ்மியாக்களைப் போன்று.

***நூல்: தல்கீசு கிதாபில் இஸ்திகாஸா (பாகம் 2 பக்கம் 485)***

## சூனியக்காரனிடம் செல்லலாமா?

சூனியம் செய்வது ஹராமான செயலாகும். இதனை குஃப்ர் என்று குர்ஆன் குறிப்பிடுகிறது. இறைத்தூதர்(ஸல்) அவர்களும் இதனை அழித்தொழிக்கும் பெரும்பாவங்களில் ஒன்றாக கூறியுள்ளார்கள். சூனியக்காரன் செய்யும் செயல் இஸ்லாமிற்கு விரோதமானது என்பதாலும் அவன் மற்றவர்களுக்கு தீங்கிழைக்கும் காரியத்தை தொழிலாக செய்வதாலும் இஸ்லாமிய ஆட்சி இருந்தால் இத்தகையவர்கள் கொல்லப்படுவார்கள். தண்டிக்கப் படுவார்கள்.

சூனியக்காரர்களிடம் சென்று தனக்கு ஏற்பட்ட பிரச்னையை சொல்வதும் அதற்கு அவர்களிடம் தீர்வு தேடுவதும் குஃப்ரான காரியமாகும். இவ்வாறு செய்யும்போது சூனியக்காரன் செய்யும்

*சூனியத்தை நாம் அங்கீகரிக்கும் நிலை வருகிறது. மேலும் மறைவான ஞானம் சூனியக்காரனுக்கு உண்டு என்றும் நம்ப வேண்டியுள்ளது. இது இஸ்லாமை விட்டும் நம்மை வெளி யேற்றும் குஃப்ரான காரியமாகும். எனவேதான், இதை இறைத் தூதர்(ஸல்) தடைசெய்துள்ளார்கள்.*

*இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் சோதிடர்கள் குறித்துச் சிலர் கேட்டனர். அவர்களிடம் இறைத்தூதர்(ஸல்) "சோதிடர்கள் (பொருட்படுத்தத் தக்க) ஒரு பொருளே அல்ல" என்று பதில் அளித்தார்கள். அவர்கள், "இறைத்தூதர் அவர்களே! அவ்வாறாயின், சோதிடர்கள் சில வேளைகளில் ஒன்றைப் பற்றி அறிவிக்க அது உண்மையாகி விடுகிறதே (அது எப்படி?)" என்று வினவினர். அதற்கு இறைத்தூதர்(ஸல்), "அந்த உண்மையான வார்த்தைகளை ஜின் (வானவரிடமிருந்து) ஒட்டுக் கேட்டு வந்து தம் (சோதிட) நண்பனின் காதில் சேவல் கொக்கரிப்பது போல் போட்டு விடுகிறது. சோதிடர்கள் அதனுடன் நூற்றுக்கும் அதிகமான பொய்களைக் கலந்து விடுகின்றனர்" என்று கூறினார்கள்.*

***அறிவித்தவர்:ஆயிஷா(ரலி), நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 6213***

*நான், "இறைத்தூதர் அவர்களே! நான் அறியாமைக் காலத்திற்கு நெருக்கமானவன். அல்லாஹ் இந்த இஸ்லாமை வழங்கினான். எங்களில் சிலர் சோதிடர்களிடம் செல்கிறார்களே?" என்றேன். அதற்கு அவர்கள் "சோதிடர்களிடம் நீங்கள் செல்லாதீர்கள்" என்றார்கள். நான் "எங்களில் இன்னும் சிலர் பறவையை வைத்துக் குறி பார்க்கிறார்களே?" என்றேன். அதற்கு நபியவர்கள் "இது, மக்கள் தம் உள்ளங்களில் காணும் (ஐதீகம் சார்ந்த) விஷயமாகும். ஆனால், இது "அவர்களை' அல்லது "உங்களை' (செயலாற்றுவதில் இருந்து) தடுத்திட வேண்டாம்" என்று கூறினார்கள்.*

***அறிவித்தவர்: முஆவியா இப்னு ஹகம்(ரலி), நூல்: முஸ்லிம் (935)***

*"ஒருவர் சோதிடனிடம் சென்று, எதைப் பற்றியாவது கேட்டால், அ(வ்வாறு கேட்ட)வருடைய நாற்பது நாள்களின் தொழுகை அங்கீகரிக்கப்படுவதில்லை" என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.* ***அறிவித்தவர்: ஸஃபிய்யா(ரலி), நூல்: முஸ்லிம் 4488***

*யார் சூனியக்காரனிடம் குறிகாரனிடம் சோதிடனிடம் சென்று அவன் கூறுவதை உண்மை என்று நம்பினால் அவன் முஹம்மத் (ஸல்) அவர்களுக்கு அருளப்பட்டதை மறுத்துவிட்டான்.*

***அறிவித்தவர்: அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி), நூல்: பைஹகீ***

*மக்கள் இந்த உண்மையை அறியாமல் சூனியக்காரனிடம் சென்று தங்கள் பிரச்னையை முறையிடுகின்றனர். அவன் உங்களுக்கு சூனியம் வைக்கப்பட்டுள்ளது. அதை எடுக்க வேண்டும். இதற்கு இவ்வளவு ரூபாய் செலவாகும் என்று கூறி மக்களை ஏமாற்றி பொருளாதாரத்தைப் பறித்துக்கொள்கிறான். இதனால் ஈமானையும் பொருளாதாரத்தையும் இழக்கிறார்கள்.*

*சூனியக்காரனிடம் செல்லக்கூடாது. அவன் சொல்வதை உண்மை என்று நம்பக் கூடாது என்ற மார்க்க அறிவுள்ளவர்களை சூனியக்காரர்களால் ஏமாற்ற முடியாது. இவர்கள் சரியான நம்பிக்கையில் இருப்பதால் தங்கள் ஈமானையும் பொருளாதாரத் தையும் பாதுகாத்துக் கொள்கின்றனர். இவர்கள் சூனியம் என்ற பெயரில் மக்களை ஏமாற்றும் சூனியக்காரர்களைக் கண்டு அஞ்சமாட்டார்கள். சூனியத்தின் மூலம் அல்லாஹ் நாடினால் தான் பாதிப்பு ஏற்படும் என்று நம்பும் அதே வேளையில் சூனியக்காரனை ஊரை விட்டு விரட்டவும் அவனுக்கு எதிராக பிரச்சாரம் செய்யவும் தயங்கமாட்டார்கள்.*

*உனக்கு சூனியம் செய்துவிடுவேன் என்று மிரட்டினால் அல்லாஹ்வின் மீது முழு நம்பிக்கையும் வைத்து செய்துகொள் என்று கூறி அவனை விரட்டும் வேலையைத் தொடர்ந்து செய் வார்கள். சூனியம் என்ற ஹராமான காரியத்தையும் சூனியக்காரர் களையும் அழித்தொழிப்பதில் விவேகமாக செயல்படுவார்கள். அல்லாஹ் நாடினால் சூனியத்தால் பாதிப்பு ஏற்படும் என்று நம்பிய நல்லவர்கள் நமக்கு முன் இவ்வாறே சூனியத்தையும் சூனியக்காரர்களையும் எதிர்த்தார்கள். இது தான் இஸ்லாமிய வழி முறை.*

*இதைச் செய்யாமல் சூனியத்தை அழிக்கப்போகிறேன் என்ற பெயரில் குர்ஆனையும் நபிமொழிகளையும் மறுத்து சூனியத்தால் எந்த பாதிப்பும் ஏற்படாது என்ற தவறான கருத்தைச் சொல்லி முஸ்லிம்களுக்கு முஷ்ரிக்குகள் என்ற பட்டத்தை வழங்குவது இஸ்லாமிய வழி முறை அல்ல. இது கவாரிஜ்கள் முஃதஸிலாக்கள் போன்றோரின் வழிகேடாகும்.*

## ***தீர்வு என்ன?***

*சூனியத்தால் பாதிப்பு ஏற்படும் என்றால் நமக்கு பாதிப்பு ஏற்படும்போது இந்த பாதிப்பு சூனியத்தால் தான் ஏற்பட்டது*

*என்று நாம் எவ்வாறு அறிந்துகொள்ள முடியும். இந்த பாதிப்பில் இருந்து விடுபடுவதற்கு வழி என்ன? என்ற கேள்விகள் சிலருக்கு வரலாம்.*

*நபி(ஸல்) அவர்களுக்கு சூனியம் செய்யப்பட்டது என்ற ஹதீஸை முன்னர் அறிந்தோம். தனக்கு சூனியம் செய்யப்பட்டது என்ற விஷயம் நபி(ஸல்) அவர்களுக்கே தெரியவில்லை. இருவானவர்கள் வந்து நபி(ஸல்) அவர்களுக்கு இந்த விஷயத்தை அறிவிக்கும் போதே தனக்கு சூனியம் செய்யப்பட்டிருக்கிறது என்பதை இறைத்தூதர்(ஸல்) அறிந்துகொள்கிறார்கள்.*

*எனவே, ஒருவருக்கு சூனியம் செய்யப்பட்டு அதனால் பாதிப்பு ஏற்பட்டால் இந்த பாதிப்பு சூனியத்தால்தான் ஏற்பட்டது என்பதை அல்லாஹ்வைத் தவிர வேறு யாராலும் அறிய முடியாது. பொதுவாக பாதிப்புகள் ஏற்பட்டால் அதிலிருந்து நிவாரணம் அடைய இறைத்தூதர்(ஸல்) இரு வழிகளை நமக்கு கற்றுத்தந்துள்ளார்கள். அந்த இரு வழிகளையும் நாம் கடை பிடிக்க வேண்டும்.*

*1. உலக ரீதியில் செய்யும் மருத்தும்.*

*2.ஆன்மிக ரீதியில் செய்யும் மருத்துவம்*

*"இறைத்தூதர் அவர்களே! நாங்கள் மருத்துவம் செய்யலாமா? என கிராமவாசிகள் கேட்டனர்.*

*"ஆம். அல்லாஹ்வின் அடியார்களே! மருத்துவம் செய்யுங்கள்! ஏனெனில் அல்லாஹ் எந்த நோயை ஏற்படுத்தினாலும் அதற்கு நிவாரணத்தை அவன் வழங்காமல் இல்லை. ஒரே ஒரு நோயைத் தவிர" என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*

*"இறைத்தூதர் அவர்களே! அதுவென்ன?" என மக்கள் கேட்டனர்.*

*"மரணம்" என இறைத்தூதர்(ஸல்) பதிலளித்தார்கள்.*

***அறிவித்தவர்: உஸாமா இப்னு ஷரீக்(ரலி), நூல்: திர்மிதீ 1961***

*பாதுகாப்புத் தேடுவதற்கு என குர்ஆனில் அல்லாஹ் பிரத்யேகமான இரண்டு அத்தியாயங்களை வழங்கியுள்ளான். இந்த அத்தியாங்களில் சூனியத்தால் ஏற்படும் பாதிப்புகளில் இருந்து பாதுகாப்புத் தேடுவதையும் அல்லாஹ் குறிப்பிட்டுள்ளான்.*

*கண்ணேறு போன்ற மறைமுகமான பாதிப்புகளிலிருந்து இந்த அத்தியாங்களைக் கொண்டே இறைத்தூதர்(ஸல்) அல்லாஹ் விடம் பாதுகாப்புத் தேடினார்கள்.*

*இறைத்தூதர்(ஸல்) நோய்வாய்ப்பட்டுவிட்டால், பாதுகாப்புக் கோரும் வசனங்களை(க் கொண்ட குர்ஆனின் கடைசி மூன்று அத்தியாயங்களை) ஓதி தம் மீது ஊதி, தம் கையை (தம் உடல் மீது) தடவிக்கொள்வார்கள். இறைத்தூதர்(ஸல்) எந்த நோயில் இறந்துபோனார்களோ அந்த நோயின்போது, அவர்கள் (ஓதி) ஊதிக் கொள்ளும் பாதுகாப்பு வசனங்களை நான் அவர்கள் மீது (ஓதி) ஊதலானேன். அதை இறைத்தூதர்(ஸல்) அவர்களின் (கையில் ஊதி அந்த) கையாலேயே அவர்களின் (உடல்) மீது தடவலானேன்.*

***அறிவித்தவர்: ஆயிஷா(ரலி), நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 4439***

*மனித ஜின் கண்ணேறிலிருந்து இறைத்தூதர்(ஸல்) பாது காப்புத் தேடுபவராக இருந்தார்கள். பாதுகாப்புக் கோரும் இரண்டு அத்தியாயங்கள் இறங்கியவுடன் அவ்விரண்டையும் எடுத்துக் கொண்டு மற்றவற்றை கைவிட்டார்கள்.*

***அறிவித்தவர்: அபூ சயீத்(ரலி), நூல்: நஸாயீ 5399***

*எனவே, மறைமுகமான தீங்குகளாக இருக்கிற சூனியம் கண்ணேறு போன்ற பாதிப்புகளிலிருந்து நமக்கு நிவாரணம் அளிப்பதற்காகவே அல்லாஹ் ஃபலக் மற்றும் அந்நாஸ் அத்தியாயத்தை வழங்கியுள்ளான்.*

*நபி(ஸல்) அவர்களுக்கு சூனியத்தின் மூலம் பாதிப்பு ஏற் பட்டபோது அவர்கள் அல்லாஹ்விடம் தொடர்ந்து பிரார்த் தனையில் ஈடுபட்டார்கள். பாதிப்புகள் வரும்போது அல்லாஹ்வை மட்டுமே நெருங்க வேண்டும் என்பதை இந்த சம்பவத்தின் மூலம் அல்லாஹ் நமக்கு கற்றுத்தருகிறான்.*

*திக்ரு தொழுகை போன்ற வணக்கங்களை செய்யும்போது ஷைத்தான் போடும் முடிச்சுகள் தானாக அவிழ்கிறது. அந்த முடிச்சினால் ஏற்படும் பாதிப்பும் நீங்கிவிடும். இதை பின்வரும் நபிமொழி தெளிவுபடுத்துகிறது.*

*“உங்களில் ஒருவர் உறங்கும்போது உங்கள் தலையின் பின்பக்கத்தில் ஷைத்தான் மூன்று முடிச்சுகளைப் போட்டு விடுகிறான். ஒவ்வொரு முடிச்சின்போதும் “இன்னும் உனக்கு*

*நீண்ட இரவு (ஓய்வெடுக்க எஞ்சி) இருக்கிறது. ஆகவே, நீ உறங்கு' எனக் கூறி (உங்களை விழிக்கவிடாமல் உறங்க வைத்து) விடுகிறான். நீங்கள் (அவனுடைய கூற்றை ஏற்காமல்) கண்விழித்து அல்லாஹ்வை நினைவு கூர்ந்தால், ஒரு முடிச்சு அவிழ்ந்து விடுகிறது. நீங்கள் உளூச் செய்தால், மற்றொரு முடிச்சு அவிழ்ந்துவிடுகிறது. நீங்கள் தொழுது விட்டால், முடிச்சுகள் முழுவதும் அவிழ்ந்துவிடுகிறது. நீங்கள் சுறுசுறுப்புடனும் உற்சாகத்துடனும் காலைப் பொழுதை அடைவீர்கள். இல்லையெனில் மனக்குழப்பத்துடனும், சோம்பலுடனும் காலைப் பொழுதை அடைவீர்கள்'' என இறைத் தூதர்(ஸல்) கூறினார்கள்.*

***அறிவித்தவர்: அபூ ஹுரைரா(ரலி), நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 1142***

*சூனியத்தால் ஏற்பட்ட பாதிப்பிற்கு அல்லாஹ்வை நெருங்குவதைத் தவிர வேறு எந்த வைத்தியமும் இல்லை. எனவே, அல்லாஹ்வை சரியாக நம்பும் ஒரு முஃமின் தர்ஹாவிற்கோ சூனியக்காரர்களிடமோ செல்லமாட்டான். தகடு தாயத்து போன்ற இணைவைப்புக்காரியங்களிலும் ஈடுபடமாட்டான். மாறாக, வணக்க வழிபாடுகள் மூலம் அல்லாஹ்வை நெருங்கி இதற்கு நிவாரணம் தேடுவான்.*

*சூனியத்தால் பாதிப்பு ஏற்படாது என்று சொல்பவர்கள் சில குர்ஆன் வசனங்களையும், சில ஹதீஸ்களையும் ஆதாரமாக குறிப்பிடுகின்றனர். அவற்றுக்குரிய பதிலை அறிந்துகொள்வோம்.*

## சூனியக்காரன் வெற்றி பெறமாட்டான்

*இவர்கள் தங்கள் கருத்தை நிலைநாட்ட நபி மூஸா(அலை) காலத்தில் மூஸா(அலை) அவர்களுக்கும் சூனியக்காரர்களுக்கும் இடையே நடந்த போட்டியைச் சுட்டிக்காட்டுகிறார்கள்.*

*இச்சம்பவத்தில் சூனியக்காரர்கள் தங்கள் கயிறுகளையும் கம்புகளையும் போட்டு அவை பாம்புகளாக மாறுவது போன்ற பொய்யான தோற்றத்தை மக்களுக்கு ஏற்படுத்துகின்றனர். இதை அல்லாஹ் குர்ஆனில் குறிப்பிடும்போது அவர்கள் பொய்யாக உருவாக்கியது என்றும் அவர்களின் சூழ்ச்சி என்றும் மக்களின் கண்களை கவர்ந்தார்கள் என்றும் குறிப்பிடுகிறான். மேலும் மூஸா(அலை) இந்த சூனியக்காரர்களிடம் சூனியக்காரன் எப்படி வந்தாலும் வெற்றிபெறமாட்டான் என்றும் கூறினார்கள்.*

*இந்தப் போட்டியில் இறுதியாக மூஸா(அலை) தன்னுடைய கைத்தடியை போட்டவுடன் அது உண்மையான பாம்பாக மாறி சூனியக்காரர்கள் போட்ட போலிக் கயிறுகளையும் கம்புகளையும் விழுங்கியது. சூனியக்காரர்கள் தோற்றார்கள். மூஸா(அலை) வெற்றி பெற்றார்கள்.*

*அல்லாஹ் இந்த சம்பவத்தை குர்ஆனில் 7:116, 20:57, 10:75 ஆகிய அத்தியாயங்களில் விவரிக்கிறான். சூனியத்தால் பாதிப்பு ஏற்படாது என்று கூறுபவர்கள் இதை தங்களுடைய மிகப்பெரிய ஆதாரமாகக் குறிப்பிடுகிறார்கள்.*

*சூனியம் (சிஹ்ர்) என்ற சொல்லுக்கு ஏராளமான அர்த்தங்கள் இருப்பதை முன்னர் விரிவாக விளக்கியிருந்தோம். சூனியத்தில் பாதிப்பு ஏற்படுத்தும் ஒரு வகையும் உள்ளது. வித்தை செய்வதும் சூனியத்தில் ஒரு வகையாகும். இவ்வாறு சூனியத்தில் இரண்டு வகையுள்ளது என்று ஏராளமான இஸ்லாமிய அறிஞர்கள் கூறியுள்ளனர்.*

*அல்பகரா (2:102) வது வசனம் பாதிப்பு ஏற்படக்கூடிய சூனியத்தைப் பற்றி பேசுகிறது. மூஸா(அலை) அவர்களின் சம்பவம் வித்தையாக இருக்கிற சூனியத்தைப் பற்றி பேசுகிறது. சிஹ்ர் என்ற சொல் இந்த இரண்டு இடங்களில் பயன்படுத்தப்பட்டாலும் இரண்டும் வெவ்வேறான விஷயங்களைப் பற்றியே பேசுகிறது. இவ்விரண்டுக்கும் இடையே நிறைய வேறுபாடுகளும் உள்ளது.*

1. *அல்பகரா அத்தியாயத்தில் (2:102) கூறப்படும் சிஹ்ர் இஸ்லாமை விட்டும் நம்மை வெளியேற்றும் ஃகுப்ரான பெரும்பாவமாகும். இதைக் கற்பதும் கற்றுக்கொடுப்பதும் பெரும்பாவமாகும். ஆனால், மூஸா(அலை) அவர்களின் சம்பவத்தில் சொல்லப் படும் வித்தையைப் பொறுத்தவரை அதை செய்வது பெரும் பாவமல்ல. நபி மூஸா(அலை) செய்த அற்புதத்தை வித்தை என்றும் இது போன்ற வித்தையை என்னாலும் செய்ய முடியும் என்று கூறி மூஸா(அலை) அவர்களை இறைத்தூதராக ஏற்க மறுத்த காரணத்தால் தான் ஃபிர்அவ்ன் காஃபிராக இருந்தான். அவனும் அவனுடைய சூனியக்காரர்களும் கஃபிர்களாக இருந்ததற்கு அவர்கள் செய்த சூனியம் காரணமாக இருக்க வில்லை. மூஸா(அலை) செய்த அற்புதத்தை மறுத்து அவர்களை ஏற்க மறுத்ததே இதற்கு காரணமாகும். நபிமார்கள் செய்த அற்புதத்தை மறுக்காமல் இந்த வித்தையை செய்வது ஹராமான*

*காரியம் அல்ல. இன்று மேஜிக் செய்பவர்கள் இந்த வித்தையைத் தான் செய்கிறார்கள். அல்லாஹ் இதை தடைசெய்யவில்லை.*

2. *அல்பகரா அத்தியாயத்தில் சொல்லப்படும் சூனியம் மக்களை சோதிப்பதற்காக ஹாரூத் மாரூத் என்ற வானவரிடமிருந்து மனித குலத்திற்கு வந்தது. எனவே, இந்த சூனியத்திற்கு பல்லாயிரக் கணக்கான வருட நீண்ட வரலாறு உள்ளது. இந்த சூனியமே தொன்றுதொட்டு மதீனத்து யூதர்கள் வரை கடந்துவந்தது. ஆனால், மேஜிக்காகவும் கண்கட்டி வித்தையாகவும் உள்ள சிஹ்ருக்கு எந்த வரலாறும் இல்லை. மக்களுக்கு இது சோதனை யாகவும் இல்லை.*

3. *அல்பகரா அத்தியாயத்தில் கூறப்படும் சூனியத்தின் மூலம் அல்லாஹ் நாடினால் பிறருக்கு தீங்கு விளைவிக்க முடியும். கணவன் மனைவிக்கிடையே பிரிவினை ஏற்படுத்த முடியும். ஆனால், வித்தை செய்து இது போன்ற பாதிப்பை ஏற்படுத்த முடியாது.*

*எனவே, மூஸா(அலை) காலத்தில் சூனியக்காரர்கள் செய்த சூனியம் என்பது வித்தையாகும். இதையும் சூனியம் என்று கூறப்படும். இதுவும் சூனியத்தில் ஒரு வகையாகும். இது பாதிப்பு ஏற்படுத்தும் சூனியம் அல்ல.*

*இச்சம்பவத்தில் சூனியக்காரர்கள் மூஸா(அலை) அவர் களுக்கு சூனியம் செய்து அவருக்கு பாதிப்பு ஏற்படுத்துவோம் என்று சவால்விடவில்லை. மூஸா(அலை) சூனியத்தின் மூலம் ஒரு பாதிப்பையும் உங்களால் எனக்கு ஏற்படுத்த முடியாது என்று மறுக்கவில்லை. எனவே, மூஸா(அலை) அவர்களுக்கு பாதிப்பு ஏற்படுத்த முடியுமா? ஏற்படுத்த முடியாதா? என்ற அடிப்படையில் இந்த போட்டி நடக்கவில்லை என்பதை சிந்திக்க வேண்டும்.*

*பாதிப்பு ஏற்படுத்துதல் என்ற அடிப்படையில் இருவருக்கும் இடையில் போட்டி நடந்து சூனியக்காரர்கள் தோற்றிருந்தால் அப்போது வேண்டுமானால் இந்த சம்பவத்தைக் கூறி சூனியத்தால் பாதிப்பு ஏற்படாது என்று வாதிட கொஞ்சம் சம்பந்தம் உள்ளது. அப்போது கூட மூஸா நபி விஷயத்தில் பாதிப்பு ஏற்படுத்த முடிய வில்லை என்று தான் கூற முடியுமே தவிர ஒட்டுமொத்தமாக சூனியத்தால் எந்த பாதிப்பும் இல்லை என்று கூற முடியாது.*

*சூனியக்காரன் எங்கு வந்தாலும் வெற்றிபெறமாட்டான் என்று மூஸா(அலை) சொன்னது நபிமார்கள் செய்யும் அற்புதத்தை மேஜிக் என்று கூறி பொய்யாக்க முடியாது என்ற அர்தத்திலாகும். அவர்கள் சொன்னது போன்று போட்டியின் இறுதியில் வித்தை செய்தவர்கள் மூஸா(அலை) அவர்களை இறைவனின் தூதர் என்றும் மூஸா(அலை) செய்தது அற்புதம் என்றும் ஏற்றுக் கொண்டு மூஸா(அலை) அவர்களை நம்பிக்கைகொண்டுவிட்டனர்.*

*எனவே, இரண்டு வகையான சூனியம் இருப்பதை குர்ஆன் தெள்ளத்தெளிவாக விவரிக்கும்போது ஒன்றை வைத்து மற்றொன்றை மறுப்பது ஈமான் உள்ளவர்களுக்கு தகுந்த செயல் இல்லை.*

## சூனியத்தை நம்பியவன் சுவனம் செல்லமாட்டான்

*"(பெற்றோரை) நோவினை செய்பவன், சூனியத்தை நம்பிக்கைக் கொண்டவன், தொடர்ந்து மது அருந்துபவன், விதியை மறுப்பவன் ஆகியோர் சொர்க்கத்தில் நுழையமாட்டார்கள்" என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*

***அறிவித்தவர்: அபூ தர்தா(ரலி), அஹ்மத் 26212***

*சூனியத்தை நம்பியவன் சொர்க்கம் செல்ல முடியாது என்று இச்செய்தி கூறுகிறது. எனவே, சூனியத்தால் பாதிப்பு ஏற்படும் என்ற நம்பிக்கை தவறானது என்று இந்த ஹதீஸை வைத்து கூறுகிறார்கள்.*

*இந்த ஹதீஸில் சூனியத்தால் பாதிப்பு ஏற்படும் என நம்பக் கூடாது என்று சொல்லப்படவில்லை. அப்படி சொல்லப்பட்டிருந்தாலே இது நம்முடைய கருத்துக்கு எதிராக உள்ளது என்று வாதிட முடியும். சூனியத்தை நம்பக்கூடாது என்றே கூறுகிறது.*

*குர்ஆனும் ஆதாரப்பூர்வமான பல நபிமொழிகளும் சூனியத்தால் அல்லாஹ் நாடினால் பாதிப்பு ஏற்படும் என்றே கூறுகின்றன. இதற்கு முரணில்லாமல் இந்த ஹதீஸை புரிந்து கொள்ள வேண்டும். இந்த ஹதீஸின் உண்மையான பொருளை அறிவதற்கு முன்னால் இச்செய்தி நம்பகத்தன்மையில் எத்தகைய நிலையில் உள்ளது என்பதை முதலில் அறிந்துகொள்வோம்.*

*இச்செய்தியில் சுலைமான் இப்னு உத்பா என்ற அறிவிப்பாளர் இடம்பெற்றுள்ளார். இவர் பெரிய அளவில் நினைவாற்றல்*

உள்ளவரோ பரவலாக அனைவராலும் அறியப்பட்டவரோ அல்ல. இவரை சில அறிஞர்கள் நம்பகமானவர் என்று சொன்னாலும் வேறு சிலர் இவரை குறை கூறியும் உள்ளனர். இவரைப் பற்றி எனக்குத் தெரியவில்லை என இமாம் அஹ்மது கூறியுள்ளார்கள். இவர் எதற்கும் தகுதியில்லாதவர் என்று இமாம் யஹ்யா இப்னு மயீன் கூறியுள்ளார். இவர் பல தவறான செய்திகளை அறிவித்தவர் என்று சாலிஹ் ஜஸ்ரா என்ற அறிஞர் கூறியுள்ளார். இமாம் அபூ ஹாதிம் அவர்கள் இவர் சுமாரான நிலையில் உள்ளவர் என்று கூறியுள்ளார்.

**நூல்: தஹ்தீபுத் தஹ்தீப் 4:184**

எனவே, இந்த அறிவிப்பாளரை நேர்மையானவர் என்று நாம் ஏற்றுக்கொண்டாலும், இவர் தனித்து அறிவிக்கும் இந்த ஹதீஸை நாம் நம்பும் அளவுக்கு உறுதியான நினைவாற்றல் உள்ளவர் அல்ல. எனவேதான், இமாம் தஹபீ அவர்களும் இமாம் இப்னு ஹஜர் அவர்களும் இவரை சதூக் என்று குறிப்பிடுகின்றனர். இமாம் இப்னு ஹஜர் அவர்கள் இவரை சதூக் (நேர்மையானவர்) என்று சொல்வதுடன், யாரும் அறிவிக்காத சில ஹதீஸ்களை இவர் மட்டுமே தனித்து அறிவித்துள்ளார் என்று குறிப்பிட்டுள்ளார்கள்.

உறுதியான நினைவாற்றல் இல்லாத நாணயமானவருக்கு சதூக் என்று ஹதீஸ் கலையில் குறிப்பிடுவார்கள். இந்நிலையில் உள்ளவர்கள் தனித்து ஹதீஸை அறிவித்தால், அது மற்ற செய்திகளுக்கு முரணில்லாமல் இருக்கும் பட்சத்தில் ஏற்றுக்கொள்ளலாம். பிரச்னைக்குரிய கருத்துக்கள் இவர் வழியாக வருமேயானால், அப்போது இவரின் ஹதீஸ்களை ஆதாரமாக எடுத்துக்கொள்ள முடியாது. எனவேதான், அறிஞர் ஷுஐப் அர்னாஊத் அவர்கள் இந்த ஹதீஸ பதிவு செய்துவிட்டு இதன் கீழ் பின்வருமாறு குறிப்பிடுகிறார்.

**مسند أحمد بن حنبل–ن – (ج 6 / ص 441)**

**تعليق شعيب الأرنؤوط : حسن لغيره دون قوله : " ولا مكذب بقدر " فقد تفرد بها سليمان بن عتبة الدمشقي وهو ممن لا يحتمل تفرده**

இச்செய்தி ஹசன் லிகைரிஹி என்ற தரத்தில் அமைந்தது. இச்செய்தியை சுலைமான் இப்னு உத்பா என்பவர் தனித்து அறிவிக்கிறார். யார் தனித்து அறிவித்தால் ஏற்றுக்கொள்ள முடியாதோ, அந்த நபர்களில் இவரும் ஒருவர்.

**நூல்: முஸ்னத் அஹ்மத் (பாகம் 6 பக்கம் 441)**

*ஹசன் என்றாலே நம்பகத்தன்மையில் கீழ்நிலையில் உள்ள செய்திக்கே சொல்லப்படும். பல பலவீனமான அறிவிப்புகள் வந்தால் அப்போது இதற்கு இந்த அந்தஸ்த்தை வழங்குவார்கள். இது போன்ற நிலையில் உள்ள செய்திகள் இதை விட வலுவான ஹதீஸ்களுக்கு முரணில்லாமல் இருந்தாலே ஏற்றுக்கொள்ளப் படும். முரணாக இருந்தால், எவ்வித சந்தேகமும் இன்றி இவை நிராகரிக்கப்படும்.*

*எனவே, சூனியத்தால் பாதிப்பு ஏற்படும் என்று நம்பக்கூடாது என்ற கருத்தைத் தான் இந்த ஹதீஸ் தருகிறது என்று வாதிட்டால் ஹதீஸ் கலை விதியின் அடிப்படையில் இது ஆதாரமாக எடுத்துக் கொள்ள முடியாத பலவீனமான ஹதீஸாகும்.*

*நபி(ஸல்) அவர்களுக்கு சூனியத்தின் மூலம் பாதிப்பு ஏற்பட்டது என்று கூறும் ஹதீஸ் மிக மிக நம்பகமான வலுவான ஆட்கள் வழியாக வந்துள்ளது. ஹதீஸ் துறையில் இமாம்களாக திகழ்ந்தவர்கள் இந்த ஹதீஸை அறிவித்துள்ளார். மேலும் அஜ்வா தொடர்பான செய்தியும் சூனியத்தால் பாதிப்பு ஏற்படும் என்ற கருத்தை தருகிறது. குர்ஆனும் சூனியத்தால் பாதிப்பு ஏற்படும் என்று கூறுகிறது.*

*இந்த ஆதாரங்களோடு சுலைமான் இப்னு உத்பா அறிவிக்கும் இச்செய்தியை எடைபோட்டால் மலைக்கும் மடுவுக்கும் உள்ள வித்தியாசத்தை உணரலாம். எனவே, சுலைமான் இப்னு உத்பாவின் அறிவிப்பு நிராகரிக்கப்படக்கூடியதாகும். ஆனால், இந்த ஹதீஸை மற்ற ஆதாரங்களுக்கு முரணில்லாமல் புரிந்துகொள்ள முடியும்.*

*சூனியத்தில் அல்லாஹ் நாடினால் பாதிப்பு ஏற்படும் என்று நம்பினால் சூனியத்தை நம்பிவிட்டார்கள் என்று சொல்லக் கூடாது. சூனியம் பற்றி அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் சொன்னதையே நம்புகிறோம்.*

*தஜ்ஜால் பல வகையான அற்புதங்களைச் செய்வான் என்று இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள். இதை நம்பினால் நாம் தஜ்ஜாலை ஈமான் கொண்டுவிட்டோம் என்று யாரும் சொல்ல மாட்டோம். தஜ்ஜாலை இறைவனாக ஏற்றுக்கொண்டவனே தஜ்ஜாலை ஈமான் கொண்டவன். தஜ்ஜால் சில காரியங்களை செய்வான் என்று மட்டும் நம்புவதால் தஜ்ஜாலை ஈமான் கொண்டவனாக மாட்டோம். மாறாக இது அல்லாஹ்வின் தூதரை உண்மைப்படுத்தும் நம்பிக்கையாகும்.*

*இந்த அடிப்படையில் நாம் சிந்தித்தால் சூனியம் பற்றி அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் கூறியதை நம்பக்கூடியவன் சூனியத்தை ஈமான் கொள்ளவில்லை. அல்லாஹ்வையே ஈமான் கொள்கிறான். அவனுடைய தூதரையே ஈமான் கொள்கிறான்.*

*மேலுள்ள ஹதீஸ் சூனியத்தால் பாதிப்பு ஏற்படுவதைப் பற்றி பேசவில்லை. அதன் மூலம் அல்லாஹ் நாடினால் பாதிப்பு ஏற்படும் என்று நம்பக்கூடாது என்றும் கூறவில்லை. எனவே, மற்ற ஆதாரங்களுக்கு முரணில்லாத வகையில் இந்த ஹதீஸை விளங்கிக்கொள்ள முயற்சிக்க வேண்டும்.*

*சூனியம் என்ற ஹராமான காரியத்தை மனதளவில் அங்கீ கரித்து அதில் ஈடுபடக்கூடியவனும் சூனியக்காரனிடம் சென்று அவன் சொல்வதையெல்லாம் நம்பக்கூடியவனுமே சூனியத்தை ஈமான் கொண்டவன். குறிசொல்வதும் கிரகண சாஸ்திரங்கள் பற்றிய மூடநம்பிக்கையும் சூனியத்தில் ஒரு வகையாகும். இதற்கும் சிஹ்ர் என்று சொல்லப்படும். இந்த ஹதீஸ் இதை நம்பக்கூடாது என்று கூறுவதாக புரிந்துகொள்ளலாம். இந்த ஹதீஸிற்கு இது தான் விளக்கம் என்பதை நாம் சுயமாகக் கூறவில்லை. அறிஞர் முஹம்மது இப்னு ஸாலிஹ் உஸைமீன் அவர்கள் இவ்வாறு விளக்கம் அளித்துள்ளார்கள்.*

***நூல்: அல்கவ்லுல் முஃபீத் (பாகம்: 2 பக்கம்: 13)***

*இவ்வாறு விளங்கும்போது நாம் ஓர் ஆதாரத்தை எடுத்து பலமான வேறு ஆதாரங்களை மறுக்கும் நிலை இல்லை. அனைத்து ஹதீஸ்களையும் குர்ஆன் வசனத்தையும் நாம் ஏற்றுக் கொள்கிறோம். எனவே, இது ஈமானுக்கு பாதுகாப்பான நிலை.*

*பலமான ஆதாரங்களுக்கு மாற்றமான விளக்கத்தை இந்த ஹதீஸிற்கு கொடுத்தால் ஸஹீஹ் அல் புகாரீ முஸ்லிமில் உள்ள வலுவான ஹதீஸ்களை மறுத்து நம்பகத்தன்மையில் கீழ்நிலையில் உள்ள இந்த ஹதீஸை மட்டும் ஏற்க வேண்டிய நிலை உள்ளது. மார்க்கத்தை சரியான முறையில் அனுகுபவர்கள் இப்படிப்பட்ட வேலையை ஒருபோதும் செய்யமாட்டார்கள்.*

## இஸ்லாமிய அறிஞர்களின் நிலைபாடும் சகோதரர் பீஜேவின் பித்தலாட்டமும்

*சூனியத்தால் பாதிப்பு ஏற்படாது என்று மறுப்பவர்கள் தங்கள் கருத்தில் சில இஸ்லாமிய அறிஞர்கள் இருப்பதாக சகோதரர் பீஜே கூறுகிறார்.* **ஆதாரம்: சூனியம் ஒரு பித்தலாட்டம்**

அல்லாஹ் நாடினால் சூனியத்தால் பாதிப்பு ஏற்படும் என்ற கருத்தில் அதிகமான இஸ்லாமிய அறிஞர்களும் சூனியத்தால் பாதிப்பு ஏற்படாது என்ற கருத்தில் குறைவான இஸ்லாமிய அறிஞர்களும் உள்ளனர். குறைவான இஸ்லாமிய அறிஞர்களின் கருத்து எங்களுக்கு சரியாகத் தெரிவதால் அதனை ஏற்று சூனியத் தால் பாதிப்பு ஏற்படாது என்று நாங்கள் கூறுகிறோம் என்று சகோதரர் பீஜே வாதிடுகிறார்.

ஆனால், உண்மையில் குர்ஆன் மற்றும் ஆதாரப்பூர்வமான நபிமொழிகளை பின்பற்றிய எந்த இஸ்லாமிய அறிஞர்களும் சூனியத்தால் பாதிப்பு ஏற்படாது என்று கூறவேயில்லை. வழிகேடர்களான முஃதஸிலாக்களும் அவர்களின் சிந்தனையில் பாதிக்கப்பட்டிருந்த ஒருவரையும் தவிர ஒட்டுமொத்த முஸ்லிம்களும் இமாம்களும் ஹதீஸ் துறைசார்ந்த மேதைகளும் சூனியத்தால் அல்லாஹ் நாடினால் பாதிப்பு ஏற்படும் என்றே கூறினர்.

இஸ்லாமிய அறிஞர்களில் பலர் சூனியத்தில் இரு வகை உள்ளது. வித்தை செய்வது சூனியத்தின் ஒரு வகை. பாதிப்பு ஏற்படுத்தும் சூனியம் இன்னொரு வகை என்றே கூறியுள்ளனர். இந்த அறிஞர்கள் சூனியம் என்ற சொல் வித்தை செய்வதையும் குறிக்கும் என்று கூறிய வாசகங்களை மட்டும் மக்களிடம் எடுத்துக் காட்டி சூனியத்தால் பாதிப்பு ஏற்படாது என்று இவர்கள் கூறி யதாக இவர்களின் மீது அவதூறு சொல்கிறார் சகோதரர் பீஜே.

பாதிப்பு ஏற்படுத்தும் வகையும் சூனியத்தில் உள்ளது என்று இந்த அறிஞர்கள் அழுத்தமாக கூறிய கருத்துக்களை இருட் டடிப்புச் செய்து, மக்களை ஏமாற்றும் வேலையை செய்துள்ளார். எனவே, இவர் தன் கருத்தில் இருப்பதாக எந்தெந்த அறிஞர்களை கூறினாரோ அவர்கள் சூனியம் குறித்து என்ன சொன்னார்கள் என்பதை அறிந்து கொள்வோம்.

அல்லாஹ் நாடினால் சூனியத்தால் பாதிப்பு ஏற்படும் என இமாம் இப்னு குதைபா, இமாம் புகாரீ, இமாம் இப்னு தைமியா, இமாம் இப்னு கஸீர், இமாம் குர்துபி இன்னும் நான்கு இமாம்கள் உட்பட இன்னும் இஸ்லாமிய அறிஞர்கள் ஏராளமானோர் கூறியுள்ளனர். இவர்களின் கருத்துகளை இங்கே நாம் சுட்டிக் காட்டவில்லை. எந்த இமாம்களின் பெயரால் அவர்கள் கூறாத கருத்தை அவர்கள் கூறியதாக பீஜே பொய் சொன்னாரோ, அந்த அறிஞர்கள் பாதிப்பு ஏற்படுத்தும் சூனியம் குறித்து சொன்ன தகவல்களை மட்டும் இங்கே அறிந்து கொள்வோம்.

# அபூ பக்ர் ராஸீ(ரஹ்)

சூனியத்தால் பாதிப்பு ஏற்படாது என்ற கருத்தை அபூ பக்ர் ராஸீ கூறியதாக குறிப்பிட்டுள்ளனர். ஆனால், உண்மையில் அபூ பக்ர் ராஸீ அவர்கள் அல்லாஹ் நாடினால் சூனியத்தின் மூலம் பாதிப்பு ஏற்படும் என்றே கூறியுள்ளார்.

**تفسير الرازي : مفاتيح الغيب ــ موافق للمطبوع (3/ 201)**

**قال الحسن المراد منه التخلية يعني السحر إذا سحر إنساناً فإن شاء الله منعه منه وإن شاء خلى بينه وبين ضرر السحر.... وثالثها أن الضرر الحاصل عند فعل السحر إنما يحصل بخلق الله وإيجاده وإبداعه**

ஒரு மனிதன் இன்னொரு மனிதனுக்கு சூனியம் செய்தால் அல்லாஹ் நாடினால் அந்த பாதிப்பை தடுத்துவிடுவான். அவன் நாடினால் அந்த பாதிப்பு அவனுக்கு ஏற்படும்படி விட்டுவிடுவான். சூனியத்தை செய்யும்போது ஏற்படும் பாதிப்பை அல்லாஹ்வே படைக்கிறான். அவனே அதை உருவாக்குகிறான். அவனே அதை ஏற்படுத்துகிறான். **தஃப்சீருர் ராஸீ (பாகம் 3 பக்கம் 201)**

இத்துடன் அபூ பக்ர் ராஸீ அவர்கள் சூனியத்தால் பாதிப்பு ஏற்படாது என்று முஃதஸிலாக்களே மறுத்துள்ளார்கள் என்று கூறி முஃதஸிலாக்களின் வாதங்களுக்கு மறுப்பும் கூறுகிறார்.

**تفسير الرازي : مفاتيح الغيب ــ موافق للمطبوع (3/ 201)**

**واعلم أن المعتزلة أنكروا ذلك بأسرهم**

முஃதஸிலாக்களே சூனியத்தை ஒட்டுமொத்தமாக மறுக்கின்றனர் என்பதை நீ அறிந்துகொள்.

**தஃப்சீருர் ராஸீ (பாகம் 3 பக்கம் 201)**

இப்படித் தெளிவாகச் சொன்ன இந்த அறிஞரின் கருத்துக்களை இருட்டடிப்புச் செய்துவிட்டு சூனியத்தில் பாதிப்பு ஏற்படாது என்று இவர் சொன்னது போன்ற தோற்றத்தை மக்களுக்கு ஏற்படுத்துவது நியாயமான செயலா? என்று மக்கள் சிந்திக்க வேண்டும்.

## இப்னு ஹஸ்ம்(ரஹ்)

இப்னு ஹஸ்ம் அவர்கள் சிறந்த இஸ்லாமிய அறிஞராவார். இவரும் சூனியத்தால் பாதிப்பு ஏற்படாது என்று கூறியதாக பொய் கூறியுள்ளனர். ஆனால், இவர் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு சூனியம் செய்யப்பட்டதாக ஸஹீஹ் அல் புகாரீயில் வரும் ஹதீஸை தன்னுடைய நூலில் குறிப்பிட்டுவிட்டு, அதன் கீழ் பின்வருமாறு எழுதுகிறார்.

المحلى (11/ 400)

قال أبو محمد: فهذا خبر صحيح , وقد عرف الله تعالى رسوله صلى الله عليه وسلم من سحره , فلم يقتله

இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு சூனியம் செய்யப்பட்டதாக ஸஹீஹ் அல் புகாரீயில் வரும் இச்செய்தி ஆதாரப்பூர்வமான செய்தியாகும். இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு சூனியம் வைத்தது யார்? என்பதை அல்லாஹ் தன் தூதருக்கு தெரியப்படுத்தினான்.
**அல்முஹல்லா (பாகம்: 11 பக்கம்: 400)**

## அபூ ஹனீஃபா(ரஹ்)

இமாம் அபூ ஹனீஃபா(ரஹ்) வித்தை செய்வதும் சூனியத்தில் ஒரு வகை என்று தான் கூறினார்கள். பாதிப்பு ஏற்படுத்தும் சூனியம் இல்லை என்று மறுக்கவில்லை. ஆனால், இவரும் சூனியத்தால் பாதிப்பு ஏற்படாது என்று மறுத்ததாக கதைகட்டியுள்ளார் சகோதரர் பீஜே.

இது பற்றி ஸஹீஹ் அல் புகாரீயின் ஒரு விரிவுரையான ஃபைலுல் பாரீ என்ற நூலின் ஆசிரியர் கூறுவதைப் பாருங்கள்.

فيض الباري شرح البخاري (5/ 232)

وهذا ما نُسب إلى أبي الحنيفة أنَّ في السِّحْر تخييلا، فقط، ولا يريدُ به نفي التأثير مُطْلقًا. فإنَّه معلومٌ مَشْهودٌ، بل يريد به نَفِي التأثير في حَقِّ قَلْب الماهياتِ. ولا رَيْب أن ليس له فيه تـأثيرٌ غير التخييل،

சூனியத்தில் பொய்யான தோற்றத்தை ஏற்படுத்துவதும் உள்ளது. இந்த அடிப்படையில்தான் சூனியம் என்பது வெறுமனே

பொய்யான தோற்றத்தை ஏற்படுத்துவது என அபூ ஹனீஃபா கூறியதாக சொல்லப்படுகிறது. ஆனால், இதன் மூலம் அபூ ஹனீஃபா சூனியத்தால் தாக்கமே இல்லை என்று ஒட்டுமொத்தமாக மறுக்கவில்லை. ஏனென்றால், சூனியத்தால் பாதிப்பு ஏற்படுவது அறியப்பட்ட விஷயமாகும். மாறாக பொருட்களை வேறொன்றாக மாற்றுகிற தாக்கம் சூனியத்திற்கு இல்லை என்று மறுப்பதே அபூ ஹனீஃபா அவர்களின் நோக்கமாகும்.

**நூல்: ஃபைளுல் பாரீ (பாகம்: 5 பக்கம்: 232)**

ஹஃப்ஸா(ரலி) அவர்களுக்கு ஒரு பெண் சூனியம் செய்தார். இதன் காரணமாக அந்தப் பெண் கொல்லப்பட்டாள் என்று ஒரு செய்தி பதிவாகியுள்ளது. இமாம் அபூ ஹனீஃபா அவர்கள் இச் செய்தியும் இது போன்ற பல செய்திகளையும் ஆதாரமாகக் கொண்டு சூனியக்காரர்களைக் கொல்ல வேண்டும் என்று சட்டம் கூறியுள்ளார்.

**تفسير الرازي : مفاتيح الغيب ــ موافق للمطبوع (3/ 196)**

**واحتج أبو حنيفة رحمه الله على قوله بأخبار أحدها ما روى نافع عن ابن عمر أن جارية لحفصة سحرتها وأخذوها فاعترفت بذلك فأمرت عبد الرحمن بن زيد فقتلها فبلغ عثمان فأنكره فأتاه ابن عمر وأخبره أمرها فكأن عثمان إنما أنكر ذلك لأنها قتلت بغير إذنه**

சூனியக்காரனை கொல்ல வேண்டும் என்ற தன் கூற்றுக்கு அபூ ஹனீஃபா அவர்கள் பல செய்திகளை ஆதாரமாகக் கூறுகிறார். ஒரு பெண் ஹஃப்ஸா(ரலி) அவர்களுக்கு சூனியம் செய்தாள். அவளைப் பிடித்தவுடன் அவளும் அதை ஒப்புக்கொண்டாள். எனவே, ஹஃப்ஸா(ரலி) அப்துர் ரஹ்மான் இப்னு ஸைதுக்கு உத்தரவிட அவர் அவளைக் கொன்றார் என்ற செய்தியையும் அபூ ஹனீஃபா ஆதாரமாகக் கூறுகிறார்.

**நூல்: தஃப்சீருல் ராஸீ (பாகம்: 3 பக்கம்: 196)**

## பைளாவீ(ரஹ்)

பைளாவீ(ரஹ்) எழுதிய குர்ஆன் விரிவுரையை சுன்னத் வல்ஜமாத் மத்ரஸாக்களில் ஏழாண்டு படிக்கும் மாணவர்களுக்கு கற்றுக்கொடுப்பார்கள். அப்படிப்பட்ட அறிஞரே சூனியத்தால் பாதிப்பு ஏற்படாது என்று கூறியுள்ளார் என வாதிடுகிறார்கள். ஆனால், உண்மையில் பைளாவீ இவர்களுக்கு எதிரான கருத்தையே கூறியுள்ளார். சூனியத்தால் பாதிப்பு ஏற்படும் என்றே கூறியுள்ளார்.

تفسير البيضاوى ـــ موافق للمطبوع (1/ 373)

يفرقون به بين المرء وزوجه ( أي من السحر ما يكون سبب تفريقهما ) وما هم بضارين بـــه من أحد إلا بإذن الله ( لأنه وغيره من الأسباب غير مؤثرة بالذات بل بأمره تعالى

சூனியத்தின் மூலம் கணவன் மனைவிக்கிடையே பிரிக்க முடியும். அதன் மூலம் அல்லாஹ்வின் அனுமதியில்லாமல் யாருக்கும் எந்த தீங்கையும் செய்ய முடியாது. ஏனென்றால், சூனியமும் வேறு காரணங்களும் இயல்பாக பாதிப்புகளை ஏற்படுத்தாது. மாறாக உயர்ந்தோனாகிய அல்லாஹ்வின் ஆணைப்படியே அவை பாதிப்பை ஏற்படுத்தும்.

**நூல்: தஃப்சீருல் பைளாவீ (பாகம்: 1 பக்கம்: 373)**

மேலும் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு சூனியம் செய்யப் பட்டதாக வரும் ஹதீஸை முஃதஸிலாக்கள் குர்ஆன் வசனத்தை காரணம் காட்டி மறுக்கிறார்கள். இவர்கள் காட்டும் வசனத்திற்கும் ஹதீஸிற்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை என்று விளக்கம் கூறி இவர்களுக்கு மறுப்புக்கொடுக்கிறார் பைளாவீ.

تفسير البيضاوى ـــ موافق للمطبوع (5/ 551)

رضي الله تعالى عنه فجاء به فقرأهما عليه فكان كلما قرأ آية انحلت عقدة ووجد بعض الخفة ولا يوجب ذلك صدق الكفرة في أنه مسحور لأنهم أرادوا به أنه مجنون بواسطة السحر

இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு சூனியம் செய்யப்பட்டது என்று கூறும் ஹதீஸை நம்புவதால் இறைத்தூதர்(ஸல்) அவர்களை சூனியம் செய்யப்பட்டவர் என்று காஃபிர்கள் கூறிய விமர்சனத்தை உண்மைப்படுத்தும் நிலை வராது. ஏனென்றால், அவர்கள் சூனியத்தின் மூலம் நபி பைத்தியமாகிவிட்டார் என்பதையே நாடினார்கள். **நூல்: தஃப்சீருல் பைளாவீ (பாகம் 5 பக்கம் 551)**

இவர்கள் இன்று எந்த வாதத்தை வைத்து இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு சூனியம் செய்யப்பட்டதாக வரும் நபிமொழியை மறுக்கிறார்களோ அந்த வாதத்திற்கு மறுப்பு சொன்னவர் தான் அறிஞர் பைளாவீ. அவ்வாறிருக்க இவரும் சூனியத்தால் பாதிப்பு ஏற்படாது என்று கூறினார் என்று கூறுவது எவ்வளவு பெரிய கடைந்தெடுத்த பொய் என்பதை மக்கள் சிந்திக்க வேண்டும்.

## ஷவ்கானீ(ரஹ்)

சூனியத்தால் பாதிப்பு ஏற்படும் என்ற கருத்தை மிக அழுத்தமாகச் சொன்னவர்களில் இமாம் ஷவ்கானீ அவர்களும் ஒருவர். தங்களின் தவறான கருத்துக்கு இவரையும் பகடைக் காயாகப் பயன்படுத்தியுள்ளார்கள்.

فتح القدير للشوكاني (١/ ١٥١)

وقوله : {مَا يُفَرِّقُونَ بِهِ بَيْنَ المرء وَزَوْجِهِ }في إسناد التفريق إلى السحرة ،

وجعل السحر سبباً لذلك دليل على أن للسحر تأثيراً في القلوب بالحبّ والبغض ، والجمع ، والفرقة ، والقرب ، والبعد .

அல்லாஹ் கணவன் மனைவிக்கிடையே பிரிப்பதற்கு சூனியத்தை ஒரு காரணமாக ஆக்கியுள்ளான். சூனியம் பாதிப்பு ஏற்படுத்தும் என்பதற்கு இதில் ஆதாரம் உள்ளது.

***நூல்: ஃபத்ஹுல் கதீர் (பாகம் 1 பக்கம் 151)***

**فتح القدير للشوكاني (1/ 151،)**

**فإن المستفاد من جميع ذلك أن للسحر تأثيراً في نفسه ، ولكنه لا يؤثر ضرراً إلا فيمن أذن الله بتأثيره فيه ، وقد أجمع أهل العلم على أن له تأثيراً في نفسه ، وحقيقة ثابتة ، ولم يخالف في ذلك إلا المعتزلة**

சூனியத்திற்கு தாக்கம் ஏற்படுத்தும் ஆற்றல் உள்ளது. ஆனால், அல்லாஹ் யாரிடத்தில் அது பாதிப்பை ஏற்படுத்த வேண்டும் என அனுமதிக்கிறானோ அவர்களிடம் அல்லாமல் வேறு எந்த தீங்கையும் ஏற்படுத்தாது. சூனியம் என்பது இருக்கிறது. அது பாதிப்பையும் ஏற்படுத்தும். இவ்விஷயத்தில் முஃதஸிலாவைத் தவிர வேறு யாரும் மாற்றுக்கருத்து கொள்ளவில்லை.

***நூல்: ஃபத்ஹுல் கதீர் (பாகம் 1 பக்கம் 151)***

## தப்ரீ(ரஹ்)

சூனியம் என்பது வெறும் வித்தை தான் என இமாம் தப்ரீ அவர்கள் கூறியதாகவும் குறிப்பிட்டுள்ளனர். ஆனால், இமாம் தப்ரீ அவர்கள் சூனியத்தால் பாதிப்பு ஏற்படும் என்றே கூறியுள்ளார்.

**تفسير الطبري 310 (دار هجر) (2/ 362)**

**كَأَنَّهُ قَالَ جَلَّ ثَنَاؤُهُ : {وَمَا هُمْ بِضَارِّينَ} بِالَّذِي تَعَلَّمُوا مِنَ الْمَلَكَيْنِ مِنْ أَحَدٍ إِلاَّ بِعِلْمِ اللَّهِ .**

يَعْنِي بِالَّذِي سَبَقَ لَهُ فِي عِلْمِ اللَّهِ أَنَّهُ يَضُرُّهُ.

சூனியம் இன்னாருக்கு பாதிப்பை ஏற்படுத்தும் என்று அல்லாஹ் அறிந்த பின்பே அதன் மூலம் பாதிப்பு ஏற்படும்.

**நூல்: தப்ரீ (பாகம் 2 பக்கம் 362)**

மேலும் தப்ரீ அவர்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு சூனியம் செய்யப்பட்டதாக வரும் நபிமொழியையும் ஏற்றுக் கொண்டுள்ளார்கள்.

## அபூ ஹய்யான்(ரஹ்)

**تفسير البحر المحيط ـ موافق للمطبوع (1/ 282)**

**ولا يشك في أن السحر كان موجوداً ، لنطق القرآن والحديث الصحيح به. وأما في زماننا**

சூனியம் இருக்கிறது என்று குர்ஆனும் ஆதாரப்பூர்வமான ஹதீஸும் கூறுவதால் இதில் சந்தேகம் கொள்ளக்கூடாது.

**நூல்: தஃப்சீருல் பஹ்ரில் முஹீத் (பாகம் 1 பக்கம் 282)**

**تفسير البحر المحيط ـ موافق للمطبوع (1/ 286)**

**هذه الجملة دليل على أن ما يتعلمون له تأثير وضرر ، لكن ذلك لا يضر إلا بإذن الله ، لأنه ربما أحدث الله عنده شيئاً ، وربما لم يحدث.**

சூனியத்திற்கு தாக்கமும் பாதிப்பும் உள்ளது. ஆனால், அல்லாஹ்வின் அனுமதியின்றி அந்த பாதிப்பு ஏற்படாது. அல்லாஹ் சிலவேளை அதன் மூலம் பாதிப்பை ஏற்படுத்துவான். சிலவேளை ஏற்படுத்தாமலும் இருப்பான்.

**நூல்: தஃப்சீருல் பஹ்ரில் முஹீத் (பாகம் 1 பக்கம் 286)**

மேலும், இந்த ஆசிரியர் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு சூனியம் செய்யப்பட்டதாக வரும் ஹதீஸையும் தன்னுடைய நூலில் ஆதாரமாகக் கொண்டுவந்துள்ளார்.

## ரூஹுல் பயான் விரிவிரையின் ஆசிரியர்

ரூஹுல் பயான் நூலின் ஆசிரியரும் சூனியத்திற்கு பாதிப்பு இல்லை என மறுத்ததாகக் கூறியுள்ளார்கள். ஆனால், அவருடைய உண்மையான கொள்கையை அறிந்து கொள்ளுங்கள்.

تفسير روح البيان ــ موافق للمطبوع (1/ 153)

أي : ما يضرون به أحداً إلا مقروناً بعلم الله وإرادته وقضائه لا بأمره لأنه لا يــأمر بــالكفر والاضرار والفحشاء ويقضي على الخلق بها فالساحر يسحر والله يكوّن فقد يحــدث عنــد استعمالهم السحر فعلاً من أفعاله ابتلاء وقد لا يحدثه وكل ذلك بإرادته ولا ينكر أن السحر له تأثير في القلوب بالحب والبغض وبإلقاء الشرور حتى يحول بين المرء وقلبه وذلك بإدخال الآلام وعظيم الأسقام وكل ذلك مدرك بالحس والمشاهدة وإنكاره معاندة

*அல்லாஹ்வின் அறிவு, அவனுடைய நாட்டம், அவனுடைய விதி ஆகியவை இல்லாமல் அவர்கள் யாருக்கும் சூனியத்தின் மூலம் பாதிப்பு ஏற்படுத்த முடியாது... சூனியக்காரன் சூனியத்தை செய்வான். அல்லாஹ்வே பாதிப்பை ஏற்படுத்துகிறான். அவர்கள் சூனியத்தை செய்யும்போது சில வேலை அல்லாஹ் தன்னுடைய செயலால் அந்த பாதிப்பை சோதிப்பதற்காக ஏற்படுத்துவான். சில வேலை ஏற்படுத்தாமலும் இருப்பான். இவையனைத்தும் அவனுடைய நாட்டப்படியே நடக்கிறது. நோவினையையும் பெரும் நோய்களையும் ஏற்படுத்தி மனிதனுடைய உள்ளத்தில் விருப்பம் வெறுப்பு தீயவற்றை ஏற்படுத்துவதில் சூனியத்திற்கு தாக்கம் உள்ளது என்பதை மறுக்கக்கூடாது. இவை கண்கூடாகவும் அனுபவரீதியாகவும் அறியப்பட்டுள்ளது. இதை மறுப்பது முரண்டு பிடிப்பதாகும்.* ***நூல்: ரூஹுல் பயான் (பாகம் 1 பக்கம் 153)***

تفسير روح البيان ــ موافق للمطبوع (1/ 153)

واختلف العلماء في حقيقة السحر بمعنى ثبوته في الخارج فذهب الجمهور إلى ثبوته فيه. وقالت المعتزلة لا ثبوت له ولا وجود له في الخارج بل هو تمويه وتخييــل ومجــرد إراءة ما لا حقيقة له

*அதிகமான அறிஞர்கள் சூனியம் உள்ளது என்ற கருத்தையே கொண்டிருக்கின்றனர். முஃதஸிலாக்களே சூனியம் இல்லை. சூனியம் என்பது பொய்யான தோற்றத்தை ஏற்படுத்துவதும் உண்மையில்லாத விஷயத்தை செய்துகாட்டுவது மட்டுமே என்று கூறுகின்றனர்.* ***ரூஹுல் பயான் (பாகம் 1 பக்கம் 153)***

تفسير روح البيان ــ موافق للمطبوع (1/ 153)

وفيه إشعار بأنه ثابت حقيقة ليس مجرد إراءة وتمويه وبأن المؤثر والخالق هو الله تعالى وحده

*அல்லாஹ்வின் அனுமதியின்றி அதன் மூலம் அவர்கள் யாருக்கும் எந்த பாதிப்பையும் ஏற்படுத்த முடியாது என்று குர்ஆன் கூறுகிறது. சூனியம் இருக்கிறது. அதற்கு எதார்த்தமும் உள்ளது. பொய்யான தோற்றத்தை ஏற்படுத்துவது மட்டும் சூனியம் அல்ல. பாதிப்பை ஏற்படுத்தக்கூடியவனும் அதை படைக்கக் கூடியவனும் உயர்ந்தவனாகிய அல்லாஹ் ஒருவனே ஆவான் என்பதை (2:102) இந்த வசனம் உணர்த்துகிறது.*

***ரூஹுல் பயான் (பாகம் 1 பக்கம் 153)***

## *இமாம் பஃகவீ(ரஹ்)*

*சுன்னாவிற்கு உயிரூட்டியவர் என்றப் பெயர் வாங்கிய இமாம் பஃகவீ அவர்கள் சூனியத்திற்கு பாதிப்பில்லை என்று மறுத்ததாக பொய் கூறியுள்ளார் சகோதரர் பீஜே. உண்மையில் இந்த அறிஞர் சூனியத்தால் பாதிப்பு ஏற்படும் என்ற கருத்தை அழுத்தமாகக் கூறியதுடன், பாதிப்பு ஏற்படாது என்று கூறிய முஃதஸிலாக்களின் வாதங்களுக்கு பதிலடியையும் கொடுத்துள்ளார்.*

**شرح السنة ــ للإمام البغوى متنا وشرحا (12/ 187)**

**ال الخطابي : قد أنكر قوم من أصحاب الطبائع السحر ، وأبطلوا حقيقته ، ودفع آخرون من أهل الكلام هذا الحديث وقالوا : لو جاز أن يكون له تأثير في رسول الله ( صلى الله عليه وسلم ) ، لم يؤمن أن يؤثر ذلك فيما يوحى إليه من أمر الشرع ، فيكون فيه ضلال الأمة ، والجواب أن السحر ثابت ، وحقيقته موجودة ، اتفق أكثر الأمم من العرب ، والفرس ، والهند ، وبعض الروم على إثباته ، وهؤلاء أفضل سكان أهل الأرض ، وأكثرهم علما وحكمة ، وقد قال الله تعالى : ( يعلمون الناس السحر ( [ البقرة : 102 ] وأمر بالاستعاذة منه ، فقال عز وجل : ) ومن شر النفاثات في العقد ( [ الفلق : 4 ] وورد في ذلك عن رسول الله ( صلى الله عليه وسلم ) أخبار لا ينكرها إلا من أنكر العيان والضرورة ، وفرع الفقهاء فيما يلزم الساحر من العقوبة ، وما لا أصل له لا يبلغ هذا المبلغ في الشهرة والاستفاضة ، فنفي السحر جهل ، والرد على من نفاه لغو وفضل.**

*இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு சூனியத்தால் பாதிப்பு ஏற்பட்டது என்றால், அவர்களுக்கு மார்க்க விஷயம் தொடர்பாக வந்த வஹீச் செய்தியிலும் இந்த பாதிப்பு ஏற்பட்டிருக்குமே*

*என்று கூறி தர்க்கவாதிகள் இந்த நபிமொழியை மறுக்கின்றனர். இதற்கு பதில் என்னவென்றால், சூனியம் என்பது இருக்கிறது. அதற்கு எதார்த்தமும் உள்ளது. அரபியர், ஃபாரசீகர்கள், இந்தியர் சில ரோமானியர்கள் என அனைத்து சமுதாயமும் சூனியம் இருக்கிறது என்பதில் ஒத்தகருத்து கொண்டுள்ளனர்... சூனியம் தொடர்பாக இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து பல ஹதீஸ்கள் வந்துள்ளது. உறுதியானதையும் கண்கூடாகக் காணும் விஷயத்தையும் மறுப்பவனே இவற்றை மறுப்பான்... எனவே, சூனியத்தை மறுப்பது மடமையாகும். சூனியம் உள்ளது என்று கூறுபவர்களுக்கு எதிராக மறுப்பளிப்பது வீணானதும் தேவையற்ற செயலுமாகும்.*

***நூல்: ஷரஹ் சுன்னா (பாகம் 12 பக்கம் 187)***

**تفسير البغوي (1/ 128)**

**{ يُعَلِّمُونَ النَّاسَ } قيل: معنى السحر العلم والحذق بالشيء قال الله تعالى "وقالوا يا أيها الساحر ادع لنا ربك"( 49-الزخرف ) أي العالم، والصحيح: أن السحر عبارة عن التمويه والتخييل، والسحر وجوده حقيقة عند أهل السنة، وعليه أكثر الأمم، ولكن العمل به كفر، حكي عن الشافعي رضي الله عنه أنه**

*சூனியம் இருக்கிறது என்பதே அஹ்லுஸ் சுன்னாவினரின் கொள்கையாகும். ஏராளமான சமுதாயங்கள் இக்கருத்திலேயே உள்ளனர்.ஆனால், அதை செய்வது குஃப்ராகும்.*

***நூல்: தஃப்சீருல் பஃகவீ (பாகம் 1 பக்கம் 128)***

*மேலும் இமாம் பஃகவீ அவர்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு சூனியம் செய்யப்பட்டதாக கூறும் நபிமொழியைப் பற்றி பின்வருமாறு குறிப்பிடுகிறார்.*

**شرح السنة ـــ للإمام البغوى متنا وشرحا (12/ 185)**

**فقد شفاني الله ، فكرهت أن أثير على لناس منه شرا ". هذا حديث متفق على صحته**

*இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு சூனியம் செய்யப் பட்டதாக வரும் இந்த ஹதீஸ் சரியானது என்பதில் ஏகோபித்த கருத்துள்ளது.*

***நூல்: ஷரஹு சுன்னா (பாகம் 12 பக்கம் 185)***

*எனவே, சூனியத்தால் பாதிப்பு ஏற்படாது என்று எந்த நல்ல அறிஞரும் கூறவில்லை. இறைத்தூதர்(ஸல்) அவர்களின் காலத் திலிருந்து இன்றுவரை அல்லாஹ் நாடினால் சூனியத்தால்*

*பாதிப்பு ஏற்படும் என்ற கொள்கையே முஸ்லிம்களிடமும் இஸ்லாமிய அறிஞர்களிடமும் இருந்துள்ளது. இமாம் ஷாஃபியீ (ரஹ்), இமாம் மாலிக்(ரஹ்), இமாம் அபூ ஹனீஃபா(ரஹ்), இமாம் அஹ்மத்(ரஹ்), ஆகிய நான்கு இமாம்களும் இதையே தங்களின் கொள்கையாக கொண்டிருந்தார்கள். இவர்களின் பெயர்களால் உருவாக்கப்பட்டுள்ள மத்ஹபுகளின் நிலைபாடும் இதுதான்.*

*பொய்யான வாதங்களை வைத்து நபிமொழிகளை இஷ்டத்திற்கு மறுத்து சுய கருத்தை புகுத்தும் வழிகேடர்களான முஃதஸிலாக்களே இவ்வாறு கூறியுள்ளனர். எனவே, இவ்விஷயத்தில் இஸ்லாமிய சமுதாயம் மிக விழிப்புடன் இருக்க வேண்டும். இறைத்தூதர்(ஸல்) கூறும் பின்வரும் நபிமொழியை கவனிக்க வேண்டும்.*

*“என் சமுதாயத்தாரில் ஒரு குழுவினர் சத்தியத்தில் இருந்து கொண்டே இருப்பார்கள். அவர்கள் மேலோங்கியவர்களாக இருக்கும் நிலையிலேயே அவர்களிடம் இறைக் கட்டளை(யான மறுமைநாள்) வரும்” என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*

***அறிவித்தவர்: முஃகீரா இப்னு ஷுஅபா(ரலி),***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 7311***

*கியாமத் நாள் வரை ஒரு கூட்டம் சத்தியத்தில் இருந்து கொண்டே இருக்கும் என இறைத்தூதர்(ஸல்) கூறியுள்ளார்கள். அன்றிலிருந்து இன்றுவரை நல்லறிஞர்கள் அனைவரும் அல்லாஹ் நாடினால் சூனியத்தால் பாதிப்பு ஏற்படும் என்ற கருத்தையே கூறியுள்ளனர். இதற்கு மாற்றமான நிலைபாட்டில் முஃதஸிலா என்ற வழிகேடர்களே இருந்துள்ளனர். அவர்களின் கருத்தை இன்று சிலர் தமிழ்நாட்டில் எடுத்துச் சொல்கின்றனர். நாம் யாருடைய கருத்தை ஏற்க வேண்டும் என்பதை இந்த நபிமொழி அற்புதமாகச் சுட்டிக்காட்டுகிறது.*

## அபூ பக்ர் அல்ஜஸ்ஸாஸ்

*இவர்கள் குறிப்பிட்ட அறிஞர்களில் அபூ பக்ர் அல்ஜஸ்ஸாஸ் என்பவரைத் தவிர வேறு யாரும் இவர்களின் கருத்தைக் கூற வில்லை. இஸ்லாமிய அறிஞர்களில் இவர் மட்டுமே இறைத் தூதர்(ஸல்) அவர்களுக்கு சூனியம் செய்யப்பட்ட ஹதீஸை மறுத்துள்ளார். இவர் ஹிஜ்ரி 370 ஆம் ஆண்டு மரணித்தார்.*

*இவர் இஸ்லாமிய அறிஞராக இருந்தாலும் முஃதஸிலாக் களின் சிந்தனை இவரிடம் மிகைத்திருந்தது. பல மார்க்க விஷயங் களில் முஃதஸிலாக்களின் கருத்துக்களைக் கூறக்கூடியவராகவே இருந்துள்ளார். இதை நாம் சுயமாகக் கூறவில்லை. இந்த விமர் சனத்தை இமாம் தஹபீ(ரஹ்) செய்துள்ளார்கள்.*

سير أعلام النبلاء (١٦/ ٣٤٠)

وَيَحْتَجُّ فِي كُتُبِهِ بِالأَحَادِيثِ المتَّصِلَةِ بِأَسَانِيدِهِ، و َقِيْلَ:كَانَ يَمِيلُ إِلَى الاعتِزَالِ، وَفِي تَوَالِيفِهِ مَا يَدلُّ عَلَى ذَلِكَ فِي رُؤْيَةِ اللهِ وَغَيْرِهَا، نَسْأَلُ اللهَ السَّلاَمَةَ.

*அபூ பக்ர் அவர்கள் தன்னுடைய நூல்களில் தன்னுடைய அறிவிப்பாளர் தொடர்வழியாக வந்த ஹதீஸ்களையே ஆதார மாகக் கொள்வார். இவர் முஃதஸிலா சிந்தனையின் பக்கம் சாயக்கூடியவராக இருந்தார். அல்லாஹ்வை பார்ப்பது இன்னும் பல விஷயங்களில் இதற்கான ஆதாரங்களை அவருடைய நூல்களில் காணலாம். அல்லாஹ்விடம் நாம் பாதுகாப்பை வேண்டுகிறோம்.*

***நூல்: சியறு அஃலாமின் நுபலா (பாகம் 16 பக்கம் 340)***

*இமாம் இப்னு தைமியா அவர்கள் இவரை முஃதஸிலா என்று தன்னுடைய நூலில் கூறியுள்ளார்களங. முஃதஸிலாக் கொள்கையின் தலைவர்களில் ஒருவரான காளி அப்துல் ஜப்பார் என்பவர் தபகாதுல் முஃதஸிலா என்ற தன்னுடையில் நூலில் முஃதஸிலா அறிஞர்களின் பட்டியிலில் இவரைக் குறிப்பிட்டுள்ளார்.*

*ஸஹீஹ் அல் புகாரீ முஸ்லிம் போன்ற சிறப்பான ஹதீஸ் நூல்கள் எவ்வளவோ இருந்தும் அவற்றிலிருந்து ஆதாரங்களை மேற்கோள் காட்டும் நற்குணம் அபூ பக்ர் அல்ஜஸ்ஸாஸிடம் இருக்கவில்லை. இதை இமாம் தஹபீ அவர்கள் சுட்டிக்காட்டி யுள்ளார்கள். மற்ற ஹதீஸ் நூல்களை கவனத்தில் கொள்ளாமல் தனக்கு கிடைத்த ஹதீஸ்களை மட்டும் வைத்து மார்க்கம் சொன்னால் உண்மையை எப்படிக் கூற முடியும்? நபிமொழிகளின் மீது பிடிப்புள்ளவர்கள் இது போன்ற வேலையை ஒருபோதும் செய்யமாட்டார்கள்.*

*நபி(ஸல்) அவர்களுக்கு சூனியம் செய்தது பற்றி வரும் ஹதீஸின் சரியான அறிவிப்பாளர் தொடரைக் கூட அபூ பக்ர் ஜஸ்ஸாஸ் அறிந்திருக்கவில்லை. ஆயிஷா உருவா ஹிஷாம் வழியாக வரும் இந்த தொடரை அவருடைய நூலில் அவர் குறிப் பிடவும் இல்லை. இந்தத் தொடர் வழியாக வரும் ஹதீஸை அவர் மறுக்கவில்லை.*

*அறிவிப்பாளர் தொடரே இல்லாமல் ஒரு பெண் இறைத் தூதர்(ஸல்) அவர்களுக்கு சூனியம் செய்ததாக அவர் ஆதாரமற்ற அடிப்படையில் கேள்விப்பட்ட ஒரு செய்தியைத் தான் மறுத்தார். ஸஹீஹ் அல் புகாரீயில் உள்ள ஹதீஸை பார்த்துவிட்டு அவர் மறுக்கவில்லை.*

*பொத்தாம் பொதுவாக இஸ்லாமிய விரோதிகள் இதை இட்டுக் கட்டியுள்ளார்கள் என்று கூறுகிறார். எனவே, அபூ பக்ர் அல்ஜஸ்ஸாஸ் முறைப்படி சூனியம் தொடர்பான ஹதீஸ்களை ஆய்வு செய்யவில்லை. என்பதே உண்மை. எனவே, சூனியத்தால் எந்த பாதிப்பும் ஏற்படாது என்ற இவருடைய கூற்று புறக்கணிக்கப்பட வேண்டியதாகும்.*

# விமர்சிக்கப்படும் ஹதீஸ்களின் விளக்கம்

## 1. இப்ராஹீம் நபிக்கு எதிராக செயல்பட்ட பல்லி

*இறைத்தூதர்(ஸல்) பல்லியைக் கொல்லும்படி உத்திர விட்டார்கள். "அது இப்ராஹீம்(அலை) அவர்களுக்கு எதிராக ஊதிக் கொண்டிருந்தது" என்றும் கூறினார்கள்.*

***அறிவித்தவர்: உம்மு ஷுரைக்(ரலி), நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 3359***

*பல்லி இப்ராஹீம்(அலை) அவர்களுக்கு எதிராக நெருப்பை ஊதிவிட்டது எனக் கூறும் இந்த ஆதாரப்பூர்வமான நபிமொழியை பல காரணங்கள் கூறி பீஜே மறுக்கிறார். இதை நாம் மார்க்க அடிப்படையில் ஆய்வு செய்வோம்.*

*அல்லாஹ்வின் மார்க்கத்தைத் தவிர்த்து வேறு ஒன்றையா தேடுகின்றனர்? வானங்களிலும், பூமியிலும் உள்ளவை விரும்பியோ, விரும்பாமலோ அவனுக்கே அடிபணிகின்றன. அவனிடமே அவர்கள் கொண்டும் செல்லப் படுவார்கள்.* ***அல்குர்ஆன் 3:81***

*வானங்களிலும், பூமியிலும் உள்ளவை விரும்பியோ, விரும்பாமலோ அவனுக்கே பணிகின்றன. அவற்றின் நிழல்களும் காலையிலும், மாலையிலும் பணிகின்றன.* ***அல்குர்ஆன் 13:15***

*வானங்களில் உள்ளோரும், பூமியில் உள்ளோரும், சூரியனும், சந்திரனும், நட்சத்திரங்களும், மலைகளும், மரங்களும், உயிரினங் களும், மற்றும் மனிதர்களில் அதிகமானோரும் அல்லாஹ்வுக்குப் பணிகின்றனர் என்பதை நீர் அறியவில்லையா?*

**அல்குர்ஆன் 22:18**

மேற்கண்ட வசனங்களில் மனிதனைத் தவிர அனைத்து உயிரினங்களும் அல்லாஹ்விற்கு கட்டுப்படுகின்றன என அல்லாஹ் கூறுகிறான். ஆனால், இந்த சம்பவம் பல்லி அல்லாஹ்வுக்குக் கட்டுப் படவில்லை எனக் கூறுகிறது. எனவே, இது குர்ஆனுடன் முரண் படுகிறது என பீஜே வாதிடுகிறார்.

அனைத்து உயிரினங்களும் அல்லாஹ்வுக்குக் கட்டுப்பட்டு நடக்கிறது என குர்ஆன் கூறும்போது அனைத்து உயிரினங்களும் அல்லாஹ்வுக்கு கட்டுப்படவில்லை என்று கூறினால்தான் இதை குர்ஆனுக்கு முரண் என்று கூற முடியும்.

மேற்கண்ட சம்பவம் அனைத்து உயிரினங்களும் அல்லாஹ் வுக்குக் கட்டுப்படவில்லை என்று கூறவில்லை. மாறாக பல்லி என்ற குறிப்பிட்ட உயிரினம் மட்டும் குறிப்பிட்ட சூழலில் இறைத்தூதருக்கு எதிராக செயல்பட்டது என்றே இந்த ஹதீஸ் கூறுகிறது. எனவே, இந்த ஹதீஸ் விதிவிலக்கலான விஷயத்தைப் பற்றியே பேசுகிறது.

மாணவர்கள் அனைவரும் வகுப்புக்குள் வாருங்கள் என்று ஆசிரியர் கூறுகிறார். ஒரே ஒரு மாணவனை மட்டும் பார்த்து நீ வகுப்புக்குள் வராதே என்று சொல்கிறார். இப்போது இந்த ஆசிரியரின் பேச்சில் முரண்பாடு உள்ளது என்று அறிவுள்ள யாராவது புரிவார்களா? விதிவிலக்கு என்று சாதாரணமாக இதை முரண்பாடில்லாமல் புரிவதைப் போன்று பல்லி தொடர் பான மேற்கண்ட சம்பவமும் விதிவிலக்கலானது என்று முரண்பாடில்லாமல் புரிந்துகொள்ள வேண்டும்.

உதாரணமாக நெருப்பு சுடும் என்றும் நெருப்பு சுடாது என்றும் கூறினால் இதை முரண்பாடு என்று கூறலாம். ஆனால், பொதுவாக நெருப்பு சுடக் கூடியது. ஆனால், இப்ராஹீம் (அலை) நெருப்பில் போடப்பட்டதும், குறிப்பிட்ட நேரம் வரை நெருப்பு அவர்களைச் சுடவில்லை எனக் கூறினால் இதை முரண் பாடு என்று அறிவுள்ளவர்கள் யாரும் கூறமாட்டார்கள். மாறாக இது விதிவிலக்கலான ஒன்று என்றே புரிந்து கொள்வோம்.

இது போன்று பல்லி எல்லா உயிரினங்களைப் போன்று கட்டுப்பட்டு நடக்கிறது என்பது பொதுவான விதி. இப்போதும் பல்லி அல்லாஹ்விற்கு கட்டுப்பட்டே இருக்கிறது. ஆனால், இப்ராஹீம்(அலை) நெருப்பில் போடப்பட்டபோது அவர்களுக்கு எதிராக செயல்பட்டது என்பது விதிவிலக்கலான ஒன்று.

ஒரு விஷயத்தில் ஒன்றுக்கொன்று மாற்றமான தகவல்களைக் கூறுவதையே முரண்பாடு என்று சொல்ல முடியும். வெவ்வேறான விஷயங்களில் மாற்றமான தகவல்கள் வந்தால் இதை முரண்பாடு என்று சொல்லக் கூடாது. இந்த உலகத்தில் தோல்களுக்கு பேசும் ஆற்றல் இல்லை என்று நாம் கூறுகிறோம். இத்துடன் மறுமையில் நம் தோல்கள் பேசும் என நம்புகிறோம். இதை முரண்பாடு என்று யாரும் சொல்ல மாட்டோம்.

ஏனென்றால், உலகம் மறுமை என்ற வேறுபாடு இங்கே உள்ளது. இது போன்று வசனம் கூறுகிற கருத்திற்கும் பல்லி இறைத்தூதருக்கு எதிராக செயல்பட்ட சம்பவத்திற்கும் இடையே வேறுபாடு உள்ளது. கட்டுப்படுவது இரண்டு வகையாகும். பகுத்தறிவு வழங்கப்பட்டவர்கள் அல்லாஹ்விற்கு கட்டுப்படுவது ஒருவகை. பகுத்தறிவு வழங்கப்படாத படைப்புகள் அல்லாஹ்விற்கு கட்டுப்படுவது இன்னொரு வகையாகும்.

பகுத்தறிவு வழங்கப்படாத படைப்புகள் அல்லாஹ்வுக்கு கட்டுப்படுகின்றன என்றால் அல்லாஹ் அவற்றை என்ன நோக்கத்திற்காக படைத்தானோ அந்த வேலையை மீறாமல் அவை செயல்படுகின்றன என்று பொருள்.

சிங்கத்திற்கு இயல்பாக அல்லாஹ் எந்த குணத்தை வழங்கி உள்ளானோ அதன் அடிப்படையில் அது உலகில் இயங்குவதுதான் அது அல்லாஹ்விற்கு கட்டுப்படும் முறையாகும். பாம்புகளுக்கு இயல்பாக அல்லாஹ் எந்த பண்புகளை வழங்கியுள்ளானோ அதன் அடிப்படையில் அது செயல்படுகிறது என்பதே அவை அல்லாஹ்வுக்கு கட்டுப்பட்டு நடக்கிறது என்பதின் பொருளாகும்.

இந்த வசனங்களுக்கு இதுதான் விளக்கம் என்று சகோதரர் பீஜே தன் குர்ஆன் தர்ஜுமாவில் குறிப்பிட்டுள்ளார். ஆகையால் இந்த வசனங்கள் உயிரினங்கள் பகுத்தறிவின்றி இருக்கும் நிலை குறித்துப் பேசுகிறது. ஆனால், இப்ராஹீம்(அலை) நெருப்பில் தள்ளப்பட்டபோது பல்லிக்கு அல்லாஹ் பகுத்தறிவை வழங்கு

கிறான். அப்போதே இந்தப் பிராணி இறைத்தூதருக்கு எதிராக செயல்படுகிறது. எனவே, இந்த சம்பவம் பல்லிக்கு பகுத்தறிவு வழங்கப்பட்ட நிலை குறித்துப் பேசுகிறது.

நாம் பகுத்தறிவு வழங்கப்பட்டவர்களாக இருக்கிறோம். எனவே, மனிதர்களில் அல்லாஹ்விற்கு கட்டுப்படுவோரும், கட்டுப்படாதோரும் உள்ளனர். அல்லாஹ் நம்மை பகுத்தறிவு இல்லாத மரங்களாக படைத்திருந்தால் நாம் நிச்சயம் அல்லாஹ் விற்கு கட்டுப்பட்டவர்களாக மட்டுமே இருப்போம்.

எனவே, பகுத்தறிவு வழங்கப்படாத நிலையில் அல்லாஹ்வுக்கு கட்டுப்படுவதும், பகுத்தறிவு வழங்கப்பட்ட நிலையில் கட்டுப் படாமல் இருப்பதும் ஒன்றுக்கொன்று முரணில்லை. இரண்டும் வெவ்வேறு நிலை கொண்டவை. இந்த அடிப்படையில் மேற்கண்ட வசனங்களுக்கும் பல்லி ஊதிய சம்பவத்திற்கும் இடையே எந்த முரண்பாடும் இல்லை என்பதை அறியலாம்.

இப்ராஹீம்(அலை) நெருப்பில் போடப்பட்டபோது மட்டுமே அந்தப் பல்லிக்கு மட்டும் அல்லாஹ் பகுத்தறிவை வழங்கினான். மற்றபடி மனித - ஜின் அல்லாத பிற படைப்புகளைப் போன்றே அதுவும் பகுத்தறிவின்றி அல்லாஹ்வுக்கு கட்டுப்பட்டுக் கொண்டிருக்கிறது. எனவே, பல்லி சம்பவம் எந்த பொது விதிக்கும் உட்படாத விதிவிலக்கான நிகழ்வு என்பதை தெள்ளத் தெளிவாக அறியலாம்.

விநோதமான இந்நிகழ்வை அல்லாஹ் நிகழ்த்தியதற்கு முக்கியமான பல காரணங்கள் இருக்கலாம். அல்லாஹ் பல்லிக்கு பகுத்தறிவை வழங்கிய நேரத்தில் அது நற்குணத்துடன் நடந்து கொள்ளவில்லை. சத்தியத்திற்கு எதிராக வேலைப் பார்க்கத் தொடங்கிவிட்டது. இவ்வாறே உலகில் உள்ள எல்லாப் படைப் பினங்களுக்கும் பகுத்தறிவைக் கொடுத்திருந்தால் சத்தியமார்க் கத்திற்கு எதிராகவும், ஆதரவாகவும் அவை செயல்படத் தொடங்கினால் மனிதனின் நிலை என்ன ஆகும்? பல்லி நிகழ்வை அல்லாஹ் ஓர் உதாரணத்திற்காகக் கூட ஏற்படுத்திருக்கலாம்.

அல்லாஹ் பல்லிக்கு பகுத்தறிவை வழங்கிய நேரத்தில் அது நற்குணத்துடன் நடந்துகொள்ளவில்லை என்பதை நாம் அறியும்போது பல்லியைக் கொல்வதில் ஆன்மிக ரீதியில் நம்மிடத்தில் ஒரு வேகமும் ஆர்வமும் ஏற்படும். இறைநம்பிக்கை யாளர்கள் பல்லியைக் கொல்வதில் முனைப்புடன் செயல்பட

*வேண்டும் என்பதற்காகவே அல்லாஹ் இப்படியொரு நிகழ்வை நடத்திக்காட்டியுள்ளான்.*

*பல்லியைக் கொன்றால் நிறைய நன்மைகள் உண்டு என்று இறைத்தூதர்(ஸல்) கூறியதும் இந்த அடிப்படையிலாகும்.*

*பல்லியை முதலாவது அடியிலேயே கொன்றவருக்கு நூறு நன்மைகள் எழுதப்படுகின்றன. இரண்டாவது அடியில் கொன்ற வருக்கு அதைவிடக் குறைவான நன்மையும், மூன்றாவது அடியில் கொன்றவருக்கு அதைவிடக் குறைவான நன்மையும் எழுதப்படும்.*

***அறிவித்தவர்: அபூ ஹுரைரா(ரலி), முஸ்லிம் (4509)***

*மேற்கண்ட பல்லி ஹதீஸை மறுப்பவர்கள் இந்த ஆதாரப் பூர்வமான நபிமொழியையும் குர்ஆனுக்கு முரண் எனக் கூறி மறுக்கின்றனர். ஆனால், இதில் குர்ஆனுக்கு முரணான எந்தக் கருத்தும் இல்லை.*

*அல்லாஹ் பல்லிக்கு பகுத்தறிவை வழங்குவானா? என்ற கேள்வி அர்த்தமற்றது. அல்லாஹ் அவன் நாடியதைச் செய்யக் கூடியவன். இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து தெளிவான சான்று வந்த பிறகு அல்லாஹ் இப்படி செய்வானா என்று கேள்வி கேட்க நமக்கு அதிகாரம் இல்லை. அல்லாஹ் நினைத்தால் அவனுடைய படைப்புகளுக்கு சில நேரங்களில் பகுத்தறிவை வழங்குவான். இதை பின்வரும் ஹதீஸ் தெளிவுபடுத்துகிறது.*

*“முஸ்லிம்கள் யூதர்களுடன் போர் தொடுக்காத வரை யுக முடிவு நாள் வராது. அப்போது முஸ்லிம்கள் (பதிலடியாக) யூதர்களைக் கொல்வார்கள். எந்த அளவுக்கு என்றால், யூதன் ஒருவன் அந்தக் கல்லுக்கும் மரத்துக்கும் பின்னால் ஒளிந்து கொள்வான். உடனே அந்தக் கல், அல்லது அந்த மரம், “முஸ்லிமே! அல்லாஹ்வின் அடியாரே! இதோ எனக்குப் பின்னால் யூதன் ஒருவன் இருக்கிறான். உடனே நீ வந்து அவனைக் கொன்றுவிடு” என்று கூறும். பெரிய முள்மரத்தைத் தவிர. ஏனெனில், அது யூதர்களின் மரமாகும்” என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*

***அறிவித்தவர்: அபூ ஹுரைரா(ரலி), முஸ்லிம் (5601)***

*பிற்காலத்தில் முஸ்லிம்களுக்கும் யூதர்களுக்கும் இடையே நடக்கும் போரில் மரம் மற்றும் கற்கள் அனைத்தும் யூதர்களைக் காட்டிக்கொடுக்கும். ஆனால், கர்கத் என்ற மரம் மட்டும் யூதர்களைக் காட்டிக்கொடுக்காது என்று இறைத்தூதர்(ஸல்)*

*கூறினார்கள். கல்லுக்கும் மரத்திற்கும் பகுத்தறிவு இல்லை எனக் கூறி இந்த ஹதீஸையும் இவர்கள் மறுப்பார்களா? மரங்கள் அனைத்தும் அல்லாஹ்விற்கு கட்டுப்படும்போது கர்கத் என்ற மரம் மட்டும் அல்லாஹ்விற்கு கட்டுப்படவில்லை என்று இந்த ஹதீஸ் கூறுகிறது. எனவே, இது குர்ஆனுடன் முரண்படுகிறது என்று கூறி இதை மறுத்தாலும் ஆச்சர்யப்படுவதற்கில்லை.*

## ஒருவரின் பாவத்தை மற்றவர் சுமக்கமாட்டார்

*(பாவம் செய்யும்) எவரும் தமக்கு எதிராகவே சம்பாதித்துக் கொள்கிறார். ஒருவன் மற்றவனின் சுமையைச் சுமக்க மாட்டான்.*
***அல்குர்ஆன் 6:164***

*மூஸா, முழுமையாக நிறைவேற்றிய இப்ராஹீம் ஆகியோரின் ஏடுகளில் ''ஒருவர் மற்றவரின் சுமையைச் சுமக்க மாட்டார்; மனிதனுக்கு அவன் முயன்றது தவிர வேறு இல்லை" என இருப்பது அவனுக்கு அறிவிக்கப்படவில்லையா?* ***அல்குர்ஆன் 53:36***

*மேற்கண்ட வசனங்கள் ஒருவரின் பாவத்தை மற்றவர் சுமக்க மாட்டார் என்று கூறுகின்றன. இப்ராஹீம்(அலை) அவர்களுக்கு எதிராக ஒரு பல்லி ஊதிவிட்டால் அந்த பல்லியைத்தான் கொல்ல வேண்டும். இந்தக் காரியத்தை செய்யாத மற்ற பல்லிகளைக் கொல்வது என்ன நியாயம்? இந்த காரணத்தால் பல்லி சம்பவம் மேற்கண்ட வசனங்களுக்கு முரணாக உள்ளது என பீஜே கூறுகிறார்.*

*பல்லியைக் கொல்வதற்கு அது இப்ராஹீம்(அலை) அவர் களுக்கு எதிராக ஊதிவிட்டதை இறைத்தூதர்(ஸல்) பிரதான காரணமாகக் கூறவில்லை. பல்லி தீங்கிழைக்கக் கூடிய பிராணி என்பதே அதைக் கொல்வதற்குரிய முக்கிய காரணமாகும். இதை பின்வரும் நபிமொழிகள் தெளிவுபடுத்துகின்றன.*

*இறைத்தூதர்(ஸல்) "பல்லி தீங்கிழைக்கக் கூடியது!" எனக் கூறினார்கள். அதைக் கொல்லும்படி அவர்கள் உத்தரவிட்டு நான் செவியுற்றதில்லை.*
***அறிவித்தவர்: ஆயிஷா(ரலி), நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 1831***

*பல்லியைக் கொல்லுமாறு இறைத்தூதர்(ஸல்) பணித்தார்கள். "அது தீங்கிழைக்கக் கூடியது" என்றும் கூறினார்கள்.*
***அறிவித்தவர்: ஸஅத்(ரலி), நூல்: அபூ தாவூத் (4578)***

*பல்லி மனிதர்களுக்கு தீங்கிழைக்கக் கூடிய பிராணி என்பதால் அதைக் கொல்வதில் முஸ்லிம்களுக்கு ஆர்வமூட்ட வேண்டும் என்பதற்காகவே இறைத்தூதர்(ஸல்) அது இப்ராஹீம் (அலை) அவர்களுக்கு எதிராக செயல்பட்ட நிகழ்வை குறிப் பிடுகிறார்கள். எனவே, பல்லி தீங்கிழைக்கக்கூடியது என்பதும் அது இப்ராஹீம்(அலை) அவர்களுக்கு எதிராக ஊதிவிட்டது என்ற தகவலும் ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்ததாகும். ஓர் உயிரினம் இறைத்தூதருக்கு எதிராக செயல் பட்டது என இறைத்தூதர்(ஸல்) கூறுகிறார்கள் என்றால் அந்த உயிரினம் எப்பொழுதும் இயல்பாக மக்களுக்கு தீங்கிழைக்கக் கூடியதாகவே இருக்கும். மக்களுக்கு தீங்கிழைக்காத உயிரினம் விஷயத்தில் இது போன்று இறைத்தூதர்(ஸல்) கூற மாட்டார்கள்.*

*ஓர் உயிரினம் இறைத்தூதருக்கு ஆதரவாக செயல்பட்டது என்று இறைத்தூதர்(ஸல்) கூறினால் அந்த உயிரினத்தால் மக்களுக்கு நன்மை உண்டு என்பதே இதன் பொருள். இதை பின்வரும் ஹதீஸ் தெளிவுபடுத்துகிறது.*

*தவளை இப்ராஹீம் நபியை விட்டும் நெருப்பை அணைத்தது. பல்லி அதில் ஊதிவிட்டது. எனவே, அதைக் கொல்ல வேண்டாம் என இறைத்தூதர்(ஸல்) தடைசெய்தார்கள். இதைக் கொல்லுமாறு உத்தரவிட்டார்கள்.*

***அறிவித்தவர்: ஆயிஷா(ரலி), நூல்: முஸன்னஃப் அப்திர் ரஸ்ஸாக்***

*இது எந்தக் குறையும் இல்லாத ஆதாரப்பூர்வமான ஹதீஸாகும். இச்செய்தியில் இறைத்தூதர்(ஸல்) தவளையை கொல்லக் கூடாது என்பதற்கு ஒரு காரணத்தைச் சொல்கிறார்கள். தவளை இப்ராஹீம்(அலை) அவர்களுக்காக உதவி செய்தது என்பதே அந்தக் காரணம். பல்லியைக் கொல்வதற்கு சொல்லப் பட்ட காரணத்தில் குதர்க்கம் செய்ததைப் போன்று தவளையை கொல்லக் கூடாது என்பதற்கு சொல்லப்பட்ட காரணத்திலும் குதர்க்கம் செய்யலாமா?*

*இப்ராஹீம்(அலை) காலத்தில் ஒரு தவளை உதவி செய்தது என்றால் அதனை கொல்லாமல் விடுவதில் நியாயம் உள்ளது. ஆனால், இதன் காரணத்தால் இன்றுள்ள தவளைகளையும் கொல்லக் கூடாது என்று சொல்வது சரியில்லை என்று நபி மொழிக்கு எதிராக தர்க்கம் செய்வார்களா? தவளை மனிதர்களுக்கு நன்மைசெய்யும் உயிரினம் என்பதை உணர்த்துவதற்காகவே*

இப்ராஹீம்(அலை) அவர்களுக்கு ஏற்பட்ட சோதனையின்போது தவளை உதவி செய்தது என்று இறைத்தூதர்(ஸல்) கூறுகிறார்கள்.

தவளைகளால் மனிதர்களுக்கு மிகப்பெரிய நன்மை ஏற்படுகிறது. தவளைகளைக் கொல்லாமல் பாதுகாக்க வேண்டும் என்று இன்று சுற்றுப்புற ஆய்வாளர்கள் கருத்து தெரிவித்துக் கொண்டிருக்கிறார்கள். கொசுக்கள் விடும் முட்டைகளை தவளைகள் உண்டுவிடுவதால் அதிக அளவில் கொசுக்கள் பெருகுவதில்லை. இதனால் கொசுக்களால் மனிதர்களுக்கு ஏற்படும் வியாதிகள் தடுக்கப்படுகின்றன என்று விஞ்ஞானம் கண்டுபிடித்துள்ளது.

எனவே, பல்லி தீங்கிழைக்கக் கூடியது என்பதையும் அது இப்ராஹீம்(அலை) அவர்களுக்கு எதிராக ஊதிவிட்டது என்பதையும் தனித்தனியே பிரிக்காமல் இரண்டையும் ஒன்று சேர்த்து ஒரே காரணமாக பார்த்தால் பல்லியைக் கொல்வது பன்மடங்கு நியாயமானதாகும். இதை அநியாயம் என்று அறிவுள்ளவர்கள் யாரும் சொல்லமாட்டார்கள். பல்லி தீங்கு இழைக்காத உயிரினமாக இருந்தால் அப்போது ஒருவர் சுமையை மற்றவர் சுமக்கமாட்டார் என்ற வசனத்தை பல்லி விஷயத்தில் அமுல்படுத்தி அதைக் கொல்லக் கூடாது என்று கூறலாம். ஆனால், பல்லி இயல்பாகவே தீங்கிழைக்கக் கூடிய உயிரினம் எனும்போது இவ்வசனத்தில் கூறப்படும் நெறிமுறை பல்லிக்கு எந்த வகையிலும் பொருந்தாது.

பல்லி சிறிய உயிரினம் அது மிகப்பெரிய நெருப்புக்கு அருகில் சென்றால் எரிந்து சாம்பலாகிவிடும். அவ்வாறிருக்க அது எப்படி இந்த வேலையை செய்திருக்கும்? என்று கேள்வி எழுப்புகின்றனர்.

பல்லி ஊதிவிட்டது என்றே ஹதீஸில் உள்ளது. மிகப்பெரிய நெருப்புக்கு அருகில் சென்று ஊதிவிட்டது என்று ஹதீஸ் கூறவில்லை. இது நபிமொழியை மறுப்பதற்காக இவர்கள் உருவாக்கிய கற்பனையாகும். நெருப்பு சிறிதாக இருக்கும்போது ஊதினால்தான் நெருப்பை பெரிதாக ஆக்க முடியும். நெருப்பு பெரிதாக இருக்கும் போது ஊதினால் இது நெருப்பை அணைக்கிற வேலையாகும். நெருப்பு பெரிதாக இருக்கும்போது பல்லி ஊதியது என்று இவர்கள் சொல்வதின் மூலம் பல்லி நெருப்பை அணைத்துவிடும் நல்ல வேலையை செய்தது என்று கூறவருகிறார்களா?

நெருப்பு பரவத் தொடங்குவதற்கு முன்பு சிறிதாக இருக்கும் போது பல்லி ஊதியிருக்கலாம் என்று புரிந்தால் எந்தப் பிரச்னையும் இல்லை. பல்லி ஊதுவதால் நெருப்பு பெரிதாகுமா? என்ற கேள்வி தேவையற்றது. பல்லி ஊதியதால் நெருப்பு அதிகரித்ததா? அதிகரிக்க வில்லையா? என்பது சர்ச்சை இல்லை. அது ஊதியதால் நெருப்பு பெரிதாகவில்லை என்றால் கூட அது கெட்ட உயிரினமாகத்தான் இருந்தது என்று கூறுவதே இந்த ஹதீஸின் நோக்கம். எனவே, நாத்திகர்கள் போல் தேவையில்லாமல் தர்க்கம் செய்யாமல் முஸ்லிம்கள் நபிமொழியை நம்ப வேண்டும்.

நபி(ஸல்) இதை ஒரு moral story - அறநெறி போதனையாகவே இங்கு குறிப்பிட்டுள்ளார்கள். அதாவது நல்ல படைப்பினம் நல்லதே செய்யும் என்றும் கெட்ட படைப்பினம் கெட்டதையே செய்யும் என்றும் இதை புரிந்து கொள்ள வேண்டும். பல்லி ஒரு கெட்ட படைப்பினம் அது கெட்டதுதான் செய்யும். அதனால் நமக்கு பெரும்பாலும் நன்மை செய்ய முடியாது. தவளையால் நமக்கு எந்தத் தீங்கும் இல்லை; அது நமக்கு நன்மையை மட்டுமே செய்கிறது.

பல்லியைக் கொல்லுமாறு இறைத்தூதர்(ஸல்) கூறியதாக நான் கேட்கவில்லை என்று ஆயிஷா(ரலி) கூறியதாக ஓர் அறிவிப்பை முன்பு பார்த்தோம். இதற்கு மாற்றமாக பல்லியைக் கொல்லுமாறு இறைத்தூதர்(ஸல்) கூறியதாக ஆயிஷா(ரலி) அறிவித்த அறிவிப்பையும் மேலே குறிப்பிட்டுள்ளோம்.

இந்த இரண்டு அறிவிப்புகளுக்கும் இடையில் முரண்பாடு இல்லாமல் புரிந்து கொள்ள வேண்டும். பல்லியைக் கொல்ல வேண்டும் என்று இறைத்தூதர்(ஸல்) கூறியதாக ஆயிஷா(ரலி) தெளிவாக அறிவிக்கிறார்கள்.

எனவே, பல்லியைக் கொல்லுமாறு இறைத்தூதர்(ஸல்) கூறியதாக நான் செவியுறவில்லை என்ற கூற்றை ஆயிஷா(ரலி) கூறியிருக்க முடியாது. ஆயிஷா(ரலி) அல்லாத வேறு ஓர் அறிவிப் பாளரே அதை கூறியுள்ளார் எனப் புரிந்து கொள்ளலாம்.

## 2. சாலிம் மற்றும் சஹ்லா(ரலி) நிகழ்வு

இறைத்தூதர்(ஸல்) அவர்களுடன் பத்ருப் போரில் கலந்து கொண்டவர்களில் ஒருவரான அபூ ஹுதைஃபா இப்னு உத்பா (ரலி), சாலிம் அவர்களைத் தம் வளர்ப்பு மகனாக ஆக்கிக்

கொண்டார். மேலும் அவருக்குத் தம் சகோதரர் வலீத் இப்னு உத்பாவின் மகள் ஹிந்த் என்பாரைத் திருமணமும் செய்து வைத்தார். சாலிம் ஓர் அன்சாரிப் பெண்ணின் அடிமையாக இருந்தவர்.

இறைத்தூதர்(ஸல்) ஸைதை தம் வளர்ப்பு மகனாக ஆக்கிக் கொண்டது போல் (சாலிமை அபூ ஹுதைஃபா வளர்ப்பு மகனாக ஆக்கிக் கொண்டார்) மேலும் அறியாமைக் காலத்தில் ஒருவரை அவரின் வளர்ப்புத் தந்தை (பெயர்) உடன் இணைத்து மக்கள் அழைக்கும் வழக்கமும், அவரின் சொத்துக்கு வாரிசாக (வளர்ப்பு மகனை) நியமிக்கும் வழக்கமும் இருந்தது.

"அவர்களை அவர்களின் தந்தையருடனே சேர்த்து அழையுங்கள்! அதுவே அல்லாஹ்விடம் நீதியானது. அவர்களின் தந்தையரை நீங்கள் அறியாவிட்டால் அவர்கள் உங்களின் கொள்கைச் சகோதரர்களும், உங்கள் நண்பர்களுமாவர்" எனும் (33:5) வசனத்தை அல்லாஹ் அருளும் வரையில் (இந்த வழக்கம் நீடித்தது).

பின்னர் வளர்ப்புப் பிள்ளைகள் தம் சொந்தத் தந்தையருடன் இணைக்கப்பட்டனர். எவருக்குத் தந்தை (இருப்பதாக) அறியப்படவில்லையோ அவர் நண்பராகவும், மார்க்கச் சகோதரராகவும் ஆனார்.

பிறகு அபூ ஹுதைஃபா இப்னு உத்பா அவர்களின் துணைவியார் சஹ்லா பின்த் சுஹைல் இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்து, "இறைத்தூதர் அவர்களே! நாங்கள் சாலிமை பிள்ளையாகவே கருதிக் கொண்டிருந்தோம். அவர் விஷயத்தில் அல்லாஹ் தாங்கள் அறிந்துள்ள (33:5) வசனத்தை அருளிவிட்டான்" எனக் கூறினார்.

**அறிவித்தவர்: ஆயிஷா(ரலி), நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 5088**

## ஆயிஷா(ரலி) அவர்களின் அறிவிப்பு

(ஒரு முறை) சஹ்லா பின்த் சுஹைல்(ரலி) இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்து "இறைத்தூதர் அவர்களே! சாலிம் இப்னு மஅகில் என்னுடைய வீட்டிற்கு வரும்போது அபூ ஹுதைஃபாவின் முகத்தில் அதிருப்தியை நான் பார்க்கிறேன்" என்று கூறினார்கள். சாலிம்(ரலி) அபூ ஹுதைஃபாவின் அடிமை ஆவார். அதற்கு இறைத்தூதர்(ஸல்) "நீ அவருக்குப் பால் கொடுத்து விடு" என்று கூறினார்கள். சஹ்லா(ரலி) "அவர் பருவ வயதை அடைந்த மனிதராயிற்றே! அவருக்கு நான் எவ்வாறு பாலூட்டுவேன்?" என்று கேட்டார்கள்.

*அப்போது இறைத்தூதர்(ஸல்) நகைத்தவாறு "அவர் பருவ வயதை அடைந்தவர் என்று எனக்கும் தெரியும்" என்று கூறினார்கள்.*
***அறிவித்தவர்: ஆயிஷா(ரலி), நூல்: முஸ்லிம் 2878***

# ஸைனப்(ரலி) மற்றும் உம்மு ஸலமா(ரலி) அவர்களின் அறிவிப்பு

*உம்மு ஸலமா(ரலி), ஆயிஷா(ரலி) அவர்களிடம், "விரைவில் பருவ வயதை அடையவிருக்கும் அந்தச் சிறுவன் உங்கள் வீட்டிற்குள் வருகிறானே! ஆனால், அவன் என் வீட்டிற்குள் வருவதை நான் விரும்ப மாட்டேன்" எனக் கூறினார். அதற்கு ஆயிஷா(ரலி), "இறைத் தூதர்(ஸல்) அவர்களிடம் (இதற்கான) முன்மாதிரி உங்களுக்குக் கிடைக்க வில்லையா?" என்று கேட்டுவிட்டுப் பின்வருமாறு கூறினார்கள்:*

*அபூ ஹுதைஃபாவின் மனைவி இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்து, "இறைத்தூதர் அவர்களே! ஸாலிம் என் வீட்டிற்குள் வருகிறார். அவர் பருவ வயதையடைந்த மனிதர். இதனால் அபூ ஹுதைஃபாவின் மனதில் அதிருப்தி நிலவுகிறது" என்று கூறினார்கள். அதற்கு இறைத்தூதர்(ஸல்), "நீ ஸாலிமுக்குப் பால் கொடுத்து விடு. (இதனால் பால்குடி உறவு ஏற்பட்டு) அவர் உன் வீட்டிற்கு வரலாம்" எனக் கூறினார்கள்.*
***அறிவிப்பவர்: ஸைனப் பின்த் உம்மி ஸலமா(ரலி), நூல்: முஸ்லிம் 2881***

*இச்செய்தி மிக உறுதியான நம்பகமான நபர்கள் வழியாக வந்த சந்தேகமற்ற ஆதாரப்பூர்வமான ஹதீஸாகும். ஆயிஷா (ரலி), சஹ்லா(ரலி), உம்மு சலமா(ரலி), ஸைனப்(ரலி) மற்றும் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் மனைவியர் அனைவரும் இந்த சம்பவத்தை அறிவிப்பதில் சம்பந்தப்பட்டுள்ளனர். எனவேதான், இமாம் இப்னு ஹஸ்ம்(ரஹ்) நம்பகத்தன்மையில் மிக உறுதியான இந்த ஹதீஸை புறக்கணிக்கக் கூடாது என்று கூறுகிறார்.*

**قال أبو محمد : وهذان خبران في غاية الصحة وجلالة الرواة وثقتهم ، ولا يسع أحدا الخروج عنهما .**

*"இந்த ஹதீஸ்கள் நம்பகத்தன்மையில் உச்சகட்ட நிலையில் உள்ள ஆதாரப்பூர்மானதாகும். இதன் அறிவிப்பாளர்கள் மிக சிறந்தவர்களாகவும் உறுதியானவர்களாகவும் இருக்கின்றனர்.*

இவற்றை யாரும் புறக்கணிக்கக்கூடாது" என இமாம் இப்னு ஹஸ்ம்(ரஹ்) கூறினார்.

**நூல்: அல் முஹல்லா (பாகம் 10 பக்கம் 199)**

குர்ஆனுக்கு முரண்பட்டால் ஹதீஸை மறுக்க வேண்டும் என்பதற்கு இந்தச் சம்பவத்தை வலுவான ஆதாரமாக கருது கிறார்கள். இந்த ஹதீஸை மிகவும் அசிங்கமான முறையில் சித்தரித்து நபிமொழிகளின் மீது மக்களுக்கு இருக்கும் மொத்த மதிப்பையும் நாசமாக்கி வருகிறார்கள். குழந்தை இரண்டு வயதுக்குள் பெண்ணிடம் பால்குடித்தாலே இந்தக் குழந்தைக்கு அவள் தாயாக மாறுவாள். இரண்டு வயதை கடந்த நிலையில் யார் பால்குடித்தாலும் தாய் மகன் உறவு ஏற்படாது என்று பின்வரும் வசனங்கள் கூறுகின்றன.

பாலூட்டுவதை முழுமைப்படுத்த வேண்டும் என்று விரும்புகிற (கண)வனுக்காக தாய்மார்கள் தம் குழந்தைகளுக்கு முழுமையாக இரண்டு ஆண்டுகள் பாலூட்ட வேண்டும். **அல்குர்ஆன் 2:233**

மனிதனுக்கு தன் பெற்றோர் குறித்தும் வலியுறுத்தியுள்ளோம். அவனை அவன் தாய் பலவீனத்துக்கு மேல் பலவீனப்பட்டவளாகச் சுமந்தாள். அவன் பாலருந்தும் பருவம் இரண்டு ஆண்டுகள். எனக்கும், உன் பெற்றோருக்கும் நன்றி செலுத்துவாயாக! என்னிடமே திரும்பி வருதல் உண்டு. **அல்குர்ஆன் 31:14**

அவனை (மனிதனை) அவன் தாய் சிரமத்துடன் சுமந்தாள். சிரமத்துடனே ஈன்றெடுத்தாள். அவனைச் சுமந்ததும், பால் குடியை மறந்ததும் முப்பது மாதங்கள். **அல்குர்ஆன் 46:15**

"என் வீட்டிற்கு இறைத்தூதர்(ஸல்) வந்தபோது, என்னிடம் ஓர் ஆண் இருந்தார். அவர்களிடம் ஒரு மாற்றம் தென்பட்டது; அதை அவர்கள் விரும்பவில்லை என்பது தெரிந்தது.

"இவர் என் (பால்குடி) சகோதரர்தான்" என நான் கூறினேன்.

"உங்கள் சகோதரர்கள் யார் என்பதை ஆராய்ந்து முடிவு செய்யுங்கள். ஏனெனில், பால்குடி உறவு என்பதே பசியினால் தான்" என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.

**அறிவித்தவர்: ஆயிஷா(ரலி), நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 5102**

சஹ்லா(ரலி) பருவ வயதை அடைந்த சாலிமிற்கு பால் கொடுத்தால், இருவருக்கும் இடையே தாய் மகன் உறவு ஏற்பட்டு

*விடும் என ஹதீஸ் கூறுகிறது. ஆனால், இரண்டு வயதுக்குள் பால் குடித்தாலே இந்த உறவு ஏற்படும் என மேலுள்ள ஆதாரங்கள் கூறுகின்றன. இந்த அடிப்படையில் சாலிம் சஹ்லா(ரலி) சம்பவம் குர்ஆனுடன் முரண்படுகிறது என வாதிடுகின்றனர்.*

## பிரத்யேக அனுமதி

*இறைத்தூதர்(ஸல்) அனைவருக்கும் பொதுவான ஒரு சட்டத்தைக் கூறியிருக்கும்போது குறிப்பிட்ட ஒரு நபர் விஷயத்தில் அவரின் நெருக்கடியான நிலையை கவனத்தில் கொண்டு பொதுவான சட்டத்திற்கு மாற்றமான அனுமதியை இறைத்தூதர்(ஸல்) வழங்கினால் இதை முரண்பாடு என்று அறிவுள்ள யாரும் சொல்லமாட்டார்கள். மாறாக பொதுச் சட்டத்திலிருந்து அந்த நபருக்கு மட்டும் அல்லது அந்த நபரின் நிலையில் உள்ளவர்களுக்கு மட்டும் விதிவிலக்கு அளிக்கப் பட்டுள்ளது என்றே புரிந்துகொள்வார்கள்.*

*ஒரு சட்டத்தை அனைவருக்கும் பிறப்பித்துவிட்டு பிறகு அனைவரும் அதை மீறலாம் என்று கூறினால் இதை முரண்பாடு என்று சொல்லலாம். ஆனால், இவ்வாறு கூறாமல் குறிப்பிட்ட ஒருவர் விஷயத்தில் மட்டும் அவரின் நிலமையை கவனத்தில் கொண்டு சலுகை அளித்தால் இதை முரண்பாடு என்று சொல்லக் கூடாது. ஏனென்றால், இந்தச் சூழ்நிலையில் சட்டம் பொதுவானது என்பதை நாம் நிராகரிக்கவில்லை. விதிவிலக்கை நம்புவதால் பொதுச் சட்டத்தை நாம் மறுத்தவர்களாக மாட்டோம். பொதுவான விதி ஒன்று இருந்தால் நிச்சயம் அதில் சிலருக்கு விதிவிலக்கும் இருக்கும்.*

*உதாரணமாக இறைத்தூதர்(ஸல்) ஆண்கள் பட்டு அணிவதை தடைசெய்துள்ளார்கள். இந்த உலகத்தில் பட்டு அணிந்தவர் மறுமை நாளில் அதை அணியமாட்டார் என்ற அளவுக்கு இந்தச் செயலை வன்மையாகக் கண்டித்துள்ளார்கள்.*

***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 5835 5633, திர்மிதீ: 1642***

*ஆனால், அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப்(ரலி) மற்றும் ஸுபைர் இப்னு அவாம்(ரலி) ஆகிய இருவருக்கும் சிரங்கு இருந்ததால் அவர்கள் மட்டும் பட்டு அணிந்துகொள்வதற்கு இறைத்தூதர்(ஸல்) அனுமதிவழங்கினார்கள்.*

*அனஸ்(ரலி) கூறினார்கள்:*

*அவ்விருவருக்கும் இருந்த சிரங்கின் காரணமாக, அவர்களுக்கு (பட்டாடை அணிய) இறைத்தூதர்(ஸல்) சலுகை கொடுத்தார்கள் - அல்லது சலுகை கொடுக்கப்பட்டது.*

***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 2922***

*இந்த ஹதீஸ் பட்டு ஹராம் என்று கூறும் ஹதீஸ்களுக்கு முரணானது என்று அறிவுள்ள யாரும் கூறமாட்டோம். பன்றி இறைச்சி, இரத்தம், இறந்த பிராணிகள் இவற்றை சாப்பிடக் கூடாது என அல்லாஹ் குர்ஆனில் கூறுகிறான். ஆனால், ஒருவனுக்கு இவற்றைத் தவிர உண்ண உணவு ஏதும் இல்லை. இந்த நிலையில் உள்ளவன் இவற்றை உண்ண அல்லாஹ் அனுமதிக்கிறான்.*

*தானாக செத்தவை, இரத்தம், பன்றியின் இறைச்சி, அல்லாஹ் அல்லாதோருக்காக நேர்ச்சை செய்யப்பட்டவை இவற்றையே அல்லாஹ் உங்களுக்கு தடைசெய்துள்ளான்.*

*ஆனால், வழியச் செல்லாமலும் வரம்புமீறாமலும் நிர்பந்தத்திற்கு உள்ளானவர் மீது எந்தக் குற்றமும் இல்லை. அல்லாஹ் மன்னிப்பவன். கருணையாளன்.* ***அல்குர்ஆன் 2:173***

*நிர்பந்த நிலையில் உள்ளவனுக்கு சலுகை வழங்கியதால் இதை வைத்துக்கொண்டு யார் வேண்டுமானாலும் பன்றி இறைச்சியை உண்ணலாம் எனச் சட்டம் கூறக் கூடாது. பன்றி இறைச்சியை யார் வேண்டுமானாலும் உண்ணலாம் என்று சொல்கிறார்கள் எனப் புரிந்து கொண்டு இதைக் காரணமாக ஆக்கி விதிவிலக்கலான விஷயத்தை மறுக்கவும் கூடாது.*

*சாலிம்(ரலி) அவர்களுக்கு பால்கொடுக்குமாறு இறைத்தூதர்(ஸல்) சொன்னதும் இது போன்ற விதிவிலக்கான சட்டமாகும். இரண்டு வயதுக்குள் பாலருந்தினால்தான் தாய் மகன் உறவு ஏற்படும் என்பது பொதுவிதியாகும். சாலிம்(ரலி) அவர்களுக்கு மட்டுமே இந்த விதியிலிருந்து விலக்கு அளிக்கப்பட்டுள்ளது.*

*வளர்ப்புப் பிள்ளைக்கு மகன் அந்தஸ்த்து வழங்கக் கூடாது என்ற சட்டம் வருவதற்கு முன்னால் சஹ்லா(ரலி) சாலிமை தன் மகனாகவே பார்த்து வளர்த்து வந்தார். சாலிம்(ரலி) அவர்களும் சஹ்லா(ரலி) அவர்களை தம் தாயாகவே கருதி பழகி வந்தார்கள். இருவரும் ஒரே வீட்டிலேயே வசித்தும் வந்தார்கள். இந்நிலையில்*

*தான் திடீரென வளர்ப்புப் பிள்ளைகள் மகன்களாக மாட்டார்கள் என்ற சட்டத்தை அல்லாஹ் அருளினான்.*

*இதன் பிறகும் சாலிம்(ரலி) சஹ்லா(ரலி) அவர்களிடம் வந்து செல்லும் வழக்கம் உடையவராக இருந்தார்கள். இருவராலும் இதைத் தவிர்க்க முடியவில்லை. சாலிம் தன் வீட்டுக்கு வருவதைத் தவிர்க்க முடியவில்லையே என சஹ்லா(ரலி) வருத்தப்பட்டு இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் இதைத் தெரிவிக்கிறார்கள். அப்போது தான் இறைத்தூதர்(ஸல்) சஹ்லா(ரலி) அவர்களுக்கு பொதுவிதியிலிருந்து விலக்கு அளித்தார்கள்.*

*சஹ்லா(ரலி) சாலிமிற்கு பால்கொடுத்துவிட்டால் இருவருக்கும் இடையே தாய் மகன் உறவு ஏற்பட்டுவிடும் என்பதே அந்த சிறப்புச் சலுகையாகும். எனவேதான், ஆயிஷா(ரலி) அவர்களைத் தவிர்த்து மற்ற மனைவியர் அனைவரும் இச்சட்டம் சாலிம் (ரலி) அவர்களுக்கு மட்டும் பிரத்யேகமாக வழங்கப்பட்டது என்ற கருத்தை அன்றைக்கே கூறியுள்ளார்கள்.*

*இதை (சாலிமுக்குப் பால் புகட்டும் படி இறைத்தூதர்(ஸல்) கூறியதை) அடிப்படையாக வைத்து, தன்னை நேரில் பார்க்க வேண்டும் என்றும் தன்னிடம் வரவேண்டும் என்றும் தாம் விரும்பியவர்களுக்கு, பால் புகட்டும் படி தன் சகோதர, சகோதரிகளின் மகள்களுக்கு ஆயிஷா(ரலி) கட்டளையிட்டார். அவர் பெரியவராக இருந்தால் ஐந்து முறை (பால் குடித்துவிட்டு) தன்னிடம் வரும்படி கூறினார்கள்.*

*மக்களில் யாருக்கும் தொட்டிலில் பால் புகட்டாமல் இவ்வாறு பால் புகட்டி தங்களிடம் வர வைப்பதை உம்மு சலமாவும் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் ஏனைய மனைவியரும் விரும்பவில்லை.*

*“அல்லாஹ்வின் மீது சத்தியமாக (நீங்கள் செய்யும் இச் செயலை நாங்கள் சரி என) அறியவில்லை. இறைத்தூதர்(ஸல்) பொது மக்களுக்கு வழங்காமல் சாலிமுக்கு மட்டும் அளித்த சலுகையாகவே இச்சட்டம் இருக்கலாம்” என அவர்கள் ஆயிஷா(ரலி) அவர்களிடம் கூறினார்கள்.*

***அறிவிப்பவர்: உர்வா இப்னு சுபைர், நூல்: அபூ தாவூத் 1764***

*சாலிம்(ரலி) விஷயத்தில் இறைத்தூதர்(ஸல்) வழங்கிய அனுமதி பொதுவாக அனைத்து மக்களுக்கும் உரியது அல்ல. மாறாக அது சாலிம்(ரலி) அவர்களுக்கு மட்டும் உரியது என*

இறைத்தூதர்(ஸல்) அவர்களின் மனைவியர் அனைவரும் கூறியுள்ளனர். பேணுதல் என்ற அடிப்படையில் இருக்கக் கூடும் என இவர்கள் கூறினாலும் இதுவே உண்மையும் உறுதியான விஷயமும் ஆகும்.

முஸ்லிம் அல்லாத ஒரு தம்பதியினர் ஒரு குழந்தையை தத்தெடுத்து பலவருடங்கள் வளர்க்கிறார்கள். அந்தக் குழந்தை பருவ வயதை அடைந்த நிலையில் இவர்கள் குடும்பத்துடன் இஸ்லாமைத் தழுவுகிறார்கள். இப்போது வளர்ப்புக் குழந்தைகள் மகன்களாக மாட்டார்கள். எனவே, அந்நிய ஆணிடம் கடைபிடிக்க வேண்டிய ஒழுங்கு முறைகளை அவர் விஷயத்தில் கடைபிடிக்க வேண்டும் என்றால் இது அவர்களுக்கு மிகப்பெரிய நெருக்கடி யாகவும் சிரமமாகவுமே இருக்கும்.

இந்த விஷயத்தில் அவ்விருவரின் நிலையிலிருந்து நாம் யோசித்துப் பார்க்க வேண்டும். இப்போது இவர் சாலிம்(ரலி) அவர்களின் நிலையில் இருப்பதால் சாலிம் விஷயத்தில் இறைத் தூதர்(ஸல்) வழங்கிய தீர்ப்பை இவர் விஷயத்தில் வழங்குவதை ஆலோசிக்கலாம்.

அப்படி ஒரு சலுகை அளித்தால் புதிதாக இஸ்லாமை ஏற்கும் அந்தத் தம்பதியருக்கு மிகப்பெரிய ஆறுதலாக இருக்கும். இன்று பல குடும்பங்கள் மஹ்ரம் மற்றும் ஹிஜாப் தொடர்பான விஷயங் களில் சரியான புரிதல் இல்லாமல் இஸ்லாமிற்கு வருவதற்கே யோசிக்கிறார்கள்.

இஸ்லாம் இலகுவான மார்க்கம் என்ற உண்மைக்கு மாற்றமாக நம்முடைய தீர்ப்பும் சட்டங்களும் அமையக்கூடாது. மிகவும் இக்கட்டான, நெருக்கடி நிலையில் உள்ளவர்களுக்கு அரும் மருந்தாக வழங்கப்பட்ட விதிவிலக்கை தெருவில் போகிற அந்நிய ஆணுக்கு ஓர் அந்நியப் பெண் பால்கொடுக்கலாமா? என கொச்சைப்படுத்தி, அசிங்கத்தை அரங்கேற்றுகிறார்கள். ஆபாசமோ, அசிங்கமோ ஹதீஸ்களில் இல்லை. தடம் புரண்டவர்களின் சிந்தனையிலேயே உள்ளது.

இது போன்று அநாகரீகமான முறையில் ஹதீஸ்களை அனு கினால் ஏராளமான ஹதீஸ்களை மறுக்க வேண்டிய நிலைதான் வரும்.

உதாரணமாக உஹுதுப் போரில் சஹாபிய பெண்கள் தங்களின் கீழாடையை உயர்த்தி ஓடினார்கள். அவர்களின்

*கெண்டைக்கால்கள் தெரிந்தன. இந்தப் போரில் காயம்பட்டு கிடந்த முஸ்லிம் ஆண்களை இந்தப் பெண்கள் தூக்கிவந்தார்கள். காயங்களுக்கு மருந்து போட்டார்கள். குடிப்பதற்கு நீர் புகட்டி னார்கள் என ஆதாரப்பூர்வமான பல ஹதீஸ்கள் கூறுகின்றன.*

***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 2883 2880 3039***

*இந்த ஹதீஸ்களை ஏற்றுக் கொள்வதாக இருந்தால் ஓர் அந்நியப் பெண் அந்நிய ஆண்களுக்கு முன்னால் தன்னுடைய கீழாடையை தூக்கிக் கொண்டு ஓடலாமா? அந்நிய ஆண்களை தொட்டுத் தூக்கலாமா? அந்நிய ஆண்களுக்கு மருந்து போட்டு விட்டு தண்ணீர் கொடுக்கலாமா? எனக் கூற வேண்டிவரும். எனவே, இது ஆபாசமாகவும் அசிங்கமாகவும் உள்ளது எனக் கூறி இந்த ஹதீஸ்களை இவர்கள் மறுப்பார்களா? இப்போது புரிந்திருக்கும்; அசிங்கமும் ஆபாசமும் ஹதீஸ்களில் இல்லை. இவர்களின் சிந்தனையில்தான் உள்ளது.*

## *சஹ்லா(ரலி) பால்கொடுத்த முறை*

*ஓர் அந்நியப் பெண்ணின் மார்பகத்தில் வாய் வைத்து பாலருந்துமாறு இறைத்தூதர்(ஸல்) கூறியிருப்பார்களா? எனவே, இச்செய்தி ஆபாசமாக உள்ளது. ஆபாசத்திலும் அசிங்கத்திலும் விதிவிலக்கு வராது எனக் கூறுகின்றனர்.*

*நபிமொழிகளை ஏற்க வேண்டும் என்ற ஈமான் இவர்களிடம் இல்லாத காரணத்தால் ஹதீஸில் இல்லாததை எல்லாம் கூறி நபிமொழிகளுக்கு எதிராக தர்க்கம் செய்து கொண்டிருக்கிறார்கள். மார்பகத்தில் வாய் வைத்து பாலருந்தக்கொடு என்ற வாசகம் எந்த அறிவிப்பிலும் இடம்பெறவில்லை. மாறாக, அர்ளீயீஹி (பால்கொடு) என்ற சொல்லே இடம்பெற்றுள்ளது.*

*ஒரு சொல் எந்தெந்த அர்த்தங்களில் பயன்படுத்தப்படுகிறது என்பதை அச்சொல்லின் நேரடி அர்த்தத்தை மட்டும் வைத்து முடிவுசெய்யக் கூடாது. மக்கள் நடைமுறையில் அதை எவ்வாறு பயன்படுத்துகின்றனர் என்பதையும் கவனித்து அதற்குரிய பொருளை கொடுக்க வேண்டும்.*

*உதாரணமாக திருடக் கூடியவனுக்கு முடிச்சவிழ்க்கி என்று கூறும் வழக்கம் நடைமுறையில் மக்களிடம் உள்ளது. ஆரம்பத்தில் ஆடைகளில் முடிச்சு போட்டு பணத்தைப் பாதுகாத்தனர். அப்போது திருடியவர்கள் முடிச்சுகளை அவிழ்த்து பணத்தை திருடினார்கள்.*

*ஆனால், இன்று திருடுபவர்கள் எந்த முடிச்சுகளையும் அவிழ்ப்ப தில்லை. என்றாலும் இவர்களை முடிச்சவிழ்க்கி எனக் கூறுகிறோம். எனவே, முடிச்சுகளை எவன் அவிழ்கிறானோ அவனைத்தான் முடிச்சவிழ்க்கி என்று சொல்ல வேண்டும். திருடக் கூடிய அனை வரையும் சொல்லக் கூடாது என யாராவது வாதிட்டால் இவன் மக்களின் நடைமுறையை அறியாத அறிவலி என்பதே உண்மை.*

*தானியங்களை அளக்க பயன்படும் மரத்தால் ஆன அளவையை மரக்கால் என்று ஆரம்பத்தில் குறிப்பிட்டார்கள். இந்த அளவை இரும்பால் செய்யப்பட்ட பின்னரும் இதனை மரக்கால் என்றே மக்கள் குறிப்பிடும் வழக்கம் உள்ளது. இப்போது இவர்களிடம் மரத்தால் செய்யப்பட்டதைத்தான் மரக்கால் என்று சொல்ல வேண்டும். இரும்பால் செய்யப் பட்டதை ஏன் மரக்கால் என்று சொல்கிறீர்கள் என்று யாராவது தர்க்கம் செய்தால் இவர் தேவையில்லாமல் பேசுகிறார் என்று புரிந்துகொள்வோம்.*

*ஒரு சொல் ஆரம்பத்தில் ஓர் அர்த்தத்தில் வைக்கப்பட்டு பின்னர் மக்கள் வழக்கத்தில் வேறு ஒரு வடிவத்திற்கு பயன் படுத்தப்படுவது எல்லா மொழிகளிலும் சர்வசாதாரணமாக உள்ள விஷயமாகும். இதற்கு ஏராளமான உதாரணங்களைக் கூற முடியும். ரிளாஃ (பால் புகட்டுதல்) என்ற சொல்லும் இந்த வகையில் உள்ள சொல்லாகும். பொதுவாக இச்சொல் நேரடியாக மார் பகத்தில் வாய் வைத்துக் குடிப்பதற்கு பயன்படுத்தப்பட்டாலும் சில நேரங்களில் எடுத்துக் கொடுப்பதற்கும் பயன்படுத்தப்படும்.*

*சஹ்லா(ரலி) பாலை எடுத்தே சாலிமிற்கு அருந்தக்கொடுத் தார்கள் என சில அறிவிப்புகளில் தெளிவாக உள்ளது. ஆனால், இந்த அறிவிப்புகள் பலவீனமாக இருப்பதால் இவற்றை ஆதார மாக நாம் குறிப்பிடவில்லை. ஆனால், இந்த பலவீனமான அறிவிப்பு கூறுகிற கருத்து மிகச்சரியானதே. பின்வரும் ஹதீஸ்களிலிருந்து இந்த உண்மையை நாம் அறியலாம்.*

*“பால் புகட்டுவதில் மார்பகத்தின் வழியாக குடலை நிரப்புகிற அளவுக்கு உள்ளதும் பால்குடி காலம் முடிவடைவதற்கு முன்பு உள்ளதுமே உறவை ஏற்படுத்தும்'' என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.* ***அறிவித்தவர்: உம்மு சலமா(ரலி), நூல்: திர்மிதீ 1072***

*இந்த ஹதீஸின் வாசகத்தை நன்கு கவனித்தால் ரிளாஃ (பால் புகட்டுதல்) என்ற சொல் மார்பகத்தின் மூலம் அல்லாமல் எடுத்துக் கொடுப்பதற்கும் பயன்படுத்தப்படும் என்பதை அறியலாம்.*

*சஹ்லா(ரலி) சம்பவத்தில் பால்கொடு என்பதற்கு பயன் படுத்தப் பட்ட அதே சொல்லே இங்கும் பயன்படுத்தப் பட்டுள்ளது.*

*உணவில் புதியதையும் சூடாக உள்ளதையும் சாப்பிடுங்கள் என்று கூறினால் உணவில் பழையதும் ஆறிப்போன உணவுகளும் உள்ளது என்பதை அறியலாம். பால் புகட்டுவதில் மார்பகத்தின் வழியாக புகட்டுவதும் உள்ளது என்றால் மார்பகத்தின் வழியாக அல்லாமல் வேறு வழியில் புகட்டுவதும் உள்ளது. அதற்கும் ரிளாஃ என்ற சொல் பயன்படுத்தப்படும் என்பதைப் புரிந்து கொள்ளவேண்டும்.*

*அன்னை ஆயிஷா(ரலி) சிலரை தன் சகேதாரிகளின் மகள் களிடம் அனுப்பி பால்கொடுக்கச் சொன்னார்கள் என ஹதீஸ் கூறுகிறது. இதில் ரிளாஃ என்ற சொல்லே இடம்பெற்றுள்ளது. இது உண்மையில் நடந்த நிகழ்வாகும். எனவே, இதை மறுக்க முடியாது.*

*இதை (சாலிமுக்குப் பால் புகட்டும் படி இறைத்தூதர்(ஸல்) கூறியதை) அடிப்படையாக வைத்து, தன்னை நேரில் பார்க்க வேண்டும் என்றும் தன்னிடம் வரவேண்டும் என்றும் தாம் விரும்பியவர்களுக்கு, பால் புகட்டும் படி தன் சகோதர, சகோதரிகளின் மகள்களுக்கு ஆயிஷா(ரலி) கட்டளையிட்டார். அவர் பெரியவராக இருந்தால் ஐந்து முறை (பால் குடித்துவிட்டு) தன்னிடம் வரும்படி கூறினார்கள்.*

*மக்களில் யாருக்கும் தொட்டிலில் பால் புகட்டாமல் இவ்வாறு பால் புகட்டி தங்களிடம் வர வைப்பதை உம்மு சலமாவும் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் ஏனைய மனைவியரும் விரும்பவில்லை.*

*“அல்லாஹ்வின் மீது சத்தியமாக (நீங்கள் செய்யும் இச் செயலை நாங்கள் சரி என) அறியவில்லை. இறைத்தூதர்(ஸல்) பொது மக்களுக்கு வழங்காமல் சாலிமுக்கு மட்டும் அளித்த சலுகையாகவே இச்சட்டம் இருக்கலாம்'' என அவர்கள் ஆயிஷா(ரலி) அவர்களிடம் கூறினார்கள்.*

***அறிவிப்பவர்: உர்வா இப்னு சுபைர், நூல்: அபூ தாவூத் 1764***

*ஒழுக்கத்திலும் இஸ்லாமிய நெறியிலும் சிறந்து விளங்கிய இந்தப் பெண்கள் மார்பகத்தின் வழியாக பால்கொடுத்தார்கள் என்று புரிவது அவர்களின் தகுதிக்கு ஏற்ற தரமான சிந்தனையா? என்பதை முதலில் அறிய வேண்டும். ஆயிஷா(ரலி) மார்பகத்தின்*

*வழியாக பால்கொடுக்கச் சொல்லியிருந்தால் முதலில் நபியின் மனைவியர் இதையே காரணமாகக் கூறி ஆயிஷா(ரலி) அவர்களுக்கு மறுப்புக்கூறியிருப்பார்கள். ஆனால், நபியின் மனைவியர் இதை விமர்சிக்காமல் இரண்டு வயதுக்கு மேல் உள்ளவர்களுக்கு கொடுக்கக் கூடாது என்ற சட்டத்தையே கூறி ஆயிஷா(ரலி) அவர்களின் கூற்றை விமர்சித்தார்கள். எனவே, இங்கே சொல்லப் படும் பால் புகட்டுதல் என்பது மார்பகத்தில் நேரடியாக பால் கொடுப்பது பற்றி அல்ல. எடுத்துக்கொடுப்பது பற்றியதாகும்.*

*ரிளாஃ என்ற சொல் எடுத்துக்கொடுப்பதைக் குறிக்கும் என்பதை பின்வரும் சம்பவமும் தெளிவுபடுத்துகிறது.*

*நான் அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்களுடன் நீதிமன்ற அலுவலகத்தில் இருந்தேன். அப்போது ஒருவர் அவர்களிடம் வந்து பெரியவருக்கு பால் கொடுப்பது பற்றி கேட்டார்.*

*“ஒருவர் உமர்(ரலி) அவர்களிடம் வந்து எனக்கு ஓர் அடிமைப் பெண் இருக்கிறாள். அவளுடன் நான் உறவுகொண்டு வந்தேன். என் மனைவி அவளிடம் சென்று அவளுக்கு பால் கொடுத்துவிட்டாள். இதன் பின் நான் அந்த அடிமைப் பெண்ணிடம் சென்றபோது என் மனைவி செல்லாதீர்கள். அல்லாஹ்வின் மீது ஆணையாக! நான் அவளுக்கு பால் கொடுத்துவிட்டேன் என்று சொன்னாள் எனக் கூறினார். அதற்கு உமர்(ரலி) உன் மனைவியை அடிப்பீராக. உன் அடிமைப் பெண்ணிடம் நீர் செல்லலாம். சிறுவருக்கு பால்கொடுப்பதே (உறவை ஏற்படுத்தும்) பால் கொடுப்பதாகும்’ என்று கூறினார்கள்” என அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) கூறினார்கள்.*

***அறிவித்தவர்: அப்துல்லாஹ் இப்னு தீனார், நூல்: முஅத்தா 1114***

*இது ஆதாரப்பூர்வமான நிகழ்வாகும். இச்சம்பவத்தில் பெரிய பெண் இன்னொரு பெரியவளுக்கு பால் கொடுத்தாள் என்று கூறுகிறது. இதற்கும் ரிளாஃ என்ற சொல்லே இங்கு பயன் படுத்தப்பட்டுள்ளது. இந்த சம்பவத்தில் அடிமைப் பெண் நேரடியாக மார்பகத்தில் வாய் வைத்து பால் அருந்திருக்க மாட்டாள். பாலை எடுத்து அது சாதாரண பால் போல் காட்டி அவளுக்கு குடிக்கக் கொடுத்ததால்தான் அந்த அடிமைப் பெண் இதை அறியாமல் குடித்துவிட்டாள்.*

*எனவே, ரிளாஃ என்ற சொல்லை எடுத்துக் கொடுப்பதற்கு பயன்படுத்தும் வழக்கம் அரபுகளிடம் இருந்துள்ளது. இறைத்தூதர்*

*(ஸல்) சாலிம்(ரலி) பெரியவராக இருக்கும்போது அவருக்கு பால் கொடுக்குமாறு சஹ்லா(ரலி) அவர்களிடம் கூறியதால் இது நேரடியாக மார்பகத்தன் வழியாக பால் அருந்துவதைக் குறிக்காது. மாறாக எடுத்துக் கொடுப்பதைப் பற்றியே இறைத்தூதர்(ஸல்) கூறியுள்ளார்கள். பின்வரும் ஹதீஸின் ஒரு சொல் இந்த கருத்தை வலுப்படுத்துகிறது.*

*“நீ சாலிமிற்கு ஐந்து முறை பால் கொடுத்தால்* ***உன் பாலின் மூலம்*** *அவர் உனக்கு மஹ்ரமாகிவிடுவார்” என இறைத்தூதர் (ஸல்) சஹ்லா(ரலி) அவர்களிடம் கூறினார்கள்.*

***நூல்: முஅத்தா 1265***

*இச்செய்தியில் சஹ்லா(ரலி) அவர்களின் பாலின் மூலம் என்ற சொல்லை இறைத்தூதர்(ஸல்) பயன்படுத்தியுள்ளார்கள். எனவே, சஹ்லா(ரலி) அவர்களுக்கு இடப்பட்ட உத்தரவு பால் தர வேண்டும் என்பது தானே தவிர மார்பகத்தின் வழியாக நேரடியாக கொடுக்க வேண்டும் என இறைத்தூதர்(ஸல்) ஒருபோதும் கூறவில்லை.*

*அப்படியானால் சில அறிவிப்புகளில் இறைத்தூதர்(ஸல்) பால் கொடுக்கச் சொன்னவுடன் சாலிம் தாடி முளைத்த பெரிய வராக இருக்கிறாரே? பெரிய மனிதராக அவர் இருக்கும்போது நான் எவ்வாறு பால் கொடுப்பது? என சஹ்லா(ரலி) கேள்வி கேட்டதாக இடம்பெற்றுள்ளது. இந்தக் கேள்விகள் நேரடியாக பால்கொடுக்கச் சொன்னால் தானே ஏற்படும் என்றும் வாதிடுகின்றனர்.*

*பால்குடி உறவு என்பது சிறுபிள்ளையாக இருக்கும் போதே ஏற்படும் என்ற சட்டத்தை சஹ்லா(ரலி) அறிந்து வைத்திருந்தார்கள். இதற்கு மாற்றமாக இறைத்தூதர்(ஸல்) இச்சட்டத்தை பெரியவராக இருந்த சாலிமிற்கு அமல் படுத்தக் கூறியபோது, “சாலிம் பெரிய வராக இருக்கும் நிலையில் நான் பால் கொடுத்தால் அவர் எனக்கு மகனாக முடியுமா?” என்ற கேள்வியைத்தான் சஹ்லா(ரலி) கேட்கிறார்.*

*எனவே, அவர்கள் கேட்ட கேள்வி மார்பகத்தில் நேரடியாக பால் குடிப்பது குறித்து அல்ல; பெரியவராக உள்ள சாலிமுக்கு பால் கொடுத்தால் உறவு எப்படி ஏற்படும் என்பதைப் பற்றியே கேட்டார். “சாலிம் பருவத்தை அடைந்தவர் என்பது எனக்குத் தெரியும். அவர் பெரியவராக இருந்தாலும் அவர் விஷயத்தில் இச்சட்டம் செல்லுபடியாகும்” என்று இறைத்தூதர்(ஸல்) பதில் அளிக்கிறார்கள்.*

# ஆயிஷா(ரலி) அவர்களின் தவறான புரிதல்

*பால்குடிச் சட்டத்தில் சாலிமுக்கு வழங்கப்பட்ட விதி விலக்கை, அனைவருக்கும் பொதுவானதாக ஆயிஷா(ரலி) விளங்கிக் கொண்டார். இது மிகவும் தவறான புரிதல். இந்த விஷயத்தில் நபி(ஸல்) அவர்களின் ஏனைய மனைவியர் கூறுவதே மிகச் சரியான கருத்தாகும். இதை முன்னரே விளக்கிவிட்டோம்.*

*ஆயிஷா(ரலி) தன்னை யார் பார்க்க வேண்டும் என விரும்பினார்களோ அவர்களுக்கு பால் கொடுக்கச் சொல்வார்கள் என்ற வாசகத்தை சரியான அடிப்படையில் புரிய வேண்டும். ஆயிஷா(ரலி) பெரிய ஆண்கள் விஷயத்தில் இவ்வாறு கூறவில்லை. மாறாக இரண்டு வயதை கடந்து சிறுவர்களாக இருப்பவர்கள் விஷயத்திலேயே இவ்வாறு நடந்துகொண்டார்கள். உம்மு சலமா(ரலி) அவர்களுக்கும் ஆயிஷா(ரலி) அவர்களுக்கும் இடையே நடந்த உரையாடல் இதைத் தெளிவுபடுத்துகிறது.*

*உம்மு ஸலமா(ரலி), ஆயிஷா(ரலி) அவர்களிடம், "விரைவில் பருவ வயதை அடைய இருக்கும் அந்தச் சிறுவன் உங்கள் வீட்டிற்குள் வருகிறானே! ஆனால், அவன் என் வீட்டிற்குள் வருவதை நான் விரும்ப மாட்டேன்" எனக் கூறினார்.*

*"இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் (இதற்கான) முன்மாதிரி உங்களுக்குக் கிடைக்கவில்லையா?" என ஆயிஷா(ரலி) கேட்டு விட்டுப் பின்வருமாறு கூறினார்:*

*அபூ ஹுதைஃபாவின் மனைவி இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் வந்து "இறைத்தூதர் அவர்களே! ஸாலிம் என் வீட்டிற்குள் வருகிறார். அவர் பருவ வயதையடைந்த மனிதர். இதனால் அபூ ஹுதைஃபாவின் மனதில் அதிருப்தி நிலவுகிறது" எனக் கூறினார்.*

*"நீ ஸாலிமுக்குப் பால் கொடுத்துவிடு. (இதனால் பால்குடி உறவு ஏற்பட்டு) அவர் உன் வீட்டிற்கு வரலாம்" என இறைத் தூதர்(ஸல்) கூறினார்கள்.*
***அறிவித்தவர்: ஸைனப் பின்த் உம்மி ஸலமா(ரலி), நூல்: முஸ்லிம் 2881***

*எனவே, ஆயிஷா(ரலி) பருவ வயதை நெருங்கும் நிலையில் இருந்த சிறுவர்கள் விஷயத்திலேயே இவ்வாறு நடந்து கொண்டார்கள்.*

# பசியினால் ஏற்படுவதே பால்குடி உறவு

*"என் வீட்டிற்கு இறைத்தூதர்(ஸல்) வந்தபோது, என்னிடம் ஓர் ஆண் இருந்தார். அவர்களிடம் ஒரு மாற்றம் தென்பட்டது; அதை அவர்கள் விரும்பவில்லை என்பது தெரிந்தது.*

*"இவர் என் (பால்குடி) சகோதரர்தான்" என நான் கூறினேன்.*

*"உங்கள் சகோதரர்கள் யார் என்பதை ஆராய்ந்து முடிவு செய்யுங்கள். ஏனெனில், பால்குடி உறவு என்பதே பசியினால்தான்" என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*

***அறிவித்தவர்: ஆயிஷா(ரலி), நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 5102***

*ஆயிஷா(ரலி) இரண்டு வயதுக்கு மேல் உள்ளவர்கள் விஷயத்திலும் பால் குடி சட்டம் உண்டு என்ற கருத்தில் இருந்தார்கள். ஆனால், மேற் கண்ட ஹதீஸை ஆயிஷா(ரலி) அவர்களே அறிவித்துள்ளார்கள். பால்குடி உறவு என்பதே பசியினால்தான் ஏற்படும் என இறைத்தூதர்(ஸல்) கூறுகிறார்கள். இரண்டு வயதுக்குள் பால்குடிக்கும் குழந்தையே பசிக்காக பால்குடிக்கும். எனவே, இரண்டு வயதுக்கு மேல் பால்குடித்தால் பால்குடி சட்டம் செல்லாது என்ற கருத்தை இச்செய்தி தருவதாகத் தெரியலாம்.*

*இந்த நபிமொழியை அன்னை ஆயிஷா(ரலி) அவர்களே அறிவித்திருக்கும்போது பால்குடி சட்டம் பெரியவர் விஷயத்திலும் ஏற்படும் என அவர் கூறினால் முரண்பட்ட இரு கருத்துக்களை ஆயிஷா(ரலி) கூறியதைப் போன்ற நிலையே ஏற்படுகிறது. ஆனால், இதில் எந்த முரண்பாடும் இல்லை. பால்குடி உறவு என்பதே பசியினால்தான் ஏற்படும் என்ற இறைத்தூதர்(ஸல்) அவர்களின் சொல் இன்னொரு அர்தத்தையும் உள்ளடக்கியுள்ளது.*

*பசி தீரும் அளவுக்கு நன்கு பலமுறை பால் குடித்தால்தான் உறவு ஏற்படும். அறைகுறையாக ஓரிரு முறை குடித்தால் அதனால் உறவு ஏற்படாது என்ற கருத்தையும் கூறுகிறது. அன்னை ஆயிஷா (ரலி) இறைத்தூதர்(ஸல்) அவர்களின் இச்சொல்லை இந்த அடிப்படையிலேயே புரிந்து கொண்டார்கள். பெரியவருக்கு பால்குடி சட்டம் ஏற்படாது என்ற அர்த்தத்தில் அவர்கள் இதை புரியவில்லை. பசியை போக்கும் அளவுக்கு பால்குடிக்க வேண்டும் என்றே புரிந்தார்கள். எனவேதான், அவர்கள் பெரியவர் விஷயத்தில் பால்குடி சட்டம் ஏற்படும் என்ற புரிதலில் இருந்தார்கள். இந்த விளக்கத்தை இமாம் இப்னு ஹஜர்(ரஹ்) தம்முடைய நூலில்*

*குறிப்பிட்டுள்ளார்.* ***நூல்: பத்ஹுல் பாரீ (பாகம்: 9 பக்கம்: 148)***

# *3. அந்நியப் பெண்ணுடன் இறைத்தூதர்(ஸல்) நெருக்கமாக இருக்கவில்லை*

*உபாதா இப்னு அஸ்ஸாமித்(ரலி) அவர்களின் மனைவி உம்மு ஹராம் பின்த் மில்ஹான்(ரலி) அவர்களின் வீட்டிற்கு இறைத்தூதர்(ஸல்) சென்று வருவது வழக்கமாக இருந்தது.*

*ஒரு நாள் பகலில் இறைத்தூதர்(ஸல்) உம்மு ஹராம்(ரலி) அவர்களின் வீட்டிற்குச் சென்றபோது அவர் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு உணவளித்த பின் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்குப் பேன் பார்த்துக் கொண்டிருந்தார். அப்போது இறைத்தூதர்(ஸல்) உறங்கி விட்டார்கள். பிறகு சிரித்தபடி விழித்தார்கள்.*

*"இறைத்தூதர் அவர்களே! ஏன் சிரிக்கிறீர்கள்?" என நான் கேட்டேன்.*

*"என் சமுதாயத்தில் சிலர் இறைவழியில் இந்தக் கடலின் மத்தியில் பயணம் செய்யும் புனிதப் போராளிகளாக எனக்குக் காட்டப்பட்டனர். அவர்கள் கட்டில்களில் வீற்றிருக்கும் மன்னர் களாக அல்லது மன்னர்களைப் போல இருந்தார்கள்'' என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*

*"இறைத்தூதர் அவர்களே! என்னையும் அவர்களில் ஒருத்தியாக ஆக்கும்படி அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்" என நான் கூறினேன். அப்போது எனக்காக நபி(ஸல்) பிரார்த்தித்தார்கள்.*

*பிறகு (மீண்டும்) தலையை வைத்து விட்டு (சிறிது நேரம் தூங்கிவிட்டு) பின்னர் சிரித்தபடி விழித்தெழுந்தார்கள். அப்போதும், "ஏன் சிரிக்கிறீர்கள்? இறைத்தூதர் அவர்களே!" என நான் கேட்டேன்.*

*"என் சமுதாயத்தில் சிலர் இறைவழியில் புனிதப் போர் புரிபவர்களாக எனக்குக் காட்டப்பட்டார்கள்'' என முன்பு போலவே இறைத்தூதர்(ஸல்) பதிலளித்தார்கள்.*

*"இறைத்தூதர் அவர்களே! என்னையும் அவர்களில் ஒருத்தியாக ஆக்கும்படி அல்லாஹ்விடம் பிரார்த்தியுங்கள்" என நான் அப்போதும் கூறினேன்.*

*''முதலாவதாகச் செல்பவர்களில் ஒருவராக நீங்களும் இருப்பீர்கள்'' என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*

*இவ்வாறு உம்மு ஹராம்(ரலி) கூறினார்கள்.*

*உம்மு ஹராம்(ரலி) முஆவியா இப்னு அபீ சுஃப்யான்(ரலி) அவர்களின் ஆட்சிக் காலத்தில் கடல் பயணம் சென்றார்கள். பின்பு அவர்கள் கடலில் இருந்து புறப்பட்டபோது தம் வாகனத்தில் இருந்து கீழே விழுந்து இறந்து விட்டார்கள்.*

***அறிவித்தவர்: அனஸ் இப்னு மாலிக்(ரலி), நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 7001***

*உம்மு ஹராம்(ரலி) இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு இரத்த பந்த உறவோ அல்லது பால்குடி உறவோ இல்லை. எனவே, ஓர் அந்நியப் பெண்ணின் வீட்டிற்கு இறைத்தூதர்(ஸல்) சென்றார்கள். அப்பெண்ணுக்கு முன்பு படுத்து உறங்கினார்கள். அப்பெண் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு பேன் பார்த்தார்கள் என இந்த ஹதீஸ் கூறுகிறது. இறைத்தூதர்(ஸல்) அவர்களின் ஒழுக்கத்திற்கும் கண்ணியத்திற்கும் எதிராக இந்த ஹதீஸ் இருப்பதால் இதை மறுக்க வேண்டும் என வாதிடுகின்றனர்.*

*இந்த நபிமொழியை அனஸ்(ரலி) அவர்களிடமிருந்து ஐந்து நம்பகமான தாபியீன்கள் அறிவிக்கின்றனர். இவர்களில் நான்கு பேர் மதீனாவாசிகள். ஒருவர் ஈராக் நாட்டைச் சேர்ந்தவர் ஆவார்.*

1. *இஸ்ஹாக் இப்னு அப்தில்லாஹ் மதனீ (ஸஹீஹ் அல் புகாரீ 2580)*
2. *முஹம்மது இப்னு யஹ்யா மதனீ (முஸ்லிம் 3874)*
3. *அப்துல்லாஹ் இப்னு அப்திர் ரஹ்மான் மதனீ (முஸ்லிம் 3875)*
4. *முக்தார் இப்னு ஃபுல்ஃபுல் கூஃபீ (ஹில்யதுல் அவ்லியா 1522)*
5. *அதாவு இப்னு யஸார் மதனீ (அபூ தாவூத் 2131)*

*இந்த ஐந்து தாபியீன்களும் நம்பகமானவர்கள் சரியான நினைவாற்றல் உள்ளவர்களாவர். அனஸ்(ரலி) பொய் சொல்ல மாட்டார்கள். உம்மு ஹராம்(ரலி) அனஸ்(ரலி) அவர்களின் சிற்றன்னை ஆவார். எனவே, இந்த ஹதீஸில் எள்ளளவு கூட சந்தேகம் கொள்ள முடியாது. உம்மு ஹராம்(ரலி) இறைத்தூதர் (ஸல்) அவர்களுக்கு பேன் பார்த்துவிட்ட தகவலை நாம் கண்ணால் நேரடியாகப் பார்த்தால் எப்படி நம்புவோமோ அது போன்றே நம்ப வேண்டும்.*

*உம்மு ஹராம்(ரலி) உம்மு சுலைம்(ரலி) அவர்களின் சகோதரி ஆவார்கள். இறைத்தூதர்(ஸல்) உம்மு ஹராம்(ரலி) அவர்களிடம் திருமணம் முடிக்கத் தடைசெய்யப்பட்ட இரத்த பந்த உறவினரிடம் நடந்துகொள்வதைப் போன்று நடந்து கொண்டார்கள். இதே போன்று உம்மு சுலைம்(ரலி) அவர்களிடமும் இறைத்தூதர்(ஸல்) நடந்துகொண்டார்கள். உம்மு சுலைம்(ரலி) அவர்களின் வீட்டிற்குச் சென்று வந்தார்கள். உம்மு சுலைம்(ரலி) உறங்கும் விரிப்பில் இறைத்தூதர்(ஸல்) அவர்களும் உறங்கினார்கள்.*

*இறைத்தூதர்(ஸல்) (என் தாயார்) உம்மு சுலைம்(ரலி) அவர்களின் இல்லத்துக்கு வந்து, அங்கு உம்மு சுலைம் இல்லாத போது அவர்களின் விரிப்பில் படுத்து உறங்குவார்கள். ஒரு நாள் இறைத்தூதர்(ஸல்) வந்து உம்மு சுலைமின் விரிப்பில் படுத்து உறங்கினார்கள். அப்போது அங்கு வந்த உம்மு சுலைம்(ரலி) அவர் களிடம், "இதோ இறைத்தூதர்(ஸல்) உங்கள் வீட்டில் உங்கள் விரிப்பில் உறங்கிக் கொண்டிருக்கிறார்கள்" எனக் கூறப்பட்டது.*

*உடனே உம்மு சுலைம்(ரலி) வந்(து பார்த்)தார்கள். இறைத் தூதர்(ஸல்) அவர்களுக்கு வியர்த்திருந்தது. அவர்களின் வியர்வை, படுக்கையில் ஒரு துண்டுத் தோலில் திரண்டிருந்தது. உடனே உம்மு சுலைம், தம்முடைய நறுமணப் பெட்டியைத் திறந்து, அந்த வியர்வைத் துளிகளைத் துடைத்து தம்முடைய கண்ணாடிக் குடுவையொன்றில் அதைப் பிழிந்து சேகரிக்கலானார்கள். இறைத்தூதர்(ஸல்) திடுக்கிட்டு விழித்து, "உம்மு சுலைமே! என்ன செய்கிறாய்?" எனக் கேட்டார்கள். அதற்கு அவர், "இறைத்தூதர் அவர்களே! அதன் பரகத்தை எங்கள் குழந்தைகளுக்காக எதிர்பார்க்கிறோம். (அதனால் தான் அதைச் சேகரிக்கிறோம்)" எனக் கூறினார்கள். இறைத்தூதர்(ஸல்) "நீ செய்தது சரிதான்" எனக் கூறினார்கள்.*

***அறிவித்தவர்: அனஸ் இப்னு மாலிக்(ரலி), நூல்: முஸ்லிம் 4656***

*எனவே, உம்மு ஹராம்(ரலி) அவர்களின் ஹதீஸை மறுத்த வர்கள் இறைத்தூதர்(ஸல்) உம்மு சுலைம்(ரலி) அவர்களின் வீட்டுக்கு வழமையாக செல்லக் கூடியவர்களாக இருந்தார்கள். அங்கு சென்று உறங்கினார்கள். உம்மு சுலைம்(ரலி) இறைத்தூதர் (ஸல்) அவர்களின் வியர்வையை எடுத்தார்கள் என்று கூறும் இந்த ஹதீஸையும் மறுக்க வேண்டும். உம்மு ஹராம்(ரலி) அவர்களும் உம்மு சுலைம்(ரலி) அவர்களும் ஒரே வீட்டிலேயே*

வசித்து வந்தனர். உம்மு சுலைம்(ரலி) பற்றிய மேற்கண்ட ஹதீஸை அனஸ்(ரலி) அவர்களிடமிருந்து பல நம்பகமானவர்கள் அறிவிக்கிறார்கள்.

1. இஸ்ஹாக் இப்னு அப்தில்லாஹ் (முஸ்லிம் 4656)
2. அப்துல்லாஹ் இப்னு அபீ தல்ஹா (நஸாயீ 5276)
3. சுமாமா (ஸஹீஹ் அல் புகாரீ 6281)
4. சாபித் (முஸ்லிம் 4300)
5. அபூ கிலாபா (புகாரீ 4302)
6. அனஸ் இப்னு சீரீன் (அஹ்மது 11562)
7. ஹுமைத் (அஹ்மது 12929)
8. கதாதா (அபூ தாவூத் 562)
9. அபூ தய்யாஹ் (அஹ்மது 12510)
10. அபூ உஸ்மான் (அஸ்ஸுனனுல் குப்ரா 8110)
11. அதாவு இப்னு யஸார் (அபூ தாவூத் 2131)

உம்முஹராம்(ரலி) தொடர்பான செய்தியும் உம்மு சுலைம் (ரலி) தொடர்பான செய்தியும் சந்தேகப்பட முடியாத அளவு ஏராளமான நம்பகமானவர்கள் வழியாக வந்த நபிமொழியாகும்.

இச்செய்தியை அனஸ்(ரலி) அறிவித்தார்கள் என்பது மிக உறுதியானது. எனவே, இந்த ஹதீஸை நம்பிக்கையாளர்கள் மறுக்கவே மாட்டார்கள். இறைத்தூதர்(ஸல்) இந்த இருவரிடமும் நடந்து கொண்டதைப் போல வேறு எந்தப் பெண்ணிடமும் நடந்து கொள்ளவில்லை. இந்த இருவரிடம் மட்டுமே திருமணம் செய்ய தடையான இரத்த பந்த உறவினரிடம் நடந்து கொண்டதைப் போல நடந்து கொண்டார்கள். உம்மு ஹராம்(ரலி) அவர்களும் உம்மு சுலைம்(ரலி) அவர்களும் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு அந்நியப் பெண்ணாக இருந்தார்கள் என எந்த செய்தியிலும் கூறப்படவில்லை.

நாம் நபித்தோழர்களின் காலத்தில் இருந்து இறைத்தூதர்(ஸல்) இப்பெண்ணிடம் நடந்துகொண்டதைக் கண்கூடாகக் காண்கிறோம் என வைத்துக் கொள்வோம். இதைக் கண்டவுடன் ஒவ்வொரு முஃமினும் உடனே என்ன முடிவுக்கு வருவான்? அவன் நபியை சரியாக நம்பாதவனாக இருந்தால் இறைத்தூதர்(ஸல்) அந்நியப் பெண்ணுடன் நெருக்கமாக இருக்கிறார்கள். எனவே, ஒழுக்கம்

கெட்ட இவர் நபியாக இருக்க முடியாது என்ற முடிவுக்கு வருவான். இறைத்தூதர்(ஸல்) அவர்களையும் அவர்களின் ஒழுக்கத்தையும் ஆழமாக நம்பக் கூடியவன் இருவருக்கும் இடையே என்ன உறவுள்ளது என்பது நமக்குத் தெரியவில்லை. ஆனால், கண்டிப்பாக இறைத்தூதர்(ஸல்) அந்நியப் பெண்ணுடன் இது போன்று நடக்கமாட்டார்கள். எனவே, உம்மு ஹராம்(ரலி) இறைத்தூதர் (ஸல்) அவர்களுக்கு மஹ்ரமான உறவினராகவே இருக்க முடியும் என்ற முடிவுக்கு வருவான். எனவே, நாமும் இந்த முடிவுக்கே வர வேண்டும்.

## பால்குடி சிற்றன்னை

இப்னு அபதில் பர், யஹ்யா இப்னு இப்ராஹீம், அபுல் காசிம் இப்னு ஜவ்ஹரீ, தாவூதீ, முஹல்லப், இப்னுல் அரபீ, இப்னுத் தீன், இப்னுல் ஜவ்ஸீ, மற்றும் பல இஸ்லாமிய அறிஞர்கள் இக்கருத்தைக் கூறியுள்ளனர். ஹிஜ்ரீ இரண்டாம் நூற்றாண்டில் ஆயிரக்கணக்கான ஹதீஸ்களை அறிவித்து சிறந்த அறிஞராகத் திகழ்ந்த அப்துல்லாஹ் இப்னு வஹப் அவர்கள் உம்மு ஹராம்(ரலி) இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு பால்குடி சிற்றன்னை ஆவார் எனக் கூறியுள்ளார்கள். இது மிக வலுவான ஆதாரமாகும்.

**فتح الباري – ابن حجر (11/ 78)**

**قال لنا بن وهب أم حرام إحدى خالات النبي صلى الله عليه و سلم من الرضاعة**

உம்மு ஹராம்(ரலி) இறைத்தூதர்(ஸல்) அவர்களின் பால் குடி சிற்றன்னைகளில் ஒருவராவார் என இப்னு வஹப் கூறியுள்ளார்.

***நூல்: ஃபத்ஹுல் பாரீ (பாகம் 11 பக்கம் 78)***

எனவே, உம்மு ஹராம்(ரலி) இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு பால்குடி உறவின் மூலம் சிற்றன்னை ஆவார் என்ற கருத்து ஹிஜ்ரீ இரண்டாம் நூற்றாண்டிலேயே கூறப்பட்டுள்ளது. இந்த விஷயம் வரலாற்று நூல்களில் பதிவு செய்யப்படவில்லை. இதன் காரணத்தால் சில இஸ்லாமிய அறிஞர்கள் உம்மு ஹராம்(ரலி) அவர்களுக்கும் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கும் இடையே எந்த உறவு முறையும் இல்லை எனக் கூறியுள்ளனர். ஆனால், இவர்கள் யாரும் உம்மு ஹராம்(ரலி) சம்பந்தப்பட்ட மேற்கண்ட ஹதீஸை மறுக்கவில்லை. விளக்கமே கூறுகின்றனர். இவர்களின்

*விளக்கத்தைவிட உம்மு ஹராம்(ரலி) இறைத்தூதர்(ஸல்) அவர்களின் பால்குடி சிற்றன்னை என்று கூறும் அறிஞர்களின் கருத்தே நமக்கு சரியாகத் தெரிகிறது.*

## அறியப்படாத பால்குடி உறவு

*இறைத்தூதர்(ஸல்) அவர்களின் உறவினர்களைப் பற்றி முழு விபரமும் வரலாற்று நூல்களில் பதிவுசெய்யப்பட்டிருக்கும் போது உம்மு ஹராம்(ரலி) அவர்களைப் பற்றிய இந்த விபரம் மட்டும் ஏன் கூறப்படவில்லை என்று கேட்கின்றனர்.*

*அரபிகள் வம்சாவழி உறவு முறைக்கே அதிக முக்கியத்துவம் கொடுத்து பாதுகாத்து வந்தனர். இந்த உறவு முறை மக்களிடம் பரவலாக அறியப்பட்டு பிரபல்யமாக இருந்தது. ஆனால், பால் குடி உறவு முறை சம்பந்தப்பட்டவர் கூறினாலே தவிர வேறு யாராலும் அறிந்துகொள்ள முடியாத அளவுக்கு மறைவான விஷயமாகவே இருந்தது. பின்வரும் ஹதீஸ்கள் இந்த உண்மையை நமக்கு தெளிவுபடுத்துகின்றன.*

*என்னிடம் ஒரு மனிதர் அமர்ந்திருக்க, இறைத்தூதர்(ஸல்) என் வீட்டிற்கு வந்தார்கள். "ஆயிஷாவே! இவர் யார்?" எனக் கேட்டார்கள்.*

*"என் பால் குடிச் சகோதரர்" என நான் கூறினேன்.*

*"ஆயிஷாவே! உங்கள் சகோதரர்கள் யார் என ஆராய்ந்து பார்த்து முடிவு செய்து கொள். ஏனெனில், பால்குடி உறவு என்பதே பசியால் (குழந்தை பால் அருந்தியிருந்தால்)தான்" என இறைத் தூதர்(ஸல்) கூறினார்கள்.*

***அறிவித்தவர்: ஆயிஷா(ரலி), நூல்: ஸஹீஹ் அல் புகாரீ (2647)***

*ஆயிஷா(ரலி) அவர்களுடன் இருந்த மனிதர் அவர்களுக்கு பால்குடி சகோதரர் ஆவார் என்ற விஷயம் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்குக்கூட தெரியவில்லை. ஆயிஷா(ரலி) கூறிய பிறகே இந்த விஷயம் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்குத் தெரியவந்தது.*

*நான் அபூ இஹாப் இப்னு அஸீஸ் என்பவரின் மகளை மணந்து கொண்டேன். அப்போது ஒரு பெண் என்னிடம் வந்து "நான், உக்பாவுக்கும் நீ மணந்து கொண்டுள்ள பெண்ணுக்கும் (உங்கள் மழலைப் பருவத்தில்) பாலூட்டினேன்' (இந்த வகையில் நீங்கள் இருவரும் பால்குடிச் சகோதரரர்கள் ஆவீர்கள்) எனக் கூறினார்.*

*நான் "நீங்கள் எனக்குப் பாலூட்டியதை நான் அறிய மாட்டேன்; (நான் மணமுடித்துக் கொண்டபோது) நீங்கள் எனக்கு (இதைத்) தெரிவிக்கவில்லையே!" எனக் கூறினேன்.*

*எனவே, மதீனாவிலிருந்த இறைத்தூதர்(ஸல்) அவர்களை நோக்கிப் பயணம் செய்து, அவர்களிடம் (இது குறித்து) வினவினேன்.*

*"(நீயும் உம் மனைவியும் ஒரே செவிலித் தாயிடம் பால் குடித்ததாகச்) சொல்லப்பட்டப் பிறகு (நீங்கள் இருவரும் இணைந்து வாழ்வது) எப்படி (ஆகுமானது)?" என கூறினார்கள்.*

*உடனடியாக நான் அவளை விட்டுப் பிரிந்துவிட்டேன். அப்பெண்ணும் வேறொரு ஆணை மணந்து கொண்டாள்.*

***அறிவித்தவர்: உக்பா இப்னு அல்ஹாரிஸ்(ரலி),***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ (88)***

*உக்பா(ரலி) தான் மணமுடித்த பெண் தனக்கு பால்குடி உறவின் அடிப்படையில் சகோதரி உறவு வேண்டும் என்பதை அறியாமலேயே அவருடன் வாழ்ந்துள்ளார்கள். உக்பா(ரலி) அவர்களின் குடும்பத்திலும் இதை யாரும் அறிந்திருக்கவில்லை. உக்பா(ரலி) மணமுடித்த பெண்ணுக்கும் அப்பெண்ணின் குடும்பத்தாருக்கும்கூட இது தெரியவில்லை. பால்கொடுத்த தாய் வந்து சொல்லாவிட்டால் கடைசி வரை இவ்விருவரும் கணவன் மனைவியாகவே வாழ்ந்திருப்பார்கள். எனவே, பால்குடி உறவு முறையை சம்பந்தப்பட்டவர்கள் உட்பட பலரும் அறிந்திருக்க வில்லை என்பதை இந்நிகழ்வும் உறுதிபடுத்துகிறது.*

*இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் "தாங்கள் ஹம்ஸா(ரலி) அவர்களின் புதல்வியை மணமுடித்துக்கொள்ளக் கூடாதா?" எனக் கேட்கப்பட்டது. "அவள் பால்குடி உறவு முறையினால் எனக்குச் சகோதரர் மகள்" என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*
***அறிவித்தவர்: இப்னு அப்பாஸ்(ரலி), நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 5100***

*ஹம்ஸா(ரலி) இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு பால்குடி சகோதரர் ஆவார் என்ற விஷயம் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு மட்டுமே தெரிந்துள்ளது. மற்றவர்கள் இதை அறிந்திருக்கவில்லை.*

*"இறைத்தூதர் அவர்களே! (என் சகோதரி) அபூ சுஃப்யானின் மகள் விஷயத்தில் தங்களுக்கு விருப்பம் உண்டா?" என (ஒரு முறை) நான் கேட்டேன்.*

*“நான் என்ன செய்ய வேண்டும்?” என அவர்கள் கேட்டார்கள்.*

*“நீங்கள் (அவளை) மணந்து கொள்ள வேண்டும்” என நான் கூறினேன்.*

*“இதை நீயே விரும்புகிறாயா?” என இறைத்தூதர்(ஸல்) கேட்டார்கள்.*

*“(ஆம்!) மனைவி என உங்களுக்கு நான் ஒருத்தி மட்டும் இல்லையே! தங்களை அடைந்து கொள்ளும் பாக்கியத்தில் என்னுடன் என் சகோதரிக்கும் பங்கு கிடைப்பதை நான் பெரிதும் விரும்புகிறேன்” என நான் கூறினேன்.*

*“அவள் எனக்கு (மணமுடிக்க) அனுமதிக்கப்பட்டவள் இல்லையே!” என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*

*“தாங்கள் பெண் கேட்டதாக எனக்குச் செய்தி எட்டியதே!” என நான் கூறினேன்.*

*“(என் துணைவியார்) உம்மு சலமாவின் மகளையா?” என இறைத்தூதர்(ஸல்) கேட்டார்கள்.*

*“ஆம்” என நான் கூறினேன்.*

*“அவள் என் மடியில் வளர்ந்த வளர்ப்பு மகளாக (இருக்கிறாள். அப்படி) இல்லாவிட்டாலும் கூட, அவள் எனக்கு (மணமுடிக்க) அனுமதிக்கப்பட்டவள் அல்லள்.(ஏனெனில்,) எனக்கும் அவளுடைய தந்தை (‘அபூ சலமா’)வுக்கும் ஸுவைபாவே பாலூட்டினார். ஆகவே, உங்கள் பெண் மக்களையோ, சகோதரிகளையோ (நான் மணமுடிக்க) என்னிடம் பரிந்துரைக்காதீர்கள்” என இறைத்தூதர் (ஸல்) கூறினார்கள்.*

***அறவிவித்தவர்: இறைத்தூதர்(ஸல்) அவர்களின் துணைவி உம்மு ஹபீபா(ரலி), நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 5106***

*இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு அபூ சலமா(ரலி) பால்குடிச் சகோதரர் உறவு வேண்டும் என்ற விஷயம் இறைத்தூதர்(ஸல்) கூறிய பிறகு மற்றவர்களுக்குத் தெரிய வருகிறது. பால்குடி உறவுகளைப் பற்றிய அறிவு மக்களிடம் இருக்கவில்லை என்பதை இந்த ஹதீஸ்கள் தெளிவுபடுத்துகிறது.*

*இது போன்றே உம்மு ஹராம்(ரலி) அவர்களுக்கும் இறைத் தூதர்(ஸல்) அவர்களுக்கும் இடையே இருந்த பால்குடி உறவைப் பற்றிய விபரம் பரவலாக மக்களுக்கிடையே அறியப்படவில்லை. எனவே, இந்தத் தகவல் வரலாற்றில் பதிவு செய்யப்படவில்லை.*

வரலாறுகளில் எத்தனையோ தகவல்கள் பதிவு செய்யப்படாமல் விடப்பட்டுள்ளன. பல தவறான பொய்யான தகவல்கள் கூட வரலாறுகளில் பதிவு செய்யப்பட்டுள்ளன. வரலாற்றுத் தகவலை விட நபிமொழிகள் உறுதியானவை. ஓர் ஆதாரப்பூர்வமான நபிமொழிக்கு முரணான கருத்து வரலாற்றில் பதிவு செய்யப் பட்டிருந்தால் கூட, அந்தத் தகவலைக் கொண்டு நபிமொழியை புறக்கணிக்க முடியாது. அவ்வாறிருக்க வரலாற்றில் ஒரு கருத்து பதிவு செய்யப்படவில்லை என்பதால், ஆதாரப்பூர்வமான நபிமொழியை எப்படி புறக்கணிக்க முடியும்?

எனவே, வரலாற்று நூல்களில் இல்லை என்பதை காரணமாகக் கொண்டு மிக உறுதியான ஆதாரப்பூர்வமான நபிமொழியை மறுக்க முடியாது. உம்மு ஹராம்(ரலி) அவர்களின் உறவு முறை குறித்து மூத்த அறிஞர்கள் கூறிய கருத்துக்கள் வரலாற்றுத் தகவலைவிட வலுவான சான்றாகும். இறைத்தூதர்(ஸல்) உம்மு ஹராம்(ரலி) அவர்களிடம் நடந்து கொண்ட விதமே அவர்கள் நபியவர்களுக்கு அந்நியப்பெண் அல்ல என நாம் முடிவு செய்வதற்கு போதிய சான்றாகும். இதை விட பெரிய ஆதாரம் வேறொன்றும் தேவையில்லை. உம்மு ஹராம்(ரலி) இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு பேன் பார்த்த இச்சம்பவத்தைப் போன்று பின்வரும் செய்தியும் அமைந்துள்ளது.

இறைத்தூதர்(ஸல்) பத்ஹாவில் இருக்கும்போது நான் அங்கு வந்தேன். அப்போது அவர்கள், “ஹஜ் செய்ய நாடிவிட்டீரா?” எனக் கேட்டார்கள்.

நான் “ஆம்!’ என்றேன்.

“எதற்காக இஹ்ராம் கட்டினீர்?” என அவர்கள் கேட்டார்கள்.

“இறைத்தூதர்(ஸல்) எதற்காக இஹ்ராம் கட்டினார்களோ அதற்காக!” என நான் கூறினேன்.

உடனே, ‘‘நல்லகாரியம் செய்தீர்! போய் இறையில்லம் கஅபாவையும் ஸஃபா-மர்வாவையும் தவாஃப் செய்யும்!’’ என அவர்கள் கூறினார்கள்.

பிறகு நான் கைஸ் கோத்திரத்தாரின் **ஒரு பெண்ணிடம் வந்தேன்; அவர் என் தலையில் பேன் பார்த்தார்.** பிறகு நான் ஹஜ்ஜுக்காக இஹ்ராம் கட்டினேன்.

***அறிவித்தவர்: அபூ மூஸா(ரலி), நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 1724***

அபூ மூஸா(ரலி) அவர்களுக்கு கைஸ் குலத்தைச் சார்ந்த ஒரு பெண் பேன் பார்த்துவிட்டதாக இந்த ஹதீஸ் கூறுகிறது. ஒரு சிறந்த நபித்தோழர் அந்நியப் பெண்ணிடம் பேன் பார்க்கச் செல்வாரா? ஹஜ்ஜுக்குப் புறப்படும்போது இப்படிப்பட்ட காரியத்தைச் செய்வாரா? எனக் கேட்டு இந்த ஹதீஸை மறுக்க முடியுமா?

அபூ மூஸா(ரலி) அவர்களுக்கு அந்தப் பெண் அந்நியப் பெண்ணாக இருக்க வாய்ப்பு இல்லை. அவ்விருவருக்கும் இடையே இரத்த பந்த உறவோ அல்லது பால்குடி உறவோ இருக்கும். நமக்கு அந்தத் தகவல் கிடைக்கவில்லை என்று புரிந்துகொண்டால் ஒரு பிரச்னையுமில்லை. ஆனால், அனைத்தையும் அறிந்துவிட்டது போன்ற மமதையில் தேவையின்றி தர்க்கம் செய்தால் நம்பக மானவர்களின் சாட்சியத்தை மறுத்துவிட்டு ஹதீஸ்களை பொய் யாக்க வேண்டிய நிலையே வரும். இது இஸ்லாமின் இரண்டாவது அடிப்படையைத் தகர்த்தெறியும் மிகத்தீய காரியமாகும்.

உம்மு ஹராம்(ரலி) பிற்காலத்தில் கடற்பயணம் செய்து வீரமரணம் அடைவார்கள் என்ற முன்னறிவிப்பும் இந்த ஹதீஸில் கூறப்பட்டுள்ளது. இந்த முன்னறிவிப்பின் படி உம்மு ஹராம் (ரலி) முஆவியா(ரலி) அவர்களுடன் போருக்குப் புறப்பட்டுச் சென்று வீரமரணம் அடைந்தார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்களால் மட்டுமே இது போன்ற முன்னறிவிப்புகளைக் கூற முடியும். உம்மு ஹராம்(ரலி) பற்றிய இந்த நபிமொழி சந்தேகப்பட முடியாத அளவுக்கு மிகவும் உண்மையான நிகழ்வு என்பதை இந்த முன்னறிவிப்பு தெளிவுபடுத்துகிறது.

## 4. மூஸா நபியும், உயிரைக் கைப்பற்றும் வானவரும்

மூஸா(அலை) அவர்களிடம் மரணத்தின் வானவர் வந்து, "உங்கள் இறைவனுக்குப் பதில் தாருங்கள்" எனக் கூறினார். அப்போது மூஸா(அலை) மரணத்து வானவரின் கண்ணில் அடித்து கண்ணை பிதுங்கச் செய்து விட்டார்.

எனவே, அந்த வானவர் அல்லாஹ்விடம் சென்று, "மரணத்தை விரும்பாத உன் அடியானிடம் என்னை நீ அனுப்பி விட்டாய். அவர் என் கண்ணை பிதுங்கச் செய்து விட்டார்" எனக் கூறினார். அல்லாஹ் அவருக்குக் கண்ணைத் திரும்பக் கொடுத்தான்.

*“என் அடியானிடம் சென்று “நீ வாழ்வதையா விரும்புகிறாய்? நீ வாழ்வதை விரும்பினால் ஒரு மாட்டின் முதுகில் உன் கையை வை. உன் கை எத்தனை ரோமங்களை அடக்கிக் கொள்கிறதோ அத்தனை வருடங்கள் நீ உயிர் வாழலாம்’ என்று சொல்லுங்கள்” என இறைவன் கூறினான்.*

*“இறைவா! அதற்குப் பிறகு?” என மூஸா(அலை) கேட்டார்கள்.*

*“பிறகு மரணம்தான்” என அல்லாஹ் கூறினான்.*

*உடனே, “அப்படியானால் இப்போதே (எடுத்துக் கொள்)” என மூஸா(அலை) கூறினார்கள்.*

*புனிதத் தலத்திலிருந்து (பைத்துல் முகத்தஸிலிருந்து) கல் எறியும் தூரத்தில் உள்ள இடத்தில் தம் உயிரைக் கைப்பற்றுமாறு அல்லாஹ்விடம் மூஸா(அலை) வேண்டிக் கொண்டார்கள்.*

*“நான் மட்டும் இப்போது அங்கு (பைத்துல் முகத்தஸில்) இருந்தால் உங்களுக்கு அச்செம்மண் குன்றுக்கு அருகில் உள்ள பாதையில் இருக்கும் மூஸா(அலை) அவர்களின் கப்ரைக் காட்டியிருப்பேன்” என்றும் இறைத்தூதர்(ஸல்) குறிப்பிட்டார்கள்.*

***அறிவித்தவர்: அபூ ஹுரைரா(ரலி), நூல்: முஸ்லிம் 4375***

*பல காரணங்களைக் கூறி இச்சம்பவத்தையும் மறுத்துள்ளார்கள். அபூ ஹுரைரா(ரலி) அவர்களிடமிருந்து மூன்று நம்பகமான தாபியீன்கள் இந்த நபிமொழியை அறிவித்துள்ளார்கள்.*

1. *தாஊஸ் (ஸஹீஹ் அல் புகாரீ 3407)*
2. *ஹம்மாம் இப்னு முனப்பஹ் (முஸ்லிம் 4375)*
3. *அம்மார் இப்னு அபீ அம்மார் (அஹ்மது 10484)*

*இம்மூவரிடமிருந்து பலர் இந்த ஹதீஸை அறிவித்துள்ளனர். இச்சம்பவத்தைப் பொய் என மறுப்பதாக இருந்தால் அபூ ஹுரைரா(ரலி) அவர்களே பொய்யுரைத்து உள்ளார்கள் எனக் கூற வேண்டிய நிலை ஏற்படுகிறது. அல்லாஹ் பாதுகாக்க வேண்டும்.*

*உன்னதமான நபித்தோழர்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் மீது ஒருபோதும் பொய் சொல்லமாட்டார்கள். இந்த நம்பிக்கையுடன் இந்த ஹதீஸிற்கு எதிராக எழுப்பப்படும் ஆட்சியேபனைகளையும் அதற்கான விளக்கங்களையும் அறிந்து கொள்வோம்.*

*அல்லாஹ்வின் உத்தரவை நிறைவேற்றுவதற்காக மூஸா (அலை) அவர்களிடம் வானவர் வந்தபோது மூஸா(அலை) வானவரை அடிப்பது அநாகரீகமான செயலாகும். அல்லாஹ்வின் உத்தரவுக்கு கட்டுப்படாமல் வரம்புமீறி நடக்கும் செயலாகும். எனவே, மூஸா(அலை) இவ்வாறு செய்திருக்க மாட்டார்கள் என வாதிடுகின்றனர்.*

*மூஸா(அலை) மலகுல் மவ்த்தை அடித்தார்கள் என்பதை மட்டுமே பார்க்கின்றனர். மூஸா(அலை) வானவரை ஏன் அடித்தார்கள்? மரணம் விஷயத்தில் அல்லாஹ் அவர்களுக்கு வழங்கிய உரிமை என்ன? மூஸா(அலை) அவர்களின் இயல்பான குணம் என்ன? போன்ற விபரங்கள் எதுவும் இவர்களுக்குத் தெரியவில்லை. இந்த விபரங்கள் அனைத்தையும் அறிந்துகொண்டு இந்த சம்பவத்தை நோக்கினால்தான் இந்த ஹதீஸில் எந்தப் பிரச்னையும் இல்லை என்பதை விளங்கமுடியும்.*

## மூஸா(அலை) அவர்களின் இயல்பான குணம்

*மூஸா(அலை) தான் விரும்பாத விஷயங்களை பார்க்கும் போது கடுமையாக கோபம் கொள்ளக் கூடியவர்களாக இருந்தார்கள். இது அவர்களின் இயல்பான குணமாகும். பின்வரும் சம்பவங் களிலிருந்து இதை அறியலாம்.*

*மூஸா பருவமடைந்து பக்குவமான நிலையை அடைந்த போது அவருக்கு கல்வி ஞானத்தை வழங்கினோம். நல்லோர்களுக்கு இவ்வாறே நாம் கூலி வழங்குவோம். அவ்வூர் மக்கள் கவனமற்று இருக்கும் நேரத்தில் அங்கே சென்றார். இருவர் சண்டையிட்டுக் கொண்டிருப்பதைக் கண்டார். ஒருவர் இவரின் இனத்தைச் சார்ந்தவர். இன்னொருவர் இவரின் எதிரியின் இனத்தைச் சார்ந்தவர். அவரின் இனத்தைச் சார்ந்தவர் அவருடைய எதிரியின் கூட்டத்தைச் சார்ந்த வருக்கு எதிராக மூஸாவிடம் உதவி தேடினார். உடனே மூஸா அவன் மீது ஒரு குத்துவிட்டு அவன் கதையை முடித்துவிட்டார். இது ஷைத்தானின் வேலை. அவன் பகிரங்க விரோதியாக உள்ளான் என்று கூறினார். என் இறைவா! எனக்கு நானே அநீதி இழைத்துக் கொண்டேன். என்னை மன்னித்துவிடு எனக் கூறினார். அல்லாஹ் அவரை மன்னித்தான். அவன் மன்னிப்பவன். கருணையாளன்.*

*என் இறைவா! நீ எனக்கு அருள்புரிந்துள்ளாய். எனவே, இனி நான் குற்றவாளிகளுக்கு உதவியாளனாக இருக்கமாட்டேன் எனக் கூறினார்.*

*அந்நகரத்தில் பயத்துடன் கவனித்துக் கொண்டிருந்தார். அப்போது நேற்று அவரிடம் உதவி தேடியவன் அவரை மீண்டும் உதவிக்கு அழைத்தான். நீ தெளிவான வழிகேடன் என மூஸா கூறினார். அவ்விருவரின் எதிரியாக இருந்தவனை அவர் பிடிக்கச் சென்றபோது, மூஸாவே! நேற்று ஒருவரை கொன்றது போல் என்னையும் கொல்ல நினைக்கிறாயா? நீ பூமியில் ஆதிக்கம் செலுத்துபவராகவே இருக்க நினைக்கிறாய். நீ நல்லவர்களில் ஒருவராக இருக்க விரும்பவில்லை எனக் கூறினார்.*

***அல்குர்ஆன் 28:14***

*அல்லாஹ் மூஸா(அலை) அவர்களுக்கு கல்வி ஞானத்தையும் விபரத்தையும் வழங்கிய பிறகே அவர்கள் ஒரு கொலையைச் செய்கிறார்கள். அதைச் செய்துவிட்டு அல்லாஹ்விடம் மன்னிப்பும் கேட்ட பிறகு மறு நாள் மறுபடியும் சண்டைக்குச் செல்ல நினைத் தார்கள். இந்நிகழ்வு குர்ஆனில் உள்ளதால் ஹதீஸ் மறுப்பாளர்கள் இதை மறுக்கமாட்டார்கள். ஆனால், இதே நிகழ்வு ஹதீஸ்களில் வந்திருந்தால் அல்லாஹ் நபிமார்களின் வாழ்க்கையைத்தான் மக்களுக்கு படிப்பினையாக ஆக்கி இருந்தான். மூஸா(அலை) கொலை செய்திருந்தால் அவர் சொல்லும் ஏகத்துவத்தை மக்கள் எப்படி ஏற்றுக்கொள்வார்கள்? எனவே, இது பொய்யான சம்பவம் எனக் கூறி மறுத்திருப்பார்கள். அல்லாஹ் பாதுகாக்க வேண்டும்.*

*மூஸா தம் கூட்டத்தாரிடம் கைசேதத்துடன் கோபமாக திரும்பிச் சென்றார். எனக்குப் பிறகு நீங்கள் செய்தது மிகவும் கெட்ட செயலாகும். "உங்கள் இறைவனின் கட்டளைக்கு அவசரப்படு கிறீர்களா?" எனக் கூறி பலகைகளை கீழே போட்டார். தம் சகோதரரின் தலையைப் பிடித்து தம் பக்கம் இழுத்தார். "என் தாயின் மகனே கூட்டத்தினர் என்னை பலவீனமாக்கிவிட்டனர்; என்னைக் கொல்வதற்கு தயாராகிவிட்டனர். எனவே, எதிரிகள் என்னைக் கண்டு சிரிக்கும் நிலையை ஏற்படுத்துவிடாதீர். அநீதி இழைத்த கூட்டத்தாருடன் என்னை ஆக்கிவிடாதீர்" எனக் கூறினார்.*

***அல்குர்ஆன் (7:150)***

*மூஸா(அலை) அவர்களுக்கு கோபம் வந்தபோது அல்லாஹ் வின் வார்த்தைகள் பதிக்கப்பட்டிருந்த பலகைகளை கீழே தூக்கி எறிகிறார்கள். ஹாரூன்(அலை) அவர்களின் தாடியையும் தலையையும் பிடித்து அடிக்கச் செல்கிறார்கள். கோபத்தை ஏற்படுத்தும் நிகழ்வுகளின்போது மூஸா(அலை) கடும் கோபம்*

*கொள்ளக் கூடியவராகவே இருந்தார்கள் என்பதை இதன் மூலம் அறிந்துகொள்ள முடியும்.*

# பொறுமை இழந்த மூஸா(அலை)

*மூஸா(அலை) சில விஷயங்களை கற்றுக்கொள்வதற்காக களிர் (அலை) அவர்களுடன் பயணம் செய்தார்கள். களிர்(அலை) மூஸா (அலை) அவர்களின் இயல்பான குணத்தைப் புரிந்து "எம்முடன் நீங்கள் பொறுமையாக வரமாட்டீர்கள்'' எனக் கூறினார்கள். அதற்கு, "நான் பொறுமையுடன் வருவேன்" என மூஸா(அலை) கூறியதன் பேரில், இருவரும் புறப்பட்டனர். ஆனால், மூஸா (அலை) பொறுமை இழந்தார்கள். அவகாசம் அளிக்கப்பட்ட பிறகும் பொறுமை இழந்தார்கள். இவ்வாறு மும்முறை பொறுமை இழந்ததும் அவர்களின் பயணம் நிறைவுற்றது. இதை அல்லாஹ் குர்ஆனில் குறிப்பிடுகிறான்.*

*"என்னுடன் பொறுமையாக இருப்பதற்கு உம்மால் முடியாது. நீர் அறிந்துகொள்ளாத விஷயத்தில் எப்படி பொறுமையாக இருப்பீர்?" என (களிர்) கூறினார். "அல்லாஹ் நாடினால் என்னை பொறுமையாளராக நீங்கள் காண்பீர்கள். உங்கள் உத்தரவை நான் மீறமாட்டேன்" என மூஸா கூறினார்.*

*"என்னை நீர் பின்பற்றி வரும்போது நானாக உமக்கு விளக்கம் தரும் வரை எதைப் பற்றியும் என்னிடம் கேட்கக் கூடாது" எனக் கூறினார்.*

*அவ்விருவரும் சென்றனர். ஒரு கப்பலில் ஏறியவுடன் அதில் அவர் ஓட்டை போட்டார். "கப்பலில் இருப்பவர்களை மூழ்கடிப் பதற்காக இதில் ஓட்டை போடுகிறீரா? பெரிய காரியத்தை செய்து விட்டீர்" எனக் கூறினார்.*

*"நீர் என்னுடன் பொறுமையாக இருக்கமாட்டீர் என்று நான் உமக்கு கூறவில்லையா?" எனக் கேட்டார்.*

*''நான் மறந்ததற்காக என்னைப் பிடித்துவிடாதீர். என் விஷயத்தில் சிரமத்தை ஏற்படுத்திவிடாதீர்" என மூஸா கூறினார்.*

*அவ்விருவரும் சென்றனர். ஒரு சிறுவனை சந்தித்தபோது அவர் அவனை கொன்றார்.*

*"எந்த உயிரையும் கொல்லாத ஒரு தூய உயிரை கொன்று*

*விட்டீரே. நீர் தகாத காரியத்தை செய்துவிட்டீர்" என மூஸா கூறினார்.*

*"நீர் என்னுடன் பொறுமையாக இருக்கமாட்டீர்' என்று நான் உமக்கு கூறவில்லையா?" எனக் கேட்டார்.*

*"இனி வேறு எதையாவது பற்றி நான் உங்களிடம் கேட்டால் நீங்கள் என்னுடன் சேர வேண்டாம். என்னிடம் நீங்கள் சமாதானத்தை பெற்றுவிட்டீர்" எனக் கூறினார்.*

*அவ்விருவரும் நடந்தனர். முடிவில் ஒரு கிராமத்தாரிடம் வந்து அவர்களிடம் உணவு கேட்டனர். அவ்விருவருக்கும் விருந்தளிக்க அவர்கள் மறுத்து விட்டனர். அங்கே விழுவதற்குத் தயாரான நிலையில் ஒரு சுவரை இருவரும் கண்டனர். உடனே (அந்த அடியார்) அதை (தூக்கி) நிறுத்தினார்.*

*"நீர் நினைத்திருந்தால் இதற்குக் கூலியைப் பெற்றிருக்கலாமே" என (மூஸா) கூறினார்.*

*"இதுவே எமக்கும் உமக்கும் இடையே பிரிவாகும். உம்மால் பொறுமையாக இருக்க முடியாதவற்றுக்கான விளக்கத்தை உமக்குக் கூறுகிறேன்" என அவர் கூறினார்.* ***அல்குர்ஆன் 18:67***

*ஒரு நபி இவ்வளவு அவசர புத்தியுள்ளவராக இருப்பாரா? எனக் கேட்டு குர்ஆனில் இடம்பெற்றுள்ள இந்த சம்பவத்தை மறுக்க முடியாது. மூஸா(அலை) நபியாக இருந்தாலும் அவரும் மனிதரே. சாதாரண மனிதனிடம் இருக்கும் பலவீனங்கள் அவர்களிடத்திலும் இருந்தது.*

## வானவரை அறியாத நபிமார்கள்

*வந்தவர் வானவர் என்பதை அறிந்துகொண்டே மூஸா(அலை) வானவரை தாக்கினார்கள் எனக் கூறுகின்றனர். இது ஹதீஸ்களில் இல்லாத பொய்யான விமர்சனம்.*

*வானவர்கள் பலமுறை நபிமார்களிடம் மனித வடிவில் வந்துள்ளார்கள். தாம் வானவர் என்பதை வானவர்கள் முன்வந்து கூறாதவரை அதை நபிமார்களால் அறிந்துகொள்ள முடியாது. மர்யம்(அலை) அவர்களிடம் ஜிப்ரீல்(அலை) மனித வடிவில் வந்தபோது அவர் அந்நிய இளைஞர் என நினைத்து மர்யம் (அலை) அவரை விரட்டுகிறார்கள். நான் வானவர் ஜிப்ரீல் எனக் கூறிய பிறகே இதை மர்யம்(அலை) அவர்களால் அறிய முடிந்தது.*

*வேதத்தில் மர்யமை நினைவுகூர்வீராக. அவர் தன் குடும்பத் தாரை விட்டு கிழக்கில் உள்ள ஓர் இடத்தில் தனித்திருந்தார். அவர்களை விட்டும் ஒரு திரையை அவர் ஏற்படுத்திக் கொண்டார். அப்போது அவரிடம் நம் ரூஹை அனுப்பினோம். சீரான தோற்றம் உள்ள மனிதராக அவருக்கு அவர் காட்சியளித்தார். நான் உன்னி டமிருந்து அளவற்ற அருளாளனிடம் பாதுகாப்புத் தேடுகிறேன். நீ இறையச்சமுள்ள மனிதராக இருந்தால் (சென்றுவிடு) எனக் கூறினார். நான் உன் இறைவனின் தூதனாவேன். பரிசுத்தமான குழந்தையை உனக்கு வழங்குவதற்காக (வந்துள்ளேன்) எனக் கூறினார். எந்த மனிதரும் என்னைத் தீண்டவில்லை. நான் விபச்சாரியாகவும் இல்லை. அவ்வாறிருக்க எனக்கு எவ்வாறு குழந்தை உருவாகும்? எனக் கேட்டார்.* ***அல்குர்ஆன் 19:16***

*இதுபோன்று நபி இப்ராஹீம்(அலை) அவர்களிடம் வானவர்கள் வந்தபோது அதை அவர்களால் அறிந்துகொள்ள முடியவில்லை. நாங்கள் வானவர்கள் என்று சொன்ன பிறகே இப்ராஹீம்(அலை) இதை அறிந்து கொண்டார்கள்.*

*இப்ராஹீம்(அலை) அவர்களின் மரியாதைக்குரிய விருந்தாளி களைப் பற்றிய செய்தி உம்மிடம் வந்ததா? அவர்கள் அவரிடம் சென்று, "ஸலாம்" எனக் கூறினார்கள். அவரும், "ஸலாம். அறிமுகம் இல்லாத கூட்டமாக இருக்கிறீர்கள்'' எனக் கூறிவிட்டு, தம் குடும்பத்தாரிடம் விரைந்து சென்று கொளுத்த கன்றை (சமைத்துக்) கொண்டு வந்தார்கள். அவர்களுக்கு அருகே அதை வைத்து "நீங்கள் சாப்பிடமாட்டீர்களா?" எனக் கேட்டார். அவர்களைக் கண்டு ஓர் அச்சத்தை உணர்ந்தார். அஞ்சாதீர் என்று கூறி அறிவுள்ள குழந்தை அவருக்கு பிறக்கப்போவதாக நற்செய்தி சொன்னார்கள்.* ***அல்குர்ஆன் 51:24***

*மூஸா(அலை) சில சந்தர்ப்பங்களில் பொறுமை இழந்து அவசரப்படக் கூடியவராகவும் கோபம் கொள்ளக் கூடியவர்களாக வும் இருந்தார்கள் என்பதை முன்னர் அறிந்து கொண்டோம்.*

*மூஸா(அலை) அவர்களிடம் வானவர் மனித வடிவில் வந்ததால் வந்தவர் வானவர் என்பதை மூஸா(அலை) அறிய வில்லை. ஒரு மனிதர் திடீரென வந்து உன் இறைவனுக்கு பதிலளி என்று சொன்னதால் மூஸா(அலை) இவர் தன்னை கொல்ல வந்த மனிதன் என எண்ணி வானவரை அடித்திருக்கலாம். அதன் பின்பே தம்மிடம் வந்தவர் வானவர் என்பதை அவர்கள் அறிந்திருக்கலாம்.*

*உயிரை வாங்கும் வானவர் அடிவாங்கும் அளவுக்கு பல வீனராக இருந்தாரா? என்ற கேள்வியையும் இங்கே எழுப்புகிறார்கள்.*

*வானவரை யாரும் அடிக்க முடியாது; மூஸா(அலை) இறைத்தூதர் என்பதால் மட்டுமே இது நிகழந்துள்ளது. சராசரி மனித வாழ்க்கையில் மலகுல் மவ்த் என்னும் ஒரு வானவரை யாரும் அடிக்கவே முடியாது; சராசரி மனிதனிடம் மலகுல் மவ்த் என்னும் வானவர்கள் உயிரைப் பறிக்க அனுமதியும் கேட்க மாட்டார்கள்., இறைத்தூதர்களிடம் மட்டுமே உயிரைப் பறிக்க அனுமதி கேட்டு, அவர்கள் அனுமதித்த பின்னரே உயிரைப் பறிப்பார்கள்; இது இறைவன் விதித்த விதியாகும்.*

*அது மட்டுமின்றி மூஸா(அலை) அவர்களுக்கு அல்லாஹ்விடம் இருந்த அந்தஸ்த்தையும் வானவர் நன்கே அறிந்திருந்தார்கள். வந்தவர் வானவர் என்பதை அறியாமல்தான் மூஸா(அலை) தாக்கினார் என்பதையும் அந்த வானவர் அறிந்து கொண்டார். எனவேதான் தன்னை தாக்கியபோதும் பதிலுக்கு அவரை வானவர் தாக்கவில்லை. வானவர் அடி வாங்கி அமைதியாக இருந்தது தன் இயலாமையால் அல்ல. இது நம் சுய விளக்கம் அல்ல; நேரடியாக ஹதீஸில் இடம்பெற்றுள்ளதையே முன் வைக்கிறோம்.*

*என் இறைவா! உன் அடிமை மூஸா என் கண்ணை பிதுங்கச் செய்துவிட்டார். உன்னிடம் அவர் அந்தஸ்த்திற்குரியவராக இல்லா விட்டால் அவரை கஷ்டப்படுத்தியிருப்பேன் என மலகுல் மவ்த் கூறினார்.* ***நூல்: அஹ்மத் 10484***

*மூஸா(அலை) அவர்களின் உயிரைக் கண்டிப்பாக வாங்கி விட்டு வர வேண்டும் என அல்லாஹ் வானவருக்கு உத்தரவு இட்டிருந்தால் வானவர் அவ்வாறே செய்திருப்பார். ஆனால், அல்லாஹ் வானவருக்கு அவ்வாறு உத்தரவிடவில்லை. மூஸாவிடம் செல்லுங்கள். அவர் மரணிக்க விரும்பினால் உயிரைக் கைப்பற்றி விட்டு வாருங்கள். விரும்பாவிட்டால் திரும்பி வந்துவிடுங்கள் என்றே அல்லாஹ் கூறினான்.*

*வானவர் மூஸா(அலை) அவர்களின் உயிரை வாங்காமல் அல்லாஹ்விடம் திரும்புகிறார். அல்லாஹ்வும் அந்த வானவரை ஏன் உயிரை வாங்காமல் வந்தீர் என கண்டிக்கவில்லை. மாறாக மூஸா(அலை) அவர்களுக்கு இன்னும் பல வருடங்கள் வாழ்வதற்கு அனுமதி அளித்தான். இதிலிருந்து மூஸா(அலை) அவர்களின்*

விருப்பத்திற்கு ஏற்றவாறு நடந்துகொள்ள வேண்டும் என்றே அல்லாஹ் வானவருக்கு உத்தரவிட்டான் என்பதை நம்மால் புரிய முடிகிறது.

இந்த விளக்கம் அல்லாஹ்வின் தகுதிக்கும் வானவரின் கடமைக்கும் ஏற்றதாக உள்ளது.மேலும், இந்த விளக்கம் மரணிக்கும் விஷயத்தில் இறைத்தூதர்களுக்கு அல்லாஹ் வழங்கிய சிறப்பு உரிமை பற்றி கூறும் நபிமொழிகளுடன் பொருந்திப்போகிறது. மூஸா(அலை) உடன்பட்டால் அவரின் உயிரை வாங்கலாம் என அல்லாஹ் கூறியிருக்கும்போது அவர்கள் விரும்பாமலேயே வானவர் உயிரை வாங்குவதே அல்லாஹ்வின் உத்தரவை மீறும் செயலாகும்.

வானவர்கள் இது போன்ற காரியத்தை ஒருபோதும் செய்ய மாட்டார்கள். எனவே, இச்சம்பவத்தில் வானவர் தன் கடமையை சிறப்பாகவே செய்துள்ளார். இதன் பின்னரும் வானவர் அடி வாங்கும் அளவுக்கு பலவீனராக இருந்தாரா? வானவர் அல்லாஹ் சொன்ன கட்டளையை நிறைவேற்றாமல் போவாரா? எனக் கேட்பது பிடிவாதத்தின் விளிம்பு நிலை.

## நபிமார்களுக்கு அல்லாஹ் வழங்கிய உரிமை

நபிமார்களுக்கு மட்டும் அவர்கள் மரணிப்பதற்கு முன்பு மரணிக்கிறீர்களா? அல்லது இன்னும், சிறிது காலம் வாழ்கிறீர்களா? என அல்லாஹ் கேட்பான். இவ்விரண்டில் எதை வேண்டு மானாலும் தேர்வு செய்யும் உரிமை அவர்களுக்கு உண்டு. பின்வரும் ஹதீஸ்கள் இதை தெளிவுபடுத்துகின்றன.

“உலக வாழ்வு, மறுமை வாழ்வு ஆகிய இரண்டில், தாம் விரும்பியதைத் தேர்வு செய்யும் வாய்ப்பு வழங்கப்படாமல் எந்த இறைத்தூதரும் இறப்பதில்லை'' என இறைத்தூதர்(ஸல்) அவர்களிடமிருந்து நான் செவியுற்றேன்.

இறைத்தூதர்(ஸல்) மரண தருவாயில் நோயுற்று இருந்த போது அவர்களின் தொண்டை கட்டிக் கொண்டது. “அல்லாஹ் அருள்புரிந்துள்ள இறைத்தூதர்கள், உண்மையாளர்கள், இறை வழியில் உயிர்த்தியாகம் புரிந்தவர்கள் மற்றும் நல்லடியார்களுடன்” எனும் (4:69) இறைவசனத்தை (கம்மிய, கரகரப்பான குரலில்) ஓதத் தொடங்கினார்கள்.

*“இவ்வுலகம் மறுமை ஆகிய இரண்டில் ஒன்றைத் தேர்வு செய்யும் வாய்ப்பு அவர்களுக்கு வழங்கப்பட்டுவிட்டது’ என நான் எண்ணினேன்” என ஆயிஷா(ரலி) கூறினார்கள்.*

**நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 4435**

*அபூ சயீத் அல்குத்ரீ(ரலி) அறிவித்தார்:*

*இறைத்தூதர்(ஸல்) மக்களுக்கு உரை நிகழ்த்தினார்கள்; (இது, அவர்கள் இறப்பதற்கு முன்பு நோயுற்று இருந்த நேரமாகும்). அதில், “அல்லாஹ் ஓர் அடியாருக்கு இந்த உலகம் அல்லது தன்னிடம் இருப்பது - இவ்விரண்டில் ஏதேனும் ஒன்றைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும்படி கூறினான். அந்த அடியார் அல்லாஹ்விடம் இருப் பதையே தேர்ந்தெடுத்துக் கொண்டார்” எனக் கூறினார்கள்.*

*இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு இறப்பு நெருங்கி விட்டதைப் புரிந்து கொண்ட அபூ பக்ர்(ரலி)அழுதார்கள்.*

*“விரும்பியதைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள சுய அதிகாரம் அளிக்கப்பட்ட அடியாரைப் பற்றி இறைத்தூதர்(ஸல்) குறிப் பிட்டதற்கு இவர் ஏன் அழுகிறார்?” என நாங்கள் வியப்புற்றோம்.*

*இறைத்தூதர்(ஸல்) அவர்களே அந்த சுய அதிகாரம் அளிக்கப் பட்ட அடியார் (என்பதையும் இறைவனிடம் இருப்பதைத் அவர்கள் தேர்வு செய்து கொண்டார்கள் என்பது அவர்களின் இறப்பைக் குறிக்கிறது என்பதையும் எங்களில் அபூ பக்ர்(ரலி) மட்டுமே அறிந்து கொண்டார்கள். ஏனெனில்,) அபூ பக்ர்(ரலி) எங்களில் மிகவும் அறிந்தவராக இருந்தார்கள்.*

**நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 3654**

*மூஸா(அலை) இறைத்தூதர் என்பதால் அவர்களுக்கும் அல்லாஹ் இந்த உரிமையை வழங்கினான். அல்லாஹ் தமக்கு இந்த உரிமையை வழங்கியுள்ளான் என்பதை மூஸா(அலை) நன்கு அறிந்திருந்தார்கள். வானவர் வந்து நீங்கள் மரணிக்க விரும்புகிறீர்களா? அல்லது இன்னும் வாழ ஆசைப்படுகிறீர்களா? எனக் கேட்டிருந்தால், மூஸா(அலை) வானவரை அடித்திருக்க மாட்டார்கள். மூஸா(அலை) அவர்களின் விருப்பத்திற்கு ஏற்றவாறு நடந்துகொள்ள வேண்டும் என அல்லாஹ் வானவருக்கு கூறிய விஷயத்தை மூஸா(அலை) அறிந்திருக்கவில்லை. வானவர் திடீரென வந்து உம் இறைவனுக்கு பதிலளி என்று சொன்னவுடன் அல்லாஹ் தமக்கு உயிர் வாழ வழங்கியுள்ள உரிமைக்கு எதிராக யாரோ*

*பேசுகிறார் என எண்ணி மூஸா(அலை) கோபப்பட்டு அடித்து விட்டார்கள்.*

*மூஸா(அலை) அவர்களும் மனிதரே. அறியாமையால் தவறு இழைக்கக் கூடியவரே. அல்லாஹ்வின் ஏற்பாட்டையும் வானவரின் நோக்கத்தையும் மூஸா(அலை) அறியாததால் மூஸா(அலை) இவ்வாறு நடந்துகொண்டார்கள். எனவேதான், மூஸா(அலை) அவர்களின் நிலையைப் புரிந்துகொண்டு வானவர் பொறுமையுடன் அல்லாஹ்விடம் திரும்பிச் செல்கிறார். அல்லாஹ்வும் மூஸா (அலை) அவர்களை கண்டிக்கவில்லை. மாறாக அவர் எதிர்பார்த்த படி இன்னும் சில காலங்கள் வாழ்வதற்குரிய உரிமையை அல்லாஹ் அவருக்கு வழங்குகிறான்.*

*வானவர் என மூஸா(அலை) தெரிந்தே அடித்தார்கள் என்பதை ஒரு வாதத்திற்காக ஏற்றுக்கொண்டாலும் இச்சம்பவத்தை மறுக்க முடியாது. ஹதீஸ்களை மறுத்தே ஆக வேண்டும் என்ற நோய் உள்ளவர்களுக்கு அல்லாஹ்தான் நேர்வழி காட்ட வேண்டும். நாம் அவர்களுக்காகப் பிரார்த்திப்போமாக. ஆதாரப்பூர்வமான நபிமொழிகளை ஏற்க வேண்டும். அவற்றுக்குரிய விளக்கத்தை அறிந்துகொள்ள வேண்டும் என்ற ஆர்வம் உள்ளவர்களுக்கு இது போன்ற விளக்கங்கள் போதும் எனக் கருதுகிறோம்.*

## மரணத்தை விரும்பிய இறைத்தூதர்

*மரணத்தை விரும்பாத அடியானிடம் என்னை அனுப்பி விட்டாய் என வானவர் அல்லாஹ்விடம் கூறுகிறார். எனவே, இச்செய்தி மூஸா(அலை) மரணத்தை வெறுத்தார்கள் எனக் கூறுகிறது. நபிமார்கள் இவ்வாறு இருக்கமாட்டார்கள் என்றும் விமர்சிக்கின்றனர்.*

*மூஸா(அலை) மரணிக்க விரும்பாமல் இன்னும் சில வருடங்கள் உலகில் வாழ ஆசைப்படுவது அல்லாஹ் அவர்களுக்கு வழங்கிய உரிமையில் உள்ளது. அல்லாஹ் அனுமதித்துள்ள ஒரு விஷயத்தில் கேள்வி கேட்பதும் அதில் குறை காண்பதும் அதிக பிரசங்கித்தனமாகும். நம்பிக்கையாளர்களிடம் இதுபோன்ற குதர்க்கமான சிந்தனை வரவே கூடாது.*

*மூஸா(அலை) தன்னிடம் நடந்துகொண்ட விதத்தைப் பார்த்து மூஸா(அலை) தற்போது மரணிக்க விரும்பவில்லை என வானவர் தவறாக நினைத்துக் கொண்டாரே தவிர, மூஸா(அலை)*

*மரணத்தை வெறுக்கவில்லை. மரணம், வாழ்கை இந்த இரண்டில் ஒன்றைத் தேர்வு செய்யும் உரிமை தமக்கு வழங்கப்பட வேண்டும் என்பதையே அல்லாஹ்விடம் எதிர்பார்த்தார்கள். இந்த இடத்தில் அல்லாஹ் வானவரிடம் கூறிய வார்த்தைகளை நாம் நிதானமாகச் சிந்திக்க வேண்டும்.*

*"செல்லுங்கள் என் அடியானிடம்; 'நீ வாழ்வதை விரும்பு கிறாயா? நீ வாழ்வதையே விரும்பினால் ஒரு மாட்டின் முதுகில் உன் கையை வை. உன் கை எத்தனை ரோமங்களை அடக்கிக் கொள்கிறதோ அத்தனை வருடங்கள் நீ உயிர் வாழலாம்' எனக் கூறுங்கள்" என இறைவன் கூறினான். (வானவரும் அவ்வாறே மூஸாவிடம் கூறினார்)*

*"இறைவா! அதற்குப் பிறகு (என் நிலை என்ன)?" என மூஸா(அலை) கேட்டார்.*

*"பிறகு மரணம்தான் (கதி)" என அல்லாஹ் கூறினான்.*

*"அப்படியானால் இப்போதே (எடுத்துக் கொள்)" என மூஸா(அலை) கூறிவிட்டு, (பைத்துல் முகத்தஸ் எனும்) புனிதத் தலத்திலிருந்து கல்லெறியும் தூரத்திலுள்ள இடத்தில் தம் உயிரைக் கைப்பற்றுமாறு அல்லாஹ்விடம் வேண்டிக் கொண்டார்கள்.*

***அறிவித்தவர்: அபூ ஹுரைரா(ரலி), நூல்: முஸ்லிம் 4375***

*மூஸாவே! நீ வாழ்வதையே விரும்புகிறாய். எனவே, இத்தனை வருடங்கள் நீ வாழ்ந்துகொள் என அல்லாஹ் கூறவில்லை. மாறாக நீ வாழ்வதை விரும்பினால் இத்தனை வருடங்கள் உயிர் வாழலாம் என்றே கூறுகிறான்.*

*உலகத்தில் பல வருடங்கள் வாழ அல்லாஹ் தமக்கு வாய்ப்பு அளித்த பிறகும் மூஸா(அலை) அதை தேர்வு செய்யாமல் மரணத்தையே தேர்வு செய்கிறார்கள். மேலும் பைத்துல் முகத்தஸிற்கு அருகில் தம் உயிரை கைப்பற்றுமாறு கோரிக்கை வைக்கிறார்கள். மூஸா(அலை) மரணத்தை வெறுக்கவில்லை. மாறாக இறைத்தூதர்களில் ஒவ்வொருவருக்கும் வழங்கப்பட்ட வாறே தமக்கும் தேர்வு செய்யும் உரிமை வழங்கப்பட வேண்டும் என்றே விரும்பினார்கள். அல்லாஹ் அந்த உரிமையை வழங்கிய வுடன் உலகத்தில் வாழ ஆசைப்படாமல் மரணத்தை தேர்வு செய்து கொண்டார்கள்.*

காளை மாட்டின் மீது கை வைத்தால் எத்தனை முடிகளை கை அடக்கிக்கொள்கிறதோ அத்தனை வருடங்கள் வாழலாம் என மூஸா(அலை) அவர்களிடம் அல்லாஹ் கூறுகிறான். இதன் பிறகு என்ன? என்று அவர்கள் கேட்கிறார்கள். இதன் பிறகு மரணம்தான் என அல்லாஹ் கூறுகிறான்.

இந்த உலகத்தில் பிறந்தால் மரணித்தே ஆக வேண்டும் என்ற உண்மை கூட மூஸா(அலை) அவர்களுக்குத் தெரியவில்லை என இச்சம்பவம் கூறுகிறது. மூஸா(அலை) இந்த அளவுக்கு அறிவற்ற வராக இருக்கமாட்டார். எனவே, இது பொய்யான நிகழ்வு என்றும் விமர்சிக்கின்றனர்.

இவர்களின் அறியாமைக்கு அளவே இல்லாமல் போய் விட்டது. உலகத்தில் பிறந்தால் மரணித்தே ஆக வேண்டும் என்ற உண்மையை மூஸா(அலை) அறிந்தே வைத்திருந்தார்கள். காளை மாட்டின் மீது கை வைத்தால் கையில் படுகிற முடிகளின் எண்ணிக்கையின் அளவுக்கு உலகில் வாழ அல்லாஹ் அவகாசம் அளித்த பிறகு மறுபடியும் ஆயுட்காலத்தை அதிகரிப்பானா? அல்லது அவகாசம் அளிக்காமல் உயிரை கைப்பற்றிவிடுவானா? என்பது பற்றியே அவர்கள் கேட்கிறார்கள். அதற்குப் பின் அவகாசம் அளிக்கப்படாது என அவர்களுக்கு பதில் தரப்படுகிறது.

இச்சம்பவத்தை இவர்களுக்கு முன்பு வரலாற்றில் பலர் மறுத்துள்ளனர். அவ்வாறு மறுத்தவர்களை இப்னு ஹிப்பான் இப்னு ஹுஸைமா போன்ற ஹதீஸ் துறை அறிஞர்கள் பித்அத் வாதிகள் என்றும் தவறான சிந்தனையாளர்கள் என்றும் விமர்சித் துள்ளனர்.

மூஸா(அலை) அல்லாஹ்வின் உத்தரவை மீறவில்லை. வானவர் கடமை தவறவில்லை. இச்சம்பவத்தில் கொள்கை ரீதியான பிரச்னை எதுவுமில்லை. தன்னை மட்டுமே மிகப்பெரிய அறிவாளியாக எண்ணிக்கொண்டு இது போன்ற நபிமொழிகளை துணிந்து விமர்சிக்கும் போக்கை ஹதீஸ் மறுப்பாளர்கள் கைவிட வேண்டும்.

## 5. சுலைமான்(அலை) பெற்ற படிப்பினை

தாவூத்(அலை) அவர்களின் புதல்வர் சுலைமான்(அலை), (ஒரு நாள்) "நான் இன்றைய நாளில் நூறு துணைவியரிடமும் சென்று வருவேன். அப்பெண்களில் ஒவ்வொருவரும் இறைவழி

யில் அறப்போர் புரியும் (வீரக்) குழந்தை ஒன்றைப் பெற்று எடுப்பார்கள்" எனக் கூறினார்கள்.

அப்போது, "இன்ஷா அல்லாஹ் - இறைவன் நாடினால்" எனக் கூறுங்கள்" என அவர்களிடம் இருந்த வானவர் கூறினார்.

சுலைமான்(அலை), 'இன்ஷா அல்லாஹ்' எனக் கூறவில்லை; மறந்துவிட்டார்கள். அவ்வாறே சுலைமான்(அலை) அவர்களும் தம் துணைவியரிடம் சென்றார்கள். ஒரே ஒரு மனைவியைத் தவிர வேறு எவரும் குழந்தை பெற்றெடுக்கவில்லை. அந்த ஒரு மனைவியும் அரை மனிதரையே பெற்றெடுத்தார்.

"இன்ஷா அல்லாஹ் - இறைவன் நாடினால்' என அவர் கூறி இருந்தால் அவர் தம் சத்தியத்தை முறித்திருக்க மாட்டார். தம் தேவையையும் அடைந்திருப்பார்'' என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.

**அறிவித்தவர்: அபூ ஹுரைரா(ரலி), நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 5242**

ஹதீஸ் மறுப்பாளர்கள் மறுக்கும் ஆதாரப்பூர்வமான ஹதீஸ் களில் இதுவும் ஒன்று. இந்த நபிமொழியை அபூ ஹுரைரா(ரலி) அவர்களிடமிருந்து மூன்று நம்பகமான தாபியீன்கள் அறிவித் துள்ளார்கள்.

1. முஹம்மது இப்னு சீரீன் (ஸஹீஹ் அல் புகாரீ:7469)
2. தாஉஸ் (ஸஹீஹ் அல் புகாரீ:6720)
3. அஃரஜ் (ஸஹீஹ் அல் புகாரீ:3424)

இந்த சம்பவத்தை பொய் என மறுத்தால் அபூ ஹுரைரா (ரலி) அவர்களே பொய்யுரைத்தார்கள் என்றே கூற வேண்டும். அல்லாஹ் பாதுகாக்க வேண்டும்.

ஓர் இரவில் 100 மனைவிமார்களிடம் ஒருவரால் எவ்வாறு உடலுறவு கொள்ள முடியும்? எனக் கேட்கின்றனர். சுலைமான் (அலை) அவர்களை நம்மைப் போன்ற சாதாரண மனிதர் என அவர்கள் எண்ணிக்கொண்டு இந்தக் கேள்வி கேட்கின்றனர்.

சுலைமான்(அலை) மனிதர் என்றாலும் அல்லாஹ் யாருக்கும் வழங்காத ஏராளமான தனிச்சிறப்புகளை அவர்களுக்கு மட்டும் வழங்கினான். அவர்களுக்கு ஜின்களையும் காற்றையும் வசப்படுத்திக் கொடுத்தான். ஜின்கள் கடலுக்குள் சென்று அவர்களுக்காக முத்துக்களை எடுத்து வந்தன. நீண்ட தொலைவிலுள்ள நாட்டி

*லிருந்து சிம்மாசனத்தை கண்ணிமைக்கும் நேரத்தில் கொண்டு வந்தன. பறவைகள் அவர்களுக்காக உளவு பார்த்துவிட்டு வந்தன. பறவைகள் மற்றும் எறும்புகளின் பாஷையை அறிந்திருந்தார்கள். உலகில் எவரும் பெற்றிராத அளவுக்கு அழகான மாளிகையும் குதிரைப்படைகளையும் பெற்றிருந்தார்கள். இவ்வாறு குர்ஆன் கூறுகிறது.*

*இவையெல்லாம் சாத்தியமில்லை எனக் கூறி இவற்றையும் மறுக்கத் துனிவார்களா? ஒரே நாளில் பல மனைவிமார்களுடன் உடலுறவுகொள்ளும் ஆற்றலை அல்லாஹ் அவர்களுக்கு வழங்கினான். அல்லாஹ் அவர்களுக்கு வழங்கிய பெரும் பெரும் பாக்கியங்களை எல்லாம் எண்ணிப் பார்ப்பவர்களுக்கு இதை நம்புவதில் எந்தப் பிரச்னையும் இருக்காது.*

*மட்டுமின்றி புகாரீ ஹதீஸ் எண் 5242 ல் உள்ள அரபு வாசகத்தை நன்றாகக் கவனிக்க வேண்டும். அதில் லைலா என்ற வார்த்தைப் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதற்கு இன்று இரவு என்ற பொருள் அல்ல; இன்றைய நாளில் என்றே பொருள். ஓர் இரவில் அவர்கள் எவ்வாறு 100 மனைவியரிடம் சென்று வர முடியும்? அதற்கு நேரமே போதாதே என வாதிடலாம். ஆனால் இங்கு ஒரு நாள் முழுவதையும் பற்றித்தான் குறிப்பிடப்பட்டுள்ளது. எனவே இது சாத்தியம்தான் என்பதில் மாற்றுக் கருத்து இல்லை.*

*அல்லைலஹ் என்னும் பதத்திற்கு ஒரு நாள் என்று பொருள். ஓர் இரவு என்பது பொருள் அல்ல. இதற்கு குர்ஆன் கூறும் ஆதாரங்களைப் பாருங்கள்.*

*இன்னும், மூஸாவுக்கு* ***நாற்பது நாள்களை*** *வாக்களித்தோம். (அவர் சென்ற) பின்னர் நீங்கள் அக்கிரமக்காரர்களாகக் காளைக் கன்றை (கடவுளாய்) எடுத்துக் கொண்டீர்கள்.* ***அல்குர்ஆன் 2:51***

*குர்ஆன் தமிழாக்கம் சிலவற்றில் 2:51 வசனத்தில் இடம் பெற்றுள்ள* ***அர்பயீன லைலஹ்*** *என்பதற்கு நாற்பது இரவுகள் என மொழிபெயர்த்துள்ளார்கள். இது முற்றிலும் தவறான மொழிபெயர்ப்பு.* ***நாற்பது நாள்கள்*** *என்பதே மிகச் சரியான மொழிபெயர்ப்பு. பொதுவாக லைல் என்பது இரவைக் குறிக்கவும் லைலஹ் என்பது இரவு மற்றும் பகலைக் குறிக்கவும் பயன் படுத்தப்படுகிறது.*

*மூஸா(அலை) நாற்பது இரவுகள் மட்டும்தான் தூர் மலைக்குச் சென்றுவந்தார்கள்; நாற்பது பகலில் மக்களிடம் திரும்பி*

விட்டார்கள் என்றால் ஸாமிரீ எப்படி மக்களை வழிகெடுக்க முடியும் என்பதை யோசிக்க வேண்டும்.

"என் இரட்சகனே! நீ எனக்கு ஓர் அத்தாட்சியை ஏற்படுத்து வாயாக" என வேண்டினார்.

"நீர் நலமாய் இருக்கும் நிலையிலேயே மூன்று நாள்கள் நீர் மக்களுடன் பேச முடியாமல் இருப்பீர். அதுவே உமக்கு அத்தாட்சி" என (இறைவன்) கூறினான். **அல்குர்ஆன்19:10**

"என் இரட்சகனே! என்னை முதுமை வந்தடைந்து விட்டது. என் மனைவியோ மலடு. இந்நிலையில் எனக்கு எவ்வாறு குழந்தை உண்டாகும்?" என வினவினார்.

"அவ்வாறே நடக்கும்; அல்லாஹ், தான் நாடியதைச் செய்கிறான்" என (இறைவன்) கூறினான்.

"என் இரட்சகனே! (இதற்கு) ஓர் அடையாளத்தைக் கொடுப் பாயாக!" என (ஜகரிய்யா) கேட்டார்.

''**மூன்று நாள்களுக்குச்** சைகை மூலமாக அன்றி நீ பேசாமல் இருப்பதே உமக்கு அடையாளமாகும். உம் இரட்சகனை நீர் அதிகமதிகம் நினைவுகூர்ந்து, காலையிலும், மாலையிலும் துதிப்பீராக!" என (இறைவன்) கூறினான். **அல்குர்ஆன் 3:40,41**

மேற்கண்ட 19:10 வசனத்தில் அல்லாஹ் **ஸலாஸ லயாலின்** என்றும் அதற்கு விளக்கமாக 3:40,41 வசனங்களில் அதன் பொருள் **ஸலாஸத்த அய்யாமின் - மூன்று நாள்கள்** எனத் தெளிவுபடுத்தியுள்ளான்.

இந்த அடிப்படையில் சுலைமான்(அலை) கூறியது இன்றைய நாளில் என்பதுதான் பொருளே தவிர இன்றைய இரவு என்பது அல்ல.

## சுலைமான்(அலை) அவர்களின் பிரார்த்தனை

இன்று மனைவிமார்களுடன் உடலுறவு கொள்வேன். அவர்களில் ஒவ்வொருவரும் ஒரு குழந்தையை பெற்றெடுப் பார்கள் அவர்கள் அனைவரும் இறைவழியில் போராடுவார்கள் என்று சுலைமான்(அலை) கூறுகிறார்கள். குழந்தை யாருக்கு கிடைக்க வேண்டும்? எப்போது கிடைக்க வேண்டும்? என்ன குழந்தை கிடைக்க வேண்டும்? ஆகிய அனைத்தையும் அல்லாஹ் ஒருவனே அறிந்திருக்கிறான். அவ்வாறிருக்க சுலைமான்(அலை) மறைவான ஞானத்தை அறிந்தவரைப் போன்று பேசியுள்ளார்கள்

என இச்சம்பவம் கூறுவதால் இதை ஏற்க முடியாது என்று வாதிடுகின்றனர்.

சம்பந்தமில்லாத விஷயங்களை ஒன்றோடொன்று முடிச்சு போடுவதே இவர்களின் மொத்த குழப்பத்திற்கும் காரணம். மறைவான ஞானம் தமக்கு உண்டு என வாதிடுவது சுலைமான் (அலை) அவர்களின் நோக்கமல்ல. அல்லாஹ்வின் அதிகாரத்தில் தலையிடும் வேலையை சுலைமான்(அலை) உட்பட எந்த இறைத்தூதரும் செய்யவில்லை.

நாம் அல்லாஹ்விடம் ஒரு கோரிக்கை வைத்தால் அதை கொடுப்பதும் கொடுக்காமல் இருப்பதும் அல்லாஹ்வின் விருப்பம் என்றாலும் அல்லாஹ் நிச்சயம் நிறைவேற்றிக் கொடுப்பான் என்றே நாம் நம்ப வேண்டும். இந்த உறுதியான நம்பிக்கையின் அடிப்படையில் பேசுவது தவறல்ல. யா அல்லாஹ் என் குழந்தை அறிவாளியாக வர வேண்டும். இதை நீ கண்டிப்பாக நிறைவேற்று வாய் என்ற நம்பிக்கையில் ஒருவர் என் குழந்தை அறிவாளியாக வரும் எனக் கூறுவதில் தவறே இல்லை.

நோயைக் குணப்படுத்துவது அல்லாஹ்வின் அதிகாரம் என்றாலும் நோயாளியிடம் கவலைப்படாதீர்கள்! அல்லாஹ் நோயை குணப்படுத்திவிடுவான் எனக் கூறுவதில் தவறே இல்லை. இந்த இடத்தில் இவரின் நோயை அல்லாஹ் குணப்படுத்துவான் என்பது உனக்கு எப்படித் தெரியும்? நீ மறைவான விஷயத்தை அறிந்தவனா? என வாதிடுவது அறிவுடைமையல்ல.

கடும் நோயால் துன்பப்பட்டு மரணிக்கும் தருவாயில் இருக்கும் ஒரு நல்ல முஃமின் நான் அல்லாஹ்விடம் பிரார்த்தனை செய்து விட்டேன். இனிமேல் இந்தநோய் என் குடும்பத்தில் யாருக்கும் வராது எனக் கூறினால் இவர் தனக்கு மறைவான ஞானம் இருப்பதாக வாதிட்டு காஃபிராகிவிட்டார் எனக் கூற முடியுமா? அல்லாஹ்விடம், தான் செய்த பிரார்த்தனையை உறுதியாக நம்பியதன் அடிப்படையில் பேசுகிறார் என்றே நாம் புரிந்து கொள்வோம்.

இது போன்ற பேச்சுக்கள் அல்லாஹ்வின் மீது தனக்குள்ள ஆழமான நம்பிக்கையை பிரதிபலிக்கிறதே தவிர அல்லாஹ்வின் அதிகாரத்தில் தலையிடுவதாக ஒருபோதும் ஆகாது. இந்த நம்பிக்கையின் அடிப்படையில் இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு முன்பாக நபித்தோழர்களும் பேசியுள்ளார்கள். அதை இறைத்

*தூதர்(ஸல்) கண்டிக்கவே இல்லை. மாறாக இதை சிறப்பித்தே கூறினார்கள்.*

*என் தந்தையின் சகோதரி ருபய்யிஃ பின்த் நள்ர்(ரலி) ஓர் அன்ஸாரி இளம் பெண்ணின் முன் பல்லை உடைத்துவிட்டார். அப்பெண்ணின் குலத்தார் பழிவாங்கக் கோரி இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் வந்தனர். இறைத்தூதர்(ஸல்) அவர்களும் பழிவாங்கும்படி உத்தரவிட்டார்கள். அப்போது,*

*"அல்லாஹ்வின் மீது ஆணையாக! அவ்வாறு நடக்காது; ருபய்யிவுவின் பல் உடைக்கப்படாது, இறைத்தூதர் அவர்களே!" என என் தந்தையின் சகோதரர் அனஸ் இப்னு நள்ர்(ரலி) கூறினார்.*

*"அனஸே! (இந்த வழக்கில்) அல்லாஹ்வின் சட்டம் பழி வாங்குவதாகும் (அதை வெறுக்கவோ மறுக்கவோ யாருக்கும் அதிகாரம் இல்லை)" என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*

*அதன் பிறகு அந்த (பெண்ணின்) குலத்தார் திருப்தியுடன் ஈட்டுத் தொகையை ஏற்றுக் கொண்டனர். (ருபய்யிவுவை பழி வாங்கவில்லை; மன்னித்துவிட்டனர்.) அப்போது,*

*"அல்லாஹ்வின் அடியார்களில் சிலர் உள்ளனர். அவர்கள் அல்லாஹ்வின் மீது சத்தியமிட்டு (எதையேனும் கூறி)விட்டால் அதை அல்லாஹ் நிறைவேற்றி விடுகிறான்" என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.* ***அறிவித்தவர்: அனஸ் இப்னு மாலிக்(ரலி), நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 4611***

*பலிவாங்கும் சட்டத்தின் படி அனஸ் இப்னு நள்ர்(ரலி) அவர்களுடைய சகோதரியின் பல்லை உடைக்க வேண்டும் என இறைத்தூதர்(ஸல்) தீர்ப்பளித்த பிறகு அல்லாஹ்வின் மீது ஆணையாக அவ்வாறு நடக்காது என அனஸ் இப்னு நள்ர்(ரலி) கூறுகிறார்கள். இந்த நபித்தோழர் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் தீர்ப்புக்கு மாற்றமாக எப்படி பேசலாம்? பல் உடைக்கப்படாது என்ற விஷயம் இவருக்கு எப்படித் தெரியும்? இவருக்கு மறைவான ஞானம் உண்டா? இவ்வாறு பேசிய நபித்தோழரை இறைத் தூதர்(ஸல்) ஏன் கண்டிக்கவில்லை? இவ்வாறு பேசினால் அல்லாஹ் அதை நிறைவேற்றிவிடுகிறான் என இதை ஆதரிக்கும் வகையில் இறைத்தூதர்(ஸல்) பேசுவார்களா? என்று கேள்விகளை அடுக்கி இந்த ஹதீஸையும் ஹதீஸ் மறுப்பாளர்கள் மறுப்பார்களா?*

*அல்லாஹ்வின் மீதுள்ள ஆழமான நம்பிக்கையில் தன் விருப்பத்தை உறுதிப்பட தெரிவிப்பதும் ஈமானில் ஓர் அம்சம். அல்லாஹ்விற்கு நெருக்கமான நல்லடியார்கள் இவ்வாறு பேசு வார்கள் என்பதையே இந்நிகழ்வு உணர்த்துகிறது.*

*நமக்கு குழந்தைகள் பிறந்து அவர்கள் அனைவரும் அல்லாஹ்வின் பாதையில் போராட வேண்டும் என்ற நல்ல விஷயத்தையே சுலைமான்(அலை) விரும்பினார்கள். அல்லாஹ் நிறைவேற்றித் தருவான் என்ற நம்பிக்கையில் தம் மனதில் உள்ள மிகுந்த ஆசையை வெளிப்படுத்தினார்கள்.*

*இந்த ஹதீஸின் இறுதியில் சுலைமான் இன்ஷா அல்லாஹ் கூறியிருந்தால் தன் தேவையை அடைந்திருப்பார் என இறைத் தூதர்(ஸல்) அவர்களும் கூறினார்கள். தம் மனதில் உள்ள விருப் பத்தை அல்லாஹ் நிறைவேற்றித் தருவான் என்ற நம்பிக்கையின் அடிப்படையிலேயே சுலைமான்(அலை) பேசினார்கள் என்பதை இறைத்தூதர்(ஸல்) விளக்கியும் விட்டார்கள். எனவேதான், இமாம் புகாரீ(ரஹ்) குழந்தை பாக்கியத்தை வேண்டுதல் என தலைப் பிட்டு அதன் கீழ் இந்த நபிமொழியைக் கொண்டுவந்துள்ளார்கள்.*

**بَاب مَنْ طَلَبَ الْوَلَدَ لِلْجِهَادِ وَقَالَ اللَّيْثُ حَدَّثَنِي جَعْفَرُ بْنُ رَبِيعَةَ عَنْ عَبْدِ الرَّحْمَنِ بْنِ هُرْمُزَ قَالَ سَمِعْتُ أَبَا هُرَيْرَةَ رَضِيَ اللَّهُ عَنْهُ عَنْ رَسُولِ اللَّهِ صَلَّى اللَّهُ عَلَيْهِ وَسَلَّمَ قَالَ قَالَ سُلَيْمَانُ بْنُ دَاوُدَ عَلَيْهِمَا السَّلَام لَأَطُوفَنَّ اللَّيْلَةَ عَلَى مِائَةِ امْرَأَةٍ أَوْ تِسْعٍ وَتِسْعِينَ كُلُّهُنَّ يَأْتِي بِفَارِسٍ**

*இறைவழியில் போர் புரிவதற்காக குழந்தை வேண்டும் எனக் கோருதல் குறித்த பாடம்*

*"நான் இன்றைய நாளில் (என்) நூறு - அல்லது தொண்ணூற்று ஒன்பது- மனைவிகளிடமும் சென்று வருவேன்; அவர்களில் ஒவ்வொருவரும் இறைவழியில் அறப்போரிடும் வீரன் ஒருவனைப் பெற்றெடுப்பார்' என தாவூத்(அலை) அவர்களின் புதல்வர் சுலைமான்(அலை) (ஒருமுறை) கூறினார்கள்" என்று இறைத் தூதர்(ஸல்) கூறினார்கள்.* ***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 2819***

*எனவே, சுலைமான்(அலை) கூறிய வார்த்தைகள் பிரார்த்தனை என்ற ரீதியில் அல்லாஹ்வின் மீதுள்ள நம்பிக்கையின் அடிப் படையிலேயே பேசியதாகும். மறைவான ஞானம் தமக்கு இருப்பதாக அவர்கள் வாதிட்டார்கள் என தன் சுய கருத்தை நிலைநாட்டுவதற்காக இதை திசை திருப்பக் கூடாது.*

# நிபந்தனையுடன் நிறைவேறும் முன்னறிவிப்பு

*சுலைமான்(அலை) அவர்களுக்கு அல்லாஹ் அறிவித்துக் கொடுத்த அடிப்படையிலும் அவர்கள் இவ்வாறு பேசியிருக்க வாய்ப்புள்ளது. அல்லாஹ் அறிவித்துக் கொடுத்தால் சுலைமான் (அலை) கூறிய விஷயம் நடந்திருக்க வேண்டும். ஆனால், அது நடக்கவில்லையே! எனவே, இதை அல்லாஹ் அறிவித்துக் கொடுக்கவில்லை என்றும் வாதிடுகின்றனர்.*

*சுலைமான்(அலை) அவர்களுக்குக் குழந்தை பிறக்கும் என அல்லாஹ் அறிவித்துக் கொடுத்த பின் இன்ஷா அல்லாஹ் கூற வேண்டும் எனக் கட்டளையும் இடுகிறான். இன்ஷா அல்லாஹ் கூறினால்தான் இந்த முன்னறிவிப்பு நடக்கும் என்பதை அல்லாஹ் தெளிவுபடுத்திவிட்டான். சுலைமான்(அலை) அல்லாஹ்வின் இந்த உத்தரவை மறந்துவிட்டார்கள். எனவேதான், இந்த முன் னறிவிப்பை அல்லாஹ் நிறைவேற்றவில்லை.*

*நபிமார்களுக்கு அல்லாஹ் அறிவிக்கும் முன்னறிவிப்பு களைப் பொறுத்தவரை, எவ்வாறு மக்களிடம் கூற வேண்டும் என அல்லாஹ் கட்டளையிடுகிறானோ அந்த அடிப்படையில் அவர்கள் கூறினாலே அந்த முன்னறிவிப்புகள் நிறைவேறும். அல்லாஹ் ஒன்று கூறியிருக்க அவர்கள் வேறொன்றை கூறினால் அந்த முன்னறிவிப்புக்களை அல்லாஹ் நிறைவேற்றமாட்டான்.*

*இன்ஷா அல்லாஹ் எனக் கூறும்படி அல்லாஹ் கட்டளை யிடாமல் அறிவிக்கிற முன்னறிவிப்புகளில் நபிமார்களும் இன்ஷா அல்லாஹ் எனக் கூறவேண்டிய கட்டாயமில்லை. இது போன்ற முன்னறிவிப்புகளில் இன்ஷா அல்லாஹ் என்று அவர்கள் கூறா விட்டாலும் அல்லாஹ் இதை நிறைவேற்றி வைப்பான்.*

*சில முன்னறிவிப்புகளில் இன்ஷா அல்லாஹ் எனக் கூற வேண்டும் என்ற நிபந்தனையுடன் அல்லாஹ் நபிமார்களுக்கு உத்தரவிடுவான். இந்த முன்னறிவிப்புக்களை அல்லாஹ் கூறிய அடிப்படையில் அவர்கள் அறிவித்தால் மட்டுமே அந்த முன் னறிவிப்புகள் நிறைவேற்றப்படும். இன்ஷா அல்லாஹ் எனக் கூறி பல முன்னறிவிப்புகளை அல்லாஹ் அறிவித்துக் கொடுத்துள்ளான். இதை பின்வரும் வசனங்களில் அறியலாம்.*

*அல்லாஹ் தன் தூதர் கண்ட கனவை உண்மைபடுத்திவிட்டான். **அல்லாஹ் நாடினால்** நீங்கள் உங்கள் தலை முடியை மழித்தவர்களாகவும் தலை முடியை குறைத்தவர்களாகவும் அஞ்சாமல் பாதுகாப்புடன் மஸ்ஜிதுல் ஹராமிற்குள் நுழைவீர்கள். நீங்கள் அறியாதவற்றை அவன் அறிந்துள்ளான். இதுவல்லாத சமீபத்திய வெற்றியை அவன் ஏற்படுத்தியுள்ளான்.* ***அல்குர்ஆன் 48:27***

*தஜ்ஜால் வரும்போது அவன் மதீனாவை நெருங்கமாட்டான் என்ற முன்னறிவிப்பை இறைத்தூதர்(ஸல்)* ***இன்ஷா அல்லாஹ்*** *எனக் கூறியே அறிவித்துள்ளார்கள்.*

*"மதீனாவிற்கு தஜ்ஜால் வருவான். வானவர்கள் மதீனாவைக் காவல் காத்துக் கொண்டிருப்பதைக் காண்பான். எனவே, தஜ்ஜாலும் கொள்ளைநோயும் **அல்லாஹ் நாடினால்** மதீனாவை நெருங்க முடியாது" என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*
***அறிவித்தவர்: அனஸ் இப்னு மாலிக்(ரலி), ஸஹீஹ் அல் புகாரீ 7473***

*பத்ரு போர் நடப்பதற்கு முன்னால் எதிரிகள் இன்ன இன்ன இடத்தில் மரணிப்பார்கள் என்ற முன்னறிவிப்பை இறைத்தூதர்(ஸல்)* ***இன்ஷா அல்லாஹ்*** *எனக் கூறி அறிவித்துள்ளார்கள்.*

*பத்ருப் போருக்கு முந்தைய நாள் இறைத்தூதர்(ஸல்) எங்களிடம் பத்ருப் போரில் எதிரிகள் அழிந்து கிடக்கவிருக்கும் இடங்களைக் காட்டினார்கள். "**அல்லாஹ் நாடினால்** நாளை இன்ன மனிதன் மரணித்து கிடக்கும் இடம் இதுதான்" எனக் குறிப்பிட்டார்கள். சத்தியத்துடன் இறைத்தூதர்(ஸல்) அவர்களை அனுப்பியவன் மீது ஆணையாக! இறைத்தூதர்(ஸல்) குறிப்பிட்ட அந்த இடங்களில் கொஞ்சமும் மாறாமல் அவர்கள் அழிந்து கிடந்தனர்.* ***அறிவித்தவர்: உமர்(ரலி), நூல்: முஸ்லிம் 5511***

*எனவே, அல்லாஹ் அறிவித்துக் கொடுக்கும் எல்லா விஷயங்களில் இன்ஷா அல்லாஹ் கூறத்தேவை இல்லை எனப் பொதுவாக கூற முடியாது. இன்ஷா அல்லாஹ் கூற வேண்டும் என்ற நிபந்தனையுடன் அல்லாஹ் கட்டளையிட்டால் அப்போது இன்ஷா அல்லாஹ் எனக் கூற வேண்டும்.*

*சுலைமான்(அலை) அவர்களுக்கு குழந்தைகள் பிறக்கும் என்ற முன்னறிவிப்பை* ***இன்ஷா அல்லாஹ்*** *கூற வேண்டும் என்ற நிபந்தனையுடன்தான் அல்லாஹ் அறிவித்தான். சுலைமான் (அலை) இதை செய்யத் தவறியதால் அந்த முன்னறிவிப்பு நடக்கவில்லை.*

*இந்த நபிமொழியை இவ்வாறு அழகிய முறையில் புரிந்து கொள்வதற்கான நிலை இருக்கும்போது மறைவான விஷயம் தமக்கு உண்டு என சுலைமான்(அலை) வாதிட்டார் என்று கூறுவது வரம்பு மீறலாகும்.*

# இன்ஷா அல்லாஹ் கூற வேண்டும்

*நாம் நடக்கப்போகிற விஷயத்தைப் பற்றி பேசும்போது அல்லாஹ் நாடினால் என்பதை சேர்த்துக் கூற வேண்டும் என்று குர்ஆன் கூறுகிறது.*

*அல்லாஹ் நாடினால் என்பதைக் கூறாமல் நாளை இதை நான் செய்வேன் என எதைப் பற்றியும் நீர் பேச வேண்டாம். நீர் மறந்துவிட்டால் உம் இறைவனையை நினைவுகூர்வீராக. என் இறைவன் இதை விட சமீபத்தில் எனக் கு நேர்வழி காட்டக்கூடும் என்றும் கூறுவீராக.* ***அல்குர்ஆன் 18:24***

*சுலைமான்(அலை) கூறிய விஷயம் நாளை நடக்கப்போகிற விஷயம் என்பதால் இன்ஷா அல்லாஹ் (அல்லாஹ் நாடினால்) எனக் கூறுங்கள் என்று வானவர் கூறினார். ஆனால், சுலைமான்(அலை) அதைக் கூற மறந்துவிட்டார்கள். வானவர் இன்ஷா அல்லாஹ் என்று கூறுங்கள் என நினைவூட்டிய பிறகு சுலைமான்(அலை) எப்படிக் கூறாமல் இருப்பார்கள் என்றும் கேட்கின்றனர்.*

*ஹதீஸில் தெளிவாக நஸிய (மறந்துவிட்டார்) எனக் கூறப் பட்டுள்ளது. சுலைமான் இதை வேண்டுமென்றே விடவில்லை. மறதியின் காரணமாகவே அதை அவர்கள் கூறவில்லை. வானவர் இன்ஷா அல்லாஹ் கூறுங்கள் எனக் கூறிய பிறகு பேச்சை நிறுத் தாமல் தொடர்ந்து வேறு விஷயத்தைப் பற்றி பேசியிருக்கலாம். இதனால் சுலைமான்(அலை) அவர்களின் கவனம் வேறு பக்கம் திரும்பி அல்லாஹ் நாடினால் எனக் கூற மறந்திருக்கலாம்.*

*சுலைமான்(அலை) எப்படி மறந்தார்கள் என்ற விபரம் நமக்கு ஹதீஸில் சொல்லப்படவில்லை. மேலதிக தகவல்களை விடுத்து சுருக்கமாகவே ஹதீஸ் அறிவிக்கப்பட்டுள்ளது. எனவே, தேவையில்லாமல் தர்க்கம் செய்வதை விட்டுவிட்டு மறதியின் காரணமாகவே கூற மறந்தார்கள் என நபிமொழி கூறுவதை ஏற்க வேண்டும்.*

# மறதிக்கு தண்டனை உண்டா?

*சுலைமான்(அலை) மறதியின் காரணமாகவே இன்ஷா அல்லாஹ் எனக் கூறவில்லை; மறந்ததற்காக அவர்களுக்குப் பிறக்கவிருந்த குழந்தைகளை பிறக்கவிடாமல் செய்து அல்லாஹ் அவரை ஏன் தண்டிக்க வேண்டும் என்றும் கேட்கின்றனர்.*

*சுலைமான்(அலை) அவர்களை அல்லாஹ் தண்டித்தால்தான் இந்தக் கேள்வியை இவர்கள் கேட்க முடியும். சுலைமான்(அலை) இன்ஷா அல்லாஹ் எனக் கூற மறந்ததால் அவரை நரகத்தில் போடுவேன் என அல்லாஹ் கூறியிருந்தால், இவ்வாறு கேள்வி கேட்பதில் நியாயம் இருக்கலாம். இது போன்ற தண்டனை எதுவும் அவர்களுக்கு அல்லாஹ் வழங்கவில்லை. மாறாக அவர்கள் அல்லாஹ்விடம் வைத்த கோரிக்கையை அல்லாஹ் நிறைவேற்றித் தரவில்லை. மரணித்த நிலையில் ஒரு குழந்தையை மட்டுமே கொடுத்தான். இது தண்டனை அல்ல; அல்லாஹ்வின் சோதனை.*

*நாம் கேட்ட பிரார்த்தனை நிறைவேறாமல் போனால் அல்லாஹ் நம்மை தண்டித்துவிட்டான் என்று புரியக் கூடாது. அல்லாஹ் நம்மை சோதிக்கிறான் என்றே இறைநம்பிக்கை யாளர்கள் புரிந்து கொள்ள வேண்டும். இந்த சோதனையின் மூலம் இன்ஷா அல்லாஹ் எனக் கூறுவதன் அவசியத்தை அல்லாஹ் சுலைமான்(அலை) அவர்களுக்கு புரிய வைக்கிறான். அவர்களும், தாம் செய்த தவறை உணர்ந்து அல்லாஹ்விடம் மன்னிப்புக் கேட்கிறார்கள். இந்த விளக்கத்தை அல்லாஹ் பின்வரும் வசனத்தில் குறிப்பிடுகிறான்.*

*திட்டமாக சுலைமானை* **நாம் சோதித்தோம்**. *அவரின் சிம்மாசனத்தில் ஒரு சடலத்தைப் போட்டோம். பின்னர் அவர் திருந்தினார். இறைவா! என்னை நீ மன்னித்துவிடு. எனக்குப் பிறகு வேறு எவருக்கும் கிடைக்காத ஆட்சியை எனக்கு வழங்குவாயாக. நீயே வாரிவழங்குபவன் எனக் கூறினார்.* ***அல்குர்ஆன் 38:34***

*குறிப்பிட்ட மரத்தை நெருங்கக் கூடாது என ஆதம்(அலை) அவர்களுக்கு அல்லாஹ் கட்டளையிட்டான். ஆதம்(அலை) இதை மறந்து அந்த மரத்தின் கனியைச் சாப்பிட்டார்கள். இதற்காக அவர்களை அல்லாஹ் சொர்க்கத்திலிருந்து வெளியேற்றினான்.*

*இதற்கு முன் நாம் ஆதமிடம் உறுதிமொழி வாங்கினோம்; அவர் அதை மறந்துவிட்டார். அவரிடம் உறுதியை நாம் காணவில்லை.* ***அல்குர்ஆன் 20:115***

"ஆதம்(அலை) மறதியாக செய்த தவறுக்காக அல்லாஹ் அவர்களை சொர்க்கத்திலிருந்து வெளியேற்றுவது எந்த வகையில் நியாயம்?" எனக் கூறி இந்தக் குர்ஆன் வசனத்தை இவர்கள் மறுப்பார்களா? ஆதம்(அலை) செய்த தவறுக்காக அல்லாஹ் அவரை நரகத்தில் போட்டால்தான் அதை தண்டனை என்று சொல்ல முடியும். சொர்க்கத்திலிருந்து வெளியேற்றியது தண்டனை அல்ல. அவர்கள் செய்த தவறால் அவர்களுக்கு ஏற்பட்ட சோதனை எனப் புரிந்துகொள்ள வேண்டும். இது போன்று சுலைமான்(அலை) அவர்களின் சம்பவத்தையும் புரிந்துகொண்டால் எந்தப் பிரச்னையுமில்லை. பிரச்னை புரிந்து கொள்வதில்தானே தவிர நபிமொழிகளில் இல்லை.

## 6. உண்மையை உணர்த்திய நபி(ஸல்) அவர்களின் முன்னறிவிப்பு

**2321 – حَدَّثَنَا عَبْدُ اللهِ بْنُ يُوسُفَ حَدَّثَنَا عَبْدُ اللهِ بْنُ سَالِمٍ الْحِمْصِيُّ حَدَّثَنَا مُحَمَّدُ بْنُ زِيَادٍ الْأَلْهَانِيُّ عَنْ أَبِي أُمَامَةَ الْبَاهِلِيِّ قَالَ وَرَأَى سِكَّةً وَشَيْئًا مِنْ آلَةِ الْحَرْثِ فَقَالَ سَمِعْتُ النَّبِيَّ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ يَقُولُ لَا يَدْخُلُ هَذَا بَيْتَ قَوْمٍ إِلَّا أَدْخَلَهُ اللهُ الذُّلَّ (إِلَّا أُدْخِلَهُ الذُّلُّ)**

ஒரு வீட்டில் ஏர் கலப்பையையும், சில விவசாயக் கருவி களையும் அபூ உமாமா அல் பாஹிலீ(ரலி) கண்டபோது, "இந்தக் கருவி ஒரு சமுதாயத்தாரின் வீடுகளில் புகும்போது அவற்றில் அல்லாஹ் இழிவைப் புகச் செய்வான்' என இறைத்தூதர்(ஸல்) கூற நான் செவியுற்றேன்" எனக் கூறினார்கள்.

**அறிவித்தவர்: முஹம்மத் இப்னு ஸியாத் அல் அல்ஹானீ(ரஹ்), நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 2321**

விவசாயக் கருவி வீட்டுக்குள் நுழைந்தால் அந்த வீட்டிற்கு இழிவு வரும் என இந்த ஹதீஸ் கூறுகிறது. இச்செய்தி விவசாயம் செய்வதை பழித்துப் பேசுகிறது. அல்லாஹ் விவசாயத்தை சிறப்பித்துக் குர்ஆனில் கூறுகிறான். இறைத்தூதர்(ஸல்) அவர் களும் விவசாயம் செய்ய ஆர்வமூட்டியுள்ளார்கள். இந்த ஆதாரங்களுக்கு இந்த ஹதீஸ் முரண்படுவதால் இதை மறுக்க வேண்டும் என வாதிடுகின்றனர்.

விவசாயம் செய்யக்கூடாது என்ற கருத்தை இந்த ஹதீஸ் கூறு வதாக இன்று வரை சென்றுள்ள இஸ்லாமிய அறிஞர்களில் யாரும் கூறவில்லை.

*விவசாயம் அனுமதிக்கப்பட்ட காரியம்: அல்லாஹ்வும் அவன் தூதரும் இதைச் சிறப்பித்துக் கூறியுள்ளார்கள் என்பதை யாரும் மறுக்கவில்லை. ஆனால், மேற்கண்ட ஹதீஸ் விவசாயம் செய்யக் கூடாது என்ற கருத்தை சொல்வதாக இவர்கள் கூறு வதையே நாம் மறுக்கிறோம். மேற்கண்ட ஹதீஸில் விவசாயம் செய்வது ஹராம் என்றோ, இது அல்லாஹ்வின் கோபத்திற்குரிய செயல் என்றோ, விவசாயம் செய்தால் நரகம் கிடைக்கும் என்றோ சொல்லப்படவில்லை.*

*இவ்வாறு சொல்லப்பட்டாலே விவசாயம் செய்வதை தவறு என்று இந்த ஹதீஸ் கூறுகிறது என வாதிட முடியும். ஆனால், இந்த ஹதீஸ் விவசாயம் செய்யும் ஒரு சமூகத்திற்கே இழிவு ஏற்படும் என்றே கூறுகிறது. விவசாயம் செய்வதை அல்லாஹ்வும் அவன் தூதரும் அனுமதித்து இருக்கும்போது அதற்கு எதிரான கருத்தை இறைத்தூதர்(ஸல்) கூறவே மாட்டார்கள் என்றே புரிய வேண்டும்.*

*அப்படியானால் இந்த ஹதீஸ் கூறும் சரியான கருத்துதான் என்ன? ஹதீஸில்* ***அத்துல்லு என்னும் அரபுப் பதம் இழிவு என்பதைக் குறிக்கிறது.*** *உலகில் ஒரு சமுதாயம் அதிகாரத்தை இழந்து மற்றவரின் அதிகாரத்தின் கீழ் அடிமைப்பட்டு சிறுமைப் பட்டு இருப்பதையே இந்த ஹதீஸ் குறிக்கிறது. இந்த அர்தத்தில் இந்தப் பதம் குர்ஆனிலும் நபிமொழிகளிலும் நிறையவே பயன் படுத்தப்பட்டுள்ளது. விவசாயம் செய்ய பயன்படும் மாட்டை தலூல் என்று குர்ஆன் கூறுகிறது.*

**قَالَ إِنَّهُ يَقُولُ إِنَّهَا بَقَرَةٌ لَا ذَلُولٌ تُثِيرُ الْأَرْضَ وَلَا تَسْقِي الْحَرْثَ مُسَلَّمَةٌ لَا شِيَةَ فِيهَا قَالُوا الْآنَ جِئْتَ بِالْحَقِّ فَذَبَحُوهَا وَمَا كَادُوا يَفْعَلُونَ(71)2**

*அது நிலத்தை உழவோ விவசாயத்திற்கு நீர் இறைக்கவோ பயன்படுத்தப்படாத மாடு.* ***அல்குர்ஆன் 2:71***

*தலூல் என்ற சொல் அத்துல்லு என்ற சொல்லில் இருந்து உருவானதாகும். விவசாய வேலைகளுக்குப் பயன்படுகிற மாட்டிற்கு இங்கு இச்சொல்லை இறைவன் பயன்படுத்தி உள்ளான். மனிதர் களுக்கு அடிமைப்பட்டு சிரமமான வேலைகளைச் செய்து கொடுப் பதால் இவ்வாறு கூறப்பட்டுள்ளது.*

**قُلْ اللَّهُمَّ مَالِكَ الْمُلْكِ تُؤْتِي الْمُلْكَ مَنْ تَشَاءُ وَتَنْزِعُ الْمُلْكَ مِمَّنْ تَشَاءُ وَتُعِزُّ مَنْ تَشَاءُ وَتُذِلُّ**

مَنْ تَشَاءُ بِيَدِكَ الْخَيْرُ إِنَّكَ عَلَى كُلِّ شَيْءٍ قَدِيرٌ(26)3

*இறைவா! ஆட்சியின் அதிபதியே! நீ நாடியவர்களுக்கு ஆட்சியைத் தருகிறாய். நீ நாடியவரிடமிருந்து ஆட்சியைப் பறிக்கிறாய். நீ நாடியவருக்கு கண்ணியத்தை வழங்குகிறாய். நீ நாடியவரை* ***இழிவுபடுத்துகிறாய்****. உன் கையிலே நன்மை உள்ளது. நீ ஒவ்வொரு பொருளின் மீதும் ஆற்றமிக்கவன்.* ***அல்குர்ஆன் 3:26***

*இந்த வசனத்தில் ஆட்சி செலுத்துவதை கண்ணியம் என்றும் ஆட்சி பறிபோவதை இழிவு என்றும் அல்லாஹ் கூறுகிறான்.*

قَالَتْ إِنَّ الْمُلُوكَ إِذَا دَخَلُوا قَرْيَةً أَفْسَدُوهَا وَجَعَلُوا أَعِزَّةَ أَهْلِهَا أَذِلَّةً وَكَذَلِكَ يَفْعَلُونَ(34)27

*ஆட்சியாளர்கள் ஓர் ஊருக்குள் நுழைந்தால் அதை பாழாக்கி அவ்வூரிலுள்ள கண்ணியவான்களை* ***இழிவானவர்களாக*** *ஆக்கிவிடுவார்கள். இவ்வாறே அவர்கள் செய்வார்கள்.*

***அல்குர்ஆன் 27:34***

*ஓர் ஆட்சியாளன் நாட்டை கைப்பற்றிவிட்டால் அந்த நாட்டில் அந்தஸ்த்துடன் இருந்தவர்களை இழிவானவர்களாக ஆக்கிவிடுவான். அதாவது அதிகாரம் அற்றவர்களாக ஆக்கி விடுவார்கள். தன் சட்டத்திற்கு கீழ்படிந்து நடப்பவர்களாக ஆக்கிவிடுவார்கள் எனப் புரிந்துகொள்கிறோம். நபித்தோழர்கள் ஆயுத பலமின்றி பலவீனர்களாக இருந்தார்கள். இந்நிலையை அல்லாஹ் குறிப்பிடும்போது நீங்கள் இழிவானவர்களாக இருந்தீர்கள் என்று கூறுகிறான்.*

وَلَقَدْ نَصَرَكُمْ اللَّهُ بِبَدْرٍ وَأَنْتُمْ أَذِلَّةٌ فَاتَّقُوا اللَّهَ لَعَلَّكُمْ تَشْكُرُونَ(123)3

*உங்கள் நிலை* ***இழிவாக*** *இருந்தபோதே பத்ரில் அல்லாஹ் உங்களுக்கு உதவினான்.* ***அல்குர்ஆன் 3:123***

*அத்துல்லு என்ற சொல்லில் இருந்து உருவான அதில்லா என்ற சொல்லை அல்லாஹ் இந்த வசனத்தில் கூறியுள்ளான். இந்த வசனத்தில் அல்லாஹ் கூறுகிற இழிவு என்பது உலக ரீதியில் ஏற்படும் பலவீனத்தையே குறிக்கிறது. அதில்லா என்ற சொல்லை பணிந்தவர்கள் என்ற பொருளில் குர்ஆன் கூறுகிறது.*

يَاأَيُّهَا الَّذِينَ آمَنُوا مَنْ يَرْتَدَّ مِنْكُمْ عَنْ دِينِهِ فَسَوْفَ يَأْتِي اللَّهُ بِقَوْمٍ يُحِبُّهُمْ وَيُحِبُّونَهُ أَذِلَّةٍ عَلَى الْمُؤْمِنِينَ أَعِزَّةٍ عَلَى الْكَافِرِينَ يُجَاهِدُونَ فِي سَبِيلِ اللَّهِ وَلَا يَخَافُونَ لَوْمَةَ لَائِمٍ ذَلِكَ فَضْلُ اللَّهِ يُؤْتِيهِ مَنْ يَشَاءُ وَاللَّهُ وَاسِعٌ عَلِيمٌ(54)5

*இறைநம்பிக்கையாளர்களே! உங்களில் யாரேனும் தன் மார்க்கத்தை விட்டு தடுமாறிச் செல்வாரேயானால் அல்லாஹ் வேறு ஒரு கூட்டத்தைக் கொண்டு வருவான். அவர்களை அவன் விரும்புவான். அவர்கள் அவனை விரும்புவார்கள். இறைநம்பிக்கை யாளர்களிடம்* ***பணிவானவர்களாகவும்*** *இறைமறுப்பாளர்களிடம் கடுமையானவர்களாகவும் நடந்து கொள்வார்கள்.*

***அல்குர்ஆன் 5:54***

*நாட்டின் பலம் இராணுவத்தில்தான் உள்ளது. இராணும் பலமாக இருந்தால் நாடு பலமாக இருக்கும். இராணுவம் பலவீனமாக இருந்தால் நாடும் பலவீனமாக இருக்கும். எனவே, குடிமக்கள் ஜிஹாத் - அறவழிப்போரில் ஆர்வமாகவும் அதற்கான தயாரிப்புகளில் கவனமாகவும் இருந்தால் அவர்கள் அதிகாரிகளாக இருப்பார்கள். கண்ணியமான பொறுப்புகளை வகிப்பார்கள். மற்றவர்களுக்கு கீழ் அடிபணிந்து வாழும் இழிநிலை இருக்காது.*

*ஆனால், குடிமக்கள் ஜிஹாத் - அறவழிப்போர் சம்பந்தமான முயற்சிகளில் ஈடுபடாமல் விவசாயத்தில் மட்டுமே மூழ்கிக் கிடந்தால் இராணுவத்தின் பலம் குன்றிவிடும். மற்றவர்கள் நாட்டைக் கைப்பற்றுவார்கள். அல்லது மற்ற நாட்டு அரசர் களுக்குப் பயந்து அவர்களின் உத்தரவுப்படி கீழ்படிந்து கிடக்கும் இழிநிலை ஏற்பட்டுவிடும்.*

*ஒரு சமூகம் மற்ற எதையுமே கண்டு கொள்ளாமல் விவசாயத்தில் மட்டும் மூழ்கிக் கிடந்தால் அந்த சமூகத்திற்கு இழிவுதான் ஏற்படும் என்பது குறித்தே மேற்கண்ட ஹதீஸ் பேசுகிறது. பலர் நம் நாட்டில் படிக்காமல் வெளிநாடுகளுக்குச் சென்று அற்ப சம்பளத்தில் கொத்தடிமைகளாக வேலை செய் கின்றனர். இது ஒரு இழிநிலைதான்; இந்நிலை மாற வேண்டும்; கல்வி கற்று எந்தப் பணியைச் செய்தாலும் சுய மரியாதையுடன் இருக்க வேண்டும். ஒட்டகம் மேய்ப்பதையும் கூலி வேலை செய்வதையும் இழிநிலை என கூறினால் இந்த வேலைகளை செய்வது ஹராமான செயல். மார்க்க அடிப்படையில் இவற்றை செய்யக் கூடாது என்பது பொருளல்ல.*

*முறையான கல்வி அறிவு இல்லாத விவசாயிகள் எல்லா நாடு களிலும் இது போன்ற இழிநிலையை சந்தித்து வருகிறார்கள். மக்களுக்கு அத்தியாவசிய உணவுப்பொருட்களை இவர்கள் விவசாயம் செய்து கொடுத்தும் இவர்களின் உழைப்பிற்கு ஏற்ற பலன் கிடைப்பதில்லை. பிஸ்னஸ் மேக்னட் என இவர்களுக்கு மேல் உள்ளவர்கள் தாங்கள் அதிகமான இலாபம் பெறும் வகையில் நிர்ணயிக்கும் விலையில்தான் இவர்கள் தங்களின் பொருட்களை விற்பனை செய்து ஏமாறும் நிலை உள்ளது. அதிகார வர்க்கம் விவசாயிகளுக்கு இதுபோன்ற நிறைய அநியாயங்களைச் செய்கின்றனர்.*

*எனவேதான், இறைத்தூதர்(ஸல்) ஒரு கூட்டம் மற்ற எதையுமே கண்டு கொள்ளாமல் விவசாயத்தில் மட்டுமே மூழ்கிக் கிடந்தால் அவர்களுக்கு இழிவு ஏற்படும் எனக் கூறினார்கள்.*

*இமாம் புகாரீ(ரஹ்) விவசாயத்தின் சிறப்பு எனத் தலைப் பிட்டு விவசாயத்தை சிறப்பித்துக் கூறும் ஹதீஸை அதன் கீழ் கொண்டுவந்துள்ளார்கள். இதன் பிறகு விவசாயத்தில் மட்டுமே மூழ்கிவிடக் கூடாது எனத் தலைப்பிட்டு இதன் கீழ் ஒரு சமூகத்தின் இழிவு குறித்துப் பேசும் மேற்கண்ட ஹதீஸைப் பதிவு செய்துள்ளார்.*

**بَاب مَا يُحَذَّرُ (يُحْذَرُ) مِنْ عَوَاقِبِ الِاشْتِغَالِ بِآلَةِ الزَّرْعِ أَوْ مُجَاوَزَةِ الْحَدِّ الَّذِي أُمِرَ بِهِ**

*விவசாயத்தில் மட்டுமே மூழ்கிக் கிடப்பதால் ஏற்படும் தீமைகள் மற்றும் இறைக்கட்டளைகளை மீறுவதால் ஏற்படும் தீய விளைவுகள் குறித்த எச்சரிக்கை பற்றிய பாடம்.*

***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ***

# *இறைநினைவை மறக்கச் செய்யும் காரியங்கள்*

*அனுமதிக்கப்பட்ட எந்த காரியமானாலும் இறைநினைவை விட்டும் அது நம்மை திசைதிருப்பக் கூடாது. அவ்வாறு நாம் திசைமாறிச் சென்றால் இறைவனை மறக்க வேண்டிய நிலைதான் ஏற்படும். உதாரணமாக செல்வம், பெண், குழந்தைகள் போன்ற விஷயங்கள்.*

*இறைநம்பிக்கையாளர்களே! உங்கள் மனைவியரிலும் உங்கள் குழந்தைகளிலும் உங்களுக்கு எதிரிகள் உள்ளனர்.*

*அவர்களிடம் எச்சரிக்கையாக இருங்கள். எனினும், நீங்கள் பொருட்படுத்தாமல் அலட்சியம் செய்து மன்னித்து விட்டால், அல்லாஹ் மன்னிப்பவனாகவும் கருணையுள்ளவனாகவும் இருக்கிறான். உங்களின் செல்வங்களும் உங்கள் குழந்தைகளும் சோதனையே. அல்லாஹ்விடமே மகத்தான கூலி உள்ளது.*

***அல்குர்ஆன் 64:14,15***

*“ஆண்களுக்குப் பெண்களைவிட அதிகமாக இடரளிக்கும் எந்தச் சோதனையையும் எனக்குப் பிறகு நான் விட்டுச் செல்ல வில்லை” என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*

***அறிவித்தவர்: உஸாமா இப்னு ஸைத்(ரலி),***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ (5096)***

*செல்வம், மனைவி, குழந்தைகள் ஆகிய விஷயங்களை மேற்கண்ட வசனங்கள் மற்றும் ஹதீஸ் எச்சரிக்கை செய்வதால் இவற்றைத் தேடுவது ஹராமான செயல் எனப் புரிந்துகொள்ளக் கூடாது. இவை ஆகுமானவை என்றாலும் இவற்றில் உள்ள ஆபத்துகளை புரிந்து கவனமாக நடந்து கொள்ள வேண்டும் என்றே மார்க்கம் கூறுகிறது. பலர் மார்க்க வரம்புகளை மீறி நடப்பதற்கு இவற்றின் மீதுள்ள மோகமே காரணமாக உள்ளது.*

*இது போன்றே விவசாயம் செய்வது ஆகுமானது என்றாலும், மற்ற எதையுமே கண்டுக் கொள்ளாமல், அதிலேயே மூழ்கிக் கிடக்கக் கூடாது; அப்படி மூழ்கிக் கிடக்கும் சமூகத்தில் இழிவு ஏற்படும் என்பதையே அந்த ஹதீஸ் நமக்கு உணர்த்துகிறது.*

*அல்லாஹ்வின் நினைவை விட்டு திசைதிருப்பக் கூடிய ஆற்றல் விவசாயத்திற்கு உண்டு. அவ்வாறு திசை திரும்பினாலும் இழிவு ஏற்படும் என்பதையும் நாம் விளங்க வேண்டும்.*

*கஅப் இப்னு மாலிக்(ரலி) போன்ற சிறந்த நபித்தோழர்கள் விவசாயத்தில் ஈடுபட்டு அதன் விளைச்சலைப் பார்த்தபோது இறைத் தூதர்(ஸல்) அவர்களின் இராணுவத்துடன் போருக்குச் செல்வதில் அலட்சியமாக இருந்தார்கள். இறுதியில் அவர்களால் இராணுவத் துடன் இணைந்து போரில் கலந்து கொள்ள முடியாமலேயே போனது. இதற்காக இறைத்தூதர்(ஸல்) அந்த நபித்தோழர்களை சமூகப் பகிஷ்காரம் செய்தார்கள்.*

*நீண்ட இடைவேளைக்குப் பிறகு அவர்களை அல்லாஹ் மன்னித்தான். எனவே, விவசாயத் தொழில் இறை நினைவு,*

*கடமைகள் மற்றும் சமுதாயப் பொறுப்பு ஆகியவற்றை விட்டும் நம்மைப் புறந்தள்ளும் அளவுக்கு அதிலேயே மூழ்கிப் போவதைத் தான் நபிமொழி கண்டிக்கிறது. அவ்வாறு மூழ்கிவிடும்போது, உலகிலும் அந்தஸ்த்துடன் கண்ணியமாக வாழ முடியாது. மற்ற வர்களுக்கு அடிமைப்பட்டு வாழ நேரிடும் என்ற உண்மையை இந்த ஹதீஸ் முன்னறிவிப்புச் செய்கிறது.*

*இந்த முன்னறிவிப்பின்படி வரலாறு நெடுகிலும் பல்வேறு சமூகங்கள் அடிமைப்பட்டு வருவதை நாம் கண்டு வருகிறோம். இந்த ஹதீஸ் இறைத்தூதர்(ஸல்) அவர்களின் முன்னறிவிப்பே என்பதை இந்த வரலாற்று நிகழ்வுகள் உறுதிப்படுத்துகின்றன.*

## *7. பாதுகாக்கப்பட்ட இறை வேதம்*

*குறிப்பிட்ட பத்து தடவை பால் அருந்தினால்தான் பால்குடி உறவு உண்டாகும்' என்ற வசனம் (முதலில்) குர்ஆனில் அருளப் பட்டிருந்தது. பின்னர் பத்து தடவை என்பது குறிப்பிட்ட ஐந்து தடவை என மாற்றப்பட்டது. குர்ஆனில் ஓதப்படும் வசனங்களுடன் அவ்வசனம் இருந்த நிலையில்தான் இறைத்தூதர்(ஸல்) இறந்தார்கள்.*

***அறிவித்தவர்: ஆயிஷா(ரலி), நூல்: முஸ்லிம் 2876***

*"ஐந்து தடவை பால் குடித்தால் பால்குடி உறவு ஏற்பட்டு விடும் என்ற வசனம் இறைத்தூதர்(ஸல்) இறக்கும் வரை குர்ஆனில் இருந்தது; அதை மக்களும் ஓதிக் கொண்டிருந்தார்கள் என இந்த ஹதீஸ் கூறுகிறது.*

*இப்படியொரு வசனம் குர்ஆனில் இருந்தது என்றால் இன்றும் அந்த வசனம் குர்ஆனில் இருக்க வேண்டும். ஆனால், நம்மிடம் உள்ள குர்ஆனில் இந்த வசனம் இல்லை. இறைத்தூதர் (ஸல்) அவர்களின் காலத்தில் இருந்த வசனங்கள் தற்போது இல்லை என்றால் குர்ஆன் பாதுகாக்கப்படவில்லை என்ற கருத்தை இந்த ஹதீஸ் தருகிறது. குர்ஆனை பாதுகாப்பதாக அல்லாஹ் வாக்குறுதி தருகிறான். எனவே, இந்த ஹதீஸ் அல்லாஹ்வின் கூற்றுக்கு முரண்படுவதால் இதையும் ஏற்றுக் கொள்ளக் கூடாது என வாதிடுகிறார்கள்.*

*இச்செய்தியில் ஆயிஷா(ரலி) கூறும் விஷயத்திற்கு மாற்றமான கருத்தை இவர்கள் புரிந்துள்ளார்கள். இவர்கள் செய்யும் விமர்சனத்திற்கும் ஹதீஸ் கூறும் கருத்திற்கும் துளியும்*

*சம்பந்தம் இல்லை. இச்செய்தியில் ஆயிஷா(ரலி) கூறும் விஷயம் என்ன என்பதை நாம் முதலில் அறிந்துகொள்வோம்.*

## ஓதுவது ரத்து செய்யப்பட்ட வசனங்கள்

*அல்லாஹ் அருளிய சில வசனங்களை அவனே மாற்றிக் கொள்வதும், அல்லது அவற்றை நீக்கிவிடுவதும் அவன் சுய அதிகாரத்தில் உள்ளது. இதில் விமர்சிப்பதற்கு நமக்கு அதிகாரம் இல்லை. நபி(ஸல்) அவர்களின் காலத்தில் யூதர்களே இதை விமர்சித்து வந்தார்கள்.*

*ஒரு வசனத்தை நாம் மாற்றினால் அல்லது அதை நாம் மறக்கடித்தால் அது போன்றதையோ அதைவிட சிறந்ததையோ கொண்டு வருவோம். அல்லாஹ் ஒவ்வொன்றின் மீதும் ஆற்றல் மிக்கவன் என்பதை நீர் அறியவில்லையா?* ***அல்குர்ஆன் 2:106***

*திருமணம் ஆனவர்கள் விபச்சாரம் செய்தால் அவர்களை கல்லால் எறிந்து கொல்ல வேண்டும் என்ற வசனத்தை அல்லாஹ் முன்பு அருளினான். ஆனால், தற்போது இந்த வசனத்தின் சட்டம் இருந்தாலும் இந்த வசனத்தை ஓதுவதை அல்லாஹ் மாற்றிவிட்டான்.*

*அல்லாஹ், முஹம்மத்(ஸல்) அவர்களை சத்தியத்துடன் தான் அனுப்பினான். மேலும், அவர்களுக்கு வேதத்தையும் கொடுத்தான். அல்லாஹ் அருளிய வேதத்தில் கல்லெறி தண்டனை குறித்த வசனம் இருந்தது. அதை நாங்கள் ஓதியிருக்கிறோம். அதைப் புரிந்து மனனமும் செய்திருக்கிறோம். இறைத்தூதர்(ஸல்) அவர்களும் (மணமுடித்த விபச்சாரிக்குக்) கல்லெறி தண்டனை நிறைவேற்றியுள்ளார்கள். அவர்களுக்குப் பிறகு நாங்களும் அந்தத் தண்டனையை நிறைவேற்றியுள்ளோம்.*

*காலப் போக்கில் மக்களில் சிலர், "அல்லாஹ்வின் மீது ஆணையாக! இறைவேதத்தில் கல்லெறி தண்டனை குறித்த வசனத்தை நாங்கள் காணவில்லை' எனக் கூறி, இறைவன் அருளிய கடமை ஒன்றைக் கைவிடுவதன் மூலம் வழி தவறிவிடுவார்களோ என நான் அஞ்சுகிறேன்.*

*மணமுடித்த ஆணோ, பெண்ணோ விபச்சாரம் புரிந்து அதற்கு சாட்சி இருந்தாலோ, கர்ப்பம் உண்டானாலோ, அல்லது*

*ஒப்புதல் வாக்குமூலம் அளித்தாலோ அவருக்குக் கல்லெறி தண்டனை உண்டு என்பது இறைவேதத்தில் உள்ள சட்டமாகும்.*

*பிறகு, நாங்கள் ஓதிவந்த இறைவேதத்தில், உங்களின் தந்தையரைப் புறக்கணித்து பிறரைத் தந்தையாக்கிவிட வேண்டாம். அவ்வாறு உங்கள் தந்தையரைப் புறக்கணிப்பது நன்றி மறுப்பதாகும் என்பதையும் ஓதிவந்தோம்.*

***அறிவித்தவர்: உமர்(ரலி), நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 6830***

*மனமுடித்தவர்கள் விபச்சாரம் செய்தால் அவர்களைக் கல்லால் அடித்து மரண தண்டனையை நிறைவேற்ற வேண்டும் என்ற வசனமும், தந்தையைப் புறக்கணிக்கக் கூடாது என்ற வசனமும் நபி(ஸல்) அவர்களின் காலத்தில் குர்ஆனில் இருந்தது. பின்னர் இவற்றை ஓதுவதை நபி(ஸல்) கைவிட்டுவிட்டார்கள். எனவே, இன்று இதை நாம் குர்ஆனில் ஓதுவதில்லை; அது குர்ஆனில் சேர்க்கப்படவுமில்லை. குர்ஆன் பாதுகாக்கப்பட வில்லை எனக் கூறி இந்த ஹதீஸ்களையும் மறுப்பார்களா?*

*பீரு மவூனா' என்னும் இடத்தில் (கொல்லப்பட்ட) அந்த எழுபது பேரைக் குறித்து (அவர்கள் சொல்வதாக அருளப்பட்ட) ஓர் இறை வசனத்தை குர்ஆனில் நாங்கள் ஓதி வந்தோம். "நாங்கள் எங்கள் இறைவனைச் சந்திக்கச் சென்றுவிட்டோம் என்றும், அவன் எங்களைக் குறித்துத் திருப்தியுற்றான்; நாங்களும் அவனைக் குறித்துத் திருப்தியுற்றோம் என்றும் எங்கள் சமுதாயத்திற்கு எங்களைப் பற்றித் தெரிவித்துவிடுங்கள்" என்பதே அந்த வசனம். பின்னர், இந்த வசனத்தை ஓதுவது (இறைவனால்) ரத்து செய்யப்பட்டு விட்டது.*

***அறிவித்தவர்: அனஸ்(ரலி), நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 3064***

*இந்த ஹதீஸில் கூறப்பட்டிருப்பதைப் போன்று "பீரு மவூனாவில் கொல்லப்பட்ட நபித்தோழர்கள் விஷயத்தில் அல்லாஹ் ஒரு வசனத்தை முன்னர் இறக்கினான். ஆனால், அந்த வசனம் இப்போது நம்மிடமுள்ள குர்ஆனில் இல்லை. குர்ஆன் பாதுகாக்கப்படவில்லை எனப் புரிந்து கொள்ளமாட்டோம். ஓதுவது ரத்து செய்யப்பட்ட வசனம் நமக்கு கிடைக்காமல் போவதால் குர்ஆனின் பாதுகாப்பிற்கு எந்த பாதிப்பும் வரப்போவதில்லை.*

*இது போன்றே பத்து முறை பால்கொடுத்தாலே பால்குடி உறவு ஏற்படும் என்ற வசனத்தை அல்லாஹ் முதலில் இறக்கினான்.*

மக்கள் இந்த வசனத்தை குர்ஆனில் ஓதிக்கொண்டிருந்தனர். குர்ஆனை எழுதிக்கொண்டவர்கள் இந்த வசனத்தையும் எழுதிக் கொண்டார்கள். இதன்பின் அல்லாஹ் ஐந்து முறை பால் அருந்தினால் பால் குடி உறவு ஏற்படும் என்ற சட்டத்தை பிறப்பித்து முன்புள்ள சட்டத்தை மாற்றுகிறான். மாற்றப்பட்ட இந்த வசனத்தை ஓத வேண்டாம் எனவும் கூறப்படுகிறது.

இவ்விளக்கம் பின்வரும் அறிவிப்பில் தெளிவாகக் கூறப் பட்டுள்ளது.

குர்ஆனில் அல்லாஹ் முன்பு அருளிய சில வசனங்களை பின்பு நீக்கினான். பத்து தடவை அல்லது ஐந்து தடவை பால் கொடுத்தாலே பால்குடி உறவு ஏற்படும் என்ற சட்டம் இத்தகைய வசனங்களில் ஒன்றாகும்.

**அறிவித்தவர்: ஆயிஷா(ரலி) நூல்: இப்னு மாஜா 1932**

இறைவனால் முன்பு அருளப்பட்டு பின்பு மாற்றப்பட்ட வசனத்தைப் பற்றியே ஆயிஷா(ரலி) பேசியுள்ளார்கள் என இந்த அறிவிப்பு தெளிவாகக் கூறுகிறது. இதன் பின்பும் அன்று ஓதப்பட்ட வசனம் இன்று நம்முடைய குர்ஆனில் ஏன் இல்லை? என்று அறிவுள்ளவர்கள் கேட்கமாட்டார்கள்.

யாரேனும் இந்தக் கேள்வியைக் கேட்டால் ஓதுவது ரத்துச் செய்யப்பட்ட வசனம் நம்மிடம் இருக்க வேண்டிய அவசியமில்லை. இதனால் குர்ஆனின் பாதுகாப்பிற்கு எந்த பாதிப்பும் வரப்போவ தில்லை என்பதே இதற்கான பதிலாகும்.

இந்த வசனம் ஓதப்படுகிற வசனங்களுடன் உள்ள நிலையில் இறைத்தூதர்(ஸல்) மரணித்தார்கள் என ஆயிஷா(ரலி) கூறியதை தவறாக விளங்கியதே பிரச்னைக்கு காரணமாகும். இந்த வார்த்தையை ஓதப்படுகிற வசனங்களுடன் இதுவும் ஓதப்பட்டது என்று புரியவும் வாய்ப்பு உள்ளது. எழுதிவைக்கப் பட்ட குர்ஆனில் ஓதப்படுகிற வசனங்களுடன் இதுவும் சேர்ந்திருந்தது. ஆனால், இது ஓதப்படாது என்று புரிவதற்கும் இடமுள்ளது.

இரண்டு முறைகளில் எப்படிப் புரிந்தாலும் இச்செய்தியில் எப்பிரச்னையுமில்லை. இதற்கு சரியான விளக்கம் உள்ளது.

## விளக்கம் 1

*நபி(ஸல்) மரணிக்கும் போது குறித்த வசனத்தை மக்கள் ஓதிக்கொண்டிருந்தார்கள் எனப் புரிந்தாலும் இந்த ஹதீஸை மறுக்க முடியாது. தான் மரணிப்பதற்கு சற்று முன்பே குறித்த வசனத்தை ஓத வேண்டாம் என நபி(ஸல்) கூறினார்கள். எனவே இச்செய்தி அன்று பலருக்கு சென்றடைந்தாலும் சிலருக்கு இத்தகவல் சென்றடையவில்லை.*

*இத்தகவலை அறியாதவர்கள் முன்பு போல் இதையும் குர்ஆனில் ஒரு வசனமாகக் கருதி ஓதிக்கொண்டிருந்தனர். இந்த நிலையில்தான் நபி(ஸல்) மரணித்தார்கள். விஷயம் தெரியாமல் வசனத்தை ஓதியவர்கள் பின்பு இதை அறிந்தவுடன் இவ்வசனத்தை ஓதுவதை நிறுத்திவிட்டனர். இமாம் நவவீ(ரஹ்) போன்றோர் இந்த விளக்கத்தைக் கூறியுள்ளனர்.*

*இவ்வசனம் ஓதப்படும் வசனங்களுடன் உள்ள நிலையிலேயே நபி(ஸல்) மரணித்தார்கள் என்ற ஆயிஷா(ரலி) அவர்களின் கூற்றை இவ்வாறு புரிந்துகொண்டால் அன்று ஓதப்பட்டுவந்த வசனம் இன்று நம்மிடம் ஏன் இல்லை என்ற கேள்வி வராது. இந்தத் தவறான கேள்வியை வைத்து இச்செய்தியை மறுப்பதும் சரியல்ல.*

## விளக்கம் 2

*பால்குடி தொடர்பான வசனம் ஓதப்படுகின்ற வசனங்களுடன் இருந்தது என்ற ஆயிஷா(ரலி) அவர்களின் கூற்றை மற்றொரு முறையிலும் சரியாகப் புரிந்துகொள்ள முடியும். நபி(ஸல்) மரணிக்கும்போது பால்குடி தொடர்பான வசனம் ஓதப்பட்டுக் கொண்டிருந்தது என ஆயிஷா(ரலி) கூறவில்லை. மாறாக ஓதடுப்படுகின்ற வசனங்களுடன் இதுவும் இருந்தது என்றே கூறியுள்ளார்கள்.*

*பால்குடி தொடர்பான வசனம் ஆரம்பத்தில் மக்களால் ஓதப்பட்டு வந்தது. எனவே அவ்வசனம் குர்ஆன் எழுத்துப் பிரதிகளிலும் இடம்பெற்றது. இதன் பின் அதன் சட்டம் மாற்றப் பட்டதுடன் அதை ஓத வேண்டாம் எனவும் கூறப்படுகிறது. இப்போது எழுதப்பட்ட குர்ஆன் பிரதியை பார்ப்பவர் ஓதப்பட வேண்டிய வசனங்களுடன் ஓதுவது ரத்துச்செய்யப்பட்ட பால்குடி தொடர்பான வசனத்தையும் காண்பார்.*

பால்குடி தொடர்பான வசனம் குர்ஆன் எழுத்துப் பிரதியில் இருந்தாலும் அதை ஓதக்கூடாது என்ற விஷயத்தை அனைவரும் அறிந்தே வைத்திருந்தனர். இதைப் பற்றியே ஆயிஷா(ரலி) குறிப்பிட்டார்கள். அவர்கள் எழுதி வைக்கப்பட்டிருந்த குர்ஆன் பிரதி குறித்தே இவ்வாறு பேசினார்கள் என்பதற்கு பின்வரும் அறிவிப்பு தெளிவான சான்றாக அமைந்துள்ளது.

(மணமுடித்த பின்பு விபச்சாரம் செய்வோர்) கல்லெறிந்து கொல்லப்பட வேண்டும் என்ற வசனமும், பத்து முறை பால் புகட்ட வேண்டும் என்ற வசனமும் இறக்கப்பட்டது. என்னுடைய வீட்டில் உள்ள கட்டிலுக்கு அடியில் ஒரு தாளில் இருந்தது. இறைத்தூதர்(ஸல்) நோய்வாய்ப்பட்டபோது அவர்களின் விஷயத்தில் கவனம் செலுத்தினோம். எங்களின் வீட்டுப் பிராணி ஒன்று (வீட்டினுள்) நுழைந்து அந்தத் தாளைச் சாப்பிட்டு விட்டது.

**அறிவித்தவர்: ஆயிஷா(ரலி), நூல்: அஹ்மத் 25112**

விபச்சாரம் செய்தவனை கல்லெறிந்துகொள்ள வேண்டும் என்ற வசனம் அருளப்பட்டது. இது போன்றே பத்து முறை பாலருந்தினாலே பால் குடி உறவு ஏற்படும் என்ற வசனமும் அருளப்பட்டது. இந்த இரண்டு வசனங்களையும் மக்கள் சிறிது காலம் ஓதிவந்தனர். எனவேதான், ஆயிஷா(ரலி) இதனை குர்ஆனில் எழுதிவைத்திருந்தார்கள்.

பின்னர் இறைத்தூதர்(ஸல்) இந்த இரண்டு வசனங்களையும் ஓத வேண்டாம். அதாவது குர்ஆனில் இணைக்க வேண்டாம் என்று கூறினார்கள். ஆனால், முன்பு எழுதி வைத்திருந்த தாளை ஆயிஷா(ரலி) வைத்திருந்தார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்களின் மரணத்தின்போது அந்த தாளை ஆடு சாப்பிட்டது.

ஆடு சாப்பிட்டுவிட்ட காரணத்தால் அந்த வசனம் நமக்கு கிடைக்காமல் போகவில்லை. அந்த வசனம் குர்ஆனில் ஓதப்பட வேண்டிய வசனமாக இருந்தால் ஆடு சாப்பிட்டாலும் அது நம்மை வந்து சேர்ந்திருக்கும். அது ஓதப்பட வேண்டிய வசனம் இல்லை என்பதால் அது நம்மை வந்து அடையவில்லை. இதனால் குர்ஆனில் விடுபட்டுள்ளது. குர்ஆன் பாதுகாக்கப்படவில்லை என்று கூற முடியாது.

எனவே, ஆயிஷா(ரலி) அறிவிக்கும் மேற்கண்ட செய்தி குர்ஆன் வசனங்கள் விடுபட்டுள்ளது என்ற கருத்தைத் தரவில்லை. மாறாக முன்னர் ஓதப்பட்டு வந்த ஒரு வசனம் பின்னர் மாற்றப்

*பட்டு அதை ஓதுவது ரத்து செய்யப்பட்டது என்ற கடந்த கால நிகழ்வையே விவரிக்கிறார்கள். இதை நம்புவதால் குர்ஆனின் பாதுகாப்பிற்கு எந்த பாதிப்பும் ஏற்படாது.*

## *8. நபியாகிய பின்னரே மிஃராஜ் நடந்தது*

***இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு வஹீ வருவதற்கு முன்னால்** அவர்கள் மஸ்ஜிதுல் ஹராமில் தூங்கிக் கொண்டிருந்த போது (வானவர்களில்) மூன்று பேர் அவர்களிடம் வந்தார்கள். அவர்களில் முதலாமவர், ''இவர்களில் அவர் யார்?'' என்று கேட்டார். அவர்களில் நடுவிலிருந்தவர், "இவர்களில் சிறந்தவர்" என்று பதிலளித்தார். அவர்களில் இறுதியானவர், "இவர்களில் சிறந்தவரை (விண்ணுலகப் பயணத்திற்காக) எடுத்து வாருங்கள்" எனக் கூறினார்.*

*அன்றிரவு இது மட்டும் தான் நடந்தது. மற்றொரு இரவில் இறைத்தூதர்(ஸல்) தம் உள்ளம் பார்க்கிற நிலையில்-(உறக்க நிலையில்)- அம்மூவரும் வந்தபோதுதான் அவர்களைக் கண்டார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்களின் கண்கள் இரண்டும் தான் உறங்கும்; அவர்களின் உள்ளம் உறங்காது. இறைத்தூதர்கள் இப்படித்தான். அவர்களின் கண்கள் உறங்கும்; அவர்களுடைய உள்ளம் உறங்காது. ஜிப்ரீல்(அலை), இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்குப் பொறுப்பேற்று அவர்களைத் தம்முடன் அழைத்துக் கொண்டு வானத்தில் ஏறிச் சென்றார்கள்.*

***அறிவித்தவர்: அனஸ் இப்னு மாலிக்(ரலி),***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ 3570***

*ஆதாரப்பூர்மான ஹதீஸ் குர்ஆனுக்கு முரண்படும் என்பதற்கு இச்செய்தியையும் சான்றாகக் கூறுகிறார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு வஹீ வருவதற்கு முன்னால் அவர்கள் விண்ணுலகப் பயணத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டார்கள் என்று இந்த ஹதீஸ் கூறுகிறது. அப்படியானால் இறைத்தூதர்(ஸல்) நபியாகு வதற்கு முன்பே விண்ணுலகப் பயணம் நடந்தது என்று இச் செய்தி கூறுகிறது.*

*இக்கருத்து குர்ஆனுக்கும் ஏராளமான நபிமொழிகளுக்கும் எதிரானது. எனவே, இந்த ஹதீஸ் ஸஹீஹ் அல் புகாரீயில் இருந்தாலும் இதனை மறுக்க வேண்டும். இது போன்றுள்ள பல ஹதீஸ்களையும் மறுக்க வேண்டும் என்று கூறுகிறார்கள்.*

*எந்த ஒரு நபிமொழியையும் அதன் கருத்தென்ன? அதை தவறான முறையில் புரியாமல் சரியான வழியில் புரிய முடியுமா? என்றெல்லாம் இவர்கள் ஆழமாகச் சிந்திப்பதில்லை. ஹதீஸை மேலோட்டமாக பார்த்துவிட்டு ஒரு வார்த்தையை மட்டும் பிடித்துக்கொண்டு ஆதாரப்பூர்வமான நபிமொழிகளை மறுப் பதற்கு அடித்தளம் போடும் வேலையை செய்கிறார்கள்.*

*மேலுள்ள ஹதீஸை ஒன்றுக்கு பலமுறை திரும்பத்திரும்ப படித்துப்பாருங்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு வஹீ வருவதற்கு முன்னால் அவர்கள் விண்ணுலகப் பயணத்திற்கு சென்றார்கள் என்று ஹதீஸ் கூறுகிறதா? அல்லது ஹதீஸ் கூறுவதாக இவர்கள் தவறாகப் புரிந்துகொண்டார்களா? என்ற உண்மையை அறியலாம். தன் சிந்தனையில் கோளாறை வைத்துக் கொண்டு ஹதீஸ்களை குறை சொல்வது வழிகேடும் அறியாமையும் ஆகும்.*

*இந்த ஹதீஸில் வஹீ வருவதற்கு முன்னால் விண்ணுலகப் பயணம் நடந்தது என்று சொல்லப்படவே இல்லை. மாறாக இறைத்தூதர்(ஸல்) ஹரமில் உறங்கிக்கொண்டிருந்தபோது மூன்று வானவர்கள் வந்தார்கள் என்றும் இறைத்தூதர்(ஸல்) அவர்களை விண்ணுலகப் பயணத்திற்கு அழைத்துச் செல்வது பற்றி பேசிக்கொண்டார்கள் என்று மட்டுமே கூறப்பட்டுள்ளது.*

*வானவர்கள் இறைத்தூதர்(ஸல்) அவர்களைப் பற்றி தங்களுக் கிடையே பேசிக்கொண்டதை அறிவுள்ள யாரும் விண்ணுலகப் பயணம் என்று கூறமாட்டார்கள். ஆனால், இவர்கள் ஏன் கூறுகிறார்கள் என்று நமக்குத் தெரியவில்லை. இறைத்தூதர் (ஸல்) அவர்களை மிஃராஜ் பயணத்திற்கு அழைத்துச் செல்வது பற்றி வானவர்கள் பேசிக்கொண்ட நிகழ்வு அவர்களுக்கு வஹீ வருவதற்கு முன்னால் நடந்தது. இதை மறுக்க வேண்டிய அவசியமில்லை. இதைத் தான் மேற்கண்ட ஹதீஸ் கூறுகிறது.*

*இதன் பின் வேறு ஓர் இரவில் வானவர்கள் வந்து இறைத் தூதர்(ஸல்) அவர்களை விண்ணுலகத்திற்கு அழைத்துச் செல் கிறார்கள். இது இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கு வஹீ வந்த பிறகு நடந்த நிகழ்வாகும். இந்நிகழ்வு வஹீ வருவதற்கு முன்னால் நடந்தது என்று ஹதீஸ் கூறவில்லை. எனவே, ஹதீஸ் தெளி வாகவே உள்ளது. இவர்களே தெளிவில்லாமல் இருக்கிறார்கள்.*

*ஆதாரப்பூர்வமான ஹதீஸ்கள் குர்ஆனுக்கு முரண்படும் என்பது தான் இவர்களின் வாதமாகும். அப்படியானால்*

*அறிவிப்பாளர் தொடரில் எந்தக் குறையுமில்லாத செய்தியை இவர்கள் சுட்டிக்காட்ட வேண்டும். மேலுள்ள செய்தியை இவர்கள் இங்கே சுட்டிக்காட்டுவது இவர்களின் நிலைபாட்டிற்கு சம்பந்தமில்லாத செயலாகும். ஏனென்றால், இச்செய்தியில் ஷரீக் இப்னு அப்தில்லாஹ் என்பவர் இடம்பெற்றுள்ளார். இவர் நாணயமானவர் என்றாலும் அதிகமாக தவறிழைப்பவர் என்று அறிஞர்கள் குறைகூறியுள்ளனர். விண்ணுலகப் பயணம் பற்றி உறுதியான நம்பகமானவர்கள் வழியாக வரும் அறிவிப்பு களில் வஹீ வருவதற்கு முன்னால் என்ற வாசகம் இடம்பெறவில்லை. இவருடைய அறிவிப்பில் மட்டுமே இவ்வாறு கூறப்பட்டுள்ளது.*

*ஹதீஸ் கலை விதிப்படி இச்செய்தியை நோக்கினால் இதை ஆதாரப்பூர்வமான தகவல் என்றே கூற முடியாது. அவ்வாறிருக்க நம்பகமானவர்கள் அறிவிக்கும் சில ஹதீஸ்கள் தவறாக உள்ளது என்று நிரூபிப்பதற்கு இதை அவர்கள் ஆதாரமாக சுட்டிக்காட்டுவது அறியாமையாகும். ஹதீஸ்கள் விஷயத்தில் இவர்களுக்கு சரியான ஆய்வு இல்லை. அவசர புத்தியே உள்ளது.*

## *9. உலகத்தைப் படைக்க ஆறு நாள்களே*

*“கண்ணியமும், மகத்துவமும் மிக்க அல்லாஹ் சனிக் கிழமை பூமியைப் படைத்தான். பூமியிலே ஞாயிற்றுக் கிழமை மலையைப் படைத்தான். திங்கட்கிழமை மரங்களைப் படைத்தான். செவ்வாய்க் கிழமை உலோகங்களைப் படைத்தான். புதன் கிழமை ஒளியைப் படைத்தான். வியாழக் கிழமை பூமியிலே உயிரினங்களைப் பரவச் செய்தான். வெள்ளிக்கிழமை அஸருக்குப் பின் வெள்ளிக் கிழமையின் கடைசி நேரமான அஸர் மற்றும் இரவுக்கு மத்தியில் கடைசிப் படைப்பாக ஆதமைப் படைத்தான்” என இறைத்தூதர்(ஸல்) என் கையைப் பிடித்தவாறு கூறினார்கள்.*

***அறிவித்தவர்: அபூ ஹுரைரா(ரலி), நூல்: முஸ்லிம் 4997***

*ஆதாரப்பூர்மான ஸஹீஹான ஹதீஸ் குர்ஆனுடன் முரண்படும் என்பதற்கு ஸஹீஹ் முஸ்லிமில் பதிவாகியுள்ள இச்செய்தியை சுட்டிக் காட்டுகிறார்கள். அல்லாஹ் உலகத்தை ஆறு நாளில் படைத்ததாக குர்ஆன் கூறுகிறது. ஆனால், இச்செய்தி உலகம் ஏழு நாளில் படைக்கப்பட்டதாக கூறுகிறது. எனவே, இது குர்ஆனுக்கு முரணாக இருப்பதால் இதை ஏற்கக் கூடாது என்று வாதிடுகின்றனர்.*

*குர்ஆனுக்கு முரண் என்ற வாதத்திற்கு பின்னால் அறியாமை மட்டுமே இருக்கும். இந்த உண்மை இங்கேயும் வெளிப்படுவதை நீங்கள் அறியலாம்.*

*உங்கள் இறைவன் அல்லாஹ் ஆவான். அவன் வானங் களையும் பூமியையும் ஆறு நாள்களில் படைத்தான். பிறகு அர்ஷின் மீது உயர்ந்தான்.* ***அல்குர்ஆன் 7:55***

*அல்லாஹ் வானம் மற்றும் பூமியை ஆறு நாளில் படைத்த தாக குர்ஆனில் பல இடங்களில் கூறுகிறான். இதை நாம் மறுக்கவில்லை. ஆனால், வானத்தையும் பூமியையும் படைக்க ஏழு நாள்கள் ஆனது என்று ஹதீஸ் கூறுவதாக இவர்கள் சொல்வதையே மறுக்கிறோம்.*

*அல்லாஹ் வானம் பூமியை ஆறு நாளில் படைத்ததாக கூறுகிறான். ஆதம்(அலை) அவர்களை படைத்தது இந்த ஆறு நாள்களுக்குள் அடங்கும் என்று அவன் கூறவில்லை. ஆதம்(அலை) வானம் பூமிக்குள் வரமாட்டார்கள். அவர்கள் தனியொரு படைப்பு. மேற்கண்ட ஹதீஸை ஒன்றுக்கு பல முறை நன்கு படித்துப்பாருங்கள். வானம் பூமியை படைக்க ஏழு நாள் ஆனது என்று ஹதீஸ் கூறவே இல்லை. வானம் பூமியை படைக்க ஆறு நாள்களும் ஆதம்(அலை) அவர்களைப் படைக்க ஒருநாளும் ஆனது என்றே ஹதீஸ் கூறுகிறது.*

1. *சனிக்கிழமை மண் படைக்கப்பட்டது*
2. *ஞாயிற்றுக் கிழமை மலை படைக்கப்பட்டது*
3. *திங்கட் கிழமை மரங்கள் படைக்கப்பட்டது*
4. *செவ்வாய் கிழமை உலோகங்கள் படைக்கப்பட்டது*
5. *புதன் கிழமை ஒளி படைக்கப்பட்டது.*
6. *வியாழக்கிழமை உயிரினங்கள் படைக்கப்பட்டது.*
7. *வெள்ளிக்கிழமை ஆதம்(அலை) படைக்கப்பட்டார்கள்.*

*50 நாள்களில் வீட்டை கட்டி முடித்துவிடுவோம் என்று ஒருவர் சொல்கிறார். அவரே மற்றொரு நேரத்தில் வீட்டை கட்டி முடித்து வீட்டிற்குள் குடியேறுவதற்கு 51 நாள்கள் ஆகும் என்று கூறுகிறார். அறிவுள்ளவர்கள் இதை முரண்பாடு என்று சொல்ல மாட்டார்கள். வீட்டை கட்டி முடிப்பதை மட்டும் கவனத்தில் கொண்டு 50 நாள்கள் என்று சொல்லப்பட்டது. மற்றொரு*

நேரத்தில் குடியேறுவதையும் கவனத்தில் கொண்டே 51 நாள்கள் என்று சொல்லப்பட்டுள்ளது என்று முரண்பாடின்றி புரிந்து கொள்வோம். இது போன்றே மேற்கண்ட ஹதீஸையும் நாம் விளங்க வேண்டும்.

அல்லாஹ் கூறும் ஆறு நாள்களுடன் ஆதம்(அலை) படைக்கப்பட்டதையும் இணைத்தால் மொத்தம் ஏழு நாள்கள் வருகின்றன. ஆதம்(அலை) படைக்கப்பட்டதை சேர்க்கா விட்டால் வானம் பூமி ஆறுநாட்களில் படைக்கப்பட்டது என்று கூறலாம். இதையும் சேர்த்தால் ஏழு நாள்கள் என்றும் கூறலாம். இரண்டு விதங்களில் எப்படிக் கூறினாலும் தவறில்லை. குர்ஆன் வசனம் ஆதம்(அலை) படைக்கப்பட்டதை சேர்க்காமல் ஆறு நாள்கள் என்று கூறுகிறது. ஆனால், இந்த ஹதீஸ் ஆதம்(அலை) அவர்களை படைக்கப்பட்ட நாளையும் சேர்த்தே ஏழு நாள்கள் என்று கூறுகிறது. இரண்டும் ஒன்றுக்கொன்று விளக்கமே அன்றி இதை முரண்பாடு என்று சொல்லக் கூடாது.

இதை முரண்பாடு என்று கூறினால் குர்ஆனிலும் முரண்பாடு உள்ளது என்று கூற வேண்டிய நிலை வரும். ஏனென்றால் இதே அடிப்படையில் பின்வரும் குர்ஆன் வசனம் அமைந்துள்ளது.

“பூமியை இரண்டு நாள்களில் படைத்தவனையா நீங்கள் மறுக்கிறீர்கள்? அவனே அகிலத்தின் அதிபதி எனக் கூறுவீராக. நான்கு நாட்களில் அதன் மேல் மலைகளை ஏற்படுத்தினான். அதில் அருள் புரிந்தான். அதன் உணவுகளை அதில் நிர்ணயம் செய்தான். கேள்வி கேட்போருக்குச் சரியான விடை இதுவே. பின்னர் வானம் புகையாக இருந்தபோது அதை நாடினான். பின்னர் “விரும்பியோ விரும்பாமலோ நீங்கள் கட்டுப்பட வேண்டும்” என அதற்கும், பூமிக்கும் கூறினான். “விரும்பியே கட்டுப்பட்டோம்” என அவை கூறின. இரண்டு நாள்களில் ஏழு வானங்களை அமைத்தான். **அல்குர்ஆன் 41:9**

அல்லாஹ் குர்ஆனில் பல இடங்களில் ஆறு நாள்களில் வானம் பூமியைப் படைத்ததாக கூறுகிறான். ஆனால் மேற்கண்ட வசனத்தை மேலோட்டமாக கவனித்தால் பூமியைப் படைக்க இரண்டு நாள்கள்; அதில் மலைகளையும் உணவுகளையும் ஏற்படுத்த நான்கு நாள்கள்; வானத்தைப் படைக்க இரண்டு நாள்கள் என வானம் பூமியைப் படைப்பதற்கு மொத்தம் எட்டு நாள்கள் ஆனது என்ற கருத்தை இவ்வசனம் கூறுவது போன்று நமக்குத் தோன்றும்.

இதனால் குர்ஆனில் முரண்பாடுள்ளது என நாம் கூற மாட்டோம். முரண்பாடில்லாமல் இதை புரிந்துகொள்ள முயற்சிப்போம்.

பூமியில் மலைகளையும் உணவுகளையும் உருவாக்குவதற்கு நான்கு நாள்கள் ஆனது என அல்லாஹ் கூறுகிறான். இந்த நான்கு நாள்களில் பூமியைப் படைத்த இரண்டு நாள்களும் அடக்கமாகும்.

மலைகளையும் உணவுகளையும் படைப்பதற்கான இரண்டு நாள்களுடன் பூமி படைக்கப்பட்ட இரண்டு நாள்களையும் சேர்த்து மொத்தமாக நான்கு நாள்கள் என்று குறிப்பிடலாம். இந்த அடிப் படையில் அல்லாஹ் நான்கு நாள்கள் எனக் கூறுகிறான் என்று புரிந்து கொண்டால் மேற்கண்ட வசனம் வானம் பூமியை படைப்பதற்கு மொத்தம் ஆறு நாள்களே ஆனது எனக் கூறுவதை அறியலாம். எட்டு நாள்கள் என்று நாம் புரிந்துகொண்டதை தவறு என்பதை உணரலாம்.

குர்ஆனின் இந்த வசனத்தில் முரண்பாடு கற்பிக்காமல் இவ்வாறு சரியாகப் புரிந்துகொண்டவர்கள் மேற்கண்ட ஹதீஸில் முரண்பாட்டை கற்பித்து மறுக்கிறார்கள். ஹதீஸ்களை மறுக்க வேண்டும் என்ற மனநோய் இவர்களுக்கு ஏற்பட்டுள்ளதால் இது போன்ற இரட்டை நிலையை மேற்கொள்கின்றனர்.

மேற்கண்ட ஹதீஸ் முஸ்லிமில் பதிவாகி இருந்தாலும் அறிவிப்பாளர் ரீதியில் பலவீனமான செய்தியாகும். இச்செய்தியில் அய்யூப் இப்னு காலித் என்பவர் இடம் பெறுகிறார். இவர் நம்பக மானவர் என்று அறிஞர்கள் நற்சான்று அளிக்கவில்லை. இவர் பலவீனமானவர் என்பதால் அறிஞர்கள் இவரின் ஹதீஸ்களை பதிவு செய்யாமல் புறக்கணித்துள்ளனர். எனவே, இது பலவீனமான செய்தி என்பது ஒரு பக்கம்.

அறிஞர் இப்னு தைமியா(ரஹ்) இந்த ஹதீஸை குர்ஆனுக்கு முரண்படுகிறது என்ற அடிப்படையில் மறுத்ததாக சுட்டிக் காட்டுகிறார்கள். இமாம் இப்னு தைமியா(ரஹ்) இந்த ஹதீஸ் பலவீனமானது என்று கூறினார்கள். ஆனால், இன்று இவர்கள் எந்தக் குறையுமில்லாத ஆதாரப்பூர்வமான ஹதீஸ்களை குர்ஆனுக்கு முரண் என்று கூறி மறுப்பதைப் போன்று அவர்கள் இந்த ஹதீஸை மறுக்கவில்லை.

இமாம் இப்னு தைமியா(ரஹ்) இச்செய்தி ஹதீஸ் கலை விதியின் படி பலவீனமானது என்பதை முதலில் தெளிவுபடுத்து

கிறார். இமாம் புகாரீ, இமாம் யஹ்யா இப்னு மயீன், பைஹகீ (ரஹ்) மற்றும் பலர் அறிவிப்பாளர் தொடர் ரீதியில் இச்செய்தியை பலவீனமானது என்று கூறுவதை அவர் சுட்டிக்காட்டுகிறார்.

அறிவிப்பாளர் தொடர் ரீதியில் இது பலவீனமான செய்தி என்று அவர் கூறிய பிறகே இதன் கருத்தைக் குறித்து குர்ஆனுக்கு மாற்றமாக உள்ளது என விமர்சனம் செய்கிறார். அறிவிப்பாளர் தொடரில் எந்தக் குறையுமில்லாத ஆதாரப்பூர்வமான ஹதீஸை வெறுமனே குர்ஆனுக்கு முரண்படுகிறது எனக் கூறி இப்னு தைமியா(ரஹ்) மறுத்ததாக ஒரு ஹதீஸைக் கூட இவர்கள் காட்ட முடியாது. சொல்லப்போனால் இவ்வாறு மறுப்பவர்களுக்கு எதிராக பல்வேறு மறுப்பு விளக்கங்களை கொடுத்து நூல்களை எழுதியவரே இமாம் இப்னு தைமியா(ரஹ்). அவ்வாறு இருக்க தங்களின் வழிகேட்டுக்கு இவர்கள் இமாம் இப்னு தைமியா(ரஹ்) அவர்களையே ஆதாரமாகக் குறிப்பிடுவது ஆச்சரியமாக உள்ளது.

## இறுதியாக...

இன்று இவர்கள் குர்ஆனுக்கு முரண் என்று கூறி மறுக்கும் நபிமொழிகளை நமக்கு முன்னால் வாழ்ந்த நல்லோர்கள் அனைவரும் நம்பிய நிலையில்தான் முஸ்லிம்களாக வாழ்ந்து மரணித்தார்கள். இந்த நபிமொழிகளை ஏற்ற நிலையில் தான் இவர்கள் இஸ்லாமியப் பிரச்சாரத்தை சிறப்பாக செய்தார்கள். இவர்களின் மூலமாகவே நாம் இஸ்லாமை அறிந்து கொண்டோம்.

இஸ்லாமிய அறிஞர்களால் அங்கீகரிக்கப்பட்ட இந்த ஆதாரப்பூர்வமான நபிமொழிகளை நம்பினால் நாம் ஒருபோதும் வழிதவறமாட்டோம். இது தான் நாம் சொர்க்கம் செல்வதற்குரிய சரியான பாதையாகும். இதில் தவறு வர வாய்ப்பில்லை. ஒரு பேச்சிற்கு தவறு ஏற்பட்டால் கூட அல்லாஹ் இதை மன்னித்து நம் நல்ல முயற்சிக்கும் நல்ல நோக்கத்திற்கும் நன்மையை வழங்குவான்.

ஆனால், நபிமொழிகளை மறுத்து தனிமனிதரின் சுய கருத்துக்களை இஸ்லாம் என்ற பெயரில் நாம் பின்பற்றினால் கண்டிப்பாக இது இஸ்லாமாக இருக்காது. இது சொர்க்கத்திற்கு போவதற்கான வழியுமல்ல. மாறாக இது தனி ஒரு மதத்தையே உருவாக்கும் ஆபத்தான செயலாகும்.

யார் சொல்வதை நாம் பின்பற்ற வேண்டும்? என்று மக்கள் குழம்ப வேண்டிய அவசியமில்லை. ஒரு தெளிவான நபிமொழி

*கிடைத்து விட்டால், அதில் ஆயிரம் பேர் ஆயிரம் சந்தேகங்களை ஏற்படுத்தினாலும் அதை கண்டு கொள்ளாமல் அந்த நபிமொழியை பலமாக பற்றிப்பிடித்துக் கொண்டால் நிச்சயம் வெற்றிபெறலாம்.*

*ஒரு தனி மனிதன் மீது நம்பிக்கை வைப்பதைவிட ஆதாரப் பூர்வமான நபிமொழிகளை நம்புவதே நமது ஈமானுக்கும் மறுமை வாழ்க்கைக்கும் பாதுகாப்பானது.*

**يَوْمَ تُقَلَّبُ وُجُوهُهُمْ فِي النَّارِ يَقُولُونَ يَا لَيْتَنَا أَطَعْنَا اللَّهَ وَأَطَعْنَا الرَّسُولَا (66) وَقَالُوا رَبَّنَا إِنَّا أَطَعْنَا سَادَتَنَا وَكُبَرَاءَنَا فَأَضَلُّونَا السَّبِيلَا (67) رَبَّنَا آتِهِمْ ضِعْفَيْنِ مِنَ الْعَذَابِ وَالْعَنْهُمْ لَعْنًا كَبِيرًا (68)33**

*அந்நாளில் சில முகங்கள் நரகத்தில் புரட்டப்படும்போது நாங்கள் அல்லாஹ்விற்கு கட்டுப்பட்டிருக்க வேண்டுமே? இத் தூதருக்கு கட்டுப்பட்டிருக்க வேண்டுமே? என்று கூறுவார்கள். எங்கள் இறைவா! நாங்கள் எங்களின் தலைவர்களுக்கும் பெரிய வர்களுக்கும் கட்டுப்பட்டோம். அவர்கள் எங்களை வழிகெடுத்து விட்டார்கள். எங்கள் இறைவா! அவர்களுக்கு இருமடங்கு வேதனையை கொடு. பெரும் சாபத்தையும் அவர்களுக்குக் கொடு! என்று கூறுவார்கள்.* ***அல்குர்ஆன் 33:66***

*மறுமையில் இந்த நிலை நமக்கு வரக்கூடாது என்றால், ஆதாரப்பூர்வமான நபிமொழிகளில் யார் என்ன சந்தேகத்தை ஏற்படுத்தினாலும், அதை தூக்கி எறிந்து விட்டு நபிமொழிகளை பலமாக நாம் பற்றிப்பிடிக்க வேண்டும். அல்லாஹ் இந்த நிலையை சமுதாயத்தில் ஏற்படுத்துவானாக.*

*எனக்குப் பின் உங்களில் வாழ்பவர் அதிகமான முரண் பாடுகளைக் காண்பார். அப்போது நீங்கள்* ***என் சுன்னத்தையும்*** *(வழியையும்) நேர்வழிபெற்று நேர்வழிகாட்டும் ஆட்சியாளர்களின் வழியையும் பற்றிப் பிடித்துக்கொள்ளுங்கள். அதனை கடவாய் பற்களால் பலமாகப் பிடித்துக்கொள்ளுங்கள். புதுமையான விஷங்களை விட்டும் உங்களை எச்சரிக்கிறேன். ஒவ்வொரு புதுமையும் பித்அத்தாகும். ஒவ்வொரு பித்அத்தும் வழிகேடாகும்.*

***அபூ தாவூத் 3991***

*******

## வேண்டாம் பிரிவுகள்

*யூதர்களுக்கும், கிறிஸ்த்தவர்களுக்கும் நமக்கு முன் அல்லாஹ் வேதம் வழங்கினான். வேதத்தில் அல்லாஹ் உண்மையைத் தெளிவு படுத்திய பிறகும் அதை நம்பாமல், அதற்கு பல சுயவிளக்கத்தைக் கொடுத்தனர். அல்லாஹ்வின் வார்த்தைகளை ஏற்க மறுத்தனர். இதனால் அவர்கள் ஒரே கூட்டமாக இருக்காமல் பல பிரிவுகளாகப் பிரிந்தனர். இதை அல்லாஹ் பின்வரும் வசனங்களில் கண்டிக்கிறான்.*

*தெளிவான சான்றுகள் வந்த பிறகு (அதில்) முரண்பட்டு பிரிந்து விட்டவர்களைப்போல், நீங்கள் ஆகிவிடவேண்டாம். அவர்களுக்கு மகத்தான வேதனை உண்டு.* ***அல்குர்ஆன் 3:105***

*வேதம் வழங்கப்பட்டவர்களிடம் கல்வி வந்த பிறகே, அவர்கள் வரம்பு மீறி முரண்பட்டனர்.* ***அல்குர்ஆன் 3:19***

*தங்கள் மார்க்கத்தை பலக்கூறுகளாகப் பிரித்து பல கூட்டங்களாக மாறியவர்களுக்கும், உமக்கும் எந்தத் தொடர்பும் இல்லை. அவர்களின் முடிவு அல்லாஹ்விடமே உள்ளது. பிறகு அவர்கள் செய்துகொண்டிருந்ததை அல்லாஹ் அவர்களுக்கு அறிவிப்பான்.* ***அல்குர்ஆன் 6:159***

*சூனியம், கண்ணேறு குறித்து தற்போது எழுந்துள்ள பிரச்னை களுக்கு நபிமொழிகள் தெளிவான சான்றுகளாக உள்ளன. இந்தச் சான்றுகளை மறுத்துவிட்டு, குர்ஆன் வசனங்களுக்கு சுயவிளக்கங்கள் கொடுத்து, நபிமொழிகளை நம்புவோரை இணைவைப்பாளர்கள் எனக் கூறுகின்றனர். இதுவே தெளிவானச் சான்று வந்த பிறகு அதில் முரண்பட்டு, பலக்கூட்டங்களாக உருவெடுப்பதாகும். இதையே அல்லாஹ் மேற்கண்ட வசனங்களில் எச்சரிக்கிறான்.*

## ஆபத்தான மனிதன்

*தர்கா வழிபாடு, மவ்வலித் ஓதுதல், தகடு தாயத்து அணிதல் போன்ற இணைவைப்புக் காரியங்களைச் செய்யாமல், வணக்கத்தை அல்லாஹ்விற்கு மட்டுமே செய்யும் முஸ்லிம்கள் உலகில் உள்ளனர். இன்று ஹதீஸ் மறுப்பாளர்கள், மறுக்கும் ஆதாரப்பூர்வமான சில நபிமொழிகளை இந்த முஸ்லிம்கள் நம்புவதால், இவர்களை இணை வைப்பாளர்கள் எனக் கூறுகின்றனர்.*

*ஒருவரை இணைவைப்பாளர் என நாம் கூறினால், அவர் அல்லாஹ்வின் மார்க்கத்தில் இல்லை எனத் தீர்ப்பளிக்கிறோம்.*

*அல்லாஹ்வின் மார்க்கத்தில் இருப்பவர் யார்? இம்மார்க்கத்தை விட்டும் வெளியேறியவர் யார்? என்பதை முடிவு செய்யும் அதிகாரம் அல்லாஹ்வைத் தவிர வேறு எவருக்கும் இல்லை.*

*அல்லாஹ்வும், அவன் தூதரும் இணைவைப்பு எனக் கூறாத விஷயத்தை இணைவைப்பு எனக் கூற எவருக்கும் உரிமையில்லை. யராவது அவ்வாறு கூறினால், அவர்கள் அல்லாஹ்வின் அதிகாரத்தை தன் கையில் எடுத்துக்கொள்கிறார்கள் என்பதே பொருள். இதை நபி(ஸல்) வன்மையாகக் கண்டித்துள்ளார்கள்.*

*ஒருவர் தன் சகோதரனைப் பார்த்து காஃபிரே! (இறைமறுப்பாளனே) எனக் கூறினால், அக்கூற்று உண்மையாக இருக்கும் பட்சத்தில், அவ்விருவரில் ஒருவர் அதற்குத் தகுதியானவாராகிவிடுகிறார். அவ்வாறு இல்லாவிட்டால், இக்கூற்று அவ்வாறு கூறியவருக்கு எதிராகவே திரும்பிவிடும் என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*

***அறிவித்தவர்: அபூ ஹுரைரா(ரலி), நூல்: புகாரீ 6103***

*ஒரு இறைநம்பிக்கையாளரை காஃபிர் என அவதூறுக் கூறுவது அவரை கொலைசெய்வதைப் போன்றாகும் என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*

***அறிவித்தவர்: ஸாபித் இப்னு ளஹ்ஹாக்(ரலி), நூல்: புகாரீ 6103***

*ஒரு மனிதன் குர்ஆனை ஓதி, அவனிடம் நல்ல மாற்றம் தென்பட்டு, அவன் இஸ்லாமிற்கு உதவி செய்யக் கூடியவானாக ஆகிறான். இதன்பின் அவன் இஸ்லாமிலிருந்து விலகிச் சென்று, அதை தன் முதுக்கிற்குப் பின் எறிந்துவிடுகிறான். அவன் தன் அண்டை வீட்டுக்காரரை முஷ்ரிக் எனக் குற்றம்சாட்டி, அவர் மீது வாளால் தாக்குதல் தொடுக்கிறான். உங்கள் விஷயத்தில் இவனைக் குறித்தே நான் மிகவும் அஞ்சுகிறேன் என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள். இறைத்தூதரே! அவ்விருவரில் யார் இணைவைப்பிற்குத் தகுதி யானவராக இருப்பார்? குற்றம் சுமத்தியவரா? குற்றம் சுமத்தப் பட்டவரா? என நான் கேட்டேன். இல்லை, குற்றம் சுமத்தியவரே என அவர்கள் பதிலளித்தார்கள்.*

***அறிவித்தவர்: ஹுதைஃபா (ரலி), நூல்: சஹீஹ் இப்னி ஹிப்பான் 81***

*என் சமுதாயத்தின் விஷயத்தில், நாவன்மையுள்ள ஒவ்வொரு நயவஞ்சகனையே நான் மிகவும் அஞ்சுகிறேன் என இறைத்தூதர்(ஸல்) கூறினார்கள்.*

***அறிவித்தவர்: உமர் இப்னு அல் கத்தாப்(ரலி), நூல்: அஹ்மத் 137***

*******

# حقيقة السحر والرد على منكري الأحاديث الصحيحة

بسم الله الرحمن الرحيم

الحمد لله رب العالمين ، والصلاة والسلام على أفضل الأنبياء والمرسلين نبينا محمد وعلى آله وأصحابه أجمعين ، وبعد

وفي الأونة الأخيرة في ولاية "تاملنادو" الهند نشأت فرقة جديدة بإسم التوحيد يعتمدون على عقولهم وينكرون الأحاديث النبوية الصحيحة بتخيلهم بأنها تخالف القرآن الكريم ، وأنكروا كثيرا من الأحاديث الصحيحة من صحيح البخاري ومن صحيح مسلم وغيرهما، ويدعون أن كل من لم يوافقهم في إنكار الحديث النبوي فهو مشرك ولا يجوز الصلاة خلفه، وكفروا أئمة الحرمين الشريفين وكفروا المشائخ والمحدثين ويجذبون قلوب الشباب الغافلين إلى هذه الفكرة الفاسدة،

ولكشف وجوه هذه الشرذمة الضالة أمام الناس قام الأخ / عباس علي ألذي كان معهم في هذه الفكرة فترة يسيرة ثم رجع عنها، فألف كتابا بإسم "حقيقة السحر والرد على منكري الأحاديث الصحيحة" في اللغة التاملية ، وأتى بالأحاديث التي أنكرها هؤلاء الفرقة المنحرفة ، وبين بيانا شافيا ، ووضح بأن الأحاديث النبوية الصحيحة لا تخالف للآيات القرآنية ، إنما الخلل في فهم هؤلاء وانحراف عقولهم ،

ويجب على الجميع أن يقرأوا هذا الكتاب ويوزعوه حسب الإستطاعة بين المسلمين الناطقين باللغة التاملية للقضاء على هذه الفتنة ، فتنة إنكار الحديث النبوي . والله ولي التوفيق .

كمال الدين شاه الحميد

الداعي إلى الله


ASSUNNAH PUBLICATIONS AP

அஸ்ஸுன்னா பப்ளிகேஷன்ஸ்

33. E, குப்புப்பிள்ளை தோப்பு, முதல் தெரு, தெற்கு வெளிவீதி,

மதுரை – 625001. இந்தியா. போன்: +91 9442309954